ஸ்ரீ ராமஜயம்

# ஸ்ரீமத்

# வால்மீகி ராமாயணம்

## ஸுந்தர காண்டம்

(முதல் பாகம்)


சாஸ்த்ர ரத்னாகர

ப்ரம்மஸ்ரீ தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரிகள்



குருகுலம்

அபிராமபுரம் :: சென்னை-18.

REPRINT 1982





**Price Rs. 25/-** 30-00

# முகவுரை

லோகத்தின் தர்மத்தின் பெருமையை ப்ரகாசப்படுத்தும் இதிஹாஸ புராணங்களுள் ஸ்ரீமத் ராமாயணம் ஒரு பெரிய இதிஹாஸ ரத்னம். கதை என்ற வ்யாஜத்தால் ஒவ்வொரு காண்டத்திலும் தர்மத்தின் மேன்மையையே போதிக்கப்படுகிறது. அதிலும் ஸுந்தர காண்டம் மிகவும் முக்யமான காண்டமாகும்.

सुन्दर (ஸுந்தரம்) என்ற சப்தத்தால் சோபனம், அதாவது சுபஸம்பத்தியாகும். அவிவேகத்தினுடைய பாரவச்யத்தை அடைந்து பரம துக்கத்தை அனுபவித்து வரும் ஜீவன் அவிவேகத்தினின்றும் விடுபட்டவனாகி, குருவின் அனுக்ரஹத்தால் ஜீவன் அடையக்கூடிய ஸுகமானது இக்காண்டத்தில் சொல்லப்படுகிறது

அதாவது, ராவணனாகிய அவிவேகத்தின் பாரவச்யத்தை அடைந்த ஸீதை என்ற ஜீவன், லங்கையில் துக்கத்தை அனுபவித்து வரும்பொழுது, ஆஞ்ஜனேயர் என்ற மஹா குருவின் ஆகமனம் என்ற பரம லாபம் ஏற்பட்டு, அதன் மூலம் ராவணனாகிய அவிவேகத்திலிருந்தும் விடுதலை ஏற்படுவதற்குள்ள உபாயத்தை உபதேசம் செய்துகொண்டு பரமானந்தத்தை அடைந்தாள். ஆகையால் ச்ரேயஸ்ஸை அடைய விரும்பும் ஜனங்களால் இக்காண்டம் முக்யமாக ஸேவிக்கத் தகுந்தது என்பது வெளியாகிறது.

ஆகையால், ஆஸ்திகர்கள் இக்காண்டத்தின் தத்வார்த்தங்களை அறிந்து, பாராயணம் செய்தார்களேயானால், ஸ்ரீ ஸீதா ராம அனுக்ரஹத்தால் ஐஹிக ஆமுஷ்மிக ச்ரேயஸ்ஸை அடையலாம் என்பது திண்ணம்.

''குருகுலம்''
அபிராமபுரம்,
சென்னை-18.

25-3-'50

ஸ்ரீ நியஸி. ஸுந்தரஸ்வாமி



वामे भूमिसुता पुरश्च हनुमान्पश्चात्सुमित्रासुत:

शत्रुघ्नो भरतश्च पार्श्वदलयोः वाय्वादिकोणेषु च ।

सुग्रीवश्च विभीषणश्च युवराट तारासुनो जाम्बवान्

मध्ये नीलसरोजकोमलरुजिं रामं भजे श्यामलम् ॥

ஸ்ரீராமஜயம்

## 1982ம் வருஷத்திய பதிப்புக்கு

# முன்னுரை

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் நமது பாரத தேசத்தின் அறியதொரு பொக்கிஷமாகும். **வேதமே ராமாயணமாக** உருவாகியுள்ளது என்பது நமது நம்பிக்கை. மஹத்தான அந்த நூலுக்கு, மஹான்களான ஸ்ரீ கோவிந்தராஜீயர், மஹேச்வர தீர்த்தர், திலகர் முதலானோர் வியாக்யானங்கள் எழுதியுள்ளது லோக ப்ரஸித்தம். அப்பெரியோர்களுடைய கருத்துக்கள், ஆஸ்திகர்களுக்கு பயன்படவேண்டுமென்ற நோக்குடன், பூஜ்ய ச்ரேஷ்டரான எங்கள் பிதா வேத-சாஸ்த்ர விற்பன்னரான **சாஸ்த்ர ரத்னாகர ப்ரம்மஸ்ரீ தேதியூர் ஸுப்ரமண்ய சாஸ்த்ரிகள்,** தனக்கே உரியதான உபன்யாஸ பாணியில், எளிய நடையில், தமிழில் **"காந்தா ஸம்ஹிதை"**யான ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திற்கு விளக்கம் கொடுத்து, அந்நூலின் உட்கருத்தான **ஜீவ-ப்ரம்ம ஐக்யத்தை,** பாமர ஜனங்களும் எளிதில் அறிந்துகொள்ளும்படியாக, 1947 - 1950ல் புஸ்தக ரூபமாக வெளியிட்டார்கள். சிறிது காலத்திலேயே அந்த புஸ்தக காபிகள் செலவாகி விட்டன. ஆயிரக்கணக்கான ஆஸ்திகர்கள் ஸ்ரீ தேதியூர் சாஸ்த்ரிகள் வெளியிட்ட ஸ்ரீ வால்மீகி ராமாயண காண்டங்களை மறுபதிப்பு செய்யக் கோரினார்கள். ஆனால், இந்த கைங்கர்யத்தை செய்து முடிக்க, (விலைவாசி இடம் கொடுக்காமல்) இயலாமல் இருந்து வந்தது.

ஈச்வர ப்ரேரணையின் காரணமாக, தற்சமயம் ஷை சாஸ்த்ரிகளின் ஸ்ரீமத் ராமாயணத்தை மறுபதிப்பு வெளியிட, **ஸ்ரீ விக்னேச்வரா வெங்கடேச்வரா டிரஸ்ட், சென்னை-18** முன்வந்து, பிரசுரித்தது ஆஸ்திக மஹா ஜனங்களின் பாக்யமே ஆகும். உடனடியாக **ஸுந்தர காண்டத்தையும்,** துடர்ந்து மற்ற காண்டங்களையும் விரைவில் ப்ரசுரிக்க ஷை டிரஸ்ட் தீர்மானித்துள்ளது. இதனால் லாபம் ஸம்பாதிக்க வேண்டுமென்ற நோக்கம் கிஞ்சித்தும் ஷை ட்ரஸ்டுக்கு இல்லை. பேப்பர், அச்சு, பைண்டுச் செலவு இவைகளைக் கணக்கிட்டு, புஸ்தகத்தின் விலையை நிர்ணயித்துள்ளார்கள். இதைவிட பரோபகாரம் பக்த ஜனங்களுக்காக, ஏதும் இருக்க ந்யாயமில்லை. ஆகையால், ஷை ட்ரஸ்டிக்கு இக் கைங்கர்யத்தில் ஊக்கமளித்து ஆஸ்திகர்கள் எல்லோரும் இந்த க்ரந்தத்தை வாங்கி படித்து ஸ்ரீ ஸீதா-லக்ஷ்மண-பரத-சத்ருக்ன-ஹநுமத் ஸமேத ஸ்ரீ ராமச்சந்த்ர மூர்த்தியின், க்ருபைக்கு பாத்ரமாகும்படி கோருகிறோம்.

ஸ்ரீ சங்கர குருகுலம்
22-9-1982

S. க்ருஷ்ணமூர்த்தி
S. ராமச்சந்திரன்
(ஸ்ரீதேதியூர் சாஸ்த்ரிகளின் குமாரர்கள்)



சாஸ்த்ர ரத்னாகர

ப்ரம்மஸ்ரீ தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரிகள்

# பொருளடக்கம்

ॐ



ஸ்ரீமத்

# வால்மீகி ராமாயணம்

---

## ஸுந்தர காண்டம்

(முதல் பாகம்)

अविवेकेन संरुद्ध जीवोद्धारण कौशलः ।
आचार्यः स्तूयते यत्र तं वन्दे पवनात्मजम् ॥
पतिव्रतायाः माहात्म्यं यत्र संस्तूयते भृशम् ।
काण्डोऽयं सुन्दरः प्रोक्तः साध्वीनगरी हि शोभना ॥
पातिव्रत्येन पुरुषं नारी संरक्षति ध्रुवम् ।
तत्वोपदेशात् शिष्यं च स्वाचार्यः परिरक्षति ॥
वेदवेद्ये परे पुंसि जाते दशराथात्मजे ।
वेदः प्राचेतसादासीत् साक्षाद्रामायणात्मना ॥

அவிவேகேந ஸம்ருத்த ஜீவோத்தாரண கௌசல: ।
ஆசார்ய: ஸ்தூயதே யத்ர தம் வந்தே பவநாத்மஜம் ॥
பதிவ்ரதாயா: மஹாத்ம்யம் யத்ர ஸம்ஸ்தூயதே ப்ருசம் ।
காண்டோயம் ஸுந்தர:ப்ரோக்த:ஸாத்வீநாரீஹி சோபநா ॥

பாதிவ்ரத்யேந புருஷம் நாரீ ஸம்ரக்ஷதி த்ருவம் ।
தத்வோபதேசாத் சிஷ்யம் ச ஸ்வாசார்ய : பரிரக்ஷதி ॥
வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே ।
வேத : ப்ரசேதஸாதாஸீத் ஸாக்ஷாத்ராமாயணாத்மநா ॥

வேதம் மிகவும் உயர்ந்ததான ப்ரமாணமாகும். பரம் பொருளை அறிந்து கொள்ளுவதற்கு வேதம்தான் முக்யமான ஸாதனமாகும். அந்த வேதத்திற்கோ, ஸத்தாயும், சித்தாயும், ஆனந்தமாயும் உள்ள பரப்ரம்மம் தான் பரம தாத்பர்யத்திறகு விஷயமான பொருளாகும். அந்த பரப்ரம்மமோ ப்ரக்ருதத்தில் தசரத சக்ரவர்த்தியினுடைய புத்ரனான ஸ்ரீ ராமனே, रमन्ते योगिनो ऽनन्ते सत्यानन्दे चिदात्मनि। (ரமந்தே யோகிநோ அநந்தே ஸத்யா நந்தே சிதாத்மநி) என்ற ச்ருதி வாக்யமே ஸ்ரீ ராமன் பரப்ரம்மம் தான் என்பதில் ப்ரமாணமாகும்.

சப்த ரூபமான வேதத்தின் பொருளாகிற பரம்ரம்ம மானது ஸ்ரீ ராமனாக அவதரித்ததும், வேதமானது 'நாம் பரப்ரம்மம் என்ற பொருளை போதிக்காமலிருந்தால் நமக்கு ப்ரா மாண்யம் ஸித்திக்காது' என்ற எண்ணத்துடன் வால்மீகி மஹர்ஷி யினுடைய திருவாக்கினின்றும் ஸ்ரீமத் ராமாயண ப்ரபந்த ரூபமாக வெளியில் ப்ரகாசிக்கின்றது. வேதத்திற்கும் எந்த அர்த்தத்திற்கும் ஸம்பந்தமானது பரஸ்பரம் ஏற்பட்டதோ, அதுபோலவே ராமா யணத்திற்கும் ராமனுக்கும் உள்ள ஸம்பந்தம் ஸமானம் தான் என்பது வெளியாகிறது.

வேதத்தில் எப்படி பூர்வகாண்டம், உத்தரகாண்டம் என்று இருவகை ஏற்பட்டதோ, அதுபோலவே, ஸ்ரீமத் ராமாயணத்திலும் மாரீசனை பகவான் வதித்ததற்கு முன் பாகத்தை கர்ம காண்டத் தின் அர்த்தத்தை போதிக்கும் பாகமாயும் மாரீசன் வ்ருத்தாந்தம் முதல், ஞான காண்டத்தினுடைய தாத்பர்யத்தை போதிக்கும் பாகமாயும் பிரித்துக்கொண்டு வேதத்தில் பூர்வ—உத்தர பாகங்கள் ஏற்பட்டதுபோல், ஸ்ரீமத் ராமாயணத்திலும், பூர்வ பாகம், உத்தர பாகம் என்ற விபாகத்தை அறிந்துகொள்ள வேண்டும். இந்த விஷயத்திற்கு கிஷ்கிந்தா காண்டத்தில், முதல் ச்லோகத்தின் வ்யாக்

யானமாகிய கோவிந்த ராஜீயத்தில் பொறுமையுடன் ஸாவதானமாக பார்க்கும் மஹான்களுக்கு ஆதாரம் அகப்படும்.

ஸீதையென்ற ஒரு ஜீவன் ராமனுகிய பரப்ரம்மம் என்ற பகவானேடு, நித்யமான ஒரு ஆனந்தத்தை ஸமானமான நிலேயி லிருந்து அனுபவிக்கக்கூடிய பாத்ரமானுலும், தனக்கு கிடைக்கக் கூடாததான விஷயாதிகளில் ப்ராவண்யத்தை (பேராசையை) அடைந்த காரணத்தால், ராமனுகிற பரப்ரம்மத்தை விட்டுப் பிரிந்து, ராவணனுடைய பாரவச்யத்தில் அகப்படும்படியான தௌர் பாக்யம் ஏற்பட்டது. இதனுல் ஈச்வரனுடன் சேர்ந்திருக்கும் ஜீவனுக்கு சப்த ஸ்பர்சம் முதலான விஷயாதிகளில் ப்ரேமை ஏற் பட்டு அந்த விஷயங்களிலேயே ஈடுபட்டு விட்டானேயாஞல் தனக்கு மிகவும் ஸமீபத்திலுள்ள பரம்பொருளும் வெகு தூரத்தி லுள்ளதுபோல் ஆகிவிடும். பிறகு அந்த ஜீவன் रावयति असत्प्रलापान् कारयति इति रावणः (ராவயதி அஸத் ப்ரலாபாந் காரயதி இதி ராவண:) என்ற ஸமாஹத்தை அனுஸரித்து அவிவேகமாகிய ராவணன் என்ற மஹா மோஹத்தின் வசமாக அந்த ஜீவன் ஆகி விடுவான் என்ற அர்த்தமும் த்வனிக்கின்றது. ராவணனுடைய வசத் தில் அகப்பட்ட ஸீதையை மீட்டு வைக்க ஜடாயுஸ என்ற பக்ஷிராஜன் தன்னுடைய உயிரைக்கூட விட்டு யத்னம் செய்தாலும் அந்த ஜடாயுஸ்ஸினுடைய யத்னமானது பலிக்கவில்லே. அதனுல் மஹா மோஹத்தின் பாரவச்யத்தை அடைந்த ஜீவனுக்கு கர்மாக்களால் விமுக்தி ஏற்படாது என்பதும் ஸித்தமாகிறது. கேவலம் கர்மாவினுல் அக்ஞானம் என்ற மஹா மோஹத்தினின்றும் ஜீவன் வெளி வர முடியாது என்பது யுக்திக்கும் ஒத்ததானதே

अविरोधितया कर्म नाऽविद्यां विनिवर्तयेत् ।
विद्यां अविद्यां निहन्त्येव तेजस्तिमिर संघवत् ।

அவிரோதிதயா கர்ம நாவித்யாம் விநிவர்த்தயேத்
வித்யாம் அவித்யாம் நிஹந்த்யேவ தேஜஸ்திமிர ஸங்கவத்

கர்மாவிற்கும் அக்ஞானத்திற்கும் பரஸ்பர விரோதமில்லாத காரணத்தால், கர்மாவானது அக்ஞானத்தை நிவர்த்தி செய்யாது. ஞானம்தான் கர்மாவை நிவர்த்தி செய்யவேண்டும் ப்ரகாசம் தானே இருளேப் போக்கடிக்கவேண்டும் என்ற தாத்பர்யத்தை

வெளியாக்குகிற பகவத் பாதாளுடைய ஸூக்தியே ப்ரமாண மாகும். தவிரவும்,

प्रत्यग्ब्रह्म विचारपूर्वं उभयोः एकत्वबोधाद्विना ।
कैवल्यं पुरुषस्य सिद्ध्यति परब्रह्मात्मतालक्षणम् ॥
न स्नानैः अपि कीर्तनैः अपि जपैः नो कृच्छ्रचान्द्रायणैः ।
नो वाप्यध्वरयज्ञदाननिगमैः नो मन्त्रतन्त्रैरपि ॥
पठन्तु शास्त्राणि यजन्तु देवान् कुर्वन्तु कर्माणि भजन्तु देवताः ।
आत्मैक्य बोधेन विना विमुक्तिः न सिद्ध्यति ब्रह्मशतान्तरेऽपि ॥

ப்ரத்யக்ப்ரம்ம விசாரபூர்வம் உபயோ: ஏகத்வ போதாத்விநா
கைவல்யம் புருஷஸ்ய ஸித்யதி பரப்ரம்மாத்மதா லக்ஷணம்
ந ஸ்நானை: அபி கீர்த்தனை: அபி ஜபை: நோ க்ருச்ச்ரசாந்த்ராயணை:
நோ வாப்யத்வர யக்ஞதாநநிகமை: நோ மந்த்ரதந்த்ரைரபி
படந்து சாஸ்த்ராணி யஜந்து தேவாந் குர்வந்து கர்மாணி பஜந்து தேவதா:
ஆத்மைக்ய போதேந விநா விமுக்தி: ந ஸித்யதி ப்ரம்மசதாந்தரேபி

என்றது முதலான பகவத்பாதாளுடைய ஸூக்தியே. கர்மாவினால் அக்ஞான நிவ்ருத்தி ஏற்படாது என்பதற்கு ப்ரமாணமாகும் ஆகையால். ராவணனுடைய வசத்திலகப்பட்ட ஸீதாதேவி என்ற ஜீவனை, ஜடாயுஸ்ஸினுடைய வ்யாபாரம் விமோக்ஷணம் செய்து வைக்க பயனற்றதாக ஆகிவிட்டது என்பதிலிருந்தும். கர்மாவினால் அக்ஞான நிவ்ருத்தி ஏற்படாது என்பதை அறிந்து கொள்ளவும்.

ஸீதையை க்ரஹித்து ராவணன் லங்கா நகரத்திற்குள் ப்ரவேசித்தான் என்பதிலிருந்தும் அவிவேகியான ஜீவனுக்கு ஸம்ஸார துக்கத்தை அனுபவிக்கக்கூடிய பரிச்சின்னமான ப்ராக்ருத சரீரத்திற்குள் அடைபடும்படி நேரிடுகிறது. லங்கா நகரத்தில் ஸீதைக்கு ஏகாக்ஷி. ஏககர்ணி முதலான ராக்ஷஸ ஸ்த்ரீகளுடைய நிர்ப்பந்தத்தால் ஏற்பட்ட ஸீதையினுடைய துக்கம் போல. சரீரத்திற்குள் அடைபட்ட ஜீவனுக்கு இந்த்ரிய வ்ருத்திகள் மூலமாக ஏற்படும் ஆத்யாத்மிகம். ஆதிபௌதிகம். ஆதிதைவிகம் என்ற தாபத்ரத்தால் ஏற்படும் துக்கானுபவத்தையே க்ரஹித்துக் கொள்ளவேண்டும். ராமன் ஸீதையைத் தேடினார் என்பதிலிருந்தும், பகவான் தன்னுடைய ப்ராப்தியில் அபிலாஷையுள்ள ஜீவனை

ஸ்வயமாகவே தேடிக் கண்டுபிடிப்பதில் என்ன உபாயம் என்பதை ஆலோசித்தார் என்ற தாத்பர்யத்தை அறிந்துகொள்ள வேண்டும்.

அவ்விதமான ஜீவனைக் கண்டுபிடிப்பதும், ஸத்குருவினுடைய ஸாமர்த்யத்தைப் பொருத்ததுதான் என்பதையும் ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய ஸம்பந்தத்தால் அறிந்துகொள்ளவும், ஸதாசார்யனே, பகவத் விஷயத்தில் உத்தமமான ஜீவனுக்கு பக்தி அதிசயத்தை உண்டுபண்ணி பகவானோடு அந்த ஜீவன் சேருவதற்குள்ள உபாயத்தை ப்ரகாசப்படுத்தி விடுவான் என்பதை ஆசார்ய புருஷருடைய ஸ்தானத்திலுள்ள ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர், ஸீதையாகிற ஜீவனைக் கண்டுபிடித்து ராமருடைய வ்ருத்தாந்தத்தைச் சொன்னதிலிருந்தும் அறிந்துகொள்ள வேண்டும். ஸீதையை விட்டுப் பிரிந்த ராமனுக்கும். ஆஞ்ஜனேயஸ்வாமியை தான் அடைந்ததிலிருந்தும். அந்த ஆஞ்ஜனேய ஸ்வாமியைப்போல் எப்பொழுதும் பகவத் கைங்கர்யத்தில் ஈடுபட்ட மஹான்களைப் பார்ப்பது ரொம்பவும் அரிது. இந்த மஹானுபாவனைப்போல் மற்ற ஜீவனும் பக்தியின் மஹிமையால் நர்மை வந்து அடைந்து நமக்கு ஸமானமான போகாதிசயத்தை அனுபவிக்காமலிருக்கிறார்களே என்ற துக்கம்தான். ஸீதையை விட்டுப் பிரிந்த ராமனுக்கு ஏற்பட்ட துக்கமாகும். एकाकी न रमते (ஏகாகீ ந ரமதே) என்ற ச்ருதியும் அதில் ப்ரமாணமாகும்.

ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய லாபத்தால் மஹா விஷ்ணுவாகிற ராமனுக்கு ஆசார்ய புருஷன் என்ற ஒரு புருஷாகார லாபமும் ஏற்பட்டு 'ஜீவனை உத்தாரணம் செய்வதில் நாம் இனி கவலையை எடுத்துக்கொள்ள வேண்டாம். இந்த ஆசார்ய புருஷனுடைய க்ருதயமே அந்த கார்யமாகும்' என்று ராமனுக்கு ஆஞ்ஜனேயரைக் கண்டதும் ஏற்பட்ட ஸந்தோஷத்திலிருந்தும் அறிந்துகொள்ளவேண்டும். இந்த ஸுந்தரகாண்டத்திலோ, பகவத் ப்ராப்தியில் அத்யவஸாயமுள்ள ஜீவனை ஆசார்ய புருஷன் உத்தாரணம் செய்து வைக்கும் க்ரமமானது சொல்லப்படுகிறது.

ஞானபூமியில் சுபேச்சை, விசாரணை, தனுமானஸி, ஸத்வாபத்தி, அஸம்ஸக்தி, அபாவனை, துரீயம் என்ற ஏழுவிதமான வகுப்புகள்

உண்டு. அதில் முதல் வகுப்பில், முன் ஜன்மாக்களில் செய்த தபத்தால் விவேகம், வைராக்யம், ஸமாதி, ஸம்பத்தி. முமுக்ஷுத்வம் என்ற நான்கு விதமான ஸாதன ஸம்பத்தியோடு கூடிய புண்ய வானான ஜீவனுக்கு தத்வோபதேசத்தைச் செய்து ஜனன மரண ரூபமான ஸம்ஸார ஸாகரத்திலின்றும் தரணம் செய்து வைப்பதற்காக ஏற்படும் ஆசார்ய புருஷனை நாம் அடைய வேண்டுமென்ற த்ருடமான இச்சையானது சிஷ்யனுக்கு ஏற்பட்டால் அதைத்தான் சுபேச்சை என்று சொல்லுவார்கள்.

ப்ரக்ருதத்தில், ஸீதையென்ற ஒரு ஜீவனுக்கு மாயா ம்ருகமென்ற விஷயத்தில் ஏற்பட்ட ப்ராவண்யத்தால், ராமனாகிய தாரக ப்ரம்மத்தை விட்டுப் பிரியும்படியான கஷ்டம் நேர்ந்து. லங்கா நகரமாகிய பரிச்சின்னமான சரீரத்திற்குள் அனுபவிக்கிற துக்கத்தை நிவ்ருத்தி செய்துகொள்ள யார் நமக்கு ஆத்ம பந்துவாக ஏற்படப் போகிறார் என்று ஸீதா பிராட்டியினுடைய ஆவலை அநுஸரித்து ஆஞ்ஜநேய ஸ்வாமியான மஹா குருவும் பிராட்டியினிடம் சென்று தத்வோபதேசத்தைச் செய்யப் போகிறபடியால் இந்த காண்டம் ஸீதைக்குள்ள 'ராமனை எப்பொழுது அடைவோம்' என்ற இச்சையாகிய சுபேச்சையை அநுஸரித்து ஏற்பட்ட காரணத்தால், ஸுந்தர காண்டம் என்று பெயர் ஏற்பட்டது.

இந்த காண்டத்தைப் பாராயணம் செய்வதால் ப்ராணிகளுக்கு இஹத்திலும், பரத்திலும் மிகவும் நன்மை ஏற்பட காரணமிருப்பதால், ராமாயணத்திற்குள்ளேயே இந்த காண்டம் மிகவும் விசேஷமானது. இதை ஆச்ரயிக்கிறவர்களுக்கு தீர்க்கமான ஆயுளும், மேன்மையான புத்தியும், தனதான்ய ஸம்ருத்தியும், பரம ஆரோக்யமும் அதிசீக்ரத்தில் ஏற்படும் என்பது நிச்சயமானதால், ப்ராணிகள் எதிர்பார்க்கும் ஸௌபாக்யத்தைக் கொடுக்கும் காரணத்தைக் கொண்டும், இந்த காண்டத்திற்கு ஸுந்தர காண்டம் என்று பெயர் விளங்கி வருகிறது

ஆஞ்ஜநேய ஸ்வாமியினுடைய விபூதியை 18 ப்ரகாரமாக புராணாந்த்ரங்களில் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அதாவது: 1. வீரன், 2. சூரன், 3. தீரன், 4 க்ரூரன், 5. மஹாபலன், 6. மஹாநுபாவன், 7 தீமான், 8. வித்வான், 9. ப்ரம்மா, 10. இந்த்ரன், 11. ஸ்வதந்த்ரன்,

12. ஆத்மா, 13. வேதம், 14. ஸதாசாரன், 15 மதிமான், 16. வாக்மி. 17. நீதிமான், 18. அதிவிக்ரமி என்று 18 விதமாக ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் விளங்கி வருகிறபடியால் இந்த 28-வது சதுர்யுகத்தில் ஸ்ரீ ராமருடைய தூதனை இருந்துவந்த ஹனுமான் ஸுந்தர ஹநுமானுனதால் அவருடைய மஹா பௌர்ஷமானது இந்தக் காண்டத்தில் வர்ணிக்கப்படும் காரணத்தைக் கொண்டாவது ஸுந்தர காண்டம் என்று இந்த காண்டத்திற்குப் பெயர் ஏற்பட்டிருக்கிறது

இவ்விதம் அநேக காரணங்களைக்கொண்டு இதைப் பூஜித்துப் பாராயணம் செய்கிறவர்களுக்கு ஸகல விதமான ஸௌபாக்யாதிசயங்களும் ஏற்படுவது திண்ணம்.

ततो रावणनीतायाः सीतायाश्शत्रुकर्शनः।
इयेष पदमन्वेष्टुं चारणाचरिते पथि ॥

ததோ ராவணநீதாயா : ஸீதாயா : சத்ருகர்சந: ।
இயேஷ பதமந்வேஷ்டும் சாரணுசரிதே பதி ॥

கிஷ்கிந்தா காண்டத்தில் ஸ்ரீராமன் பரமாத்மா என்பதற்கு அடையாளமாக அளவிட முடியாத கல்யாண குணங்களால் அலங்கரிக்கப் பட்டவன் என்பது சொல்லப்பட்டது. இந்த ஸுந்தர காண்டத்திலோ. ஸ்ரீராமன் 'ஸர்வ ஜகத்தையும் ஸம்ஹாரம் செய்கிற பரம்பொருள்' என்பது சொல்லப்படும். இந்த விஷயத்தை ब्रह्मा स्वयंभूश्चतुराननो वा (ப்ரம்மா ஸ்வயம்பூச்சதுராநநோ வா) என்ற ச்லோகத்தால் வால்மிகீ மஹர்ஷியானவர் விவரித்திருக்கிறுர். இவ்விதம் கிஷ்கிந்தா காண்டத்திற்கும், ஸுந்தர காண்டத்திற்கும் ஸம்பந்தத்தை அறியவும்.

இதுபோலவே மற்றெரு ஸம்பந்தமும் உண்டு. அதாவது முன் காண்டத்தில் எவ்விதத்திலும் தன்னுடைய மித்ரனை ரக்ஷித்தே தீரவேண்டும்' என்பது சொல்லப்பட்டது. இந்த ஸுந்தர காண்டத்திலோ 'ஒரு யஜமானனுடைய விஷயத்தில் தூதன் எவ்விதமாக நடந்து கொள்ளவேண்டும்? பதிவ்ரதா ஸ்த்ரீகளுடைய ஆசாரமென்ன?' என்ற விஷயங்கள் சொல்லப்படுகின்றன.

தவிரவும், முன் காண்டத்தில் 'ஸஜ்ஜனங்களை ரக்ஷிப்பதற்காக அவதரித்த ஸ்ரீபகவானான ராமருக்கு ஆசார்யனாகிய பரம புருஷனுடைய லாபம் கிடைத்தது' என்பது சொல்லப்பட்டது இந்த ஸுந்தர காண்டத்தில், சிஷ்ய ஜனங்களை கரையேற்றுவதற்கு ஆசார்யன் செய்யவேண்டிய கார்யம் என்ன' என்பது சொல்லப் படும். அதிலும், முதல் ஸர்க்கத்தில் சிக்ஷிக்கத் தகுந்த நல்ல சிஷ்யனுடைய லாபமானது கிடைக்கும் மார்க்கமானது சொல்லப்படுகிறது. ஆஞ்ஜநேய ஸ்வாமியையே. ஆசார்ய புருஷனென்று ஆங்காங்கு சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த மஹாநுபாவனே, ஸீதையைத் தேடுவது என்ற வ்யாஜத்தால், பகவானை அடைவதில் ஆசை உள்ள ஜீவனைத் தேடுகிறார் என்ற தாத்பர்யத்தை அறிந்து கொள்ளவேண்டும். ஸ்ரீராமனாலேயே முத்ராதானம் செய்யப்பட்டு ஆசார்ய பதவியில் அமர்ந்திருக்க அர்ஹதை உள்ளவராக ப்ரக்ருதத்தில் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் பாக்யத்தை அடைந்தவர் என்பதையும் அறியவும்.

ततो रावणनीतायाः (ததோ ராவண நீதாயா:) என்ற ச்லோகத்தில் ततः (தத:) என்கிற பதத்திற்கு முத்ராதானம் செய்யப்பட்டு. பகவானுடைய அனுக்ஞை கிடைத்த பிறகு என்ற அர்த்தத்தை வ்யாக்யாதாக்கள் வெளியிட்டிருக்கிறார்கள். இந்த ச்லோகத்திலேயே शत्रुकर्शनः (சத்ருகர்சந) என்ற பதத்தால் गुशब्दस्त्वन्धकारः स्यात् रुशब्दस्तन्निरोधकः। अन्धकारनिरोधित्वात् गुरुरित्यभिधीयते ॥ (குசப்தஸ்த் வந்தகார: ஸ்யாத் ருசப்தஸ்தந்நிரோதக। அந்தகார நிரோதித்வாத் குருரித்யபிதீயதே ॥) என்ற சாஸ்த்ரத்தால் गु (கு) என்ற சப்தத்தால் சிஷ்யனுடைய அக்ஞானமும், रु (ரு) என்ற சப்தத்தால் அதை நிவ்ருத்தி செய்யும் ஸாமர்த்யம் உள்ள ஆசார்யனின் வைபவமும் வெளியாகிறபடியால், அவ்விதம் அக்ஞானத்தை நிவ்ருத்தி செய்து வைக்கும் ஸ்வாபவமுள்ள ஆசார்ய புருஷனே, ஆஞ்ஜனேய ஸ்வாமி ரூபமாக அவதரிக்கிறார் என்ற தத்வமானது வெளியாகிறது

चारणाचरिते पथि (சாரணாசரிதே பதி) என்றதினால் चारयन्ति आचरयन्ति धर्मान् इति चारणाः (சாரயந்தி ஆசாரயந்தி தர்மாந் இதி சாரணா:) என்ற ஸமாஸத்தால் பூர்வாசார்யர்கள் என்றதை க்ர

ஹித்துக் கொள்ளவேண்டும். महाजनो येन गतस्सपन्थाः (மஹா ஜநோயேந கதஸ்ஸபந்தா:) என்ற வாக்யத்தை அனுஸரித்து, பூர்வ சார்யர்களான மஹான்களால் அனுஷ்டிக்கப்படும் ஸன்மார்க்கத் திலேயே இருந்து வருகிறவர் அதாவது ஸதாசாரத்தைக் கொஞ்ச மேனும் கைவிடமாட்டார் என்ற தாத்பர்யம் வெளியாகிறபடியால் இதை அனுஸரித்து, ப்ரக்ருதத்தில் ஆசார்ய புருஷனுன ஆஞ்ஜனேய ஸ்வாமியும் பூர்வாசரத்தை விடாமல் அனுஷ்டித்து வருகிறவர் என்பது தெரிகிறது

ப்ரக்ருயத்தில் ராவண: என்ற பதத்தினுல், ராவயதி அஸத்ப்ர லாபாந் காரயதீதி ராவண: என்ற ஸமாஸத்தினுல் அவிவேகம் என் பது வெளியாகிறது. ஆத்ம-அனுத்ம விவேகம் இல்லாத ப்ராணி கள் நான் என்ற ஆத்மாவினுடைய உண்மையான ஸ்வபாவத்தை அறிந்துகொள்ளாமல் விபரதமான தர்மங்களையும் ஆத்மாவினிடத் தில் கல்பித்து, வித்வான்களுடைய அனுபவத்திற்கும், ச்ருதிகளுக் கும் விபரீதமாக ப்ரலாபிக்கின்றுர்கள். அதற்குக் காரணமோ, அவி வேகந்தான். அந்த அவிவேகத்தைத்தான் ப்ரக்ருதத்தில் ராவணன் என்ற பதத்தால் வாசகர்கள் க்ரஹித்துக் கொள்ளவேண்டும். அவி வேகமாகிய ராவணனுல் அபஹரிக்கப்பட்ட ஸீதை அரும் பெருந் தவத்தைச் செய்த "ஜீவதத்வம்" என்பதையும் அறியவேண்டும்

सीतालांगलपद्धतिः (ஸீதாலங்கல பத்ததி:) என்ற வாக்யத்தால் பூமியை உழுகிற கலப்பையினுடைய மார்க்கத்திற்கு ஸீதை என்று பெயர். அந்த மார்க்கத்தினின்றும் ஜனக மஹாராஜனுக்கு ப்ரக் ருதத்தில் ஸீதை என்று சொல்லப்படும் ஜீவாத்வமானது அகப் பட்டபடியால், அதே பெயர் இந்த பரதேவதைக்கு விளங்கி வரு கிறது. இதனுல் கர்பவாஸ துக்கத்தை அனுபவித்துக் கொண்டு பிறந்த ஜீவனல்ல என்பது வெளியாகிறது

ஜீவனுக்கு ஆதியில்லை என்றுதான் வேதாந்த ஸித்தாந்தமாகும் அதில் जीवः ईशः विशुद्धाचित् तथा जीवेशयोर्भिदा । अविद्या तच्चिदोर्योगः षडस्माकमनादयः ॥ (ஜீவ : ஈச : விசுத்தாசித ததா ஜீவேசயோர்பிதா । அவித்யா தச்சிதோர் யோக: ஷடஸ்மாகமநாதய: ॥) என்று ஜீவன், ஈச்வரன், ஜீவேச்வரபேதம், சுத்த ப்ரம்மம், அவித்யை, அவித்யைக்கும் ப்ரம்மத்திற்குமுள்ள ஸம்பந்தம், இந்த ஆறையும் அநாதி என்று நிருபணம் செய்கிற சாஸ்த்ரமே ப்ரமாண

மாகும். இதனுல் ஸீதை என்ற பதத்தினுல் அனுதியான ஜீவன் என்ற பொருள் வெளியாகிறது. அந்த பதத்திலுள்ள ஸ்த்ரீ ,லிங்கத்தினுல பாரதந்த்ரியமானது ப்ரகாசிக்கின்றது. ஸ்த்ரீகளோ என்றும் பாரதந்த்ரர்கள்தான். पिता रक्षति कौमारे भर्ता रक्षति यौवने। पुत्रस्तु स्थाविरे भावे न स्त्री स्वातन्त्र्यं अर्हति॥ (பிதா ரக்ஷதி கௌமாரே பர்தா ரக்ஷதி யௌவநே। புத்ரஸ்து ஸ்தா விரே பாவே ந ஸ்த்ரீ ஸ்வாதந்த்ரயம் அர்ஹதி) என்ற வாக்யத்தால் ஸ்த்ரீகள், கௌமாராவஸ்தையில் பிதாவினுடைய ஆதீனமாகவும், யௌவனுவஸ்தையில் பார்த்தாவினுடைய ஆதீனமாகவும், வார்த்தக்யாவஸ்தையில் புத்ரனுடைய ஆதீனமாகவும் இருக்கவேண்டும் என்று தெரிகிறபடியால், என்றைக்கும் ஸ்த்ரீகளுக்கு பாரதந்த்ர்யம் தான் அழகாகும். அதனுல் ப்ரக்ருதத்தில் ஸ்த்ரீ லிங்கத்தால் பாரதந்ரியத்தை க்ரஹித்துக் கொள்ளவேண்டும். அனுதிகாலமாக பகவானிடத்தில் பாரதந்த்ரியத்தை அடைந்த ஜீவன் என்ற தாத்பர்யத்தை ஸீதா என்ற பதத்தினுல் அறியவேண்டும்.

இதனுல். ப்ரக்ருதத்தில் ஸீதை என்ற ஜீவன் அனுதிகாலமாக ராமன் என்ற தாரக ப்ரம்மத்தினுடைய அருகில் பரமானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருந்தாலும், விஷயாதிகளில் மனதைப் பறிகொடுத்த காரணத்தினுல் பகவானை விட்டுப் பிரிந்து அவிவேகமாகிற ராவணன் என்ற மஹா மோஹத்தின் வசத்தில் அகப்பட்டுக்கொண்டு கஷ்டப்படுகிறது என்ற தாத்பர்யமானது, "ராவணனுல் அபஹரிக்கப்பட்ட ஸீதை" என்ற பொருளைக் காட்டும் பதத்தால் வ்யங்க்ய மர்யாதையாக பாஸிக்கின்றது. கோவிந்த ராஜீய வ்யாக்யானமே இவ்விதமான தாத்பர்யத்தில் முக்யமான ப்ரமாண க்ரந்தமாகும்.

இவ்விதமான ஸீதை என்ற ஜீவனை துக்கத்திலிருந்தும் விடுதலை செய்து வைப்பதற்காகத்தான், ஆஞ்ஜனேயர் என்ற மஹா புருஷனுடைய ப்ரவ்ருத்தியானது பரம உபகாரமாக ஆகிறது. ஸீதையினுடைய ஸ்தானத்தை. (இருப்பிடத்தை) அதாவது ஸம்ஸார மண்டலத்தைத் தேடிப் பிடிக்க பரம குருவான ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் யத்னம் பண்ணினுர். அதாவது "எந்த ஜீவனுக்கு பகவானை அடைவதில் த்ருடமான நிச்சயம் இருக்கிறது?" என்பதை அறிந்துகொள்ள ஆவலுள்ளவராக ஆனுர். विष्णोः कटाक्षश्चाद्वेष

आभिमुख्यञ्च सात्विकैः। संभाषणं षडेतानि ह्याचार्यप्राप्तिहेतवः॥
(விஷ்ணோ: கடாக்ஷச்சாத்வேஷ ஆபிமுக்யஞ்ச ஸாத்விகை: ஸம்பாஷணம் ஷடேதாநி ஹ்யாசார்யப்ராப்திஹேதவ.||) என்ற ஸூக்தியினால் பகவானை அடைவதில் ஆசை உள்ள ஜீவனைக் கண்டுபிடிக்க சில அடையாளங்கள் சொல்லப்படுகின்றன. அதாவது, (1) பகவத் பக்தர்களோடு ஸ்நேஹம், (2) பகவத் பக்தர்களிடத்தில் த்வேஷமில்லாதிருத்தல், (3) பகவத் பக்தர்களோடு ஸம்பாஷணாதிகள், (4) அப்படியே பகவானிடத்தில் பக்தி, (5) த்வேஷ மில்லாதிருத்தல், (6) எப்பொழுதும் பகவானுடைய ஸத்கதைகளையே சொல்லிக் கொண்டிருப்பது, இந்த ஆறுவிதமான அடையாளங்களும், எந்த ஜீவனிடத்தில் காணபபடுகின்றதோ அந்த ஜீவன் ஸம்ஸார ஸாகரத்தினின்றும் கரையேற எண்ணமுள்ளவன் என்றும், பகவானுடைய திருவடியில் தான் போய்ச் சேரவேண்டுமென்ற தீவிரமான நிச்சயத்தோடு கூடினவன் என்றும் தெரிந்து கொள்ளலாம். இவ்விதமான ஜீவனைத்தான் ஸத்குருவானவர் தன்னுடைய உபதேசத்திற்கு யோக்யனான ஜீவனாகவும் கருதுவார். இவ்வித மஹிமையுள்ள சிஷ்யனைத் தேடிப்பிடிக்க ஆசார்ய புருஷனாகிற பரமகுரு யத்னம் செய்கிறார் என்ற தாத்பர்யமானது முதல் ச்லோகத்தால் வெளியாகிறது.

दुष्करं निष्प्रतिद्वन्द्वं चिकीर्षन्कर्मवानरः।
समुदग्रशिरोग्रीवः गवां पतिरिवाबभौ॥

துஷ்கரம் நிஷ்ப்ரதித்வந்த்வம் சிகீர்ஷந் கர்மவாநர: |
ஸமுதக்ரசிரோக்ரீவ: கவாம் பதிரிவாபபௌ ||

முன் சொன்னபடி ஸீதையைத் தேடுவதற்காக யத்னம் செய்த ஆஞ்ஜநேய ஸ்வாமி, ஆகாச மார்க்கமாக ஸீதையைத் தேட ஆரம்பித்ததினால் அந்தக் கார்யமானது மற்றவர்களால் செய்ய முடியாததான அபூர்வமான கார்யமாகும். அத்துடன் அவர் செய்ய ஆரம்பித்த கார்யத்திற்கு யாதொரு விதமான ப்ரதிபந்தகமும் ஏற்பட ந்யாயமில்லை. பூமியில் நடந்து செல்லுகிறவர்களுக்குத்தான் மார்க்கத்தில் அநேக விதமான தடைகள் ஏற்பட ந்யாயமுண்டு. ஆகாசத்தில் போகிறவர்களுக்கு யாதொரு தடையும் ஏற்பட ந்யாயமில்லை என்பது லோக ப்ரஸித்தமானது. அவ்

விதமான கார்யத்தைச் செய்யத் துணிந்த ஹநுமாரோ தன்னுடைய சிரஸ்ஸையும், கழுத்தையும் மேல் முகமாக வைத்துக் கொண்டு ஆகாசத்தைப் பார்க்கும்பொழுது. மார்க்கம் யாதொரு விதமான தடையினாலும் தடைப்பட்டதாக இல்லாமல் இருக்கிறதா என்பதைத்தான் கவனிக்கிறாரோ என்று மற்றவர்களுக்குத் தோன்றும். ஹநுமாருடைய உத்ஸாஹமுள்ள ப்ரவ்ருத்தியையும். கம்பீரமான அவருடைய சரீரத்தையும் பார்க்கும் பொழுது. கோக்களுக்கு அதிபதியான ஒரு பெரிய வ்ருஷபம் போல் அவருடைய ஸ்வரூபமானது விளங்கிற்று.

கோக்களுக்கு பதியாக வ்ருஷபத்தையும் சொல்லலாம்; பரமேச்வரனையும் சொல்லலாம். பசுபதி என்று பரமேச்வரனுக்கு திருநாமம் ஏற்பட்டதல்லவா. இதனால் பசுபதியான பரமேச்வரன் பகீரத மஹா ராஜாவிற்காக கங்கா தேவியைத் தன்னுடைய சிரஸ்ஸில் தரிக்க யத்னம் செய்த காலத்தில் ஆகாசத்திற்கு அபிமுகமாக எப்படி தன் ஜடாபாரத்தை விரித்துக் கொண்டு நின்று வந்தாரோ அதுபோலவே ஆஞ்ஜநேய ஸ்வாமியினுடைய ஸந்நிவேசமானது காணப்பட்டது. அதனால், பரமேச்வரன் யத்னம் செய்த கார்யமானது விக்னம் இல்லாமல் நடைபெற்றதுபோல் ஆஞ்ஜநேய ஸ்வாமியினுடைய ஆரம்பமும் ஒருவிதமான விக்ன மில்லாமல் நடை பெறும் என்பது த்ருஷ்டாந்தத்தினால் ஸூசிப்பிக்கப் படுகிறது.

அத்துடன், லோகத்தில் ஆசார்ய புருஷன் செய்கிற கார்யத்தை மற்ற எந்த பந்துக்களாலும் செய்ய முடியாது. இந்த ஆஞ்ஜனேயஸ்வாமியோ ஆசார்ய புருஷனுடைய ஸ்தானத்தில் இருந்து கொண்டு ஸீதை என்ற ஒரு உத்தம ஜீவனை ஸம்ஸார ஸாகரத்திலிருந்தும் கரையேற்ற யத்னம் செய்கிறபடியால் இவர் ஆரம்பித்த கார்யமானது மற்ற யாராலும் செய்ய முடியாததே என்பதையும் துஷ்கரம் என்கிற பதத்தினால் வால்மீகி மஹர்ஷியானவர் ஸூசிப்பிக்கின்றார்.

தவிர. ஒரு நல்ல சிஷ்யனை பந்தத்திலிருந்தும் முக்தனாகச் செய்கிற கார்யமானதாலும், அதைச் செய்வதிலும் தனக்கு ப்ரதி ப்ரயோஜனமாக தனத்தையோ கீர்த்தியையோ, இந்த ஆசார்ய

புருஷன் எதிர்பார்க்காததால் இந்த கர்மாவானது உயர்ந்த சுப கர்மாவாக ஆகிவிட்டது. ஆசார்ய புருஷர்கள் ப்ரவ்ருத்திக்கும் நல்ல உபதேசமாகிய கார்யமானது நிஷ்காம ப்ரவ்ருத்தியாக இருக்க வேண்டும். அவ்விதமானல் அதற்கு யாதொரு விதமான விக்னமும் ஏற்படாது. ப்ராரப்த வசமாக ஏற்பட்டாலும் அந்த விக்னங்களை நிவ்ருத்தி செய்துகொள்வதில் அந்த ஆசார்ய புருஷர்கள் ஸாமர்த்யமுள்ளவர்களாகவே ஆவார்கள். அந்த ஆசார்ய புருஷர்களுடைய கார்யத்தில் தைவத்தினுடைய ஆனுகூல்யமும் பலமாக ஏற்படும். அந்த ஆசார்யனுக்கு பகவதனுக்ரஹ பலமும் பரிபூர்ணமாக இருக்கும். அப்படி இருக்கும்பொழுது அந்த அந்த ஆசார்ய புருஷனுடைய சிஷ்ய ஸந்தாரணம் என்ற கார்யத்திற்கு ஏது விக்னம் ஏற்படும. நிர்விக்னமாக அது நடை பெற்றே தீரும் என்பதும் நிஷ்ப்ரதித்வந்த்வம் என்கிற பதத்தினல் ஸூசிப்பிக்கப் படுகிறது.

அத்துடன் கவாம்பதி: என்கிற பதமானது பசுபதியான பரமேச்வரனையும் குறிக்கிறபடியினல், ஞானேபதேசம் செய்கிற ஆசார்ய புருஷன் பரமேச்வரனுடைய ஸ்வரூபம் என்றும் தெரிய வருகிறது. அதில்,

आरोग्यं भास्करादिच्छेत् श्रियमिच्छेद्धुताशनात् ।
ज्ञानं महेश्वरादिच्छेत् मोक्षमिच्छेत् जनार्दनात् ॥

ஆரோக்யம் பாஸ்கராதிச்சேத் ச்ரியமிச்சேத்துதாசநாத்
ஞாநம் மஹேச்வராதிச்சேத மோக்ஷமிச்சேத் ஜநார்தநாத்

என்ற ஸ்ம்ருதி வாக்யமே ப்ரமாணமாகும். ரோக நிவ்ருத்திக்கு ஆதித்ய பகவானையும். ஐச்வர்ய ப்ராப்திக்கு அக்னியையும். ஆத்ம ஞானத்திற்கு மஹேச்வரனையும், மோக்ஷத்திற்கு மஹா விஷ்ணுவையும் உபாஸிக்க வேண்டுமென்பதுதான் மேற்சொன்ன ஸ்ம்ருதியின் தாத்பர்யமாகும்.

அவ்விதம் ஞானதாதாவான பரமேச்வரனை கவாமபதி: என்ற பதத்தினல் ஆஞ்ஜநேய ஸ்வாமிக்கு உதாஹரணமாக நிருபணம் செய்திருப்பதிலிருந்தும், பரமேச்வரன் ஸநகாதிகளுக்கு உபதேசம் செய்தது எப்படி நிஷ்காம ப்ரவ்ருத்தியோ, அதுபோல்தான் இந்த

ஆஞ்ஜநேய ஸ்வாமியும் ஸீதையைப் போலுற்ற உத்தம ஜீவனுக்கு தாரக ப்ரம்மமாகிய ராமனுடைய ப்ராப்தியில் உபாயமான உபதேசமும் நிஷ்காம ப்ரவர்த்தி ஆகும் பராமேச்வரனால் தரிக்கப் பட்ட கங்காதேவியானவள் ஸர்வ ஜனங்களையும் ஸர்வ பாபத்தினின்றும் நிவ்ருத்தி செய்து வைப்பதில் எப்படி பரிசுத்தமான பதார்த்தமோ அதுபோல் ஆஞ்ஜநேயஸ்வாமியினுடைய உபதேச வாக்யங்களும் பரம பரிசுத்தமான பதார்த்தம் என்பதும் பரமேச்வரன தரித்த கங்கையானவள் விஷ்ணுவை ஸம்பந்தித்தவள் போல் ஆஞ்ஜநேய ஸ்வாமியினால் உபதேசம் செய்யப்படுகிற தத்வமும் வைஷ்ண மந்த்ர ரஹஸ்யம் என்பது முதலான அநேக வ்யங்க்யங்கள் மேற்சொன்ன ச்லோகத்தில் அடங்கி உள்ளன.

अथ वैडूर्यवर्णेषु शाद्वलेषु महाबलः ।
धीरस्सलिलकल्पेषु विचचार यथासुखम् ॥
द्विजान् वित्रासयन् धीमान् उरसा पादपान्हरन् ।
मृगांश्च सुबहून्निघ्नन् प्रवृद्ध इव केसरी ॥
नीललोहित माञ्जिष्ठ पत्रवर्णैः सितासितैः ।
स्वभावविहितैः चित्रैः जातुभिः समलंकृतम् ।
कामरूपिभिराविष्टं अभीक्ष्णं सपरिच्छदैः ।
यक्षकिन्नरगन्धर्वैः देवकल्पैश्च पन्नगैः ॥
स तस्य गिरिवर्यस्य तले नागवरायुते ।
तिष्ठन् कपिवरस्तत्र ह्रदे नाग इवाबभौ ॥

அத வைடூர்யவர்ணேஷு சாத்வலேஷு மஹாபல: ।
தீரஸ்ஸலில கல்பேஷு விசசார யதாஸுகம் ॥
த்விஜாந் வித்ராஸயந் தீமாந் உரஸா பாதபாந்ஹரந் ।
ம்ருகாம்ச்ச ஸுபஹூந்நிக்நந் ப்ரவ்ருத்த இவ கேஸரீ ॥
நீலலோஹித மாஞ்ஜிஷ்ட பத்ரவர்ணை: ஸிதாஸிதை: ।
ஸ்வபாவவிஹிதை: சித்ரை ஜாதுபி: ஸமலம்க்ருதம் ।
காமரூபிபிராவிஷ்டம் அபீக்ஷ்ணம் ஸபரிச்சதை: ।
யக்ஷகிந்நரகந்தர்வை: தேவகல்பைச்ச பந்நகை: ॥
ஸ தஸ்ய கிரிவர்யஸ்ய தலே நாகவராயுதே ।
திஷ்டந் கபிவரஸ்தத்ர ஹ்ருதே நாக இவாபபௌ ॥

முன் சொன்னபடி ஆகாச மார்க்கமாகச் சென்று ஸீதை யைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று யத்னம் செய்த ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் மஹேந்த்ர பர்வதத்தின் சிகரத்தில் ஏறிக்கொண்டு அங்குள்ள வைடூர்யம என்ற ரத்னத்தின் காந்தியைப்போல் விளங்கி வரும் காரணத்தினுல் ஜல-ப்ரவாஹமோ என்று தோன்றும் படியான புல் மார்க்கங்களில் கொஞ்ச நேரம் உலாத்திக்கொண்டு ஸந்தோஷமாக விளங்கி வந்தார். அந்த ஸந்தர்ப்பத்தில்தான் விச்வ ரூபத்தையும் தரித்துக் கொண்டதாகத் தெரியவருகிறது. அந்த மலையிலுள்ள அநேக பக்ஷிகளும் பயந்து நடுங்கி அங்கிருந்து பறந்து வெளியில் சென்றுவிட்டன இந்த மஹானுபவனுடைய ஸஞ்சார காலத்திலேற்பட்ட கால் வேகத்தினுல் அந்த மலையிலுள்ள அநேக வ்ருக்ஷங்களும், ம்ருகங்களும் பயந்து ப்ராணனையும் விட்டுவிட்டன. அப்பொழுது பார்க்கும்போது இவருடைய நிலை மிகவும் உத்ஸாஹ முள்ள ஒரு பெரிய ஸிம்மம் போல் விளங்கி வந்தது. முன்பு ஞான தாதாவான பரமேச்வரனை இந்த ஆஞ்ஜநேயருக்கு உதாஹரண மாகச் சொல்லப்பட்டது இப்பொழுது கேஸரி என்பதில் ஸிம் மத்தை உதாஹரணமாகச் சொல்லுகிருர். இதனுலும் ஆசார்ய பதவியில் அமர்ந்தவன் 'எவ்விதமான வேத பாஹ்யர்களான துர் வாதிகளுடைய வாதங்களையும் பேதிக்கிற விஷயத்தில் மத்தகஜங் களுடைய மஸ்தகத்தை பேதிக்கும் ஸ்வபாவத்தை உடைய ஸிம்மத் தைப்போல் இருந்து வரவேண்டும்' என்பதும் வெளியாகிறது

எந்த மலையினுடைய ப்ரதேசத்தில் இவர் நின்று வந்தாரோ, அந்த ப்ரதேசமானது கருப்பு வர்ணமாயும், சிவப்பு வர்ணமாயும் பொன் நிறமாயும், வெளுப்பு கருப்பு இரண்டும் சேர்ந்த வர்ண முடையதாயுமுள்ள அநேக அபூர்வமான வ்ருக்ஷங்களின் இலைக ளுடைய வர்ணங்களினுல் மிகவும் ரமணீயமாக விளங்கி வந்தன. இயற்கையாகவே ஏற்பட்ட நானுவிதமான தாதுக்களாலும், நச்சங் கப் பொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டு வந்தன. நினைத்த மாத் திரத்தில் எவ்விதமான ரூபத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமானு லும் அவ்விதம் அந்த ரூபத்தை எடுத்துக் கொள்ளும் சக்தியுள்ள யக்ஷர்கள், கிந்நரர்கள், தேவர்கள், கந்தர்வர்கள், பன்னகர்கள் முதலிய தேவ ஜாதிகளில் சேர்ந்தவர்கள் திவ்யமான அலங்காரங்

களால் அலங்கரித்துக் கொண்டு அந்த மலையினுடைய ப்ரதேசத்தில் வாஸம் செய்து கொண்டு வருகிறார்கள். இதனால் 'ஆசார்ய புருஷன் எந்த ஸ்தானத்தில் அமர்ந்து கொண்டு ஒரு ஜீவனுக்கு தத்வோபதேசத்தைச் செய்வதில் ஸித்தனாக இருந்து வருகிறானோ அவனுடைய ஸந்நிதியில் ஸகலமான உபநிஷத்துக்கள், தேவர்கள் இதிஹாஸ புராணங்கள், தாத்பர்ய லிங்கங்கள், ந்யாயங்கள் முதலானவைகள் ஸாந்நித்யத்தோடு விளங்கி வரும்' என்கிற தத்வமும் மேற்சொன்ன ச்லோகங்களின் தாத்பர்யத்தை கவனிக்கும் பொழுது வ்யங்க்யமாக விளங்கி வருகின்றது

அவ்விதமான ச்ரேஷ்டமான பர்வத ப்ரதேசத்தில் இருந்து கொண்டு வரும் ஆஞ்ஜநேய ஸ்வாமியைக் கவனிக்கும்பொழுது ஒரு பெரிய மடுவின் நடுவில் நின்றுகொண்டு வரும் மத்தகஜம் போல் விளங்கி வந்தார். முன் ச்லோகத்தில் ஸிம்மத்தைப்போல் வர்ணித்தோம் இந்த ச்லோகத்தில் नाग इवाबभौ (நாக இவாபபௌ) என்ற வாக்யத்தினால் கஜத்தைப்போல் என்று வர்ணிக்கிறார். இதனால் ஒரு ஸந்தர்ப்பத்தில் வ்ருஷபம் போலும், மற்றொரு ஸந்தர்பத்தில் ஸிம்மம் போலும் மற்றொரு ஸந்தர்ப்பத்தில் கஜத்தைப் போலும் வர்ணிக்கின்ற கவியினுடைய அபிப்ராயத்தை கவனித்தால், ஆசார்ய புருஷன் இருக்க வேண்டிய நிலையைச் சொன்னது போல் ஆகிறது

வ்ருஷப த்ருஷ்டாந்தத்தினால் வ்ருஷபமானது எப்படித் தன்னுடைய எதிரில் வரும் ப்ராணிகளை மிகவும் துச்சமாக நினைத்து கர்வத்துடன் செல்லுமோ, அதுபோல் ஆசார்ய புருஷனும், ஒருவருக்கும் பயத்தை அடையக் கூடாதென்பது வெளியாகிறது. ஸிம்மத்தைக் கண்டால் மற்ற ம்ருகங்கள் நடுங்கி ஓடுவதுபோல் அந்த ஆசார்யனைக் கண்ட மாத்ரத்தில் துர்வாதிகள் ஓடிவிட வேண்டும். அவ்விதமான ஞான சக்தியோடு கூடினவனாக ஆசார்யன் இருக்கவேண்டும் அதாவது துர்வாதிகளுக்கு பயத்தைக் கொடுக்கும் பாண்டித்யத்தோடு கூடினவனாக இருக்க வேண்டுமென்பதும் வெளியாகிறது. மத்தகஜமானது ராஜவீதியில் போகும்பொழுது அநேக பாலர்களும் கூச்சலிட்டுக் கொண்டு பின் தொடர்ந்து ஓடுகிறார்கள். அநேக நாய்களும் குரைக்கின்றன.

அதற்காக மத்தகஜமானது திரும்பி அவர்களுக்கு ப்ரதியைச் செய்கிற ஸ்வபாவத்தை அடைகிறதில்லை. அதுபோல் இந்த ஆசார்ய புருஷனும் தன்னுடைய குண தோஷங்களைப் பிறர் எந்த விதமாகச் சொன்னாலும் அவைகளுக்கு பதில் சொல்லுகிறது என்கிற ஸ்வபாவம் இல்லாமல், தான் உதாஸீனமாக இருந்துகொண்டு, தன்னுடைய ஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்து கொண்டிருப்பதே ஆசார்ய புருஷனுடைய ஸ்வபாவமாகும் என்று அறிந்துகொள்ள வேண்டும் இவ்விதமே ஆங்காங்கு சொல்லியிருக்கும் உதாஹரணங்களைக் கொண்டு ஆசார்ய புருஷனுடைய மஹிமையை வ்யங்க்யமாக அறிந்து கொள்வதே வித்வான்களுடைய ஸ்வபாவமாகும்.

सर्गबन्धो महाकाव्यं (ஸர்கபந்தோ மஹாகாவ்யம்) என்ற காவ்ய ப்ரகாசிகையினுடைய ப்ரமாண வசனத்தை முன்னிட்டு பிரித்துப் பிரித்து விஷயங்களை ஒன்றொன்றுக்கும் ஒவ்வொரு ஸர்க்கமாக செய்திருக்கும் க்ரந்தத்தை மஹா காவ்யமென்று அறியவேண்டும் என்று தெரிகிறபடியால், இந்த ஸ்ரீமத் ராமாயணம் ஸர்கபந்தமான படியினால் இதை மஹா காவ்யம் என்று யாராலும் ஒப்புக்கொள்ள முடியாமல் இருக்க முடியாது மஹா காவ்யமென்றும், ஆதி காவ்யமென்றும், உத்தம காவ்யமென்றும் சொல்லப்படும் காவ்யங்களெல்லாம் அர்த்த ப்ரதானமான ஸுஹ்ருத ஸம்மிதையென்றும், வ்யங்க்யப் பிரதானமான காந்தா ஸம்மிதையென்றும் ஒப்புக் கொள்ள வேண்டியது அவச்யமானதால், ப்ரக்ருதத்தில் இந்த ராமாயணமோ காந்தா ஸம்மிதையானதாலும் வ்யங்க்யார்த்தத்தையே முக்யமாக க்ரஹித்துக்கொள்வது வித்வான்களுடைய ஸ்வபாவமானதால் ப்ரபந்தத்தை யொட்டியோ, பதத்தை யொட்டியோ, வாக்யத்தை யொட்டியோ ஏற்படும் வ்யங்க்யமும் ஸூசிபிக்கப்படுகிறதென்பதையும் அறியவும்.

स सूर्याय महेन्द्राय पवनाय स्वयंभुवे ।
भूतेभ्यश्चाञ्जलिं कृत्वा चकार गमने मतिम ॥

ஸ ஸூர்யாய மஹேந்த்ராய பவநாய ஸ்வயம்புவே ।
பூதேப்யச்சாஞ்ஜலிம் க்ருத்வா சகார கமநே மதிம் ॥

ஒரு தேசத்தினின்றும் ஒரு கார்யத்தை முன்னிட்டு மற்ருெரு தேசத்திற்குப் போகும் ஸமயத்திலோ, மற்ருெரு தேசத்தில் கார்யத்தை முடிக்கும் காலத்திலோ, திரும்பி வரும் காலத்திலோ யாதொரு விதமான விக்னமும் இல்லாமல் கார்யம் முடிவதற்கு இஷ்ட தேவதைகளை ப்ரார்த்தித்துக்கொள்ள வேண்டுமென்கிற சிஷ்டாசாரத்தை ப்ரக்ருதத்தில் ஆஞ்ஜனேயஸ்வாமியும் यद्यदाचरति श्रेष्ठः तत्तदेव इतरो जनाः । स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ।( யத்யதாசரதி ச்ரேஷ்ட: தத்ததேவ இதரோ ஜநா: । ஸ யத் ப்ரமாணம் குருதே லோகஸ் ததநுவர்ததே ||) என்ற சாஸ்த்ரத்தை நம்பி, தானும் அனுஷ்டிக்கிருர் ஸூர்ய பகவான் ஸர்வ ப்ராணிகளுக்கும் கர்ம ஸாக்ஷியானதினுல் குலதெய்வத்தின் கோடியில் சேர்த்து ஆதரிக்கவேண்டிய கடமையை முன்னிட்டு முதன்முதலாக ஸூர்யனுக்கு அஞ்ஜலி பந்தனம் செய்துகொண்டார். இந்த்ரனும் மழையை ஏற்படுத்தி, ப்ராணிகளுக்கு அன்னதாதாவாக ஆகிற படியால் அவனையும் இஷ்ட தேவதை என்று நினைத்து நமஸ்கரித்தார். தனக்கு வாயு பகவான் பிதாவாக ஆனதினுல், பூஜ்யத்வ புத்தியோடு வாயுவிற்கும் நமஸ்காரம் செய்தார் அப்படியே லோகத்திற்கே ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரம்மாவின் பொருட்டு நமஸ்காரம் செய்தார் மற்ற அந்தந்த இந்த்ரியங்களுக்கு அதிஷ்டான தேவதைகளாகிய தேவயோனியில் பிறந்தவர்களுக்கும் அஞ்ஜலி பந்தத்தைச் செய்துவிட்டு லங்கா நகரத்திற்கு தான் போவதில் புத்தியை நிச்சயம் செய்தார்.

இந்த ச்லோகத்தில் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் 'தனக்கு ஸ்வாமியான ஸ்ரீ ராமச்சந்த்ரமூர்த்திக்கு நமஸ்காரம் செய்ததாகத் தெரியவில்லையே? என்று சிலர் ஸந்தேஹப்படக்கூடும் பவநாய என்ற பதத்தினுல் சொல்லப்பட்ட தெய்வமோ ரூடி வ்ருத்தியை ஆச்ரயித்து, ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய பிதாவான வாயுவாக ஆனுலும், யோக வ்ருத்தியை ஆச்ரயித்து தாரக ப்ரம்மமாகிய ஸ்ரீராமச்சந்த்ரமூர்த்தியே அந்த சப்தத்தின் பொருளாகும் என்பது ஸித்தமாகிறது. पूयते येन स्वज्ञानेन योगिवृन्दं सः पवनः भगवान् प्रत्यक्तत्त्वभूतो रामः (பூயதே யேந ஸ்வக்ஞாநேந யோகிப்ருந்தம் ஸ: பவந: பகவாந் ப்ரத்யக்தத்வபூதோ ராம:) என்ற திலக வ்யாக்யான வாக்யத்தை அனுஸரித்து எந்த பகவான் யோகிகளுக்கு தன்னுடைய தத்வ ஞானத்தை உபதேசித்து அதனுல் அந்த யோகிகளை ஸம்ஸார

ஸாகரத்தினின்றும் தரணம் செய்து வைக்கிருரோ அந்த பகவான் பவந: என்கிற சப்தத்திருல் யோக வ்ருத்தியின் பலத்திருல் சொல்லப்படுகிறவன் என்ற தாத்பர்யம் விளங்குகிறபடியால் பவநாய என்பதினுலேயே தாரக ப்ரம்மமாகிய ராமனின் பொருட்டு அஞ்ஜலி பந்தத்தைச் செய்தார் என்பது ஸித்தமாகிறது

ஆகையால் ராமருக்கு நமஸ்காரம் செய்யாமல் இவர் புறப் பட்டதால், போகும் மார்க்கத்தில் அனேக விக்னங்கள் ஏற்பட்ட தாகவும் லங்கா நகரம் சென்றும் ஸீதையைக் கண்டு பிடிப்பதில் மிகவும் கஷ்டப்பட்டாரென்றும் சொல்லுகிற விஷயமானது, சொல்லுகிறவர்களுடைய சமத்காரந்தான். அந்த கதா பாகங் களுக்கு. உத்தம ஸத்சிஷ்யர்களுக்குக் குருவைக் கண்டுபிடிக்கிற ச்ரமத்தைக் காட்டிலும் ஸத்குருக்களுக்கு ஸத்சிஷ்யனைக் கண்டு பிடிப்பதில் உள்ள கஷ்டம்தான் அதிகமானது என்று சொல்லு வதில்தான் தாத்பர்யமாகும்; அன்றியில் ராமருக்கு நமஸ்காரம் செய்யாமல் கிளம்பினர் என்பதினுல் கஷ்டப்பட்டார் என்று சொல்லுவது அழகல்ல.

अञ्जलिं प्राङ्मुखः कृत्वा पवनाय आत्मयोनये ।
ततोहि ववृते गन्तुं दक्षिणो दक्षिणां दिशम् ॥

அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா பவநாய ஆத்மயோநயே ।
ததோஹி வவ்ருதே கந்தும் தக்ஷிணே தக்ஷிணும் திசம் ॥

தான் ஆகாச மார்க்கமாக லங்கா நகரம் செல்வதற்கு ஆஞ்ஜ னேய ஸ்வாமியானவர் யத்னம் செய்த காரணத்திருல் அது விஷயத்தில் வாயு பகவானுன தன் பிதாவினுடைய உதவி முக்ய மாக வேண்டுமென்று கருதி மற்ற தேவதைகளோடு வாயுவைச் சேர்க்காமல் விசேஷமாகத் தனியாகப் பிரித்து வாயுவை நமஸ்காரம் செய்துவிட்டு, தெற்கு திசையிலுள்ள லங்கா நகரம் செல்வதற்குத் தன்னுடைய சரீரத்தை வ்ருத்தி செய்துகொண்டார் என்ற தாத்பர்யத்தால் ப்ராணுயாமத்தினுடைய பெருமையானது வெளி யாகிறது.

அதாவது, பூரகம், ரேசகம், கும்பகம் என்று மூன்று விதமான ப்ராணுயாமத்தை சாஸ்த்ரமானது பிரித்து போதித்திருக்கிறது

வெளியிலுள்ள சுத்தமான வாயுவை இடது பாகத்திலுள்ள நாஸிகாரந்த்ரம் வழியாக சரீரத்திற்குள் பூர்த்தி செய்துகொள்ளுவது பூரகமென்றும், சரீரத்திற்குள் இருந்த அசுத்தமான வாயுவை வலது பாகத்திலுள்ள நாஸிகா த்வாரம் வழியாக வெளி பாகத்தில் த்யாகம் செய்து விடுவது ரேசகம் என்றும், சுத்தமான வாயுவை ஸுஷும்ன நாடியில் நிரோதம் செய்வது (அதாவது அடக்குவது) கும்பகம் என்றும் சொல்லப்படும்.

அவ்விதம் கும்பக ப்ராணுயாம காலத்தில், ஆகாச மார்க்கத்தில் கூட ஸஞ்சரிக்கச் சக்தியுள்ளவனுகி விடுவான். இந்த ப்ராணுயாம ஸித்தியை மூன்று மாத காலத்தில் அப்யாஸம் செய்து அடையலாம். ஒவ்வொரு தினத்திலும் இந்த ப்ராணுயாமத்தை அப்யாஸம் செய்வதற்காக ஏற்பட்ட காலங்கள் ப்ராதக்காலத்தில் அருணோதய ஸமயம், மாத்யான்ஹிக காலத்தில் உச்சிவேளை ஸாயங்காலத்தில் அஸ்தமன ஸமயம், நடுநிசி இந்த நான்கு காலங்களிலும், ஒவ்வொரு காலத்திலும், இருபது ப்ராணுயாம ப்ரகாரம் ஆக எண்பது ப்ராணுயாமம் செய்து வந்தால், மூன்று மாத காலத்திற்குள் ஸித்தி பெறலாம் முதன்முதல் சரீரத்தில் வியர்வைகள் அதிகமாக ஏற்பட்டு ஸ்நானம் செய்தது போல் ஆகிவிடும். இது அதம ஸித்தியாகும் இரண்டாவது சரீரத்தில் சலனம் ஏறபடும். இது மத்யம ஸித்தியாகும். மூன்ருவது பூமியை த்யாகம் செய்துவிட்டு ஆகாசத்தில் பஞ்சுபோல் இலேசாக ஸஞ்சரிப்பது — உத்தம ஸித்தியாகும் சரீரத்திலுள்ள நாடிகளுக்குள், இடை, பிங்களை ஸுஷும்னை என்ற மூன்று நாடிகள் ப்ரதானமாக உள்ளன இடையென்ற நாடியை ஸூர்ய நாடியென்றும், பிங்களை என்ற நாடியை சந்த்ர நாடியென்றும், ஸுஷும்னையை அக்நி நாடியென்றும் சொல்வார்கள். இந்த விஷயத்தைத் தெரிந்து கொண்டு ப்ராணுயாமத்தை செய்து வாயுவை தன் ஸ்வாதீனம் செய்துகொள்ளுகிற உபாயத்தைத்தான் யோக மார்க்கமென்று சொல்வார்கள் அதற்கு முக்யமான தேவதையோ ஸூர்ய பகவானும். திசையோ கிழக்கு திசையும் ஆகும். அதைத்தான் अञ्जलिं प्राङ्मुखः कृत्वा (அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா) என்கிற வாக்யத்தினுல் வால்மீகி மஹர்ஷியானவர் ஸூசிப்பிக்கின்றார். அணிமை, மஹிமை, லகிமை, கரிமை, ப்ராப்தி, ப்ராகாம்யம்,

ஈசித்வம், வசித்வம், என்ற எட்டு விதமான ஸித்திகளும், கும்பக ப்ராணாயாமத்தால், ப்ராண நிரோதம் செய்த ராஜயோகிகளுடைய வசத்தில் வந்துவிடுமாதலால் அவர்களுக்கு எந்த மார்க்கமாக ஜலத்திலோ, ஆகாசத்திலோ ஸஞ்சாரம் செய்ய வேண்டுமென்று இச்சை ஏற்பட்டாலும், அந்த மார்க்கமாக ஸஞ்சரிக்கலாம். அவ்வித மஹிமையுள்ள ராஜயோகிகளுக்குள் ப்ரக்ருதத்தில் ஆசார்ய புருஷனை ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் ப்ரதானமான ராஜயோகியானதால் வாயுவை நிரோதம் செய்துகொண்டு ஆகாச மார்க்கமாக லங்கா நகரம் செல்வதற்கு யத்னம் செய்தார்.

இந்த ஆச்சர்யத்தை ஜாம்பவான் முதலிய ஸகலமான வானரர்களும் பார்த்து ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய பெருமையை ப்ரசம்ஸை செய்தார்கள். இந்த ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய யத்ன விசேஷமும் தன் ப்ரயோஜனத்திற்காக ஏற்பட்டதல்ல. பகவானை ஸ்ரீ ராமனுடைய கைங்கர்யமாக ஆகுமென்பதை அறியவும். ஈச்வரனுடைய கைங்கர்ய ரூபமாக எந்த கர்மாவைச் செய்தாலும் அந்த கர்மாவானது தடைபடாமல் ஸம்பூர்ணமாகப் பலிக்கும் என்பதிலிருந்தும ஸம்சயம் இல்லை. அதைத்தான் ववृते रामवृत्यर्थं समुद्र इव पर्वसु (வவ்ருதே ராமவ்ருத்யர்த்தம் ஸமுத்ர இவபர்வஸு) என்கிற வாக்யத்தினுல் மஹர்ஷியானவர் வெளிப்படுத்துகிறார். ஆகாச மார்க்கத்தில் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் புறப்படுகிற காலத்தில் தன்னுடைய இரண்டு கைகளாலும் கால்களாலும் பர்வதத்தை அழுத்திக்கொண்டு புறப்படும்பொழுது. அந்த மலை ஒரு முஹூர்த்த காலம் மஹிமா ஸித்தியை அடைந்த ஆஞ்ஜனேயருடைய குருத்வத்தைத் தாங்க முடியாமல் சலித்தது. அந்த மலையிலுள்ள ஸகல வ்ருக்ஷங்களும் புஷ்பங்களை ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய சிரஸில் புஷ்பாஞ்சலி செய்வதுபோல் உதிர்த்து. புஷ்பங்களால் அந்த மஹாநுபாவனை அலங்கரித்தன. ஆஞ்ஜனேய ஸ்வாமியோ வ்ருக்ஷங்களிலிருந்தும். தன் சரீரத்தில் உதிர்க்கப்பட்ட புஷ்பங்களால் நாலாபக்கத்திலும் சூழப்பட்டிருக்கும் காரணத்தைக் கொண்டு இது மற்றெரு புஷ்ப மயமான மலையோ என்று தோன்றும்படியாக விளங்கினர் ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய வீர்யத்தையோ மற்ற எவர்களாலும் அந்த ஸந்தர்ப்பத்தில் இவ்வளவுதான் என்று குறிப்பிட்டு அறிய முடியவில்லை. அபூர்வ

மான வீர்யத்தோடு கூடின ஆஞ்ஜனேய ஸ்வாமியினுல் பீடிக்கப் பட்ட அந்த மலையில், நான்கு பக்கங்களிலும் அருவிகள் ப்ரவாஹித்து பூமியில் விழுந்தன. மத்தகஜங்களுடைய இரு பக்கத் திலும் பெருகி வரும் மத ஜலங்களைப்போல் அந்த அருவிகள் காணப்பட்டன. அத்துடன் ஆங்காங்கு மலைகளில் வெடிப்புகள் ஏற்பட்டு, ஸுவர்ணங்கள், வெள்ளிகள், தாமிரங்கள் முதலான அபூர்வமான தாதுக்களும், நவரத்ன விசேஷங்களும், பகிரங்கமாக வெளியில் காணப்பட்டன. அந்த மலையில் வாஸம் செய்து வந்த பூதங்களும், இனிமேல் இந்த மலையில் வாஸம் செய்யக்கூடாது என்று பயந்து கோரமான சப்தங்களை வெளியிட்டன. அந்த சப்தங்களால் அண்ட கடாஹம் முழுவதும் பூர்த்தியாகிவிட்டது. அந்த மலைகளில் வாஸம் செய்து வந்த ஸர்ப்பங்களும் விஷத்தைக் கக்கிக்கொண்டு அக்னி ஜ்வாலையைப்போல் கோபத்தினுல் ஜ்வலித்துக்கொண்டு வந்தன. அந்த மலையில் விஷத்தை சமனம் செய்யக்கூடிய ஔஷதிகள் அனேகம் இருந்தாலும் அந்த விஷங்களை அந்த ஔஷதிகளாலும் சமனம் செய்ய முடியவில்லை.

அந்த மலையில் வெகு காலமாக வாஸம் செய்து வந்த வித்யா தரர்கள் என்ற தேவர்கள் 'இனிமேல் இந்த மலையில் நாம் வாஸம் செய்யக்கூடாது. மலை இரண்டாகப் பிளந்துவிட்டது என்று பரபரப்புடன் தங்கள் தங்கள் போக ஸாமக்ரியைகளை அந்த மலையி லேயே இழந்துவிட்டு தன் தன் ஸத்ரீகளோடுகூட ஆகாச மார்க்கத்தை அடைந்தார்கள். ஆகாச மார்க்கத்தில் நின்று கொண்டு அந்த மஹேந்த்ர பர்வதத்தில் வஸிக்கிற ஸித்த புருஷர் களுடைய வார்த்தைகளையும் காதுகொடுத்துக் கேட்டார்கள். இந்த ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் "ராம கார்யத்திற்காக ஸமுத்ரத்தைத் தாண்டப்போகிருர். இவர் ஸங்கல்பம் செய்திருக் கும் கர்மாவை வேறு எவராலும் செய்ய முடியாது ஸமுத்ரத்தி னுடைய பரபாரத்தை அடைய இச்சிக்கிருர்" என்று சொல்லிக் கொண்டிருக்கும் ஸித்த புருஷர்களுடைய வார்த்தைகளை ஆகாச மார்க்கத்தில் நின்றுகொண்டு வரும் வித்யாதரர்கள் கேட்டு ஆஞ்ஜனேய ஸ்வாமியை ஒரு மஹாபுருஷனுகவே தீர்மானம் செய் தார்கள். ஆஞ்ஜனேய ஸ்வாமியும், கால விளம்பம் கூடாது என்று

நினைத்து சத்ருக்களை பராபவப் படுத்தும்படியான ஸாமர்த்யத்தையும் ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும்படியான லகுத்வத்தையும் ஆச்ரயித்து தன்னுடைய சிரஸ், கைகள், கழுத்து இவைகளையும் குறுக்கிக்கொண்டு ஸுஷும்ன நாடியினுடைய உள்பாகத்தில் ப்ராண வாயுவையும் அடக்கிக்கொண்டு, அதாவது கும்பகம் செய்துகொண்டு, ஆகாச மார்க்கத்தில் புறப்படும் ஸமயத்தில் ஜாம்பவான் முதலிய வானர ச்ரேஷ்டர்களைப் பார்த்துச் சொல்கிறார்.

वानरान्वानरश्रेष्ठः इदं वचनमब्रवीत् ।
यथा राघवनिर्मुक्तः शरः श्वसनविक्रमः ॥
गच्छेत्तद्वद्गमिष्यामि लङ्कां रावणपालिताम् ।
न हि द्रक्ष्यामि यदि तां लङ्कायां जनकात्मजाम् ॥
अनेनैवहि वेगेन गमिष्यामि सुरालयम् ।
यदिवा त्रिदिवे सीतां न द्रक्ष्याम्यकृतश्रमः ॥
बद्ध्वा राक्षसराजानं आनयिष्यामि रावणम् ।
सर्वथा कृतकार्योऽहं एष्यामि सह सीतया ॥
आनयिष्यामि वा लङ्कां समुत्पाट्य सरावणाम् ।
एवमुक्त्वा तु हनुमान् वानरान्वानरोत्तमः ॥
उत्पपाताथ वेगेन वेगवानविचारयन् ।
सुपर्णमिवचात्मानं मेने स कपिकुञ्जरः ॥

வாநராந்வாநரச்ரேஷ்ட: இதம் வசநமப்ரவீத் ।
யதா ராகவநிர்முக்த: சர: ச்வஸநவிக்ரம: ॥
கச்சேத்தத்வத்கமிஷ்யாமி லங்காம் ராவணபாலிதாம் ।
ந ஹி த்ரக்ஷ்யாமி யதி தாம் லங்காயாம் ஜநகாத்மஜாம் ॥
அநேநைவஹி வேகேந கமிஷ்யாமி ஸுராலயம் ।
யதிவா த்ரிதிவே ஸீதாம் ந த்ரக்ஷ்யாம்க்ருதச்ரம: ॥
பத்வா ராக்ஷஸராஜாநம் ஆநயிஷ்யாமி ராவணம் ।
ஸர்வதா க்ருதகார்யோஹம் ஏஷ்யாமி ஸஹ ஸீதயா ॥
ஆநயிஷ்யாமி வா லங்காம் ஸமுத்பாட்ய ஸராவணும் ।
ஏவமுக்த்வா து ஹநுமாந் வாநராந்வாநரோத்தம: ॥
உத்பபாதாதவேகேந வேகவாநவிசாரயந் ।
ஸுபர்ணமிவசாத்மாநம மேநே ஸ கபிகுஞ்ஜர: ॥

"ஹே வாநர ச்ரேஷ்டர்களே! ராமபாணம் எவ்வளவு வேகமாகப் போகுமோ அவ்வளவு வேகமாக நான் லங்காநகரம் சென்று அங்கு ஸீதையைக் காணுமற் போனுல் அதே வேகத்தோடு இந்த்ரலோகம் போவேன். அங்கும் ஸீதையைக் காணுமற் போனுல் கொஞ்சமேனும் என்னுடைய ச்ரமத்தைப் பாராட்டாமல் ராவணனை ராமருடைய ஸமீபத்திற்குக் கொண்டுவருவதோ. அல்லது லங்காநகரத்தையே ராவணனுள்பட பூமியிலிருந்து பிடுங்கித் தூக்கிக்கொண்டு வருவதோ. எவ்விதத்திலும் கார்யத்தை ஸபலமாகச் செய்துகொண்டுதான் திரும்பி வருவேன். நீங்கள் கொஞ்சமேனும் கவலையில்லாமல் இங்கு இருந்துகொண்டு வாருங்கள்" என்று சொல்லி வெகு வேகமாக ஆகாச மார்க்கத்தில் புறப்பட்டார்.

தன்னுடைய ஸ்வரூபத்தையும் கருட பகவானுக்கு ஸமானமாகப் பாவித்துக் கொண்டு தக்ஷிண திக்கை நோக்கிச் செல்லும் பொழுது அந்த மஹானுபாவனுடைய ஊரு வேகத்தினுல் அந்தப் பர்வதத்திலுள்ள அநேக வ்ருக்ஷங்கள் வேரோடு தானும் கிளம்பி கொஞ்சதூரம் வேகத்தினுல் ஆகாச மார்க்கத்தில் சென்று ஸமுத்ரத்தில் விழுந்தன வ்ருக்ஷங்களுடைய புஷ்பங்கள் ஆகாசத்தில் பறந்துகொண்டிருக்கும்பொழுது நக்ஷத்திரங்களால் சூழப்பட்ட ஆகாசம் போலவே. அந்த ஸந்தர்ப்பத்தில் ஸமுத்திரத்தில் மேல் பாகத்திலுள்ள ஆகாசமானது காணப்பட்டது. ஆஞ்ஜநேயஸ்வாமியினுடைய சரீரத்தின் சாயையோ ஸமுத்ரத்தில் நூறு மைல் விஸ்தாரமுள்ளதாயும் முந்நூறு மைல் நீளமுள்ளதாயும் ஜலத்தில் காணப்பட்டது. போகும்பொழுது சில ஸந்தர்ப்பங்களில், கருட பகவான் போல் மிகவும் ஊர்த்வபாகத்தில் போன காரணத்தால், மறைந்தவராயும், கீழ்பாகத்தில் வரும்பொழுது ப்ரகாசமாயும் காணப்பட்டார். தேவகார்யத்தைக் குறித்து ராம அவதாரமே ஏற்பட்டதால் அந்த ராமகார்யமாக ஆஞ்ஜநேயஸ்வாமியினுடைய பராக்ரமம் ஏற்பட்டிருப்பதைப் பார்த்து தேவர்களும் பரம ஸந்தோஷத்துடன் புஷ்பவர்ஷங்களை வர்ஷித்து ஆஞ்ஜநேயஸ்வாமியை ச்லாகித்தார்கள்.

இவ்விதம் கதாபாகம் நிற்க. ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் ஆசார்ய புருஷனுவைதால் ராமனுல் ஆக்ஞாபிக்கப்பட்டு ஸீதையைப்

போலுள்ள உத்தம ஜீவனை ஸம்ஸாரஸாகரத்தினின்றும் கரையேற்ற ப்ரவர்த்திக்கிறார் என்ற வ்யங்க்ய பாகத்தை கவனிக்கும்பொழுது ஒரு ஜீவனுக்கு சரீரத்துடன் ப்ரம்மலோகம் போவதும் ஸுலபமாக ஆகலாம் தனக்கு ஆத்மதத்வத்தை உபதேசம் செய்கிற ஆசார்ய புருஷனுடைய லாபம் ஏற்படுவது மிகவும் துர்லபமாகும். ஜீவன் செய்த பாபங்களே. தன்னைத் தேடிவரும் ஆசார்யனைத் தன்னருகில் வரவிடாமலே தடுத்துத் திரும்பிப் போகும்படி செய்துவிடும். அந்த விக்னங்களையும் ஜயித்துக்கொண்டு அந்த ஆசார்ய புருஷன் தன்னருகில் வந்து தனக்கு உபதேசம் செய்யும்படியான பாக்யத்தை அடைந்த ஜீவன் மிகவும் உத்தம ஜீவன் என்றே சொல்லவேண்டும். ப்ரக்ருதத்திலோ, ஸீதையைத் தேடிப் போகும் ஆஞ்ஜநேயருக்கு மார்க்கத்தில் மூன்று விதமான விக்னம் ஏற்பட்டது என்பது ப்ரஸித்தமானது.

अकुर्वन्विहितं कर्म निन्दितञ्च समाचरन् ।
प्रसज्जंश्च इन्द्रियार्थेषु नरः पतनमृच्छति ॥

அகுர்வந்விஹிதம் கர்ம நிந்திதச்ச ஸமாசரந்
ப்ரஸஜ்ஜம்ச்ச இந்த்ரியார்த்தேஷு நர: பதநம்ருச்சதி

என்கிற மன்வாதி ஸ்ம்ருதி வசனத்தை அனுஸரித்து, (1) அவச்யம் செய்தே தீரவேண்டிய கர்மாக்களைச் செய்யாமல் இருந்ததால் ஏற்படும் பாபங்கள் ஒரு வகையாகும். (2) செய்யக்கூடாததான நிஷித்த கர்மாக்களைச் செய்வதால் ஏற்படும் பாபங்கள் மற்றொரு வகையாகும் (3) நிஷித்தமான விஷயங்களில் இந்த்ரிய நிக்ரஹம் செய்ய முடியாமல் இந்த்ரியங்களைப் பறிகொடுப்பதால் ஏற்படும் பாபங்கள் மூன்றாவது வகையாகும். அதில், முன் ஜன்மங்களில் செய்த முதல் வகைப் பாபமானது இந்த ஜன்மாவில் வேத சாஸ்த்ரங்களில் நம்பிக்கை இல்லாதிருத்தல் என்ற ப்ரமாண அஸம்பாவனை என்ற தோஷத்தை உண்டுபண்ணும் அப்படியே முன் ஜன்மங்களில் செய்யப்பட்ட இரண்டாவது வகைப் பாபமானது தெய்வத்தினிடத்தில் நம்பிக்கையில்லாததான ப்ரமேய அஸம்பாவனை என்ற தோஷத்தை இந்த ஜன்மாவில் ஜீவனுக்கு உண்டு பண்ணும் மூன்றாவது வகைப் பாபமானது, தேஹத்திற்கு வேறாக ஆத்மஸ்வரூபம் பாஸிக்கும்பொழுது தேஹமே

ஆத்மா என்ற விபரீத பாவனை தோஷத்தை இந்த ஜன்மாவில் உண்டுபண்ணும்.

மைனாக பர்வதத்தினுடைய எதிர்ப்பால் ப்ரமாண அஸம்பாவனையையும், ஸுரஸையினுடைய எதிர்ப்பால் ப்ரமேய அஸம்பாவனையையும், ஸிம்ஹிகையினுடைய ப்ரதிபந்தகத்தால் விபரீதபாவனையையும் ப்ரபந்தகதமான வ்யங்க்யத்தால் ஸூசிபிக்கப்படுகிறது. ப்ரக்ருதத்திலுள்ள ஆஞ்ஜநேயஸ்வாமியோ, தன்னுடைய ப்ரவ்ருத்திக்கு ராம கைங்கர்யமே மஹா பலமாகக் கருதினவர்; தனத்தையோ, கீர்த்தியையோ எதிர் பார்க்காமல் பகவத் கைங்கர்யமே மஹா பலம் என்று கருதினவர். பகவதாராதன ரூபமாக ஒரு கர்மாவைச் செய்ய ஆரம்பித்தால் அந்த மனிதனுக்கு எவ்விதமான விக்னமும் ஏற்படாது ப்ராப்த வசத்தால் ஏற்பட்டாலும் அந்த விக்னங்களை நிவ்ருத்தி செய்து கொள்ளக்கூடிய ஸாமர்த்ய விசேஷமும் அந்த மனிதனுக்கு ஏற்படும் என்ற விஷயமும் ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய ப்ரவ்ருத்தியால் ஸூசிப்பிக்கப்படுகிறது.

दूरेणह्यवरं कर्म बुद्धियोगात् धनञ्जय (தூரேணஹ்யவரம் கர்ம புத்தி யோகாத் தனஞ்ஜய) என்ற பகவத் கீதா வாக்யப்படி பலத்தைக் கருதிச் செய்யும் காம்ய கர்மாக்களில்தான் விக்னங்கள் ஏற்படக் கூடுமன்னியில் நிஷ்காம கர்மாவில் देवा अपि नाभूत्यै ईशते (தேவா அபி நாபூத்யை ஈசதே) என்கிற ச்ருதி ப்ரமாணத்தினால் தேவர்களால்கூட ஒரு விக்னமும் செய்ய முடியாது நிஷ்காமமாக ப்ரவ்ருத்தித்தவனுடைய விஷயத்தில் தேவர்களும் அனுகூலம்தான் செய்வார்கள்

அதிலும் தாரக ப்ரம்மமாகிய ஸ்ரீ-ராமனாலேயே 'மேலான புருஷன்' என்று தேர்ந்தெடுக்கப்பட்டு ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் அனுப்பப்பட்டிருக்கிறார் பகவானே முத்ராதானம் செய்து ஆசார்ய புருஷனுடைய ஸ்தானத்தில் அபிஷேகமும் செய்து ஒரு ஜீவனை துக்க ஸாகரத்தினின்றும் தரணம் செய்து வைக்க அனுப்பி யிருக்கும்பொழுது, அந்த மஹானுபாவனுக்கு ஸமுத்ரத்தைத் தரணம் செய்யும் காலத்தில் ஏற்படும் விக்னங்கள் விக்னங்களாக ஆகுமா? தேவர்களுடைய கார்யத்திற்காகவோ

ராமாவதாரமானது ஏற்பட்டது. அந்த ராம கார்யத்தைச் செய்ய ஆஞ்ஜனேய ஸ்வாமியோ தரணம் செய்ய ஆரம்பித்திருக்கிறார். அவருக்கு தேவர்களே விக்னம் செய்தால் அவர்கள் கார்யம் எப்படி நிறைவேறும்? ஆகையால் அவர்கள் ஆஞ்ஜனேய ஸ்வாமியி னுடைய கமனத்திற்கு அனுகூலமாகத்தான் இருந்தார்கள். "ராக்ஷஸர்களால் நிரம்பிய லங்கா நகரத்தில் இவரால் ஸீதையைக் கண்டுபிடிக்க முடியுமா? அப்படியே ஸீதையைக் கண்டு பிடித் தாலும் ராக்ஷஸர்களுடைய வசமாக இவர் ஆகாமல் மீண்டும் திரும்பிவர சக்தியுள்ளவர்தானா?" என்ற விஷயத்தில் இவருடைய பராக்ரமத்தைப் பரீக்ஷிக்க மேற்சொன்ன மூன்று விதமான விக்னங்களால் தேவர்களே ஆஞ்ஜனேய ஸ்வாமியைச் சோதித் தார்கள். அதுதான் மேற்சொன்ன கதா பாகத்தினுடைய தாத்பர்யமாகும்.

அதில் மைனாக பர்வதத்தோடு ஆஞ்ஜனேய ஸ்வாமிக்கு ஏற் பட்ட ஒரு விக்னத்தை முதல் விக்னமாகப பாவித்துக் கொள்ள வேண்டும் அதுதான் வ்யங்க்ய மர்யாதையை அனுஸரித்து ப்ரமாண அஸம்பாவனை என்ற தோஷமாகும். மைனாக பர்வத மானது ஸமுத்ரத்தால் ஏவப்பட்டு ஆஞ்ஜனேய ஸ்வாமிக்கு ஆதித்யம் செய்வதற்காக ஆவிர்ப்பவித்ததாக கதாபாகம் இருக்க அதை ஒரு விக்னமாக எப்படி பாவிக்க முடியும் என்று நாம் நினைத்தாலும ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் தன்னுடைய கார்யத் திறகு அதை ஒரு பரம விகனமாகவேதான் பாவித்தார் என்பதை மஹர்ஷியானவர் ஸ்பஷ்டமாகவே சொல்கிறார். முன் ஜன்மாக் களில் செய்யப்பட்ட ஜீவனுடைய பாப கர்மங்கள் இந்த ஜன்மத் தில் சுப ரூபமாயும், அசுப ரூபமாயும் பரிணமித்து அந்த ஜீவன் எதிர்பார்க்கும் ச்ரேயஸ்ஸை விக்னம் செய்து தடுத்துவிடலா மென்பதுதான் श्रेयांसि बहु विघ्नानि (ச்ரேயாம்ஸி பஹூ விக்னநி என்ற சாஸ்த்ரத்தின தாத்பர்யமாகும். ப்ரக்ருதத்தில் ஸமுத்ரமே இஷ்வாகு வம்சத்தில் பிறந்து அரசாண்டு வந்த ஸகர மகாராஜாவி னுடைய புத்ரர்களால் ஏற்படுத்தப்பட்டது. ராமனும் அந்த ஸகர மஹாராஜனுடைய வம்சத்தில் அவதரித்தவராக ஆகிவிட்டார். தன் வம்சத்திதில் அவதரித்த ராமனுடைய கார்யத்தை முன்னிட்டுச் செல்லும் ஆஞ்ஜனேய ஸ்வாமிக்கு, தான் ஆதித்யம் செய்யவேண்டு

மென்கிற எண்ணமாவது ஸமுத்ர ராஜனுக்கு ஏற்பட்டது அவசிய மானதே. அப்படியே முன் காலத்தில் மலைகளெல்லாம் இறக்கை யுள்ளவைகளாக இருந்துகொண்டு ஆங்காங்கு ஆகாசத்தில் பறந்து கொண்டிருந்தன. எங்கேயாவது ஒரு ஸ்தலத்தில் விச்ராந்திக்காக அந்த மலைகள் உட்காரும் பக்ஷத்தில் அங்குள்ள அநேக க்ராமங் கள் அழிந்து போய்விடும் அவ்விதம் மலைகள் மூலமாக அநேக க்ராமங்கள் அழிந்தவையுண்டு. தேவேந்த்ரன் கோபத்தை யடைந்து தனது வஜ்ராயுதத்தால் மலைகளுடைய இறக்கைகளை வெட்டி ஆகாச மார்க்கத்தில் பறக்க சக்தியில்லாமல் செய்ய ஆரம்பித்தான் அவ்விதமே அநேக மலைகளையும் செய்துவிட்டான். இந்த மைனுக பர்வதத்தினுடைய ஸமீபத்தில் இந்த்ரன் வரும் பொழுதோ மைனுக பர்வதமானது மிகவும் பயந்துகொண்டு ஓடுவதற்கு ஆரம்பித்தது அந்த ஸந்தர்ப்பத்தில் வாயு பகவானும் வெகு வேகமாக மைனுக பர்வத்தை ஸமுத்ரத்தில் கொண்டுவந்து வீழ்த்தி ஸமுத்ரத்திற்குள் பர்வதத்தை மூழ்கடித்துவிட்டார். ஸமுத்ரத்திற்குள் முழுகின மைனுக பர்வதத்தை இந்த்ரன் கண்டு பிடிக்க முடியாமல் திரும்பிவிட்டான். அதுமுதல் மைனுக பர்வத மானது, இந்த்ரனிடமுள்ள பயத்தால் ஸமுத்ரத்திற்குள்ளேயே வாஸம் செய்துகொண்டு வருகிறதென்பது புராணந்த்ரங்களில் சொல்லப்பட்ட கதையாகும்.

ப்ரக்ருதத்தில் ராம கார்யமாக லங்கா நகரம் செல்லும் ஆஞ்ஜனேய ஸ்வாமியோ வாயு பகவானுடைய புத்ரனைதால், இந்த்ரனுடைய பயத்திலிருந்தும் தன்னை விடுதலை செய்து வைத்த வாயு பகவானுடைய புத்ரனை ஆஞ்ஜனேய ஸ்வாமிக்கு இந்த ஸமயத்தில் நாம் ஏதாவது உதவியைச் செய்யவேண்டும் என்ற எண்ணமானது மைனுக பர்வதத்திற்கும் ஏற்பட்டது. இவ்விதம் ஸமுத்ர ராஜன், மைனுகம் இருவர்களுக்கும் ஏற்பட்ட அபிப்ராயம் ஒன்ருக இருந்தபடியினுல் ஸமுத்ர ராஜனைவன் மைனுக பர்வதத் தைப் பார்த்து “ஹே பர்வத ராஜனே! ஆஞ்ஜனேய ஸ்வாமி யானவர் ராம கார்யார்த்தமாக ஆகாச மார்க்கத்தில் போகிருர். இந்த கார்யமானது மற்ற எவர்களாலும் செய்யமுடியாததான கார்யமாகும். இக்ஷ்வாகு வம்சத்தில் உதித்த நான், அந்த ஆஞ்ஜ நேய ஸ்வாமிக்கு ஸகாயம் செய்யவேண்டியது அவச்யமாகும்.

இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவர்களெல்லாம் எனக்கு பூஜ்யர்களாக ஆவார்கள். அவச்யம் செய்து தீரவேண்டிய தர்மங்களை செய்யாமலிருந்தால் ஸாதுக்களுக்கு அத்ருப்தி ஏற்பட்டுவிடும் சீக்ரம் நீ ஜலத்திற்குமேல் ஆவிர்பவித்து ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு ஸஹாயம் செய்யவேண்டும் உன்னுடைய சிகரத்தில் சற்றுநேரம் ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் விச்ராந்தி செய்துகொண்டு பிறகு லங்கா நகரம் செல்லட்டும். ஸ்ரீராமனுடைய आनृशंस्यं (ஆந்ருசம்ஸ்யம்) என்ற குணத்தையும், அதாவது உபகாரம் செய்வதை மறக்காமல் செய்தவனுக்கு மேலான ப்ரத்யுபகாரம் செய்யவேண்டியது கடமையாகும் என்ற தர்மத்தையும் இவ்விதமான மஹிமையுள்ள ராமனுடைய ஸமீபத்திலேயே வஸித்து வந்த ஸீதாதேவிக்கும் ராமனைவிட்டுப் பிரிந்து லங்கா நகரத்தில் வாஸம் செய்யும்படியாக நேர்ந்த துக்கத்தையும் ஆஞ்ஜநேயஸ்வாமியினுடைய பரிச்ரமத்தையும் கொஞ்சம் கவனித்துப் பார்த்து நீ உடனேயே, மேல்பாகத்தில் கிளம்பி ஆஞ்ஜநேயஸ்வாமிக்குச் செய்யவேண்டிய உதவிகளை செய்துவரவேண்டும்" என்று ஸமுத்ரராஜன் மைனாக பர்வதத்தை பார்த்துச் சொல்ல மைனாக பர்வதமும் ஸமுத்ர ஜலத்தைப் பேதித்துக் கொண்டு மேல்பாகத்தில் வந்து தன்னுடைய சிகரங்களெல்லாம் நன்ருய் ப்ரகாசிக்கும்படி நின்று வந்தது.

பர்வதமானது தங்கமயமான மலையானபடியால் சிகரங்களும் ஒரே தங்கமயமாக ஜ்வலித்துக்கொண்டு ஆகாச முழுவதும் ஒரே தங்கமயமாகவே விளங்கி வந்தது. ஸூர்ய பகவான் ஸமுத்ர ஜலத்தை பேதித்துக்கொண்டு உதயமாவது போல் இந்த மைனாக பர்வதமும் ஸமுத்ர ஜலத்தைப் பேதித்துக்கொண்டு உதித்ததால் ஸூர்யோதயமோ என்று கூறும்படியாகத் தோன்றியது. ப்ராதக்காலத்தில் ஸூர்ய மண்டலமும் தங்கமயமாகத்தான் இருக்கும். மைனாக பர்வதமும் அதைப் போலவே தங்கமயமாக இருந்து வருகிறது.

तमुत्थितं असङ्गेन हनुमानग्रतस्थितम् ।
मध्ये लवणतोयस्य विघ्नोयमिति निश्चितः ॥

தமுத்திதம் அஸங்கேந ஹநுமாநக்ரதஸ்திதம் ।
மத்யே லவணதோயஸ்ய விக்னோயமிதி நிச்சித: ॥

இவ்விதம் பாஸிக்கிற தங்கமயமான மலையை ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் தன்னுடைய ச்ரமத்தைப் பரிஹாரம் செய்து வைப்பதற்காக அனேக கனி வர்க்கங்களோடு ஆதித்யம் செய்ய வேண்டிய நிமித்தம் ஸமுத்ர ஜலத்தைப் பேதித்துக்கொண்டு எதிரில் நின்றுகொண்டிருந்தாலும், தன்னுடைய கார்யத்திற்கு அதை ஒரு பெரிய விக்னமாகவே பாவித்தார் என்பது மேற் சொன்ன ச்லோகத்தினுல் ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது. ஒரு ஜீவனை உத்தாரணம் செய்வதற்காக பகவதாக்ஞையினுல் ஆசார்ய புருஷர்கள் ச்ரமத்தை எடுத்துக்கொண்டாலும் அந்த ஜீவனுடைய பூர்வ ஜன்மத்தில் செய்த கர்மாக்கள் விக்ன ரூபமாக வந்து ஆசார்யனுடைய ப்ரவ்ருத்திக்குத் தடை செய்யும் என்று நாம் முன் சொன்ன விஷயத்தில் ஸந்தேஹத்திற்கு இடமில்லாமல் மைனுக பர்வதத்தை ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் விக்னமாகத் தீர்மானம் செய்தார் என்ற ச்லோகத்தை ப்ரமாண வாக்யமாக விவேகிகள் அறியவேண்டும்.

அத்துடன், முதல் விக்னமானது பூர்வ ஜன்மத்தில் செய்ய வேண்டிய விஹிதமான கார்யத்தைச் செய்யாமல் இருந்ததால் ஏற்பட்ட பாபத்தால் இந்த ஜன்மத்தில் வேத சாஸ்த்ரங்களில் நம்பிக்கையில்லாமலிருத்தல் என்ற ப்ரமாண அஸம்பாவனை என்ற தோஷமே முதல் விக்னமாகுமென்று சொல்லியதற்கு कर्तव्यमकृतं कार्यं सतां मन्युमुदीरयेत (கர்த்தவ்யமக்ருதம் கார்யம் ஸதாம் மந்யுமுதீரயேத்) என்ற வாக்யத்தையே ப்ரமாணமாக விவேகிகள் அறியலாம். அவச்யம் செய்யவேண்டியதைச் செய்யாமலிருந்தால் அது ஸாதுக்களுக்குக் கோபத்தை உண்டுபண்ணும். 'ஸத்' என்ற சப்தத்தால் ஸ்வத: ப்ரமாணபூதமான வேதங்கள் என்ற அர்த்தம் த்வனிக்கிறபடியால், விஹிதமான கார்யத்தைச் செய்ததால் வேத சாஸ்த்ரங்களுடைய சாபத்திற்குள்ளாவான் என்ற அர்த்தத்தை ப்ரகாசிக்கின்ற வாக்யமே ப்ரமாண வாக்யமென்று விவேகிகள் அறிந்து கொள்ளலாம்.

ப்ராக்ருதத்தில் மைனுக பர்வதமானது ஸமுத்ர ராஜனுல் ஏவப் பட்டு. ஆதித்யம் செய்வதற்கு ஸமுத்ர ஜலத்தைப் பிளந்துகொண்டு ஆதித்ய பகவானைப் போல் தங்கமயமான சிகரங்களோடும்

ஹனுமானுடைய மார்க்கத்தில் எதிரில் நின்றுவந்தது. ஹனுமானும் சற்று நேரம் அந்த ஆதித்யத்திற்விணங்கி அந்த சிகரங்களில் உட்கார்ந்துவிட்டு அங்குள்ள கனி வர்க்கங்களையும் புஜித்துவிட்டு பரம ஸந்தோஷமாகப் போகலாமே! இது ஹனுமாருக்கு நன்மையைச் செய்யக்கூடியதல்லவா! இதை விக்னமென்று எப்படிச் சொல்லக் கூடுமென்று ப்ராக்ருதமான மனிதர்கள் நினைக்கலாம். இது ப்ராக்ருத மனிதர்களுடைய ப்ராக்ருத புத்தியைத்தான் காட்டுகிறது.

ஒரு மனிதன் ஒரு நகரத்தில் ராஜஸேவாநிரதனுக இருந்து வருகிருன், ஆனுல் அந்த மனிதனுக்கு ராஜஸேவை செய்வதில் மனதிற்கு த்ருப்தியே இல்லை ஜன்ம ஸாபல்யத்திறகுக் காரணமான மஹான்களுடைய ஸங்கமும், அவர்களுடைய முகாரவிந்தத்திலிருந்து வேத சாஸ்த்ரங்களின் தத்வார்த்தங்களை ச்ரவணம் செய்யும்படியான பாக்யமும் அதிகமாக இருந்துவருகிறது. அந்த நகரத்திலுள்ள இந்த ஸாத்விக முறையில் தான் ஈடுபடுவதற்குக் காரணம் ஏற்பட்டிருப்பதால் அந்த நகரத்தில் வாஸம் செய்துகொண்டு ராஜ ஸேவையையும் வ்யாஜமாக வைத்துக்கொண்டு மிகவும் அல்பமான வேதனத்தைக்கொண்டு தன் குடும்பத்தையும் பரிபாலனம் செய்து வருகிருன். அம்மனிதனுக்கு பூர்வ கர்மாவின் நிமித்தமாக வேறு நகரத்தில் அதிகமான வேதனத்துடன் ஒரு பெரிய அதிகார பதவியை ஏற்றுக்கொள்ளும்படியான ஸந்தர்ப்பம் நேர்ந்தது. ஆனுல் அந்த வேறு நகரமானது ஸத்ஸங்கத்திற்கோ வேத சாஸ்த்ரங்களுடைய தத்வங்களை அறிவதற்கோ கொஞ்சமேனும் அவகாசமில்லாத பாஷண்ட நகரமாகும். அதை பரம ப்ராக்ருதர்களான அவனுடைய பந்துக்கள் புண்ய பலமாகத்தான் கருதுவார்கள். அதிகமான வேதனம் வருவதுதானே அவர்களுடைய லக்ஷ்யம்? முமுக்ஷுக்கோ வேதனம் லக்ஷ்யமல்ல. ஸன்மார்க்கததில் ஈடுபடுவதே லக்ஷ்யமாகும். வேறு நகரத்திலோ ஸன்மார்க்கத்திற்கு அவகாசம் ஏற்படுகிறதில்லை என்பது ப்ரஸித்தமாகிறது. வேறு நகரத்திற்குப் போனுல் தனக்கு அதிகமாகக் கிடைக்கிற த்ரவ்யத்தை பூர்வ ஜன்மங்களில் செய்த தன்னுடைய பாப கர்மாக்களுடைய பலமாகத்தான் அவன் நினைப்பான். நாம் ஏதோ புண்ய கர்மாவில்

ப்ரவ்ருத்தித்துக் கொண்டிருந்தோம்; நம்முடைய ஜன்மத்தை ஸபலமாகச் செய்து கொள்ளுவதற்கு ஸத்ஸங்கமும் நமக்குக் கிடைத்து, பகவத் கதா ச்ரவணமும் ஏற்பட்டு ப்ரஸன்னமான மனதோடு இருந்த நமக்கு இவ்விதமான ஒரு விக்னம் வந்து சேர்ந்ததே இது நம்முடைய பாப கர்மாதான்' என்று அந்த முமுக்ஷுவான புருஷன் தாபத்தை யடைவான்.

இந்த லௌகிகக் கதையை. ஆஞ்ஜனேய ஸ்வாமி மைனாக பர்வதத்தை விக்னமாக நினைத்தார் என்பதற்கு உதாஹரணமாக கவனிக்கவும். மைனாக பர்வதமானது தங்கமயமான மலை; தன்னுடைய விச்ராந்திக்கு ஸ்தானங்கள் பலவாறாக இருந்து வருகின்றன; மதுரரஸபூரிதமான அனேக கனிவர்க்கங்களும் இருக்கின்றன இவ்வித மலையை ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் தன்னுடைய மார்க்கத்திற்கு விக்னமாக நினைத்தார் என்று எப்படிச் சொல்லலாம் என்று ப்ராக்ருதர்களும் கேட்க அவகாசமே இல்லை.

ஆஞ்ஜனேய ஸ்வாமியோ அவருடைய ஸித்தாந்த ப்ரகாரம், தான் ப்ரவ்ருத்தித்த கார்யத்திற்கு இதை ஒரு பெரிய விக்ன மென்றே நினைத்தார் அநேக மஹர்ஷிகளுக்குள் சிலர் மோக்ஷம் என்ற பரம புருஷார்த்தத்தை அடைய தபஸ்ஸில் அமர்ந்திருக் கிறார்கள்; சிலர் யோகாப்யாஸம் செய்கிறார்கள்; சிலர் ஸகுண ப்ரம்மோபாஸனம் செய்கிறார்கள்; வேதாந்த ச்ரவணாதிகளையும் சிலர் செய்கிறார்கள். இவ்விதமிருக்கும் நிலையில் அவர்களுக்கு அணிமாதி அஷ்டைச்வர்ய ஸித்தியும் பலமாக ஏற்படுகிறது. மோக்ஷம் என்ற பரம புருஷார்த்தத்தைப் பலமாகக் கருதின அந்த மஹர்ஷிகள், இந்த அணிமாதி ஸித்திகளை விக்னமாகத்தான் பாவிப் பார்களன்றியில் தங்களுக்கனுகூலமாக பாவிப்பார்களா? மஹான்கள் அணிமாதி ஸித்தியை தாங்கள் ப்ரவ்ருத்தித்த கார்யத் திற்கு விக்னமாக நினைப்பார்களேயானால், ப்ரக்ருதத்தில் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர், தான் ப்ரவ்ருத்தித்த கார்யத்தில் மைனாக பர்வதத்தை விக்னமாக நினைத்தார் என்பது அழகுதான்.

இந்த ஸ்ரீமத் ராமாயணத்திலேயே ஆரண்ய காண்டத்தில் சரபங்க மஹர்ஷி தாரக ப்ரம்மாகிய ராமனை தர்சனம் செய்து, ராகவனுடைய ஸந்நிதியிலேயே தன்னுடைய கர்ம சரீரத்தை த்யாகம் செய்து வைகுண்டத்திற்குச் செல்ல வேண்டுமென்ற எண்ணம் உள்ளவராக இருக்கும்பொழுது. அதற்கு விரோதமாக ப்ரம்ம பட்டத்தை இவருக்களிக்க தேவேந்த்ரன் தானே ரதத்தில் சரபங்கருடைய ஆச்ரமத்திற்கு வந்து அவரைப் பார்த்து 'தாங்கள் ப்ரம்ம பட்டத்தை அலங்கரித்து ஸ்திரமாக ப்ரம்ம பட்டத்தில் கல்பம் முடியும் வரை இருந்து எங்களை ரக்ஷிக்கவேண்டும்' என்று பரார்த்தித்தான்.

இவ்விதம் சரபங்க மஹர்ஷியோடு இந்த்ரன் பேசிக் கொண்டிருப்பதை ராமரும் அறிந்து சரபங்க மஹர்ஷியினுடைய ஆச்ரமத்திற்குள் ப்ரவேசிக்காமல், ஆச்ரமத்திற்கு வெளியிலேயே மறைந்திருந்து இந்த்ரன் சென்ற பிறகு மஹர்ஷியினுடைய ஆச்ரமத்திற்குள் ராமன் ப்ரவேசித்ததாக கதை ஸ்பஷ்டகமாக இருந்து வருகிறது. ப்ரம்ம பட்டமானது ஸாமான்ய பதவியா? ராமருடைய தர்சனத்திற்காக ப்ரம்ம பட்டத்தையே வெறுத்த சரபங்க மஹர்ஷி புத்திமானா? இல்லையா? மோக்ஷம் என்ற புருஷார்த்தத்தை லக்ஷ்யமாகக் கருதின அந்த மஹர்ஷி ப்ரம்ம பட்டத்தையும் தாரகப் ப்ரம்மமாகிய ராமனுடைய ஸாக்ஷரத்திற்கு விரோதமாக நினைத்து ब्रह्मलोकतृणीकारः वैराग्यस्यावधिर्मतः (ப்ரம்மலோகத்ருணிகார: வைராக்யஸ்யாவதிர்மத:) என்ற ரீதியாக ப்ரம்ம பட்டத்தையும் தன்னுடைய லக்ஷயத்திற்கு விக்னம் என்லே தீர்மானித்து வெறுத்தார் இதுபோலவே ஆஞ்சநேய ஸ்வாமியும் மைனாக பர்வதத்தை விக்னமாக நினைத்து उरसा पातयामास जीमूतमिव मारुत (உரஸா பாதயாமாஸ ஜீமூதமிவ மாருத என்ல வாக்யப்படி தன் மார்பினால் முட்டி அந்த மலையை கீழேதள்ளி விட்டு வெகு வேகமாக ஆகாச மார்க்கத்தில் சென்றார் ஹனுமாருடைய வேகத்தினால் தள்ளப்பட்ட மைனாக பர்வதமும் ஆஞ்ஜநேய ஸ்வாமியினுடைய வேகத்தையும் பராக்ரமத்தையும் பார்த்து பரம ஸந்தோஷத்தை அடைந்தது. ஆகாச மார்க்கத்தில் வெகு வேகமாகப் போகும் ஆஞ்ஜநேயருடைய வேகத்தினால் த்ருப்தி அடைந்த பர்வதமும், தன்னுடைய ஸ்வ மனித வடிவாக ரூபத்தை எடுத்துக்கொண்டு தன்னுடைய சிகரத்தில் நின்று கொண்டு ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பார்த்து,

दुष्करं कृतवान् कर्मत्वमिदं वानरोत्तम ।
निपत्य मम शृङ्गेषु विश्रमस्व यथासुखम् ॥
राघवस्य कुले जातैरुदधिः परिवर्धितः ।
स त्वां रामहिते युक्तं प्रत्यर्चयति सागरः ॥
कृते च प्रतिकर्तव्य एष धर्मः सनातनः ।
सोऽयं तत्प्रतिकारार्थी त्वत्तस्सम्मानमर्हति ॥

துஷ்கரம் க்ருதவாந் கர்ம த்வமிதம் வாநரோத்தம ।
நிபத்ய மம ச்ருங்கேஷு விச்ரமஸ்வ யதாஸுகம் ||
ராகவஸ்ய குலே ஜாதைருததி: பரிவர்தித: ।
ஸ த்வாம் ராமஹிதே யுக்தம் ப்ரத்யர்சயதி ஸாகர: ||
க்ருதே ச ப்ரதிகர்த்தவ்யம் ஏஷ தர்ம: ஸநாதந: ।
ஸோயம் தத்ப்ரதிகாரார்த்தீ த்வத்தஸ்ஸம்மாநமர்ஹதி ||

"ஸ்வாமிந், தாங்கள் செய்கிற கார்யத்தை யாராலும் செய்ய முடியாது. என்னுடைய சிகரங்களில் கொஞ்சம் விச்ராந்தி செய்து கொண்டு போகலாம் என்ற எண்ணத்துடன் தான், ஸமுத்ரராஜனால் நான் ஏவப்பட்டு, ஸமுத்ரத்தின் மேல் பாகத்தில் தங்களுடைய மார்க்கத்தை தடைசெய்துகொண்டு வ்ருத்தி அடைந்தேன். தாங்கள் அதை ஒரு விக்னமாக நினைத்து விட்டீர்கள்.

ஸமுத்ர ராஜனுக்கும் தங்களைப் பூஜிக்கவேண்டுமென்ற கடமை உண்டு. ஸகர மகாராஜனுடைய புத்ரர்களாலல்லவா இந்த ஸமுத்ரமானது வ்ருத்தி செய்யப்பட்டது. ஆகையினால் தன் வம்சத்தில் அவதரித்த ராமருடைய கார்யமாக, தாங்கள் போகும்பொழுது ஸமுத்ரராஜன் தங்களை உபசரிக்கக் கடமைப்பட்டவன் அல்லவா? உபகாரம் செய்தவனுக்கு ப்ரத்யுபகாரத்தைச் செய்து தன்னுடைய க்ருதக்ஞதையை ப்ரகாசப்படுத்திக்கொள்வது ப்ராணிகளுடைய கடமை. தாங்களோ எவ்வளவு தூரமானாலும் நடுவில் விச்ரமித்துக் கொள்ளாமலே ஆகாச மார்க்கமாகப் போகச் சக்தியுள்ளவரே. ஆகிலும், எங்களுடைய கடமையை செலுத்துவதற்காக நாங்கள் தங்களுக்கு ஆதித்யம் செய்யத் துணிந்தோம். அதிதியைப் பூஜை செய்யாமல் ப்ராக்ருதமான மனிதன் கூட இருக்கமாட்டான். அதிலும் தங்களைப்போன்ற மஹாமேதாவியான அதிதியை,

அந்த தர்மத்தை அறிந்த நாங்கள் எவ்விதம் பூஜை செய்யாமல் இருக்கமுடியும்?

தங்களுடைய பிதாவான வாயுபகவானே தேவதைகளுக்குள் ப்ரதான தேவதை. வாயுபகவானுக்கு ஸமானமான வேகமுள்ளவ ராகத் தாங்கள் இருக்கிறீர்கள். தங்களைப் பூஜித்தால் வாயு பகவானையே நேரில் பூஜித்த புண்ய விசேஷத்தை அடையலாம். அக்காரணத்தைக் கொண்டு தான், நானும் ஸமுத்ரராஜனும், தங்களைப் பூஜிக்க யத்னம் செய் தோம். தங்களுடைய பிதாவான வாயுபகவானுக்கும் எனக்கும் பூஜ்ய பூஜக பாவ ஸம்பந்தம் ஏற்பட்டதில் க்ருதயுகத்தில் நடந்த ஒரு காரணத்தையும் சொல்கிறேன். அதாவது, க்ருதயுகத்தில் மலைகளெல்லாம் பறவைகளைப்போல் ஆகாசமார்க்கத்தில் பறந்து கொண்டிருந்தன கருட பகவானைப்போல் வேகமுள்ளவை களாகவே காணப்பட்டன. அதனால் தேவர்களுக்கும், மனிதர் களுக்கும், மற்ற ப்ராணிகளுக்கும் மலைகள் எங்காவது பறந்து கொண்டிருக்கும்பொழுது, ச்ரமத்தினால் பூமியில் உட்கார்ந்தால். அநேக க்ராமங்கள், க்ஷேத்ரங்கள், வ்ருக்ஷங்கள் முதலியன அழிந்துவிடும் என்ற பயம் ஏற்பட்டது. அந்த ஸமயத்தில் தேவேந்த்ரன் கோபத்தையடைந்து தன்னுடைய வஜ்ராயுதத்தினால் மலைகளின் இறக்கைகளை அறுத்துவிட்டான். என் இறக்கைகளை யும் அறுக்க, தேவேந்த்ரன் வஜ்ராயுதத்துடன் வந்தான். அப் பொழுது உங்கள் பிதாவான வாயு பகவானால் வெகுவேகமாக பின்னால் தள்ளப்பட்டவனாய்க் கொண்டு நான் இந்த ஸமுத்ரத்தில் விழுந்துவிட்டேன். அக் காரணத்தினால் இந்த்ரனுக்கு என்னுடைய இறக்கைகளை அறுக்கமுடியாமல் போய்விட்டது நான் ஜீவித்திருப்பதற்கு உங்கள் பிதாவன்றோ காரணமாக இருக்கிறார்! இவ்விதம் உமக்கும். எனக்கும் ஸம்பந்தம் இருக்கும் தருணத்தில் நான் ஏதோ ஒரு அல்பமான உபசாரத்தையாவது செய்யக் கடமைப்பட்டவனல்லவா. ஆகையால் தாங்கள் கொஞ்சம் என்னிடத்தில் விச்ராந்தி செய்துகொண்டு ச்ரமத்தையும் பரிஹாரம் செய்துகொண்டு. என் பூஜையையும் ஏற்றுக்கொண்டு தாங்கள் போகலாமென்று நான் ப்ரார்த்தித்துக் கேட்டுக்கொள் கிறேன்."

இவ்விதம் மைனுக பர்வதத்தினுடைய வார்த்தைகளைக் கேட்ட ஆஞ்ஜநேய ஸ்வாமி "ஹே பர்வத ராஜனே! உன்னுடைய ப்ரிய மான வார்த்தைகளால் நான் ஸந்தோஷத்தை அடைகிறேன். நீ சொன்ன வார்த்தைகளிலிருந்தே எனக்கு நீ ஆதித்யம் செய்ததாக ஆகிவிட்டது நான் உன்னை அலக்ஷ்யாக வேகத்தினுல் தள்ளின விஷயத்தில் நீ கோபத்தையும் அடையக்கூடாது. என்னுடைய கார்யத்தின் அவஸரமானது என்னை துரிதப்படுத்துகிறது. பகலோ அநேகமாக முடிந்துவிட்டது ஸூர்யாஸ்த மனத்திற்குள் லங்கா நகரம் போய்ச்சேரவேண்டும். நடுவில் ஒரு ஸ்தலத்திலும் தங்குவ தில்லை என்று என்னுடைய ப்ரதிக்ஞை ஆகையால் க்ஷமித்துக் கொள்ளவும்" என்று சொல்லிவிட்டு தனதுடைய வலதுகையினுல் அந்த பர்வத ராஜனையும் தொட்டு ஆசீர்வதித்துவிட்டு மறுபடியும் ஆகாச மார்க்கத்தில் ப்ரவேசித்து வெகுவேகமாக லங்காநகரத்தை அபிமுகம் செய்துகொண்டு ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் சென்ருர்.

ஸகல தேவர்களும் ஸித்தர்களும் மைனுகபர்வதத்தினுல் தடை படாமல் ஆஞ்ஜநேயஸ்வாமி ஜயத்தை அடைந்து மறுபடியும் ஆகாச மார்க்கத்தில் ப்ரவேசித்து வெகு வேகமாகச் செல் வதைப் பார்த்து மிகவும் ஸந்தோஷத்தை அடைந்தார்கள். இந்த்ரனே "ஹே பர்வதமே! தேவகார்யமாகிய ராமகார்யத்தில் மிகுந்த ச்ரமத்தை எடுத்துக்கொண்ட ஆஞ்ஜநேயருடைய விஷயத்தில் ஆதித்யம் செய்வதற்காக, நீ எடுத்துக்கொண்ட முயற்சியினுல் நாங்கள் மிகவும் ஸந்தோஷத்தை அடைந்தோம். என் மூலமாக இனி உனக்கு பயமே வேண்டாம். இரண்டு இறக்கைகளுடனும் ஸௌக்யமாக ஸமுத்ரத்திலேயே நீ ஸ்திரமாக வாஸம் செய்து வரலாம்" என்று மைனுக பர்வதத்திற்கு அபயப்ர தானம் செய்தான்.

இவ்விதம் 'ஒரு உத்தம ஜீவனை ஸம்ஸார ஸாகரத்திலிருந்து த்ராணம் செய்வதற்காக ப்ரவ்ருத்தித்த ஆசார்ய புருஷனுகிய ஆஞ்ஜநேய ஸ்வாமிக்கு அந்த ஜீவனுடைய முன் ஜன்மங்களில் அவச்யம் செய்யவேண்டிய கர்மாக்களை செய்யாமலிருந்ததால் ஏற்பட்ட ப்ரமாண அஸம்பாவனை என்ற முதல் விக்னமானது ஆசார்ய புருஷனுடைய ஸாமர்த்ய விசேஷத்தினுல் நிவ்ருத்தி

செய்யப்பட்டது என்பதை வ்யங்க்யமாக வாசகர்கள் அறிய வேண்டும்.

श्रेयांसि बहुविघ्नानि (ச்ரேயாம்ஸி பஹுவிக்நாநி) என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து, ஆஞ்ஜநேய ஸ்வாமியைப்போல் ஆசார்ய புருஷர்கள் ப்ரவ்ருத்திக்கும் ஸதுபதேசமான கார்யங்களில் அநேகவிதமான விக்னங்கள் சுபரூபமாகவோ, அசுபரூபமாகவோ தேவர்களாலேயே செய்யப்படும். ப்ரக்ருதத்திலுள்ள ஆஞ்ஜநேய ஸ்வாமி என்ற ஆசார்ய புருஷனே பகவானுன ஸ்ரீராமராலேயே தேர்ந்தெடுக்கப்பட்ட மஹாபுருஷனுனதினுலும், அர்த்தத்தையோ, கீர்த்தியையோ எதிர்பார்க்காமல் பகவத் ப்ராப்தியில் அத்யவஸாயம் உள்ள ஜீவனை உத்தரணம் செய்வதுமாத்திரம்தான் தன்னுடைய கடமை என்று நினைத்த ப்ராக்ஞரானதினுலும் தன்னுடைய ஸாமார்த்யத்தினுல் முதல் விக்னத்தை நிவ்ருத்தி செய்துகொண்டு தான் ஸங்கல்பித்த கார்யத்தை மறுபடியும் உத்ஸாகத்தோடு செய்ய ப்ரவ்ருத்தித்தார்.

तस्य ह देवाऽपि नाभूत्यै ईशते (தஸ்ய ஹ தேவாபி நாபூத்யை ஈசதே) என்ற ச்ருதியினுல், தீர புருஷனுடைய விஷயத்தில் தேவர்களே விக்னம் செய்ய ஆரம்பித்தாலும் அதனுல் பராபவத்தை அடைந்த விவேகிகளுக்கு, பிறகு அதே தேவர்கள் அனுகூலர்களாகவே ஆகி விடுகிருர்கள். அவனுடைய விஷயத்தில் விக்னம் செய்ய ஸாமார்த்யமற்றவர்களாகவே ஆகிருர்கள் என்று வெளியாகிற மர்யாதைக்கு ப்ரக்ருதத்திலுள்ள மைனாக பர்வதத்துக்கும் ஆஞ்ஜநேய ஸ்வாமிக்கும் நடந்த வ்ருத்தாந்தத்தையே உதாஹரமாக அறிந்து கொள்ளலாம்

மறுபடியும் ஆகாச மார்க்கத்தில் வெகுவேகமாகப் போகிற ஆஞ்ஜநேயருக்கு மற்ரெரு விக்னம் ஏற்பட்டது ஆகிலும் இதை ஒரு விக்னமாகவும் சொல்லமுடியாது. லங்கா நகரத்தை அடைந்து ஸீதையைக் கண்டுபிடிக்க யத்னம் செய்த ஆஞ்ஜநேய ஸ்வாமியினுடைய பராக்ரமத்தைப் பரீக்ஷிக்கவே, தேவர்கள் செய்த ஒரு தந்த்ரமாகும். அதாவது 'ஸுரஸை' என்ற ஒரு தேவஸ்த்ரீயை இந்த்ரன் முதலான் தேவர்கள் ஹனுமாருடைய பராக்ரமத்தைப் பரீக்ஷித்து வர ஏவினுர்கள். அந்த ஸ்த்ரீயோ'

'நாகர்கள்' என்று சொல்லப்படுகிற ஸர்ப்பங்களுக்குத் தாயாரான கத்ரு என்றவளே.

अब्रुवन् सूर्यसंकाशां सुरसां नागमातरं (அப்ருவந் ஸூர்யஸங்காசம் ஸுரஸாம் நாகமாதரம்) என்று வால்மீகி மஹர்ஷியே நாக மாதா என்ற சப்தத்தினுல் அவளை குறிப்பிட்டிருக்கிருர். காச்யப ப்ரஜாபதியினுடைய பத்னிகளுக்குள் இவளும் ஒருவளாக ஆவாள். காச்யப ப்ரஜாபதியினுடைய பத்னிகளெல்லோரும் தக்ஷ ப்ரஜாபதியினுடைய பெண்களானதினுல் தாக்ஷாயணீ என்றும் இவளுக்குப் பெயர் உண்டு. பின்பு प्रविष्टोस्मि हि ते वक्त्रं दाक्षायणि नमोस्तु ते (ப்ரவிஷ்டோஸ்மி ஹி தே வக்த்ரம் தாக்ஷாயணி நமோஸ்து தே) என்ற வாக்யத்தினுல், இந்த ஸுரஸையை தாக்ஷாயணி என்ற சப்தத்தினுல் ஆஞ்ஜனேயர் குறிப்பிட்டிருக்கிருர். இந்த கத்ரு என்ற நாகமாதாவோ தேவர்கள் மூலமாக ஒரு வரத்தையும் அடைந்திருக்கிருள். அதாவது தன்னுடைய வதனத்திற்கு நேரில் எந்த ப்ராணிகள் வருகிருர்களோ அவர்கள் தனக்கு ஆஹாரமாக வேண்டும் என்பதே அந்த வரமாகும். அதனுல்தான் அவளுடைய புத்ரர்களாகிய ஸர்ப்பங்களுக்கும் தன்னுடைய வதனத்திற்கு எதிரில் வரும் மண்டுகாதிகளெல்லாம் ஆஹாரமாக ஆகிவிடுகின்றன. இந்த ஆஞ்ஜநேய ஸ்வாமியினுடைய எதிரில் மார்க்கத்தை நிரோதம் செய்துகொண்டு தன் வாயைத் திறந்துகொண்டு நின்றுவந்தாளேயானுல் ஆஞ்ஜனேய ஸ்வாமி மேற்சொன்ன வரபலத்தை அனுஸரித்து அவளுக்கு ஆஹாரமாக ஆகிவிடவேண்டும். அப்படி ஆகிவிடுகிருரா? அல்லது தன் பராக்ரமத்தினுல் தேவர்களுடைய வர பலத்தையும் நிஷ்பலமாக அடித்து அவர் ஜெயிக்கிருரா? ஜெயித்துவிட்டால் இந்த மஹானுபாவன் லங்கா நகரம் சென்று கார்யத்தை முடித்துக்கொண்டே வந்துவிடுவார் என்றுதான் தேவர்களுடைய அபிப்ராயமாகும்.

அவ்விதம் ஸுரஸை என்பவள் தேவர்களால் ஆக்ஞாபிக்கப்பட்டு அவள் காமரூபியானதினுல் ராக்ஷஸ உருவத்தை ஸ்வீகரித்துக்கொண்டு தன்னுடைய வாயை ஆகாசம்போல் விஸ்தாரமாகத் திறந்து வைத்துக்கொண்டு ஆஞ்ஜநேயஸ்வாமியினுடைய மார்க்கத்தை தடைசெய்துகொண்டு வேகமாக வரும் ஆஞ்ஜநேயஸ்வாமியைப் பார்த்து,

मम भक्ष्यः प्रदिष्टस्त्वं ईश्वरैः वानरर्षभ ।
अहं त्वां भक्षयिष्यामि प्रविशेदं ममाननम् ॥

மம பக்ஷ்ய: ப்ரதிஷ்டஸ்த்வம் ஈச்வரை: வாநரர்ஷப ।
அஹம் த்வாம் பக்ஷயிஷ்யாமி ப்ரவிசேதம் மமாநநம் ॥

"ஹே ஹனுமானே! எனக்கு ஆஹாரமாக உன்னை ஈச்வரனே ஸ்ருஷ்டித்து இந்த மார்க்கத்தில் வரச் சொல்லியிருக்கிறார். என்னுடைய முகத்திற்கு எதிரில் யார் வந்தாலும் அவர்களை நான் ஆஹாரமாக உட்கொண்டு விடலாம். அவ்விதம் எனக்கு தேவர்களால் கொடுக்கப்பட்ட வரம் வெகுகாலமாக அனுஷ்டானத்தில் இருந்துவருகிறது ஆகையால், நீயும் என்னுடைய முகத்தில் ப்ரவேசிக்கவேண்டும். உன்னை நான் பக்ஷித்து த்ருப்தி அடைவேன்" என்று சொன்னாள், ஸுரஸையினுடைய வாக்யத்திற்கும் ஹனுமாருடைய பலத்தை ப்ரகாசப்படுத்தவேண்டும் என்பதில் தான் தாத்பர்யத்தை மஹான்கள் அறியவேண்டும். அதைக் கேட்ட ஆஞ்ஜநேயஸ்வாமியோ ஸுரஸையைப் பார்த்துச் சொல்லுகிறார்.

பரம தார்மிகனாகயும், சிவபக்த அக்ரேஸரனாயும் உள்ள தக்ஷப்ரஜாபதியினுடைய பெண் ஆனதினால்தான் प्राञ्जलिर्वानरर्षभ (ப்ராஞ்ஜலிர்வாநரர்ஷப:) என்ற வாக்யத்தின் ப்ரகாரம் ஆஞ்ஜநேய ஸ்வாமியும் இந்த ஸுரஸைக்கு அஞ்ஜலிபந்தம செய்துகொண்டு வணக்கமாய்ப் பேசுகிறார்.

"ஹே தேவி! பரமதார்மிகனான தசரத சக்ரவர்த்தியினுடைய புத்ரனான ராமனைப் பற்றி நீ கேள்விப்பட்டிருக்கலாம் அந்த பகவான் ப்ராதாவான லக்ஷ்மணனோடும், ஸீதையென்ற தர்ம பத்னியோடும், பித்ருவாக்ய பரிபாலனம் என்ற தர்மத்தை அனுஷ்டிக்கிற வ்யாஜமாக தண்டகாரண்யத்தில் வாஸம் செய்து வந்தார். அந்த ஸந்தர்ப்பத்தில் சூர்ப்பனகை தன்னுடைய தௌஷ்ட்யத்தினால் ராமனால் பராபவப்படுத்தப்பட்டு துக்கத்தை அனுபவித்த காரணத்திலிருந்தும். ராக்ஷஸர்களுக்கும் ராமனுக்கும் வைரம் ஏற்பட்டது ம்ருக வேஷதாரியான மாரீசனை ராமன் விரட்டிக்கொண்டு போயிருக்கும் காலத்தில் ராக்ஷஸ ராஜனான

ராவணனால் ஸீதை அபஹரிக்கப்பட்டு லங்காநகரில் வஸித்து வருகிறாள். அவளுடைய ஸமீபத்திற்கு நான் ராமதூதனாகப் போகிறேன். நீயும் ராமகார்யத்தில் ஸஹாயம் செய்யவேண்டும். ஸமுத்ரத்திற்குட்பட்ட பூமண்டலம் முழுமையும் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த அரசர்களுடைய தேசமானதினால் எல்லா லோகமும் ராமராஜ்யமே. ராமராஜ்யத்தில் வஸிக்கும் நீயும் ராம கார்யத்தில் ஆனுகூல்யத்தைச் செய்யக் கடமைப்பட்டவள். ஆகையால் என்னுடைய மார்க்கத்தை தடை செய்யாமல் என்னை விட்டுவிட வேண்டும். அப்படி நான் உனக்கு பக்ஷமாகத்தான் ஆகவேண்டுமென்று உன் வர பலத்தைப் பொருட்படுத்த வேண்டுமானாலும் இந்த வேகத்துடன் நான் லங்கா நகரம் சென்று ஸீதையைப் பார்த்துவிட்டு ராமனிடத்திலும் அந்த வருத்தாந்தத்தை தெரியப்படுத்தின பிறகு உன்னுடைய வதனத்தில் பிரவேசித்து உனக்கு நான் ஆஹாரமாக ஆகிறேன். என் வாக்கை நீ ஸத்யமாக நம்பலாம்'' என்று ஆஞ்ஜநேயஸ்வாமி யானவர் வணக்கமாக எவ்வளவோ கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்.

ஆகிலும், ஸுரஸை தன் ஸாகஸத்தை விடாமல். ''என்னு டைய வர பலத்தை உன்னால் அதிக்ரமிக்க முடியாது என்னுடைய வதனத்திற்குள் நீ ப்ரவேசித்துத்தான் வெளியே போகவேண்டும்'' என்று நிர்ப்பந்தப்படுத்தினாள். பிறகு ஆஞ்ஜநேயஸ்வாமியான வர் ராக்ஷஸ ப்ரக்ருதியோடு கூடினவர்களிடம் ஸாந்த்வ வசன மானது ப்ரயோஜனத்தை அளிக்காது என்று தீர்மானித்து. ''ஹே ஸுரஸே! நீ வாயைத் திறந்துகொள். நானும் ப்ரவேசிக் கிறேன். நீ ஆஹாரம் செய்துகொள்'' என்று சொன்னார். ராக்ஷஸ ப்ரக்ருதியுள்ளவர்கள் செய்யும் காம ப்ரயுக்தமான ஸாமர்ய விசே ஷங்களுக்கும். அகாமஹததர்களான ஞானிகள் செய்யும் யோக ப்ர யுக்தமான ஸாமர்த்ய விசேஷங்களுக்கும் வித்யாஸம் ஏற்படாதா! ஆகையினால் ஆஞ்ஜநேயஸ்வாமியினிடமோ தான் மஹாத்மா வானதினால் ராஜயோக க்ரமத்தை அவலம்பித்து அஷ்ட ஸித்தி களும் தன்னிடத்தில் குடியிருந்து வரும்பொழுது இந்த ஸுரஸை யினுடைய க்ருத்ரிமமான பராக்ரமம் எப்படி பலிக்கும் என்பதை ஸூக்ஷ்மதர்சிகள் அறியவேண்டும் ஸுரஸையானவள் தன்

னுடைய வதனத்தை எவ்வளவு பரிமாணமுள்ளதாக விரித்துக் கொண்டாளோ அதற்குமேல் ஒரு மடங்கு அதிக பரிமாணமுள்ள தாக ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் தன்னுடைய உருவத்தை எடுத் துக்கொண்டார் இப்படி சில நேரம், ஸுரஸையும் ஆஞ்ஜ நேயரும் பராக்ரமத்தில் விஜிகீஷு கதையை அவலம்பித்து மன்றாடினார்கள். ஸகல தேவர்களும் விமானங்களிலிருந்து கொண்டு இந்த அபூர்வமான வைபவத்தையும் பார்த்துக் களித்துக்கொண்டிருந்தார்கள். கடைசியில் மஹத் பரிமாணம் என்று சொல்லப்படும் பரிமாணத்தோடு ஸுரஸையானவள் வாயைத் திறந்து கொண்டாள். ஆஞ்ஜநேயஸ்வாமியோ மஹா புத்தி மானானதினால் அணு பரிமாணம் என்று சொல்லப்படும் ஸூக்ஷ்ம மாக தன்னுடைய ஸ்வரூபத்தை எடுத்துக்கொண்டு அவளுடைய வாயில் ப்ரவேசித்து அங்குஷ்டமாத்ர பரிமாணத்துடன் ப்ரவேசித்த காலத்தில், ப்ரும்மாண்டமான ஒரு பாண்டத்தில் ஒரு சிறு கடுகைப்போட்டது போல். ஆஞ்ஜநேயஸ்வாமி தாக்ஷாயணியாகிய ஸுரஸையினுடைய வாயில் ப்ரவேசித்து ரோம கூபம் வழியாக அணிமா ஸித்தியினுடைய பலத்தினால் வெளியில் வந்துவிட்டார்.

வெளியில் வந்து நின்றுகொண்டு "ஹே தாக்ஷாயணி! இனி நீ என்னை என்ன செய்ய முடியும்? உன் வரமும் ஸத்யமாகி விட்டது. நானும் ஜயித்துவிட்டேன். உன்னுடைய வரன் களெல்லாம் என்னைப் போலுள்ளவர்களிடத்தில் பலிக்காது. இனிமேலாவது ஜாக்ரதையாக இருக்கவேண்டும்" என்று சொல்லிவிட்டு ராகுவினால் விடப்பட்ட சந்த்ரனைப்போல் ஆஞ்ஜ நேயஸ்வாமியானவர் திவ்ய தேஜஸ்ஸுடன் லங்காநகரத்திற்கு அபிமுகமாகவே வெகுவேகத்துடன் சென்றார்.

இந்த ஸுரஸை என்றவளும் ராக்ஷஸரூபத்தை விட்டு விட்டு தேவரூபத்துடன் "ஹே ஸ்வாமின்! நான் செய்த அப சாரத்தை மன்னித்துக்கொள்ள வேண்டும். தேவகார்யத்திற் காக லங்காநகரம் போகிற தங்களுடைய பராக்ரமத்தை பரீக்ஷிக்க வேண்டுமென்ற அபிப்ராயம் தேவர்களுக்கேற்பட்டு இந்தக் கார்யம் நடந்ததன்றியில். வேறு வித்யாஸமாகத் தாங்கள் நினைக்கக்கூடாது. உங்களை ஜயிக்கிறவன் இந்த ப்ரபஞ்சத்தி

லேயே ஒருவனுமில்லை. ராமகார்யமானது தங்கள் மூலமாக நிச்சயம் கைகூடிவரும். ஸௌக்யமாக லங்கா நகரம் சென்று ஸீதையைப் பார்த்துத் தாங்கள் திரும்பிவர வேண்டும். ராகவனோடு ஸீதையைச் சேர்த்துவைத்து லோகத்திற்கு பரம மங்களத்தைச் செய்வது தங்கள் கடமையாகும்'' என்று சொல்லி விட்டு அந்தர்த்யானத்தை அடைந்து விட்டாள்.

ஆஞ்ஜநேயஸ்வாமி அற்புதமான இந்தக் கர்மாவை செய்ததினால் தேவர்களெல்லோரும் ஆஞ்ஜநேயருடைய பராக்ரமத்தைச் ச்லாகித்துப் பேசினார்கள். மறுபடியும் கருடனுக்கு ஸமானமான வேகத்துடன் ஆகாச மார்க்கத்தில் லங்கா நகரத்தை நோக்கிக் கிளம்பி லங்கா நகரத்தினுடைய ஸமீபமும் சென்றுவிட்டார்.

प्लवमानं तु तं दृष्ट्वा सिंहिका नाम राक्षसी ।
मनसा चिन्तयामास प्रवृद्धा कामरूपिणी ॥
अद्य दीर्घस्य कालस्य भविष्याम्यहमाशिता ।
इदं हि मे महत्सत्त्वं चिरस्य वशमागतम् ॥
इति सञ्चिन्त्य मनसा छायामस्य समाक्षिपत् ॥

பலவமாநம் து த்ருஷ்ட்வா ஸிம்ஹிகா நாம ராக்ஷஸீ |
மநஸா சிந்தயாமாஸ ப்ரவ்ருத்தா காமரூபிணீ ||
அத்ய தீர்க்கஸ்ய காலஸ்ய பவிஷ்யாம்யஹமாசிதா |
இதம் ஹி மே மஹத்ஸத்வம் சிரஸ்ய வசமாகதம் ||
இதி ஸஞ்சிந்த்ய மநஸா சாயாமஸ்ய ஸமாக்ஷிபத் |

ஆகாச மார்க்கத்தில் வெகுவேகமாகப் போகும் ஆஞ்ஜநேயஸ்வாமியையோ, ஸிம்ஹிகை என்ற பெயரோடு கூடின ஒரு ராக்ஷஸ ஸ்த்ரீ பார்த்து தனக்கு ஒரு பெரிய ஆஹார வஸ்து என்று நினைத்தாள். அந்த ராக்ஷஸ ஸ்த்ரீயோ ஸமுத்ர ஜலத்திற்குள்ளேயே ஸஞ்சாரம் செய்யும் ஸ்வபாவமுள்ளவள் அவளுக்கும், தபோ மஹிமையினால் ப்ராணிகளுடைய சாயையைத் தான் க்ரஹித்த மாத்ரத்தில் அந்த ப்ராணிகளையே தன் வச மாக்கிக் கொள்ளக் கூடிய சக்தியுள்ளவளாக வரபலமானது ஏற்பட்டிருக்கிறது. அந்த சக்தியினால் ஆஞ்ஜநேயஸ்வாமியினுடைய

நிழலை, தான் ஸமுத்ரத்திற்குள் இருந்துகொண்டே ஆகர்ஷணம் செய்தாள். அந்த ராக்ஷஸ ஸ்த்ரீயானவள் தன் நிழலைப் பிடித்து இழுத்த மாத்ரத்திலேயே, ஆஞ்ஜநேயஸ்வாமியின் வேகமானது குறைந்து, அங்குமிங்கும் போகமுடியாமல் மிகவும் கஷ்டத்தை அடைந்தார். நான்கு பக்கங்களிலும் அதன் காரணத்தைக் கவனிக்கும்பொழுது ஸமுத்ரத்தில் ஒரு பெரிய சரீரத்தோடு கூடிய ப்ராணியைப் பார்த்தார். சாயாக்ராஹி என்றும் அந்த பூதத்தைப் பார்த்துத் தெரிந்துகொண்டு, தான் கோரமான விச்வ ரூபத்தை தரித்துக்கொண்டார். அந்த ராக்ஷஸ ஸ்த்ரீயும் வ்ருத்தி அடைகிற ஆஞ்ஜநேயஸ்வாமியைப் பார்த்துவிட்டுத் தானும் தன்னுடைய வாயைத் திறந்துகொண்டு ஆஞ்ஜநேயஸ்வாமியைப் பக்ஷிக்க ஆரம்பித்தாள். ஆஞ்ஜநேயஸ்வாமியும், தான் அணிமா ஸித்தியைக் கைக்கொண்ட மஹிமையினால், தன்னுடைய ஸ்வ ரூபத்தை மிகவும் ஸூக்ஷ்மமாகச் செய்துகொண்டு, அந்த 'ஸிம்ஹிகை' என்ற ராக்ஷஸ ஸ்த்ரீயினுடைய வாயில் புகுந்தார். ஸித்தர்கள், சாரணர்கள் முதலான தேவர்களும் அந்த வைபவத்தைப் பார்த்துக்கொண்டு ஆகாச மார்க்கத்தில் நின்றுவந்தார்கள். ஆஞ்ஜநேயஸ்வாமியும் அந்த ராக்ஷஸ ஸ்த்ரீயினுடைய சரீரத்தில் தான் ப்ரவேசம் செய்த மாத்ரத்தில், தன்னுடைய நகங்களால் அந்த ராக்ஷஸ ஸ்த்ரீயினுடைய மர்ம ஸ்தானங்களைப் பேதித்து விட்டு வெளியில் வந்துவிட்டார். அவளும் ஜலத்தில் மரித்து விழுந்துவிட்டாள்.

तां तु दृष्ट्वा च धृत्या च दाक्षिण्येन निपात्य च ।
स कपिप्रवरो वेगात् ववृधे पुनरात्मवान् ॥

தாம் து த்ருஷ்ட்வா ச த்ருத்யா ச தாக்ஷிண்யேந நிபாத்ய ச ।
ஸ கபிப்ரவரோ வேகாத் வவ்ருதே புநராத்மவாந் ॥

ஆஞ்ஜநேயஸ்வாமியினிடத்திலோ தீர்க்க தர்சித்வமும் ஸஹஜமான தைர்யமும், ஸாமர்த்யமும் இருந்துவரும் காரணத்தினால், அந்த ராக்ஷஸ ஸ்த்ரீயை ஆஞ்ஜநேயஸ்வாமி ஜயித்தார் என்று ஸித்த சாரணர்கள் பேசிக்கொண்டு ஸந்தோஷித்தார்கள்.

இவ்விதம் மஹேந்த்ர பர்வதத்திலிருந்தும் லங்கா நகரத்திற்குப்போக ஆகாச மார்க்கத்தில் கிளம்பினதோ, மைநாக பர்வதம்,

ஸுரஸை என்ற ஸ்த்ரீ, ஸிம்ஹிகையென்ற ராக்ஷஸி இவர்களைத் தன் பராக்ரமத்தினால் ஜயித்துக்கொண்டு வெகு வேகமாக ஆகாச மார்க்கத்தில் போகும்படியான சக்தி விசேஷமோ, இவைகள் ஆஞ்ஜநேயஸ்வாமியினுடைய ஓர் அபூர்மான அமானுஷத்தன்மை என்று தேவர்கள் வர்ணித்தார்கள். மைனாக பர்வதத்தினுடைய எதிர்ப்பால் ப்ரமாண அஸம்பாவனை என்பதையும், ஸுரஸையி னுடைய விக்னத்தினால் ப்ரமேய அஸம்பாவனை என்பதையும் ஸிம்ஹிகையினுடைய விக்னத்தினால் விபரீதபாவனை என்பதையும் க்ரமமாக அறிந்துகொள்ள வேண்டும். ஜீவனை உத்தாரணம் செய்வதில் ஆசார்ய புருஷன் ப்ரவ்ருத்தித்தும் அந்த பரவ்ருத்தி யைத் தடுக்கிற விக்னங்களோ, மேற்சொன்னபடி மூன்று வகை களாகத்தானாகும். அந்த விக்னங்களையும் இந்த ஜீவனுடைய புண்யகர்மாவின் அதிசயத்தாலும், அந்த ஆசார்யன் தனக்குள்ள பகவத் ப்ரஸாத மஹிமையினாலும் பொருட்படுத்தாமல் அந்த விக்னங்களையும் மீறிக்கொண்டு ஜீவனை உத்தாரணம் செய்வது ஆசார்யனுடைய ஸ்வபாவமாகும் என்பது இதிலிருந்து வெளி யாகிறது

ஒரு கர்ஷகன் பூமியில் பீஜாவாபம் செய்து பயிரிட ஆரம் பித்தாலும், எதிர்பார்த்தப்ரகாரம் உடனேயே பலஸித்தி ஏற்படு கிறதில்லை அதற்காக அவன் அந்த யத்னத்தையும் விடுகிறதில்லை. மேன்மேலும் தனது ப்ரயத்னத்தை அதிகமாகத்தான் செய்து வருவான். அதனால் முன்பு ஏற்பட்ட நஷ்டங்களைக்கூட பின்பு ஒரு லாபத்திற்குள் அடங்கும்படி செய்து கொண்டு பரம ஸந்தோஷத்தை அடைவான். அதுபோல் ஆசார்ய புருஷனும் ஒரு சிஷ்யனை ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கரையேற்ற முயற்சி செய்யும்பொழுது அந்த சிஷ்யனுடைய ஸமீபத்திற்கே தான் போய் சேராமல் இருக்கும்படி ஏற்பட்ட விக்னங்களையோ, சிஷ்யனுடைய ஸமீபம் சென்ற பிறகும், தான் உபதேசிக்கிற தத்வமானது சிஷ்யனுடைய புத்தியில் ஆரூடமாகவில்லை என்பதி னாலேயோ தன்னுடைய ப்ரவ்ருத்தியை விடமாட்டார் எவ்வளவு யத்ன விசேஷங்கள் செய்தால் சிஷ்யனுடைய ஜன்மம் ஸபலமாக ஆகுமோ அவ்வளவு யத்ன விசேஷங்களையும் செய்துதான் தீருவார் என்பதுதான் லோகோபகாரமாக ப்ரவ்ருத்தித்த

ஆசார்ய புருஷனுடைய ஸ்வபாவமாகும் என்பதும் ப்ரக்ருதத்தில் வெளியாகிறது.

இவ்விதம் மஹாபலிஷ்டனான ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் லங்கா நகரத்தினுடைய உபவனமாகிய த்வீபத்தில் போய் கீழே இறங்கினர் தன்னுடைய விச்வரூபத்தை ராக்ஷஸர்கள் எவரும் அறியக் கூடாது என்ற எண்ணத்துடன் தன்னை மிகவும் ஸூக்ஷ்மமாகச் செய்துகொண்டு வானர ஜாதியின் ஆகாரமாகவே ஆகிவிட்டார் त्रीन् क्रमानिव विक्रम्य बलिवीर्यहरो हरिः (த்ரீந் க்ரமா நிவ விக்ரம்ய பலிவீர்யஹரோ ஹரி:) மஹாபலிசக்ரவர்த்தியினுடைய வீர்யத்தை அபஹரிக்க மஹாவிஷ்ணுவானவர் த்ரிவிக்ரமாவதாரம் செய்து கொண்டு மஹாபலியானவன் தன்னுடைய வசமான பிறகு நிஜமான ஸ்வரூபத்தை அடைந்துவிட்டதுபோல், ஆஞ்ஜநேய ஸ்வாமியும் ஜீவனுடைய சரீரமாகிய லங்கா நகரத்தின் ஸமீபத்திற்கு வரும் மார்க்கத்தில் ஏற்பட்ட விக்னங்களை நாசம் செய்கிற விஷயத்தில் விச்வரூப தாரியாக இருந்தாலும் ஜீவனுடைய ஸமீபம் வந்தவுடன் நிஜ ரூபதாரியாக ஆகிவிட்டார்.

कपिस्तु तस्मिन्निपपात पर्वते
विधूय रूपं व्यथयन मृगद्विजान् ॥
स सागरं दानवपन्नगायुदं
बलेन विक्रम्य महोर्मिमालिनम ।
निपत्य तीरे च महोदधेस्तदा
ददर्श लङ्काममरावतीमिव ॥

கபிஸ்து தஸ்மிந்நிபபாத பர்வதே
விதூய ரூபம் வ்யதயந் ம்ருகத்விஜாந் ||
ஸ ஸாகரம் தாநவ பந்நகாயுதம
பலேந விக்ரம்ய மஹோர்மிமாலிநம் |
நிபத்ய தீரே ச மஹோததேஸ்ததா
ததர்ச லங்காமமராவதீமிவ ||

ஆஞ்ஜநேயஸ்வாமியோ ஸமுத்திரனுடைய அக்கரையிலுள்ள ஓர் உபவனத்தில் விளங்கிவரும் த்ரிகூட சிகரம் என்ற மலையில் போய் இறங்கியதும். அங்குள்ள ம்ருக, பக்ஷிகள் மிகவும் பயந்து ஆங்காங்கு ஓடுவதற்கு ஆரம்பித்தன. தானவர்

கள், பன்னகர்கள் முதலான ப்ராணிகளால் சூழப்பட்டதாயும் ப்ரம்மாண்டமான அலைகளால் கோரமாயும் உள்ள ஸமுத்ரத்தை தன் பராக்ரமத்தினுல் தாண்டிவிட்டு த்ரிகூடசிகரத்தினுடைய மேல்பாகத்தில் ஸ்வர்க்கலோகம்போல் விளங்கிவரும் ராவணனுடைய ராஜதானியாகிய லங்கையை நிஜரூபத்துடன் ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் பார்த்தார்.

இந்த ஸர்க்கத்தின் முதல் ச்லோகத்தில் ராவணனுல் அபஹரிக்கப்பட்ட ஸீதையினுடைய ஸ்தானத்தை ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் தேட ஆரம்பித்தார் என்று சொல்லபட்டது. கடைசி ச்லோகத்தால் ராவணனுடைய வாஸஸ்தானமாகிய லங்கா நகரத்தைப் பார்த்து ஸந்தோஷமடைந்தார் என்றும் சொல்லப்படுகிறது

अमरावतीमिव लङ्कां (அமராவதீவ லங்காம்) என்ற பதத்தினுல் ஸ்த்ரீ லிங்கத்தினுல் குறிப்பிடப்படும் வஸ்து ஆஞ்ஜநேயஸ்வாமியினுடைய தர்சனத்திற்கு விஷயமாயிற்று என்று வெளியாகிறது. ஆரம்ப ச்லோகத்திலும் ஸ்த்ரீ லிங்கத்தினுல் குறிப்பிடப்பட்ட வஸ்துவைத் தான் தேட இச்சித்தார் என்றும் சொல்லப்பட்டது. இவ்விதம் உபக்ரம, உபஸம்ஹார ஐக்யரூபம் என்ற லிங்கமானது ஆஞ்ஜநேயஸ்வாமியின் ப்ரவ்ருத்திக்கு அனுகூலமாக இருப்பதினுல். அவருடைய ப்ரவ்ருத்தியானது. ஸபல ப்ரவ்ருத்தியாகவே ஆகும் என்பதையும் அறியவும். ஸ்த்ரீலிங்கத்தினுல் குறிப்பிடப்படும் லங்கா நகரம் என்ற வஸ்துவை மஹோர்மிமாலியான ஸமுத்ரம் விரோதியானுலும் அது எப்படி ஆஞ்ஜநேயஸ்வாமிக்குத் துச்சமாக ஆகிவிட்டதோ. அதுபோல் ஸீதா என்ற ஸ்த்ரீலிங்கத்தினுல் குறிப்பிடப்படும் ப்ராட்டியினுடைய தர்சனத்திற்கு விரோதியான ராக்ஷஸர்களோ. ராவணனே ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு அதி துச்சம் என்பது வெளியாகிறது

न रावणसहस्रं मे युद्धे प्रतिबलं भवेत् (ந ராவண ஸஹஸ்ரம் மே யுத்தே ப்ரதிபலம் பவேத்) என்ற ச்லோகத்தினுல் பின்பு இந்த விஷயமானது விவரிக்கப்படுகிறது இவ்விதம் ஸுந்தர காண்டத்தில் முதல் ஸர்க்கமானது முடிவு பெற்றது. நல்ல சிஷ்யனை அந்வேஷணம் செய்வதற்காக ஆசார்யனுடைய ப்ரவ்ருத்தி என்பதே

இந்த ஸர்க்கத்தின் முக்யமான பொருளாகும். நல்ல ஆசார்யனை ஒரு சிஷ்யன் அடைந்துவிட்டால் தன்னுடைய ஞானோத்பத்திக்கு விரோதிகளைப் பார்த்து அவன் கொஞ்சமேனும் சங்கையை அடையவேண்டாம். அந்த ஆசார்யபுருஷனே விரோதி வர்க்கங்களை நிரஸனம் செய்துவிட்டு அவனுக்கு ஞானப்பாலை ஊட்டுவார் என்பது வெளியாகிறது. ஆகையினால் முமுக்ஷுவான சுத்த ஜீவன் பகவானுடைய கருணாம்ருதத்தினால் அபிஷிக்தனான மகாபுருஷனான ஆசார்யனை சரணமடைந்து, அவனுடைய உபதேசத்தினால் திவ்ய ஞானத்தையும் ஸம்பாதித்துக்கொண்டு, அந்த ஞான மஹிமையினால் முக்தனாக ஆகலாம் என்பதே இந்த ஸர்க்கத்தின் தாத்பர்ய ஸாரமாகும் இந்த முதல் ஸர்க்கத்தையாவது விடாமல் பாராயணம் செய்துகொண்டு ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு நெல் பொரியை நிவேதனமாகச் செய்துவருகிறவர்களுக்கு ஆஞ்ஜநேயருடைய ப்ரஸாதத்தினால் சத்ரு க்ஷயமும் ஸர்வகார்ய ஸித்தியும் கைகண்ட பலமாக ஏற்படுமென்பதும் ஸித்தமாகும் இதற்கு ப்ராமண வாக்யமோ ஸ்காந்த மஹா புராணத்தில் உமாமகேச்வர ஸம்வாதத்தில் உள்ள

सुन्दरे प्रथमं यो वै सर्गं पठति मानवः।
स हन्ति शत्रून् सर्वार्थं लभते नात्र संशयः॥

ஸுந்தரே ப்ரதமம் யோ வை ஸர்க்கம் படதிமாநவ:
ஸ ஹந்தி சத்ரூந் ஸர்வார்த்தம் லபதே நாத்ர ஸம்சய !

என்பதேயாகும்.

स सागरमनाधृष्यमतिक्रम्य महाबलः।
त्रिकूटशिखरे लङ्कां स्थितां स्वस्थो ददर्श ह॥

ஸ ஸாகரமாநாத்ருஷ்யமதிக்ரம்ய மஹாபல: ||
த்ரிகூடசிகரே லங்காம் ஸ்திதாம் ஸ்வஸ்தோ ததர்ச ஹ ||

ஹனுமானானவர் மற்ற எவர்களாலும் தாண்டமுடியாததான ஸமுத்ரத்தை மகா பலிஷ்டனாக இருக்கும் காரணத்தினால் ஆயாஸமின்றித் தாண்டிவிட்டு த்ரிகூட சிகரம் என்ற பர்வதத்தினுடைய

சிகரத்தில் விளங்கிவரும் லங்கா நகரத்தைப் பார்வையிட்டார். ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் லங்கா நகரத்தைப் பார்க்கும்பொழுது அங்குள்ள வ்ருக்ஷங்களெல்லாம் யத்ருச்சையாக வாயுவினுல் அசைக்கப்பட்டு புஷ்பங்களை வர்ஷித்தன. அந்த புஷ்பங்கள் மஹானுபாவனுன ஆஞ்ஜநேயஸ்வாமியினுடைய சிரஸ்ஸில் விழுந்து புஷ்பமயமான பர்வதம் போல் ஹனுமான் விளங்கிவந்தார். அனேக யோஜனையுள்ள ஸமுத்ரத்தைத் தாண்டியும் ஆஞ்ஜநேய ஸ்வாமிக்கு கொஞ்சமேனும் ச்ரமம் ஏற்படவில்லை. லங்கா நகரத்தின் பார்ச்வங்களில் பலவிதமான வ்ருக்ஷ ஜாதிகளை பார்த்து மிகவும் ஆச்சர்யப்பட்டார். அபூர்வமான அகழ்களாலும் கோட்டைகளாலும் அலங்கரிக்கப்பட்டு வந்த லங்கா நகரத்தின் ஸன்னிவேசமானது யாருக்குத்தான் ஆச்சர்யத்தைக் கொடுக்காது ?

सीतापहरणार्थेन रावणेन सुरक्षिताम् ।
समन्ताद्विचरद्भिश्च राक्षसैरुग्रधन्विभिः ॥

ஸீதாபஹரணார்த்தேந ராவணேந ஸுரக்ஷிதாம் ||
ஸமந்தாத்விசரத்பிச்ச ராக்ஷஸைருக்ரதந்விபி: ||

ஆஞ்ஜநேயஸ்வாமி லங்கா நகரத்தைப் பார்வையிடும் பொழுது. லங்கா நகரமானது ஸீதாதேவியை அபஹரித்ததனுல் தான் ஒரு லாபத்தை அடையலாம் என்ற எண்ணம் உள்ள ராவணனுலும். ராவணனை அனுஸரித்த அநேக சூரர்களாலும் அன்னியர்களால் ப்ரவேசிக்க முடியாமல் மிகவும் நன்ருக ரக்ஷிக்கப்பட்டு வந்தது மிகவும் உக்ரமான வில்லாளிகளான படர்கள் நான்கு பக்கத்திலும். ஸஞ்சரித்துக்கொண்டே லங்கையை ரக்ஷித்து வந்தார்கள். सीतापहरणार्थेन (ஸீதாபஹரணார்த்தேந) என்ற இடத்தில் सीतापहरणमेव अर्थः प्रयोजनं यस्य रावणस्य तेन (ஸீதாபஹரணமேவ அர்த்த: ப்ரயோஜனம் யஸ்ய ராவணஸ்ய தேந) என்ற ஸமாஸத்தினுல் ராவணன் ஸீதையை அபஹாரம் செய்ததான் ப்ரயோஜனமே தவிர அபஹாரத்திற்கு வேருக மற்ற யாதொரு ப்ரயோஜனத்தையும் அந்த ராவணன அடையமுடியாது என்ற அர்த்தத்தை மேற் சொன்ன ஸமாஸமானது ப்ரகாசப்படுத்துகிறபடியினுல் ஸீதையினுடைய பாதிவ்ரத்யமானது அப்ரதிஹதம் என்பது விளங்கிவரு

கிறது. அதாவது எக்காரணத்தினுலும் அழிக்க முடியாததான பாதிவ்ரத்யமாகும்.

தவிரவும், सीतापहरणेन अर्थः प्रयोजनं राक्षस भावात् मुक्तिः यस्य सः तेन (ஸீதாபஹரணேந அர்த்த: ப்ரயோஜனம் ராக்ஷஸபாவாத் முக்தி: யஸ்ய ஸ: தேந) என்ற ஸமாஸத்தினுல் ஸீதாபஹரண மூலமாகத்தான் ராக்ஷஸ பாவத்தினின்றும் விமுக்தனுக ஆகி அபராஜிதமான வைகுண்டத்தை அடைந்து முன்போலவே நாம் பாரிஷதனுக இருக்கவேண்டும் என்ற கருத்தால் தான் ஸீதையை ராவணன் அபஹரித்தான்.

அதாவது வைகுண்டத்தில் ராவணனும் கும்பகர்ணனும் ஜயன் விஜயன் என்ற பெயருடன் த்வார பாலகர்களாக இருந்து வந்தார்கள். ஒரு ஸமயத்தில் ஸனகாதிகளான மஹர்ஷிகள் பகவானுடைய தர்சனத்திற்காக வரும்பொழுது இந்த பாரிஷதர்கள் இருவர்களும் தமக்கேற்பட்ட பகவானுடைய ஆக்ஞையை அனுஸரித்து, இந்த ஸந்தர்பத்தில் பகவானுடைய ஸமீபத்தில் ப்ரவேசிக்கக்கூடாதென்று அவர்களைத் தடுத்தார்கள். ஸனகாதிகளோ "இதற்கு முன்பு நாங்கள் அடிக்கடி வருவதுண்டு. எங்களை யாரும் ஒரு ஸந்தர்ப்பத்திலும் பகவானுடைய ஸமீபத்தில் ப்ரவேசிக்கக்கூடாதென்று தடுத்ததில்லை. இப்பொழுது நீங்கள் தடுப்பது பகவானுக்கு ஸம்மதமாக ஆகாது; ஆகையினுல் நாங்கள் போகத்தான் போவோம்" என்று த்வாரபாலகர்களை மீறிக்கொண்டு உள்ளே நுழைந்தார்கள். த்வார பாலகர்களும் கோபம் கொண்டு ஸனகாதிகளை 'போகக்கூடாது' என்று சொல்லி அவர்கள் கையில் வைத்துக்கொண்டிருக்கும் பிரம்பினுல் தடுத்தார்கள். இவ்விதம் மூன்று தடவைகள் ஸனகாதிகளுக்கும் த்வார பாலகர்களுக்கும் விவாதம் நடந்தது. ஸனகாதிகளோ த்வார பாலகர்களைப் பார்த்து "நீங்கள் பகவத் பக்தர்களல்ல; பகவானுக்குச் சத்ருக்களே. பாகவதோத்தமர்களான எங்களை பகவத் தர்சனத்திற்குப் போகக்கூடாது என்று மூன்று தடவை எங்களை தடுத்த காரணத்தினுல் மூன்று ஜன்மங்களில் பகவானுக்கு சத்ருக்களாக ஆகக்கடவீர்கள்'' என்று சபித்தார்கள். இந்த வ்ருத்தாந்தத்தை அந்தப்புரத்திலுள்ள பகவான் அறிந்து ஸனகாதிகளை வெகுப்ரகாரமாக க்ஷமாபணம் செய்து

கொள்ளும்படி அவரே வேண்டிக்கொண்டார். "என்னுடைய பாரிஷதர்கள் செய்த அபசாரம், நான் செய்த அபசாரமாகத்தான் ஆகிறது. அதைத் தாங்கள் க்ஷமித்துக்கொள்ள வேண்டும்; தங்களைப்போன்ற ப்ரம்ம நிஷ்டர்களான ப்ராமணர்களை நான் தெய்வமாக பாவித்துப் பூஜிக்கிறவன்."

दैवाधीनं जगत्सर्वं मन्त्राधीनं तु दैवतम् ।
तन्मन्त्रं ब्राह्मणाधीनं ब்ராह्मणाः मम देवता ॥

தைவாதீனம் ஜகத்ஸர்வம் மந்த்ராதீனம் து தைவதம்
தன்மந்த்ரம் ப்ராஹ்மணாதீனம் ப்ராஹ்மணா: மம தேவதா:

சராசரமான ஸகல ஜகத்தும் கர்மாதீனமாக ஏற்பட்டது; அந்த கர்மாவோ வேதத்தினுடைய அதீனமாக விளங்கி வருகிறது; வேதமோ ப்ராம்மணனுடைய மூலமாகத்தான் ப்ரகாசிக்க வேண்டும்; இவ்விதம் சராசரமான ஸகல ஜகத்திற்கும் பரம்பரையாக மூலகாரணமாக பர்யவஸிக்கும் ப்ராம்மண ஜாதியைத் தவிர வேறொரு உத்க்ருஷ்டமான தெய்வம் இல்லையென்று என்னுடைய எண்ணமாகும். அதனால் ப்ராம்மணனே நமக்கு மேலான தெய்வம் என்ற எண்ணத்துடன் நான் இந்த வைகுண்டத்தில் வாஸம் செய்து வருகிறேன்.

यस्यामलामृतकथाश्रवणावगाहः
सद्यः पुनाति जगदाश्वपचाद्विकुण्ठः ।
सोऽहं भवद्भिरुपलब्धसुतीर्थकीर्तिः
जह्यां स्वबाहुमपि वः प्रतिकूलवृत्तिम् ॥

யஸ்யாமலாம்ருதகதாச்ரவணாவகாஹ:
ஸத்ய: புநாதி ஜகதாச்வபசாத்விகுண்ட:
ஸோஹம் பவத்பிருபலப்த ஸுதீர்த்த கீர்த்தி:
ஜஹ்யாம் ஸ்வபாஹுமபி வ: ப்ரதிகூலவ்ருத்திம்

மஹான்களே! என்னுடைய நிர்மலமலமான கதாம்ருத ஸாகரத்தில் எந்த மனிதன தன்னுடைய ச்ரோத்ரேந்த்ரியத்தைச் செலுத்தி கதாச்ரவணம் செய்கிறது என்ற வ்யாஜத்தினால், ஸக்ருதாவ்ருத்தி (ஒரு தடவை) ஸ்னானம் செய்தவனாகிறானோ, அந்த மனிதன் யாராக இருந்தாலும், என்னுடைய கதாம்ருத ஸமுத்ர ஸ்னானமானது அவனையும் மற்ற ஜகத்தையும் சண்டாள பர்யந்தம்—ஜாதி

பேதத்தைக் கவனிக்காமல்—தனம், வித்யை, வ்ருத்தம், ஆசாரம் முதலிய குணகணங்களையும் கவனிக்காமல் ஸம்ஸார ஸாகரத்தி னின்றும் விமுக்தனுக ஆகும்படி செய்கிறதோ, அந்த அப்ரச்யுத மான ஸ்வபாவத்தோடு கூடின நான் தங்களைப்போன்ற ப்ராம் மணர்கள் மூலமாகத்தான், கதாப்ரஸங்க மூலமாக மகா ப்ரஸித்த மான ஒரு கீர்த்தியை ஆங்காங்கு அடைந்தவனுக ஆகிறேன். என்னுடைய கதைகளை ஆங்காங்கு ப்ரவசன மூலமாக ப்ரஸித்தப்படுத்தி என்னை ப்ரகாசப்படுத்துகிறவர்களல்லவா தங்க ளைப போன்ற ப்ராமணர்கள்! அவர்களிடத்தில் நான் எப்படி விரோதமாக நடந்துகொள்ள முடியும்? என்னுடைய கைகளே அந்த ப்ராம்மணோத்தமர்களுக்கு விரோதமான கார்யத்தைச் செய்தால் அவைகளைக் கூட நான் வெட்டி எறியத் தயாராக இருக்கிறேன். இந்த ஜய விஜயர்கள் என்ற பாரிஷதர்களை நான் வெட்டியிருக்கமாட்டேனு? தங்களுக்கு விரோதத்தைச் செய்யும் யாரும் எனக்கு பந்துவே இல்லை; சத்ருக்களேதான். ஆகையால் தாங்கள் இந்தப் பாரிஷதர்களுக்குக் கொடுத்த சாபத்தை நானும் ஆமோதிக்தேன்" என்று சொல்லி ஸனகாதிகளிடம் பகவான் க்ஷமாபணம் செய்து கொண்டார்.

அந்த ஸந்தர்ப்பத்தில் இந்தப் பாரிஷதர்கள் இருவர்களும், லோக மாதாவான மஹாலக்ஷ்மியினுடைய ஸமீபம் சென்று தம் முடைய துக்கத்தைத் வெரிவித்துக்கொண்டு விமோசன காலத்தை ப்ரார்த்தித்துக் கேட்டார்கள் பரதேவதையும், பரம க்ருபையுடன் பாரிஷதர்களைப் பார்த்து "ஸனகாதிகளுடைய சாபத்திற்கு நீங்கள் உட்பட்டேதான் ஆகவேண்டும்; ஆகையினுல் பகவானுடைய சத்ருக்களாகவே நீங்கள் பூலோகத்திற்குச் சென்று ஜன்மத்தை அடைந்து த்வேஷ மூலமாக பகவானுடைய நினைவாகவே இருந்து வாருங்கள். கூடிய சீக்ரத்தில் விமோசன காலம் ஏற்பட்டுவிடும். பகவானும்

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम ॥

யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத
அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்

என்ற தன்னுடைய ப்ரதிக்ஞையை அனுஸரித்து தர்ம ஸ்தாபனம் செய்வதற்காக இக்ஷ்வாகு வம்சத்தில் தசரத சக்ரவர்த்தியி னுடைய புத்ரனாக அவதரிக்கப் போகிறார்; நானும் राघवत्वे भवेत्सीता (ராகவத்வே பவேத்ஸீதா) என்ற ந்யாயத்தை அனுஸரித்து மிதிலாபதியான ஜனக மஹாராஜாவினுடைய வம்சத்தில் அயோநிஜையாக அவதாரம் செய்து ஸீதையென்ற பெயருடன் ராமனை பர்த்தாவாக அடைவேன். திவ்ய தம்பதிகளான நாங்கள் பித்ரு வாக்ய பரிபாலனம் என்ற தர்மத்தை வ்யாஜமாக வைத்துக் கொண்டு தண்டகாரண்யத்தில் வஸிக்கப்போகிறோம். அந்த ஸந்தர்ப்பத்தில் நீ மறுபடியும் என்னிடம் வந்து இந்த விஷயத்தைத் தெரிவித்துக் கொண்டால் அந்த ராமன் மூலமாக ராக்ஷஸ பாவத்தினின்றும் உனக்கு விமுக்தி ஏற்பட்டு வைகுண்டத்திலேயே முன்போலவே பாரிஷத ஸ்தானத்தை அடையலாம்'' என்றாள்

இவ்வாறு லோகமாதாவான ஜகதீச்வரி தனக்கு அனுக்ரகம் செய்த விஷயத்தை நாரத மஹர்ஷி மூலமாக அறிந்து கொண்டு தான் ராவணன் ஸீதையை மாத்ருத்வ புத்தியோடு பூஜார்த்தமாக அபஹரித்தான். இந்த விஷயமானது முன்பு ஆரண்ய காண்டத்தில் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றது. இதனால் सीतापहरणेन ஸீதா பஹரணேந) ஸீதையை அபகரிப்பது என்பதின் மூலமாக अर्थः (அர்த்த:) ப்ரயோஜனமானது. மோக்ஷமானது எந்த ராவணனுக்கு ஏற்படுமோ அந்த ராவணனால் ரக்ஷிக்கப்பட்ட லங்கையை ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் பார்த்து ஆனந்தித்தார் என்ற தாத்பர்யமும் सीताहरणार्थेन रावणेन सुरक्षितां (ஸீதாபஹரணார்த்தேந ராவணேந ஸுரக்ஷிதாம்) என்ற வாக்யத்தினால் வெளியாகிறது

தவிரவும். सीतापहरणेन रावणकर्तृक सीताहरणेन (ஸீதாபஹரணேந ராவண கர்த்ருக ஸீதாஹரணேந) — அதாவது ராவணன் ஸீதையை அபகரித்ததினால் अयः प्रयोजनं देवानां (அர்த்த: ப்ரயோஜனம் தேவானாம்) தேவகார்ய ஸித்தியானது எவனை மூலமாக ஏற்படுகிறதோ सः सीतापहरणार्थः (ஸ: ஸீதாபஹரணார்த்த:) என்ற ஸமாஸத்தினால்

स हि देवैरुदीर्णस्य रावणस्य वधार्थिभिः।
अर्थितो मानुषे लोके यज्ञे विष्णुः सनातनः ॥

ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி;
அர்த்ததிதோ மாநுஷே லோகே ஜக்ஞே விஷ்ணு: ஸநாதந:

என்ற சாஸ்த்ரப்படி 'தேவர்கள் எந்த ராவணவதத்தை முன்னிட்டு மஹாவிஷ்ணுவைப் பூலோகத்தில் மனுஷ்யனாக அவதரிக்க வேண்டுமென்று ப்ரார்த்தித்துக்கொண்டார்களோ அந்த தேவர்களுடைய ப்ரயோஜனமும் ஸித்தித்து விடும்' என்ற தாத்பர்யமும் வெளியாகிறது. இல்லாவிடில்,

सीतापहरणेन अर्थः अवतार प्रयोजनं रामस्य विष्णो येन सः सीतापहरणार्थः (ஸீதாபஹரணேந அர்த்த: அவதார ப்ரயோஜனம் ராமஸ்ய விஷ்ணோ: யேந ஸ: ஸீதாபஹரணார்த்த:) என்ற ஸமாஸத்தினால், விஷ்ணு பூலோகத்தில் மனுஷ்யனாக அவதாரம் செய்வதற்கு ஸீதையை அபஹரிப்பதன் மூலமாக ராவணன் காரணபூதனாக ஆகிறபடியினால் அந்த ராவணனைக் கவியானவர் ஸீதையைத் தான் அபஹரித்து அதன் மூலம் மஹா விஷ்ணுவினுடைய அவதாரத்தை ராவணன் ஸபலமாகச் செய்தான் என்று ராவணனைக் குறிப்பிட்டு ஸ்துதிக்கிறார்.

இவ்விதம் ஸீதாபஹரணார்த்தேந என்ற பதத்திற்கு வெகுப்ரகாரமாக அர்த்தமானது ஸ்புரிக்கின்றது. இதில் வ்யாக்யாதாக்களுடைய அபிப்ராயமே ப்ரமாணமாகும். அதனால் ஸ்புரிக்கின்ற தத்வங்களோ ஸீதையினுடைய பாதிவ்ரத்யம் மகாத்குடமானது என்பது ஒன்று; இரண்டாவது ராவணனுக்கு ஸனகாதிகள் சாபத்தினின்றும் விமோசனம் ஏற்பட்டு முன்போலவே வைகுண்டவாஸம் என்ற மோக்ஷம் ஸித்திப்பது; மூன்றுவதோ தேவகார்ய ஸித்தி; நான்காவது மஹாவிஷ்ணுவினுடைய மனுஷ்யாவதார ப்ரயோஜனம். இதை வித்வான்கள் ஸூக்ஷ்ம த்ருஷ்டியோடு பார்த்து ஸந்தோஷிக்க வேண்டும.

ஒருவராலும் ப்ரவேசிக்க முடியாததான லங்கா நகரத்தை ஆஞ்ஜநேயஸ்வாமி பார்வையிட்டு, இந்த நகரத்தில் ஸ்ரீராமன் ப்ரவேசித்து, எவ்விதம் ராவணனை ஜயிக்க முடியும்? என்று மிகவும் கவலையை அடைந்தார்.

आगत्यापीह हरयो: भविष्यन्ति निरर्थका: ।
न हि युद्धेन वै लङ्कां शक्या जेतुं सुरैरपि ॥
इमां तु विषमां दुर्गां लङ्कां रावणपालिताम् ।
प्राप्यापि स महाबाहु: किं करिष्यति राघव: ॥

ஆகத்யாபீஹ ஹரய: பவிஷ்யந்தி நிரர்த்தகா: ।
ந ஹி யுத்தேந வை லங்காம் சக்யா ஜேதும் ஸுரைரபி ॥
இமாம் து விஷமாம் துர்காம் லங்காம் ராவணபாலிதாம் ।
ப்ராப்யாபி ஸ மஹாபாஹு: கிம் கரிஷ்யதி ராகவ: ॥

ஸுக்ரீவன் முதலான வானரச் ச்ரேஷ்டர்கள்தான் இந்த லங்கா நகரத்தில் எப்படி ப்ரவேசிக்க முடியும்? அப்படி ப்ரவேசித்தாலும் லங்கா நகரத்தை ஜயிப்பது மிகவும் கஷ்டமானது. ராவணனால் பரிபாலிக்கப்பட்டு வரும் லங்கையை பாஹுபலத்தோடு கூடின ஸ்ரீராமனும் ஜயிப்பாரோ என்பது ஸந்தேஹத்திற்குத்தான் இடமாகிறது. ஸர்வக்ஞனும், பராக்ரமசாலியாயுமுள்ள ஆஞ்ஜநேயஸ்வாமிக்கே இவ்விதமான கவலையை லங்கா நகரமானது கொடுக்கும் காரணத்தினால், அந்த நகரமானது மிகவும் துர்கமம் என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

மேலும் ராமன் தான் விஷ்ணு என்பதை ப்ரகாசப்படுத்தினால் லங்கையை ஜயிப்பது ஸுலபமாக ஆகிவிடலாம் ஆனால் ராவணன் சரணாகதி அடைந்து விடுவான்; ராவணவதம் என்ற அவதார ப்ரயோஜனம் நிறைவேறாது. இவ்விதமானால் தேவகார்யம் எப்படி ஸித்திக்கும்? தன்னுடைய விஷ்ணுத்வத்தை ப்ரகடனம் செய்யாமல், மனுஷ்ய பாவத்தை மாத்ரம் ப்ரகடனம் செய்து கொண்டிருக்கும் வரையில் லங்காநகரத்தை ராமன் ஜயித்துவிடுவார் என்று சொல்ல முடியாது. தேவாதிதேவர்களுக்கும் கூட அசக்யமான கார்யத்தை மனிதன் எவ்விதம் செய்ய முடியும்?" என்று அநேக ப்ரகாரமாக ஆஞ்ஜநேய ஸ்வாமிக்கு பெரிய கவலையை லங்காநகரம் கொடுத்து வந்தது.

"ராக்ஷஸர்களோடு ஸாந்த்வ வசனமானது பயனற்றதாகவே ஆகிவிடும்; தானத்தினால் அவர்களை வசப்படுத்திக் கொள்வதும் ஸாத்யமில்லாத கார்யமாகும். அர்த்தத்தினால் த்ருப்தர்களாக

உள்ள ராக்ஷஸர்களை, தானத்தினுல் த்ருப்தி செய்துவைக்க முடியுமா ? புத்தியை பேதிப்பது என்பது ச்ரமஸாத்யமாகும். ஸத்புத்தியோடு கூடினவர்களுக்கு ஹிதத்தை உபதேசிக்கலாம். துர்புத்தியுள்ளவர்களை ஹிதோபதேசத்தினுல் மாற்ற முடியாது. பலிஷ்டர்களாக இருக்கும் காரணத்தினுல் தண்ட ப்ரயோகத்திற்கும் அவகாசமில்லை. இவ்வாறு, ஸாம, தான, பேத, தண்டம் என்ற நான்குவித உபாயங்களையும் உபயோகப்படுத்த அவகாசமில்லாத லங்காநகரத்தில், எவ்விதம்தான் ராமன் யுத்தம் செய்து ஜயிப்பாரோ? ஸமுத்ரத்தைத் தாண்டி இந்த லங்காநகரம் வருவதற்கோ, அங்கதன், நீலன், ஸுக்ரீவன், நானெருவன் இந்த நான்கு பேர்களுக்குத்தான் சக்தி ஏற்படக்கூடும். முன்பாக ஸீதை ஜீவனுடன் இருக்கிருளா இல்லையா என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அத்துடன், நான் இப்பொழுது ஸ்வீகரித்துக் கொண்டிருக்கும் ரூபத்தோடு லங்கா நகரத்திற்குள் ப்ரவேசம் செய்வதும் நீதியாகாது. வஞ்சக ஸ்வபாவமுள்ள ராக்ஷஸர்களை வஞ்சித்து நகரத்திற்குள் ப்ரவேசம் செய்ய வேண்டும். ராக்ஷஸர்கள் கண்டுபிடிக்கக்கூடிய சரீரத்துடன் லங்காநகரத்தில் ப்ரவேசித்தால், ராக்ஷஸர்கள் என்னைப் பிடித்துத் தன் வசம் கொண்டுபோய் விடுவார்கள். ராக்ஷஸர்களால் கண்டுபிடிக்க முடியாததான மிகவும் ஸூக்ஷ்மமான சரீரத்தோடு நான் ப்ரவேசித்தால், ஸமஸ்தமான லங்கையையும் பார்த்து, ஸீதையை சீக்ரத்தில் கண்டுபிடிப்பது ச்ரம ஸாத்யமாகும். எவ்விதம் தான் இந்த நகரத்திற்குள் ப்ரவேசிப்பது என்பது எனக்குப் புலப்படவில்லை; ராக்ஷஸர்களுக்குத் தெரியாமலும் இருக்க வேண்டும். சீக்ரமாக ஸஞ்சாரம் செய்வதற்கு அர்ஹமான ஸ்தூல ரூபத்தையும் ஸ்வீகரித்துக் கொள்ள வேண்டும் அப்படியானுல்தான் லங்கா நகரத்தில் ப்ரவேசித்து ஸீதையை நான் தேடி அந்த பரதேவதையைக் கண்டுபிடிக்கலாம். ஸீதையைக் கண்டுபிடிப்பதும் ராக்ஷஸர்களுக்கு நான் புலப்படாமலும் ராவணனுக்குத் தெரியாமலும் எந்த உபாயத்தை அவலம்பித்து அவளைப் பார்ப்பது என்ற விஷயமும் எனக்குப் புலப்படவில்லை தீர்க்காலோசனை செய்யாமல் அவஸரப்படக்கூடாது. ராமனுடைய கார்யத்திற்கு ஹானி வரக்கூடாது. ஏகாந்தமாக ஒருவருக்குப் தெரியாமல், ஸீதையை நாம் கண்டுபிடிக்க வேண்டும். அது எப்படித்தான ஸாத்யமாகுமோ ?

भूताश्चार्था विपद्यन्ते देशकालविरोधिताः ।
विक्लवं दूतमासाद्य तमस्सूर्योदये यथा ॥
अर्थानर्थान्तरे बुद्धिर्निश्चिताऽपि न शोभते ।
घातयन्ति हि कार्याणि दूताः पंडितमानिनः ॥
न विनश्येत्कथं कार्यं वैक्लव्यं न कथं भवेत् ।
लङ्घनं च समुद्रस्य कथं नु न भवेत् वृथा

பூதாச்சார்த்தா விபத்யந்தே தேசகாலவிரோதிதா: ।
விக்லபம் தூதமாஸாத்ய தமஸ்ஸூர்யோதயே யதா ‖
அர்த்தாநர்த்நர்த்தாந்தரே புத்திர் நிச்சிதாபி ந சோபதே ।
காதயந்தி ஹி கார்யாணி தூதா: பண்டிதமாநிந : ‖
ந விநச்யேத்கதம் கார்யம் வைக்லப்யம் ந கதம் பவேத் ।
லங்கநம் ச ஸமுத்ரஸ்ய கதம்னு ந பவேத் வ்ருதா ‖

த்ருடமான உபாயத்தை அனுஷ்டானம் செய்து அபூர்வமான ஒரு காரியத்தை பல பர்யவஸாயியாக ஆகும்படி ப்ரயத்னம் செய்தாலும் அவிவேகியான தூதன் மூலமாக தேசத்திற்கும் காலத்திற்கும் விருத்தமாகி அந்த கார்யமானது, பலனளிக்கும் காலத்தில் வீணாகிவிடும். ஸூர்யன் உதித்ததும் இருட்டானது நஷ்டமாகப் போவதுபோல், கார்ய நாசம் ஏற்பட்டுவிடும். தூதனுடைய புத்தி சாதுர்யத்தைக் கொண்டுதான் ஸகல கார்யமும் பலவத்தாக ஆகவேண்டும். தூதன் புத்தி சக்தி இல்லாதவனாக இருந்தால் அவச்யம் செய்யவேண்டிய கார்யம் இன்னதுதான் செய்யக்கூடாத கார்யம் இன்னதுதான் என்ற விஷயத்தில் மந்திரிகள் மூலமாக நிர்ணயிக்கப்பட்ட ராஜனுடைய புத்திகூட சோபிக்காமல் ஆகிவிடும்; ஞானமில்லாத தூதர்கள் தான் புத்திமான்போல் நடித்து கார்யத்தைக் கெடுத்துவிடுவார்கள்; ப்ரக்ருதமான கார்யம் எவ்விதம் நஷ்டத்தை அடையாமலிருக்குமோ, நான் ஸமுத்ரத்தைத் தாண்டினதும் பயனுள்ளதாக எப்படி ஆகுமோ, அப்படிச் செய்யவேண்டும்" என்று பலவாறாக ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் லங்கா நகரத்தைப் பார்த்துக்கொண்டே சிந்தா ஸாகரத்தில் மூழ்கினார்.

தவிரவும், நான் இந்த சரீரத்தோடு இந்த ஸ்தலத்திலேயே நின்று வந்தேனாகில் நிச்சயமாக ராக்ஷஸர்களுடைய வசமாகி

நாசத்தை அடைந்துவிடுவேன்; என்னுடைய ஜன்மத்திற்கு குறைவு ஏற்படுவது என்னுடைய கவலையில்லை. ஆனால் ராம கார்யம் கெடாமலிருக்கவேண்டும். ஆகையினால் ராத்ரியில் மிகவும் ஸூக்ஷ்மமான உருவத்தை எடுத்துக்கொண்டு லங்கா நகரத்தில் ப்ரவேசித்து ஸீதையைத் தேட ஆரம்பிக்கவேண்டும்" என்று ஆலோசித்து ஸூர்யனுடைய அஸ்தமன காலத்தை எதிர் பார்த்து வந்தார். சற்று நேரத்திற்கெல்லாம் ஸூர்யபகவானும் அஸ்தமித்து விட்டார். ஹனுமானும் ஒரு சிறிய பூனைக்குட்டி போல் தன்னுடைய உருவத்தை எடுத்துக்கொண்டு ப்ரதோஷ காலத்தில் ப்ராகாரத்தைத் தாண்டிக் குதித்து லங்கா நகரத்திற்குள் ப்ரவேசம் செய்தார். மிகவும் அற்புதமான ஸுவர்ணம், வெள்ளி, மரகதம், முதலிய ரத்னவிசேஷங்களால் அலங்கரிக்கப்பட்ட கோபுர ப்ரஸாத விசேஷங்களைப் பார்த்து ஆச்சர்யத்தை அடைந்தார் சந்த்ரனும் பரிபூர்ண கலையோடு ராம கார்யத்தில் ஆஞ்ஜநேய ஸ்வாமிக்கு ஸகாயம் செய்வது போல் நிர்மலமான காந்தியுடன் ப்ரகாசித்து வந்தான்.

शङ्खप्रभं क्षीरमृणालवर्ण-
मुद्गच्छमानं व्यवभासमानम् ।
ददर्श चन्द्रं स कपिप्रवीरः
पोप्लूयमानं सरसीव हंसम् ॥

சங்கப்ரபம் க்ஷீரம்ருணாளவர்ணம்
உத்கச்சமானம் வ்யவபாஸமானம் ।
ததர்ச சந்த்ரம் ஸ கபிப்ரவீர:
போப்லூயமானம் ஸரஸீவ ஹம்ஸம் ॥

சங்கம் போலும் க்ஷீரம் போலும் தாமரைத் தண்டின நூல் போலும் சுத்தமான காந்தியோடு ப்ரகாசித்து வரும் சந்த்ரனைப் பார்த்து ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் மானஸ ஸரஸில் ஹம்ஸ பக்ஷியைப் பார்த்தது போல் நினைத்து ஸந்தோஷமடைந்தார்.

பிறகு ஆங்காங்கு லங்கா நகரத்திற்குள் முக்யமான க்ருஹங்களையும் ப்ரஸாத விசேஷங்களையும் பார்த்துக்கொண்டு ஸீதையைத் தேடுவதற்காக ஸஞ்சாரம் செய்து கொண்டிருக்கும்

காலத்தில் லங்காநகரத்திற்கு அதிதேவதையான லங்கிணி என்ற பெயரோடு கூடின ஒரு ராக்ஷஸ ஸ்த்ரீ ஆஞ்ஜநேயஸ்வாமியைப் பார்த்து மிகவும் கோபத்தை அடைந்து அவருக்கு முன்பாக நின்று கொண்டு அட்டஹாஸத்துடன், ஸிம்மநாதத்தை செய்து கொண்டு, அவரைப் பார்த்துச் சொல்கிருள்.

कस्त्वं केन च कार्येण इह प्राप्तो वनालय ।
कथयस्वेह यत्तत्त्व यावत्प्राणान्धरिष्यसि ॥
न शक्यां खल्वियं लङ्का प्रवेष्टुं वानर त्वया ।
रक्षिता रावणबलैरभिगुप्ता समन्ततः ॥

கஸ்த்வம் கேந ச கார்யேண இஹ ப்ராப்தோ வநாலய ।
கதயஸ்வேஹ யத்தத்வம் யாவத்ப்ராணாந்தரிஷ்யஸி ॥
ந சக்யா கல்வியம் லங்கா ப்ரவேஷ்டும் வாநர த்வயா ।
ரக்ஷிதா ராவணபலைரபிகுப்தா ஸமந்தத: ॥

"யாரப்பா நீ, காட்டில் வஸிக்கக்கூடிய வானரமாகத் தோன்றுகிறதே! நகரத்தில் உனக்கு என்ன கார்யம் இருக்கிறது உன்னுடைய ப்ராணனுக்கு ஆபத்து வருவதற்குள் உண்மையை சீக்ரம் சொல் ராவணனுடைய படர்களால் நான்கு பக்கங்களிலும் ரக்ஷிக்கப்பட்டு வரும் இந்த நகரத்தில் ப்ரவேசிப்பதற்கு உனக்கு யோக்யதையே இல்லை" என்று பரம அட்டஹாசத்துடன் கர்ஜித்துக் கொண்டு ஆஞ்ஜநேயஸ்வாமியைப் பார்த்துக் கேட்டாள். ஆஞ்ஜநேயஸ்வாமியும், "நீ யார்? என்னை எதற்காக இவ்விதம் ப்ரச்னம் செய்கிருய் மிகவும் அட்டஹாஸம் செய்கிருயே?" என்று பதிலுக்குக் கேட்டார். அதைக் கேட்ட லங்கிணியும் மிகவும் கோபத்தை அடைந்து "நான் ராக்ஷஸ ராஜனுன ராவணனுடைய ஆக்ஞையை ரக்ஷிப்பவள். இந்த நகரத்திற்கு அதிதேவதையென்று என்னைச் சொல்வார்கள். என்னுடைய தயவில்லாமல் யாரும் இந்த நகரத்திற்குள் ப்ரவேசிக்க முடியாது. இப்பொழுதே உன்னை ப்ராணனை இழக்குமாறு செய்துவிட்டு நான் கர்ஜிக்கப் போகிறேன்" என்று உத்கோஷித்தாள். ஆஞ்ஜநேயஸ்வாமியோ லங்கிணியைப் பார்த்து "நான் லங்காநகரத்தை பார்க்க வேண்டும் என்ற ஆசையுடன் வந்தவன். ஆகையால் என்னை நகரத்திற்குள் ப்ரவேசிக்கும்படி அனுமதிக்க வேண்டும்

நகரம் முழுவதும் சுற்றிப் பார்த்துவிட்டு வந்த வழியோடு நான் திரும்பிப் போய்விடுகிறேன்'' என்று பணிவாகக் கேட்டுக் கொண்டார். லங்கிணியோ ஹநுமாருடைய வார்த்தையை லக்ஷ்யம் செய்யாமலே, தன்னுடைய கையினுல் ஆஞ்ஜநேய ஸ்வாமியை ஓங்கி அடித்தாள். லங்கிணியினுல் அடிக்கப்பட்ட ஆஞ்ஜநேயஸ்வாமியோ அந்த அடியினுல் கொஞ்சம் கேதத்தை அடைந்தவராகி தன்னுடைய இடது கை விரலை முஷ்டியாகச் செய்துகொண்டு பரமகோபத்துடன் லங்கிணியை ஓங்கிக் குத்தித் தள்ளினுர். ஸ்த்ரீ ஜாதியைக் கொல்லக்கூடாது என்ற சாஸ்த்ரத்தைக் கருதி அவளுடைய ப்ராணனை அபஹரிக்க ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு இஷ்டமில்லை. ஆகிலும் ஆஞ்ஜநேயஸ்வாமியினுடைய இடது கைக் குத்துத் தாங்காமலே, வெகு தூரத்திற் கப்பால் போய்விழுந்து மூர்ச்சையை அடைந்துவிட்டாள். ஆஞ்ஜநேயஸ்வாமிக்கும் அவளுடைய அவஸ்தையைப் பார்த்து கருணை ஏற்பட்டு விட்டது. கொஞ்சகாலமான பிறகு, லங்கிணியும் மெதுவாக மூர்ச்சை தெளிந்து மிகவும் தாழ்மையுடன், ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பார்த்துச் சொன்னுள். "ஹே வானரச்ரேஷ்ட! பலிஷ்டர்களான மஹான்க ளெல்லோரும் ஸ்த்ரீயைக் கொல்லக் கூடாது என்ற சாஸ்த்ர மர்யாதையைத் தாண்டாமல் நடந்து கொள்வார்கள் என்பதை உன்மூலமாக நான் தெரிநது கொண்டேன். நான் லங்கா நகரத்திற்கு அதிதேவதை; இது வரையில் ஒருவராலும் நான் ஜயிக்கப்பட்டவள் அல்ல; உன்னுலோ இப்பொழுது நான் ஜயிக்கப்பட்டு விட்டேன். உன்னுடைய அனுக்ரக வசத்தினுல். எனக்கு அல்ப ஞானமும் ஏற்பட்டுவிட்டது. நான் பூர்வத்தில் மதாலஸை என்ற பெயர் கொண்ட ஒரு அப்ஸரஸாக இருந்துவந்தேன். ப்ரம்ம ஸபையில் பரத சாஸ்த்ரத்தை அனுஸரித்து நான் ஒரு ஸந்தர்ப்பத்தில் நாட்டியமாடி வரும்பொழுது ப்ரம்மா என்னுடைய சில அபிநயங்களெல்லாம் சாஸ்த்ர விருத்தமாக இருக்கிறதென்று ஸபையில் அவமதித்தார் நான் பொறுமையை இழந்து, பரதசாஸ்த்ரத்தினுடைய ஞானமோ, வாஸனையோ உமக்கில்லையென்று ப்ரம்மாவைப் பார்த்து திக்காரம் செய்தேன். உடனே ப்ரம்மா கோபத்தை அடைந்து என்னை ராக்ஷஸ யோனியில் பிறக்கும்படி சபித்து விட்டார். அதனுல் நான் ராக்ஷஸியாகப் பிறந்து ராவண

னுடைய வசத்திலகப்பட்டுக் கொண்டு இந்த நகரத்தின் அதி தேவதையாக இருந்துகொண்டு ரக்ஷித்துவருகிறேன் சாபத்திற்கு விமோசன காலத்தையும் ப்ரம்மாவிடம் நான் ப்ரார்த்தித்துக் கொண்டு கேட்கும் காலத்தில், 'எப்பொழுது ஒரு வானரமானது உன்னை ஜயித்துத் தன் வசமாக்கிக்கொள்ளுமோ, அப்பொழுது லங்காநகரத்தில் ராக்ஷஸர்களுக்கு மஹத்தான பயம் ஏற்பட்டு விட்டது என்பதை நீ அறியவும். அதுவும் ஸீதாதேவியினுடைய நிமித்தமாக ராக்ஷஸ ராஜனான ராவணனுக்கு விநாசகாலமும் ஏற்பட்டுவிடும். அப்பொழுது நீயும் ராக்ஷஸ பாவத்தினின்றும் விமோசனத்தை அடையலாம்' என்று எனக்கு ப்ரம்மா அனுக்ரஹம் செய்தார். ப்ரம்மா சொன்னது பொய்யாக ஆகுமா? ராக்ஷஸர்களுக்கு விநாச காலம் வந்துவிட்டது. லங்காநகரத்திற் குள் நீ ப்ரவேசித்து உன் இஷ்டம்போல் ஸர்வ கார்யங்களையும் செய்துகொள்ளலாம்.

प्रविश्य शापोपहतां हरीश्वर
शुभां पुरीं राक्षसमुख्यपालिताम्।
दिदृक्षया त्वं जनयात्मजां सतीं
विमार्ग सर्वत्र गतो यथासुखम्॥

ப்ரவிச்ய சாபோபஹதாம் ஹரீச்வர
சுபாம் புரீம் ராக்ஷஸமுக்ய பாலிதாம் ।
தித்ருக்ஷயா தவம் ஜநகாத்மஜாம் ஸதீம்
விமார்க ஸர்வத்ர கதோ யதாஸுகம் ॥

வானர ச்ரேஷ்டனை நீ லங்காநகரத்தில் ப்ரவேசிக்கக் கொஞ்சமேனும் பீதியை அடையவேண்டாம். அதியுக்ரமான தபஸ்ஸைச் செய்து வரபலத்தால் திருப்தனான ராவணனுக்கும் நாச காலம் வந்துவிட்டது நந்திகேச்வரருடைய சாபமானது பலித்து விட்டது. ப்ரம்மாவினுடைய அனுக்ரஹத்தினால் இந்த நகரத்திற்கு ஒரு வானரபாதை ஏற்படுகிற காலம் வரையிலும் நந்திகேச்வரருடைய சாபம் பலிக்காமல் போகட்டும் என்று ப்ரமமா சொன்ன தினால் இவ்வளவு காலம் லங்காநகரம் விளங்கி வந்தது; இப் பொழுது வானரச்ரேஷ்டனை உன்னுடைய பாதை ஏற்பட ஸந்தர்ப்பம் வந்ததினால் லங்கா நகரத்தினுடைய வாழ்வு போய்

விட்டதென்றே தீர்மானிக்கவேண்டும். ஆகையினால் சாபத்தி னால் நாசத்தை அடையக்கூடிய லங்காநகரத்தில் சென்று அந்தப் புர பர்யந்தம் பயமில்லாமல் நீ ஸஞ்சாரம் செய்து பதிவ்ரதா சிரோமணியான ஸீதையை நீ தேடிப்பார்த்துவிட்டு ஸௌக்ய மாகத் திரும்பிப் போக வேண்டும் ஸீதாதேவியும் கொஞ்ச மேனும் கல்மிஷமில்லாமல் இந்த நகரத்தில் விளங்கி வருகிறாள். அதில் ஸந்தேஹமே வேண்டாம்' என்று ஆஞ்ஜநேயருக்கு லங்கிணியானவள் உபதேசம் செய்து நகரத்திற்குள் ப்ரவேசிக்கச் செய்தாள்.

ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் லங்கா நகரத்திற்கதிதேவதையான ராக்ஷஸ ஸ்த்ரீயை ஜயித்துவிட்டு லங்கா நகரத்திற்குள் ப்ரவேசம் செய்தார்.

रेण महाबाहुः प्राकारमभिपुप्लुवे ।
प्रविश्य नगरीं लङ्कां कपिराजहितङ्करः ॥
चक्रेऽथ पादं सव्यञ्च शत्रूणां स तु मूर्धनि ।
प्रविष्टः सत्वसंपन्नः निशायां मारुतात्मजः ॥

அத்வாரேண மஹாபாஹு: ப்ராகாரம் அபிபுப்லுவே ।
ப்ரவிச்ய நகரீம் லங்காம் கபிராஜஹிதங்கர: ॥
சக்ரேத பாதம் ஸவ்யஞ்ச சத்ரூணும் ஸ து மூர்தநி ।
ப்ரவிஷ்ட: ஸத்வஸம்பந்ந: நிசாயாம் மாருதாத்மஜ: ॥

சத்ருவினுடைய நகரத்திற்குள் ப்ரவேசிக்கும் முறை ப்ரஸித்த மான த்வாரம் வழியாக ப்ரவேசிக்கக்கூடாது. மறைந்து நகரத்திற்குள் ப்ரவேசிக்கவேண்டும் என்ற சாஸ்த்ரத்தைத்தான் அறிந்திருக்கும் காரணத்தினால் த்வாரம் வழியாக உள்ளே புகாமல் மறைந்துகொண்டு போனார். அதாவது ப்ராகாரத்தை எழும்பித் தாண்டி உள்ளே குதித்தார்

प्रयाणकाले च गृहप्रवेशे
विवाहकालेऽपि च दक्षिणाङ्घ्रिम् ।
कृत्वाऽग्रतः शत्रुपुरप्रवेशे
वामं निदध्यात् चरणं नपात्रः ॥

தவிரவும், அகாரத்தின் பொருளோ, மஹாவிஷ்ணு என்று சொல்லப்படும். ப்ரக்ருதத்திலோ, அந்த மஹாவிஷ்ணு ஸ்ரீராம மூர்த்தியாக விளங்கி வருகிறார். த்வாரம் என்ற பதத்தினாலோ உபாயம் என்ற அர்த்தம் வெளியாகிறது ஒருவராலும் ப்ரவேசிக்க முடியாத லங்கா நகரத்திற்குள் ஆஞ்ஜநேயஸ்வாமியானவர், எந்த உபாயத்தை வைத்துக் கொண்டு ப்ரவேசித்தார் என்ற ஸந்தேகத்திற்கு, அகாரம் தான் த்வாரம், அதாவது மஹாவிஷ்ணுவாகிய ஸ்ரீராமனைத்தான் உபாயமாக அவலம்பித்து நகரத்திற்குள் ப்ரவேசித்தார் நகரத்திற்குள் ப்ரவேசிப்பது மிகவும் ஸாத்யப்படாதது என்று ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு முதலில் தோன்றியது பிறகு நகரத்திற்கு வெளியிலேயே நின்றுகொண்டு ஸ்ரீராமதாரக மகாமந்த்ரத்தை ஜபம் செய்து ராமனை த்யானம் செய்தார். இரண்டு கண்களையும் மூடிக்கொண்டு ராமத்யானம் செய்தபடியினால் கண்களைத் திறக்கும் பொழுது நகரத்திற்கு வெளிபபாகத்தில் நின்று வந்த ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர், உள்பாகத்தில் நின்றவராகக் காணப்பட்டார். இதனால் “ஸ்ரீராம ஷடாக்ஷரீ” என்ற மஹா மந்த்ரத்தின் வைபவமும் வெளியாகிறது.

அத்துடன ஓம் என்ற ப்ரணவத்தில் அகாரமானது முதல் மாததிரையாக ஆகும். एतेनैव आयतनेने परं वा अपरं वा ब्रह्म अन्वेति (ஏதே நைவ ஆயதநேந பரம் வா அபரம் வா ப்ரஹ்ம அந்வேதி) என்ற ச்ருதிப்ரகாரம் ப்ரணவோபாஸனமானது பரப்ரும்ம ப்ராப்திக்கும், அபர ப்ரும்ம ப்ராப்திக்கும் அந்தரங்கமான ஸாதனம் என்பது வெளியாகிறது அதில் அ, உ, ம என்ற மூன்று அக்ஷரங்களையும், மூன்று மாத்திரைகளாக உபநிஷத்துக்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

मीयते साक्षात्क्रियते अनया ब्रह्मेति (மீயதே ஸாக்ஷாத்க்ரியதே அநயா ப்ரம்மேதி) என்ற ஸமாஸத்தினால் ப்ரம்ம ஸ்வரூப ஸாக்ஷாத்காரத்திற்கு ஒவ்வொரு அக்ஷரமும் ஸாதனமாக ஆகிறபடியினால் மாத்ரா என்ற சப்தத்தினால் அக்ஷரங்கள் குறிப்பிடப்படுகின்றன. அதில் அகாரத்திற்கு அதிதேவதை சப்த ப்ரம்மமாகிய ரிக் வேதமும், உகாரத்திற்கு அதிதேவதை யஜுர்வேதமும். மகாரத்திற்கதிதேவதை ஸாமவேதமாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அகாரம் என்ற முதல் மாத்திரையை உபாஸிக்கிறவர்களுக்கு

ப்ரயாணகாலே ச க்ருஹப்ரவேசே
விவாஹகாலேபி ச தக்ஷிணங்க்ரிம் ||
க்ருத்வாக்ரத: சத்ருபுரப்ரவேசே
வாமம் நிதத்யாத் சரணம் ந்ருபால: ||

ஒரு நகரத்தைவிட்டு மற்றொரு நகரத்திற்கு ப்ரயாணம் செய்யும் காலத்திலேயோ, நூதனமான க்ருஹத்தில் ப்ரவேசிக்கும் பொழுதோ, விவாஹ காலத்திலோ, வலது காலை முதலில், முன் எடுத்துவைத்துச் செல்லவேண்டும். சத்ருவினுடைய க்ருஹத்திற்குச் செல்லும் காலத்திலோ இடது காலை முன்பாக வைத்து ப்ரவேசிக்கவேண்டும் அப்படியானல் சத்ரு நாசமானது ஸ்வதஸ்ஸித்தமாக ஏற்பட்டுவிடும் என்று சொல்கிற இந்த சாஸ்த்ரத்தை அனுஸரித்து ப்ராகாரத்தைத் தாண்டி நகரத்திற்குள் குதிக்கும் பொழுது தன்னுடைய இடது காலை முன்வைத்து குதித்தார். இவைகளெல்லாம் ராவணனை ஸுலபமாக ராமன் ஜயிக்க ஹேதுவாக ஆகின்றன.

अद्वारेण महाबाहु: (அத்வாரேண மஹாபாஹ :) என்ற இடத்தில் அகாரத்தை முதல் அக்ஷரமாக உடைய "அஷ்டாக்ஷரீ'' மஹா மந்த்ரத்தினுடைய அர்த்தத்தை த்யானம் செய்த மஹிமையினுல் ஆஞ்ஜநேயஸவாமியானவர் லங்கா நகரத்திற்குள் சென்றார் என்ற அர்த்தமும் ஸூசிபிக்கப்படுகிறது லங்கா நகரமோ இதரர்களால் ப்ரவேசிக்க முடியாத துர்க்கங்களால் சூழப்பட்டிருக்கும் காரணத்தை முன்னிட்டு மந்த்ரயோக சக்தியுள்ள மஹான்களால் தான் ப்ரவேசிக்க முடியும். அதை அனுஸரித்துத்தான் ஹனுமானும் அஷ்டாக்ஷரீ மந்த்ர ப்ரபாவத்தால் ப்ரவேசித்தார். ஓம் நமோ நாராயணுய என்பதே அந்த மந்த்ரமாகும். ஓம் என்ற அக்ஷரம் அகாரம், உகாரம், மகாரம் என்ற மூன்று அவயங்களுள்ளதால், அவற்றுள் அகாரம் முதல் அவயவமான காரணத்தைக் கொண்டு அகாரமானது த்வாரத்தில், முன்பாக எந்த மந்த்ரத்தில் இறந்து வருகிறதோ அந்த மந்திரத்திற்கு (அத்வாரம்) என்று பெயர் அதனுடைய மஹிமையினுல் தான் மிகவும் துர்க்கமமான லங்காநகரத்திற்குள் ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு ப்ரவேசிக்க முடிந்தது.

ரிக்வேதமானது ப்ரத்யக்ஷமாகி, உகாரம் என்ற இரண்டாவது மாத்திரையை உபாஸிப்பாவர்களுக்கு யஜுர் வேதமானது ப்ரத்யக்ஷமாக ஆகி, மகாரம் என்ற மூன்ருவது மாத்திரையை உபாஸிக்கிறவர்களுக்கு ஸாமவேதமானது ப்ரத்யக்ஷமாக ஆகி, அவரவர்களுடைய மநோரதத்தைப் பூர்த்தி செய்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆஞ்ஜநேயஸ்வாமி, ப்ரக்ருதத்தில் லங்கா நகரத்திற்கு வந்ததோ லங்கா நகரத்தினுடைய ஸந்நிவேச விசேஷங்களைப் பார்க்க வந்தவரல்ல; ஸீதா தேவியினுடைய தர்சனத்திற்காகத் தான் வந்தார். ஸீதாதேவியோ, தாரக ப்ரும்மாகிய ஸ்ரீ ராமனுடைய தர்ம பத்னி என்பது ப்ரஸித்தமானதே அதாவது பரப்ரம்ம மஹிஷியாக தேவி ஆகிருள்.

ஸௌந்தர்யலஹரீ என்ற க்ரந்தத்திலும், தேவியை வர்ணிக்கும் ந்தர்ப்பத்தில்,

गिरामाहुर्देवीं द्रुहिणगृहिणीं आगमविदः
हरेः पत्नीं पद्मां हरसहचरीं अद्रितनयाम् ।
तुरीया कापि त्वं दुरधिगमनिस्सीममहिमा
महामाया विश्वं भ्रमयसि परब्रह्ममहिषी ॥

கிராமாஹுர்தேவீம் த்ருஹிணக்ருஹிணீம் ஆகமவித;
ஹரே: பத்நீம் பத்மாம் ஹரஸஹசரீம அத்ரிதநயாம் ।
துரீயா காபி த்தம் துரிதகமநிஸ்ஸீமமஹிமா
மஹாமாயா விச்வம் ப்ரமயஸி பரப்ரம்மமஹிஷி ।

என்று பகவத்பாதாள். தேவியை பரப்ரம்ம மஹிஷியாக வர்ணித்திருக்கிருர்கள். அது ப்ரக்ருதத்தில் ஸீதைக்கே பொருந்தினதாக ஆகும். ப்ரம்ம ப்ராப்திக்கு ஸாதனமான ஓங்காரமே, ப்ரம்மரூபிணியான பரதேவதையினுடைய ஸாக்ஷாத்காரத்திற்கு காரணமானபடியிருல் ஸீதாதேவியினுடைய தர்சனத்திற்கு ஓங்காரரோபாஸனமே முக்யமான ஸாதனமாகுமென்று ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் தீர்மானித்துத் தான் ரிக்வேதியானதிருல். ஓங்காரத்திற்குள் முதல் அக்ஷரமான அகாரமென்ற முதல் மாத்திரையை அர்த்தானுஸந்தானத்தோடு கூட ஜபம் செய்த மஹிமையிலிருந்தும் நூற்ரேரு (101) சாகைகளாகப் பிரிந்த ரிக்வேதமென்ற சப்ப்ரம்ம புருஷனே ஆஞ்ஜநேய ஸ்வாமிக்கு ப்ரத்யக்ஷமாக ஆகி, லங்கா நகரத்திற்குள் ப்ரவேசிக்கிற விஷயத்தில் உபாயபூதனுக ஆனதைக்கொண்டு ஆஞ்ஜநேயஸ்வாமி ஸுலபமாக ப்ரவேசித்து விட்டார் என்பது வெளியாகிறது.

அதைத்தான் अद्वारेण महाबाहुः प्राकारं अभिपुप्लुवे (அத்வாரேண மஹா பாஹு: ப்ராகாரம் அபிபுப்லுவே) என்ற வாக்யத்தினால் வால்மீகி மஹர்ஷியானவர் ஸூசிப்பிக்கின்றார்.

இந்த விஷயமானது மிகவும் கோப்யமானதினால் லோக ப்ரஸித்தியை எதிர்பார்க்கிறவர்கள் அறிவது மிகவும் கஷ்டம். இதுதான் வால்மீகி மஹர்ஷியினுடைய பரமதாத்பர்ய விஷயிபூதமான அர்த்தமாகும் என்பதில் கொஞ்சமேனும் ஸந்தேஹமேயில்லை. எவ்விதமானாலும் ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் லங்கா நகரத்திற்குள் ப்ரவேசம் செய்தது அத்வாரம் வழியாகத்தான். शत्रोः पुरं ग्रामं गृहं वा अद्वारेण प्रविशेत् शत्रुविनाशाय (சத்ரோ: புரம் க்ராமம் ஸம்ருதி வசனத்தால் ப்ரஸித்தமான த்வாரம் வழியாக சத்ரு க்ருஹத்திற்குள் ப்ரவேசிக்கக்கூடாது என்பதை முக்யமாக அறியவும்

லங்கா நகரத்திற்குள் இவ்விதம் அனுப்ரவேசம் செய்த ஆஞ்ஜநேயஸ்வாமி அபூர்வமான ப்ரஸாத விசேஷங்களையும், கான வித்யையில் குசலர்களின் ஸங்கீத மாதுர்யத்தையும் வேத வித்யையில் சிறந்த பாண்டித்யத்தோடு கூடிய ராக்ஷஸர்களின் வேத கோஷங்களையும், ஆங்காங்கு ராக்ஷஸர்களால் செய்யப்படும் ராக்ஷஸ ராஜனான ராவணனுடைய ஸ்துதி விசேஷங்களையும் கவனித்து மிகவும் ஸந்தோஷத்தை அடைந்தார். ராஜதானியினுடைய மத்தியில், ராவணனால் அமைக்கப்பட்டிருக்கும் ஸேனைகளின விசேஷங்களையும், அந்த ஸேனைகளுக்குள் விசித்ரமான வேஷங்களோடு கூடின படர்களையும் பார்த்து, 'மிகவும் மேலான ப்ராக்ரமத்தோடு கூடினவன் ராவணன்; அவனோடு யுத்தம் செய்து ஜயத்தை அடைவது துர்லபம்தான்' என்றும் ஆலோசித்தார். ஆகிலும், மனோ தைர்யத்தையடைந்து ராவணனுடைய அந்தப்புரத்திற்குள் ப்ரவேசம் செய்தார். அந்தப்புரத்தில் ப்ரவேசம் செய்த மாத்ரத்தில் அங்கு வெகு ப்ரகாரமான ஸ்த்ரீகளைப் பார்த்து, ராவணனுடைய மஹிமையை ச்லாஹித்தார்.

सनातने वर्त्मनि सन्निविष्टां
रामेक्षणां तां मदनाभिविष्टाम् ।
भर्तुर्मनः श्रीमदनुप्रविष्टां
स्त्रीभ्यो वराभ्यश्च सदा विशिष्टाम् ॥

उष्णार्दितां सानुसृतास्रकण्ठीं
पुरा वरार्होत्तमनिष्ककण्ठीम् ।
सुजातपक्ष्मां अभिरक्तकण्ठीं
वने प्रनृत्तामिव नीलकण्ठीम ॥
अव्यक्तरेखामिव चन्द्ररेखां
पांसुप्रदिग्धामिव हेमरेखाम ।
क्षतरूढामिव वाणरेखां
वायुप्रभिन्नामिव मेघरेखाम ।
सीतामपश्यन् मनुजेश्वरस्य
रामस्य पत्नीं वदतां वरस्य ।
बभूव दुःखाभिहताश्चिरस्य
प्लवङ्गमो मन्द इवाऽचिरस्य ॥

ஸநாதநே வர்த்மநி ஸந்நிவிஷ்டாம்
ராமேக்ஷணாம் தாம் மதநாபிவிஷ்டாம் |
பர்த்துர்மந ஸ்ரீமதநுப்ரவிஷ்டாம்
ஸ்த்ரீப்யோ வராப்யச்ச ஸதா விசிஷ்டாம் ||
உஷ்ணார்த்திதாம் ஸாநுஸ்ருதாஸ்ரகண்டீம்
புரா வரார்ஹோத்தமநிஷ்ககண்டீம் |
ஸுஜாத பக்ஷ்யாம் அபிரக்த கண்டீம்
வநே ப்ரந்ருத்தாமிவ நீலகண்டீம் ||
அவ்யக்தரேகாமிவ சந்த்ரரேகாம்
பாம்ஸுப்ரதிக்தாமிவ ஹேமரேகாம் |
க்ஷதப்ரருடாமிவ பாணரேகாம்
வாயுப்ரபிந்நாமிவ மேகரேகாம் ||
ஸீதாமபச்யந் மநுஜேச்வரஸ்ய
ராமஸ்ய பத்நீம் வததாம் வரஸ்ய |
பபூவ துக்காபிஹதச்சிரஸ்ய
ப்லவங்கமோ மந்த இவாசிரஸ்ய ||

ஆஞ்ஜநேயஸ்வாமி ராவணனுடைய அந்தப்புரத்தில் உள்ள ஸ்த்ரீகளைக் கவனித்துப் பார்த்து அவர்களுடைய மத்தியில் ஸீதை இருப்பாளோ என்று விசாரத்துடன் தேடினர். ஆனல் அங்கு அவருடைய த்ருஷ்டிக்கு ஸீதை அகப்படாததினல் மிகவும் கஷ்டத்தை அடைந்தார். ஸீதாதேவியோ, ஆபத்காலத்திலும் ஸநாதனமான

மார்க்கத்திலேயே ஈடுபட்டவள். ராமனைப் பார்ப்பது என்ற லக்ஷ்யத்தைத் தவிர வேறு மற்றொரு ஸங்கல்பமற்றவள். லோகத்திலுள்ள உத்தம ஸ்த்ரீகளில் முதன்மையாக ஸீதாதேவியைச் சொல்லவேண்டும். இவ்விதமான மஹிமை உள்ள ஜகதீச்வரியைப் பார்க்க வந்தவர் ஆஞ்ஜநேயஸ்வாமி; அவளைப் பார்க்காமலிருக்கும்பொழுது அவருடைய மனக் கஷ்டத்தை வர்ணித்து முடியுமா? அங்குள்ள ஸ்த்ரீகளைப் பார்த்து ஆஞ்ஜநேய ஸ்வாமியினுடைய புத்தியில் ஒருவிதமான சித்தம் ஏற்பட்டது. அதாவது,

बभूव बुद्धिस्तु हरीश्वरस्य
यदीदृशी राघवधर्मपत्नी ।
इमा यथा राक्षसराजभार्याः
सुजातमस्येति हि साधुबुद्धेः ॥

பபூவ புத்திஸ்து ஹரீச்வரஸ்ய
யதீத்ருசீ ராகவ தர்மபத்னீ ।
இமா யதா ராக்ஷஸ ராஜபார்யா:
ஸுஜாதமஸ்யேதி ஹி ஸாதுபுத்தே: ॥

ராமனுடைய தர்மபத்னியான ஸீதாதேவி ராமனை விவாஹம் செய்துகொள்வதற்கு முன் ராவணனுடைய பார்யையாக ஏற்பட்டிருந்தால், ராவணன் ஸுக்ருதம் செய்தவன் என்று சொல்லலாம். இந்த புத்தி வாநர ஜாதியினுடைய ஸ்வபாவத்தினால்தான் ஏற்பட்டது என்றுதான் சொல்லவேண்டும். ஆகையினால் இந்த அர்த்தமானது ஸரியாகத் தோன்றினாலும் அதை க்ரஹிக்கக்கூடாது ஆகையால் மேற்சொன்ன ச்லோகத்தின் ஸாதுவான அர்த்தத்தை அறியவும்.

'இந்த ராக்ஷஸ ராஜபார்யைகள் தன் பர்த்தாவான ராவணனுடைய ஸமீபத்தில் இருந்துகொண்டு ஸகல போகங்களையும் அனுபவித்துக்கொண்டு எப்படி ஸௌக்யமாக இருக்கிறார்களோ, அதுபோல ராமருடைய தர்மபத்னியான ஸீதாதேவியும், ராமனோடு கூட இருந்துகொண்டு ஸகல போகோபகரணங்களோடு கூடினவளாக இருக்கும்படி நேர்ந்தால்தான் இந்த ராவணனுடைய ஜன்மா நல்ல ஜன்மாவாகும் என்ற பொருளை அறியவும்.

அன்னியனுக்கு க்ஷேமத்தைக் கருதுகிற ஸ்வபாவமுள்ள ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு மேற்சொன்ன ப்ரகாரம்தான் புத்தி ஏற்பட்டிருக்கும். அதாவது 'இந்த ராவணன், ராகவனுடைய தர்ம பத்னியை அபஹாரம் செய்தே இருக்கக்கூடாது ஏதோ கால வசத்தினுல் அவ்விதம் ப்ரவ்ருத்தித்தாலும் இனியாவது நல்ல புத்தி ஏற்பட்டு, ராமனிடம் ஸீதையை ஸமர்ப்பணம் செய்தானேயானுல் ஜன்மா ஸபலமாக ஆகும் அன்னியில் அவனுடைய ஜன்மா வீண்தான்' என்ற புத்தியானது மஹா புத்திமானுன ஆஞ்ஜநேய ஸ்வாமிக்கு உதித்தது.

அத்துடன், 'ராமனுடைய தர்மபத்னியாகிய ஸீதாதேவியை ராவணன் அபஹரித்து வந்ததுபோல் இந்த ராக்ஷஸ ராஜனுடைய பார்யைகளையும் வாநர ராஜனுன ஸுக்ரீவன் பலாத்காரமாக அபஹரித்துக்கொண்டு போனுல் வாநர ராஜனுன ஸுக்ரீவனுடைய ஜன்மமானது ஸபலமாகும்' என்றும் அழகான புத்தியோடு கூடிய ஆஞ்ஜநேயருக்கு மனதில் தோன்றியது.

தவிரவும், 'அந்த ஸ்த்ரீகளை அபஹரித்தது போலவே, ஸீதாதேவியையும் அபஹரிக்கலாம் என்று எண்ணி ராவணன் ஸீதையை அபஹரித்தானேயானுல் அவனுக்கு ஜன்ம ஸாபல்யம் ஏற்படுமா? அவன் அழிந்துதான் போவான்' என்று வாநர ச்ரேஷ்டனுன ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு புத்தி ஏற்பட்டது பகவானுன ஸ்ரீ ராமனே

मम दयिततरा हृता वनान्तात
रजनिचरेण विमथ्य येन सा ॥
कथय मम रिपुं त्वमद्य वै
प्लवगपते यमसन्निधिं नयामि ॥

மம தயிததரா ஹ்ருதா வனுந்தாத்
ரஜநிசரணே விமத்ய யேந ஸா ।
கதய மம ரிபும் த்வமத்ய வை
ப்லவகபதே யமஸந்நிதிம் நயாமி ॥

"ஹே ஸுக்ரீவா! என்னுடைய ப்ரியதமையான ஸீதாதேவியை லங்கேச்வரனுன ராவணன் பலாத்காரமாக அபஹரித்துக்கொண்டு போய்விட்டான், அவனுடைய இருப்பிடத்தை நீ

எனக்குத் தெரிவித்தால் மாத்திரம் போதும்; உடன் அவனை நான் யமலோகத்திற்கனுப்பிவிட்டு என் ப்ரியதமையான ஸீதையை அழைத்து ஸமர்த்தனாக ஆகிவிடுவேன். அந்த விஷயத்தில் நீ எனக்கு ஸஹாயம் செய்யவேண்டும்" என்று ஸக்யம் செய்து கொண்ட காலத்தில் நமது ராஜனான ஸுக்ரீவனிடம் பரம தாபத்துடன் தெரிவித்துக்கொண்ட ராமன், இந்த ராவணனைப் பார்த்தால் விட்டு விடுவாரா? அவச்யம் வதம் செய்தே விடுவார். இந்த மூடனான ராவணனே மற்ற ஸ்த்ரீகளைப்போல் ஸீதாதேவியையும் நினைத்துவிட்டான்; இது மிகவும் பிசகானது. அதனால் இவன் ஒரு விதத்திலும் ச்ரேயஸ்ஸை அடையப்போவதில்லை; மாண்டு தான் போகப்போகிறான்' என்று ஆஞ்ஜநேயர் தீர்மானித்தார்.

தவிரவும் 'இந்த அந்தப்புரத்தில் இந்த ராக்ஷஸ ராஜனுடைய மனைவிகளை நான் எப்படிக் கண்டேனோ அதுபோல் ராகவனுடைய தர்மபத்னியான ஸீதாதேவியையும் நான் கண்டுவிட்டேனேயானால், என்னுடைய ஜன்மம் ஸபலமாகும்' என்று கபிராஜனான ஆஞ்ஜநேய ஸ்வாமிக்கு புத்தி ஏற்பட்டது.

यस्तु मासान्निवृत्तोऽग्रे दृष्टा सीतेति वक्ष्यति ।
मत्तुल्यविभवो भोगैः सुखं स विहरिष्यति ॥
ततः प्रियतरो नास्ति मम प्राणाद्विशेषतः ।

யஸ்து மாஸாந்நிவ்ருத்தோக்ரே த்ருஷ்டா ஸீதேதி வக்ஷ்யதி ।
மத்துல்யவிபவோ போகை: ஸுகம் ஸ விஹரிஷ்யதி ॥
தத: ப்ரியதரோ நாஸ்தி மம ப்ராணாத்விசேஷத: ।

ஸுக்ரீவன் 'ஒரு மாதத்திற்குள் ஸீதையைக் கண்டேனென்று என் ஸமீபத்தில் யார் வந்து சொல்லுகிறார்களோ அந்த மஹானுபாவன், போக ஸம்பத்தியில் எனக்கு ஸமானமான வைபவமுள்ளவனாக ஆகிறான். அவனிஷ்டம் போல் கிஷ்கிந்தா ராஜ்யத்தில் அதிகாரத்தை அவன் செலுத்தலாம். என்னுடைய ப்ராணனைக் காட்டிலும் அவன் எனக்கு மேலான ப்ரிய புருஷனாகிறான்' என்று சொல்லி யிருக்கிறபடியினால் நான் ஸீதையைக் கண்டு ஸுக்ரீவனிடம் சென்று 'கண்டேன் ஸீதையை' என்று சொன்னால், ராஜனான ஸுக்ரீவனுக்கு ப்ரியத்தைச் செய்த என்னுடைய ஜன்மமானது ஸபலமாகும்.

மேலும், 'இந்த ராக்ஷஸ ராஜனுடைய பத்னிகள் என்னால் காணப்பட்டதுபோல், ராகவனுடைய தர்மபத்னியும் என்னால் கண்டுபிடிக்கப்பட்டால், ஸீதையைக் காணாததினால் ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் பயந்துகொண்டு ப்ராயோபவேசனம் செய்து ப்ராணனை விடத்தயாராயிருக்கும் அங்கதன் முதலிய வானர ஸமூகத்திற்கு ஜன்ம ஸாபல்யம் ஏற்படும். அதாவது அவர்கள் மரணத்திலுள்ள ஸங்கல்பத்தை விட்டுவிட்டு ஜீவித்து விடுவார்கள் என்று ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு யோஜனை தோன்றியது.

अप्रवृत्तौ च सीतायाः पापमेव करिष्यति ।
तस्मात्क्षममिहाद्यैव गन्तुं प्रायोपवेशनम् ॥
त्यक्त्वा पुत्रांश्च दारांश्च धनानि च गृहाणि च ।

அப்ரவ்ருத்தௌ ச ஸீதாயா: பாபமேவ கரிஷ்யதி ।
தஸ்மாத்க்ஷமமிஹாத்யைவ கந்தும் ப்ராயோபவேசநம் ॥
த்யக்த்வா புத்ராம்ச தராம்ச தநாநி ச க்ருஹாணி ச ।

'ஸீதையை நாம் காணாமல் ஸுக்ரீவனுடைய ஸமீபம் சென்றால், அவன் நம்மை அவச்யம் கொன்றுவிடுவான்; ஆகையால் ஸுக்ரீவனிடம் திரும்பிப்போவதைக் காட்டிலும் பார்யை, தனம், க்ரஹம் முதலியவைகளை விட்டுவிட்டு இந்த தேசத்திலேயே ப்ராயோபவேசனம் செய்வதுதான் நமக்கு அழகு' என்று கஷ்டத்துடன் சொல்லிக் கொண்டிருக்கும் அங்கதன் முதலானவர்களிடம் நான் 'ஸீதையைக் கண்டேன்' என்ற வார்த்தையைப் போய், சொன்னால், போனதுபோல் உள்ள அவர்களுடைய ஜீவன்கள் மறுபடி திரும்பி வந்து பிழைப்பார்களல்லவா! ஆகையினால் இந்த ராக்ஷஸ ஸ்த்ரீகளைப் பார்ப்பதுபோல் ஸீதையையும் பார்க்கும் படியான பாக்யம் நமக்கு நேரிடுமோ என்ற துக்கத்துடன் ஆஞ்ஜநேய ஸ்வாமி தவித்துவந்தார் என்ற தாத்பர்யமும் வெளியாகிறது.

அத்துடன், 'நானோ ராமனுக்ரஹத்தைப் பெற்றுக் கொண்டு புறப்பட்டு வந்திருக்கிறேன். ஆகையினால் கொஞ்சம் முன்பின் நாள் கூடுதல் ஆனாலும், ஸீதையை எப்படியும் கண்டுபிடித்து விடுவேன். ஆனால் இந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் உயிரோடு இருப்பது போல் ஸீதையும் உயிரை வைத்துக் கொண்டிருக்க வேண்டும்

அப்படி ஜீவித்துக் கொண்டிருக்கிறாளோ இல்லையோ, உயிரோடு இருந்தாளேயானால் அவளைப் பார்த்து விட்டுத்தான் நான் திரும்பிப் போகப் போகிறேன். அப்பொழுது ஸீதையினுடைய ஜீவிதத்தில் நிச்சயம் ஏற்படுமாதலால் ராமனுடைய ஜன்மமும் ஸபலமான ஜன்மமாகிவிடும்' என்று ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு புத்தி ஏற்பட்டது.

ஸ்ரீராமனும் ஸீதையினுடைய ஜீவித தசையைத்தான் எதிர் பார்த்துக்கொண்டு இருக்கிறார்.

श्रूयतां सौम्य वैदेही यदि जीवति वा न वा ।
न ह्यहं जीवितुं शक्तः तामृते जनकात्मजाम् ।

ஶ்ரூயதாம் ஸௌம்ய வைதேஹீ யதி ஜீவதி வா ந வா ।
ந ஹ்யஹம் ஜீவிதும் சக்த: தாம்ருதே ஜநகாத்மஜாம் ||

ஸீதையினுடைய ஜீவிதத்தை ராமன் எதிர்பார்த்து இருக்கிற படியினால் ஸீதை ஜீவிக்கிறாள் என்ற நிச்சயம் ஏற்படுமேயானால் ராமனுடைய ஜன்மம் ஸபலமாகும் என்பதில் ஆக்ஷேபணையே இல்லை என்று ஆஞ்ஜநேயஸ்வாமி எண்ணினார்.

மேலும், "ஹே ராக்ஷஸ ராஜனே! இந்த ஸ்த்ரீகள் எப்படி உன்னுடைய த்ருஷ்டிக்கு விஷயமாக இருந்து கொண்டு ஸௌபாக்யத்தை அனுபவிக்கிறார்களோ, அதுபோல் ஸ்ரீராமனுடைய தர்மபத்னியும் ராமருடைய த்ருஷ்டிக்கு விஷயமாக இருந்து கொண்டு ஸௌபாக்யத்தை அனுபவித்து வருவாளேயானால் உனக்கு ஸர்வ ஸம்பத்தும், ஸகலவிதமான ஸம்ருத்தியும் புத்ர பௌத்ராதிகளுடைய அபிவ்ருத்தியும் ஏற்பட்டு நீடித்தகாலம் நீ பரம க்ஷேமமாக இருக்கலாம், உன் ஜன்மமும் ஸபலமாகும்" என்று நான் ராவணனை எழுப்பி ஏன் உபதேசிக்கக் கூடாது? என்றும் ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு புத்தியானது ஏற்பட்டது.

तद्भवान दृष्टधर्मार्थः तपःकृत परिग्रहः ।
परदारान्महाप्राज्ञ नोपरोद्धुं त्वमर्हसि ॥

தத்பவாந் த்ருஷ்டதர்மார்த்த: தப:க்ருதபரிக்ரஹ: ।
பரதாராந்மஹாப்ராஜ்ஞ நோபரோத்தும் த்வமர்ஹஸி ||

என்று ஆஞ்ஜநேயர் ராவணனுக்கு ஹிதோபதேசம் செய்யப் போகிறார். "நீயோ மஹாதபஸ்வீ: அக்னி ஹோத்ரம் முதலான

ஸகல புண்ய கர்மாக்களையும் செய்து வருகிறாய் இவ்விதம் ஸதா சார ஸம்பத்தியுள்ள மஹா புருஷனை உனக்கு பாதார் அவமரீச மானது மிகவும் தீங்கையே உண்டு பண்ணக்கூடியது. அந்த தோஷம் உனக்கேற்படக் கூடாது" என்றே மேற்சொன்ன உப தேச ச்லோகத்தின் தாத்பர்யமாகும்.

தவிரவும், इमाः (இமா:) = இந்த राक्षस राज भार्याः (ராக்ஷஸ ராஜ பார்யா:) = ராவணனுடைய ஸ்த்ரீகள் यथा (யதா) = எப்படி यादृक् (யாத்ருக்) = எவ்வித்மான रूपवत्यः (ரூபவத்ய) = அழகோடு கூடினவர்களோ राघव धर्मपत्नी (ராகவ தர்மபத்நீ) = ராமனுடைய தர்மபத்னியான ஸீதையானவள் ईदृशी किम् (ஈத்ருசீ கிம்) = ராக்ஷஸ ராஜனுடைய பார்யைகளுடைய ரூபம்போன்ற ரூபத்தோடு கூடினவளாக இருப்பாளா? (இல்லவே இல்லை)

'ராக்ஷஸ ராஜனுடைய பார்யைகளைக் குரூபிணிகளென்றே சொல்லவேண்டும். ஸீதா ப்ராட்டியோ த்ரிலோகஸுந்தரி ஸீதாதேவி அயோநிஜையானதால் ஆதிசேஷனாலும் இவ்வளவுதான் என்று வர்ணிக்கமுடியாத அபரிச்சின்னமான ஸௌந்தர்ய ஸௌ குமார்ய லாவண்யத்தோடு கூடினவள். ஜகதீச்வரியை இந்த ராக்ஷஸ ஸ்த்ரீகளுடைய மத்தியில் வந்து நாம் தேட வந்தோமே! இது நம்முடைய புத்திக் குறைவைத்தான் காட்டுகிறது' என்று ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு த்ருடமான நிச்சயம் ஏற்பட்டது. பரமா சார்யாளான பகவத்பாதாளும் ஈச்வரியினுடைய ஸௌந்தர்யாதி சயத்தை ப்ரும்மாதி தேவர்களும் வர்ணிக்க சக்தியற்றவர்கள் என்று.

त्वदीयं सौन्दर्यं तुहिनगिरिकन्ये तुलयितुं
कवीन्द्राः कल्पन्ते कथमपि विरिञ्चिप्रभृतयः ।
यदालोकौत्सुक्यादमरललना यान्ति मनसा
तपोभिर्दुष्प्रापामपि गिरिशसायुज्यपदवीम् ॥

த்வதீயம் ஸௌந்தர்யம் துஹிநகிரிகந்யே துலயிதும்
கவீந்த்ரா: கல்பந்தே கதமபி விரிஞ்சி ப்ரப்ருதய: ।
யதாலோகௌத்ஸுக்யாத் அமரலலநா யாந்தி மநஸா
தபோபி: துஷ்ப்ராபாம் அபி கிரிசஸாயுஜ்யபதவீம் ॥

என்ற ஸௌந்தர்யலஹரி ச்லோகம் மூலம் வர்ணித்திருப்பதே ப்ர மாணமாகும். ப்ரதேவதை மாத்ருகா மந்த்ரஸ்வரூபியானதால் அவ ளுடைய திருமேனியை வர்ணித்து ஒரு காவ்யமாகச் செய்ய ப்ரம் மாதி தேவர்கள் யத்னம் செய்தும் அசக்தர்களாகிவிட்டார்கள். பட்டாரிகையானதினுல் தேவியினுடைய ஸமீபமும் ப்ரும்மாதி தேவர்களுக்குச் சென்று உபதேசம் பெற்றுக்கொள்ள அதிகார மில்லே! வெகுதூரத்திற்கப்பால் நின்று ப்ரார்த்தித்துக் கொண் டிருக்கிருர்கள். ப்ரும்மாதி தேவர்களுடைய தர்மபத்தினிகளான ஸரஸ்வதி முதலியவர்கள் மஹாபட்டாரிகையான பராசக்தியி னுடைய ஸமீபம் சென்று அவளுடைய ஸௌந்தர்யத்தை அறிந்து ப்ரும்மா முதலான தங்கள் பர்த்தாக்களிடம் சொல்லி அவர்களின் மனோரதத்தைப் பூர்த்தி செய்யலாம் என்ற எண்ணத்துடன் தேவியின் ஸமீபம் சென்ருர்கள். அவர்களுக்கும் தேவியினுடைய ஸௌந்தர்யம் நன்ருக அறியமுடியாததாகவே ஆகிவிட்டது. பிறகு ஸரஸ்வதி முதலிய தேவஸ்த்ரீகளோ. காமேச்வரன் என்று சொல்லப்படும் தாரகப்ரம்மத்திற்கு அந்த தேவியினுடைய ஸௌந் தர்யாதிசயம் புலப்படக் கூடுமாதலால் அவர்களெல்லோரும் அத்யுக்ரமான தபஸ்ஸைச் செய்து காமேச்வரன் என்ற தாரக ப்ரம்மத்தினுடைய வாயுஜ்யத்தை மனதினுல் அடைந்தார்கள் என்றே மேற்சொன்ன ஸௌந்தர்யலஹரி ச்லோகத்தின் தாத்பர்ய மாகும்

எவ்விதம் த்ரிலோக ஸுந்தரியான நமது மாதாவான ஸீதை இந்த ராக்ஷஸ ராஜனுடைய மனைவிகளில் ஒருவளாகவா இருக்கப் போகிருள்? இல்லவே இல்லே என்று தீர்மானித்தார். மறுபடியும் ஸீதையைப் பார்க்காமல் நாம் எப்படி ராகவனுடைய ஸந்நிதிக்குப் போவது என்ற கவலேயையும், பீதியையுமடைந்து, மறுபடியும் தேடுவோம் என்ற தைர்யத்துடன் ஆங்காங்கு தேடிக்கொண்டு வரும்பொழுது. அந்தப்புரத்திலேயே நவரத்ன கசிதமான ஒரு கட்டிலேயும், அபூர்வமான சபரி மானின் தோல்களால் அலங் கரிக்கப்பட்ட படுக்கைகளேயும் பார்த்து. ஆஞ்ஜனேய ஸ்வாமி ஆச்சர்யத்துடன் மெள்ள மெள்ள ஸமீபம் செல்ல அந்த படுக்கை யில் நித்ரை செய்துகொண்டிருக்கும் ராக்ஷஸ ராஜனை ராவணனை ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் பார்த்தார். அவனுடைய போக

போக்ய உபகரணங்களையும், சயனத்தின் பெருமையையும். அவனுடைய ஸமீபத்தில் நித்ரை செய்துகொண்டிருக்கும் சில உயர்ந்த ஸ்த்ரீ ரத்னங்களையும் பார்த்து மிகுந்த ஆச்சர்யத்தை அடைந்தார். அந்த ஸ்த்ரீகளுடைய ஸமீபத்தில் ஒரு அழகான தங்கத்தினால் இழைக்கப்பட்ட அங்கண விசேஷத்தையும் பார்த்தார். அங்கு ஒரு அபூர்வமான பர்யங்கம் விசேஷமாக அலங்கரிக்கப்பட்டு காணப்பட்டது. அதில் ராவணனுடைய பட்ட மஹிஷியான மண்டோதரி சயனம் செய்து கொண்டிருந்தாள். அவளைப் பார்த்தநும் ஆஞ்ஜனேய ஸ்வாமிக்கு ஒரு ஸமயம் இவள்தான் ஸீதையோ'' என்ற ஸந்தேகம் ஏற்பட்டது.

ஸ்ரீ ராமன், ஆஞ்ஜனேய ஸ்வாமியை அனுப்பும் காலத்தில் ஸீதையினுடைய ஸௌந்தர்யத்தையும், ஆபரண விசேஷங்களையும் எப்படி வர்ணித்தாரோ, அவைகளெல்லாம் இந்த மண்டோதரியினிடத்தில் காணப்பட்டதால், அந்த அடையாளத்தைக் கொண்டு 'இவள்தான் ஸீதையோ' என்று ஊஹித்தார். பிறகு பரம ஸந்தோஷத்தையும் அடைந்தார்.

आस्फोटयामास चुचुम्ब पुच्छं
ननन्द चिक्रीड जगौ जगाम
स्तम्भानरोहन्निपपात भूमौ
निदर्शयन्स्वां प्रकृतिं कपीनाम ॥

ஆஸ்போடயாமாஸ சுசும்ப புச்சம்
நநந்த சிக்ரீட ஜகௌ ஜகாம |
ஸ்தம்பாநரோஹந் நிபபாத பூமௌ
நிதர்சயந் ஸ்வாம் ப்ரக்ருதிம் கபீநாம் ||

ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய ஆனந்த அதிசயத்தை. செய்கையைக்கொண்டு மஹர்ஷியானவர் ப்ரகாசப் படுத்துகிறார். 'ஹனுமான் தன் வாலை முத்தமிட்டுக் கொண்டார். இது வானர ஜாதியின் தர்மமாகும். ஸ்தம்பத்திலிருந்து கீழே இறங்கினார் இறங்கி நர்த்தனம் செய்தார். தன்னுடைய ஜாதி ஸ்வபாவத்தை ப்ரகாசப்படுத்தினார் தூணில் ஏறி ஏறிக் கீழே குதித்தார்' என்று மேல்கண்ட ச்லோகத்தின் வாச்யார்த்தம் வெளியாகிறது

இதனுடைய உண்மையான பொருளை அடியிற் கண்டவாறு அறியவும்.

இந்த ராமாயணத்தை காந்தா ஸம்ஹிதையென்றும், ஸுஹ்ருத் ஸம்மிதை யென்றும் ஆங்காங்கு வர்ணிக்கப்பட்டிருக்கிறது' அனேக அபூர்வமான அர்த்தத்தை ப்ரதானமாக வெளிப்படுத்தும் ஸம்மிதையே ஸுஹ்ருத் ஸம்மிதையாகும். வ்யங்க்யமான அர்த்தத்தை ப்ரதானமாக வெளிப்படுத்தும் ஸம்மிதையே காந்தா ஸம்மிதையாகும் அதை அனுஸரித்து மேற்சொன்ன ச்லோகத்திற்கு' வ்யங்க்ய மர்யாதையை அனுஸரித்து ஏற்படும் தாத்பர்யமோ ஸ்ரீராமனே ப்ரப்ரம்மம் என்று ப்ரகாசப்படுத்துவதேயாகும். சாஸ்த்ர மானது ப்ரம்ம தத்வத்தை மிகவும் லகுவான வழியில் போதிக் கின்றது

லோகத்தில் ப்ராணிகள் விவேகிகளாக இருந்தாலும்கூட அன்னரஸமான ஸ்தூல சரீரத்தையே ஆத்ம ஸ்வரூபமாக அனுபவித்து வருகிறார்கள். ஸ்தூல சரீரமோ இரண்டு பார்ச்வத்தி லுள்ள கைகளோடும், சிரஸ்ஸோடும், கீழ் பாகத்தில் உள்ள புச்சத் தோடும், பக்ஷிகளின் சரீரத்தைப்போல் விளங்கி வருகிறது. அதையே ஆத்மாவாக அனுபவித்து வருகிற அவித்வான்களுடைய விஷயத்தில் வேதமும் அனுமோதிப்பதுபோல் அன்ன மயமான தேகத்தையே ப்ரம்மமாக உபதேசிக்கின்றது அன்ன மயமான தேகத்தில் இரண்டு பார்ச்வங்களிலும் காணப்படுகிற கைகளை அந்த ப்ரம்மத்திற்கு இரண்டு பக்ஷங்களாகவும். ப்ரஸித்தமான சிரஸ்ஸையே தலையாகவும், ப்ரஸித்தமாக கீழ் பாகத்தில் இருக்கும் ஆண் குறியை புச்சமாகவும் வர்ணித்து அதை ப்ரம்மம்போல் மூடர்களுக்கு ச்ருதியும் போதித்து வருகிறது. அவரவர்களுடைய புத்திக்கே கொஞ்ச காலம் கழித்து 'ஸ்தூல தேகம் எப்படி ஆத்மா வாக ஆக முடியும்?' என்று தோன்றுகிறது. இந்த தேகமோ உண்டாவதற்கு முன்பும் மரணத்திற்கு பின்பும் இல்லாமலிருக்கும் வஸ்துவாகிறது. ஸ்திதி காலத்தில் மாத்திரம் இருப்பதுபோல் தோன்றுகிறது உத்பத்தியோடும், விநாசத்தோடும் கூடியிருக்கும் காரணத்தினால் இதை கார்ய ஜாதியில்தான் சேர்க்கவேண்டும். ஆகை யினால் देहः आत्मा न भवति। कार्यत्वात् घटवत्। (தேஹः ஆத்மா ந பவதி। கார்யத்வாத் கடவத்) என்ற அனுமான ப்ரமாணத்தினால்

தேகத்தில் ஆத்மத்வ புத்தியை த்யாகம் செய்துவிட்டு ஆத்ம ஸ்வரூபத்தைத் தேஹத்திற்கு வேருகத் தெரிந்துகொள்ள விருப்ப முள்ள ஜிக்ஞாஸுக்களை முன்னிட்டு ச்ருதியானது கருணையுடன் ப்ராணனை ஆத்மாவாகப் போதித்தது.

அதாவது ப்ராண, அபான, வ்யான, உதான, ஸமானன் என்ற ஐந்து விதமான பிரிவுகள் உள்ள முக்ய ப்ராணன், வாக், பாணி, பாத, பாயு, உபஸ்தம் என்ற ஐந்து விதமான கர்மேந்த்ரியங் களோடு சேர்ந்து கொண்டிருக்கும் ஸமயத்தில் ப்ராணமய கோசம் என்று சொல்லப்படும் ஸ்தூல தேகம் ஆத்மாவாகப் போனலும், ப்ராணமய கோசமானது லிங்க சரீரத்தில் சேர்ந்த காரணத்தைக் கொண்டு ஸ்திதி காலத்தில் உத்பத்தி விநாசம் அவைகளுக்கு இல்லை என்பது சாஸ்த்ர ப்ரஸித்தமானது. அக்காரணத்தினுல் அந்த ப்ராணமய கோசத்தையே ஏன் ஆத்மாவாக ஒப்புக்கொள்ளக் கூடாது? ப்ராணமயகோசமும், பக்ஷம், புச்சம், சிரஸ் இவைகளோடு கூடியதுதான் ப்ராணமய கோசத்திற்கு, ப்ராணனையே சிரஸ் ஸாகவும், வ்யானனை வலது பக்ஷமாகவும், அபானனை இடது பக்ஷமாகவும், ஆகாசத்தை உடலாகவும், பூலோகத்தைப் புச்ச மாகவும் வர்ணித்து ப்ராணமய கோசத்தையே தேக விலக்ஷண மாக இருக்கும் காரணத்தினுல் ஆத்மா என்று மந்த புத்தியோடு கூடியவனுக்கு ச்ருதியானது போதித்தது. விவேகமுள்ள புருஷர் களோ, கொஞ்ச நாட்கள் ப்ராணனையே ஆத்மாவாகப் பாவித்துக் கொண்டுவந்த ஸம்ஸ்கார பலத்தினுல், அதிலும் அவர்களுக்கு அருசி யேற்பட்டு விட்டது தேஹத்தைப்போல் இந்த ப்ராணமய கோசமானது அடிக்கடி பிறப்பது, மரிப்பது என்ற தோஷத்திற்கு பாத்திரமாகாத போனலுங்கூட ஜடம்தானே; எப்படி ஆத்மா வாக ஆகமுடியும்? ஆத்மாவுக்கு சைதன்யமல்லவா ஸ்வரூப மாகும் ஆகையினுல், प्राणः आत्मा न भवति, जडत्वात् घटवत् (ப்ராண: ஆத்மா ந பவதி ஜடத்வாத் கடவத்) என்ற அனுமானத் தினுல் ப்ராணமய கோசத்திலும் ஆத்மத்வ புத்தியை விட்டுவிட்டு ப்ராணனுக்கும் விலக்ஷணமாக ஆத்ம ஸ்வரூபம் இருக்க வேண்டு மென்ற எண்ணத்துடன் இருக்கும் ஜிக்ஞாஸுக்களை முன்னிட்டு ச்ருதியானது மனேமய கோசத்தை ஆத்மா என்று போதித்தது.

மனேமய கோசத்தையும் சிரஸ், புச்சம் முதலிய அவயவங் களோடு சேர்த்து அலங்கரித்து அதை ஆத்மா என்று மூடர்கள் நம்பும்படியாகவே ச்ருதியானது போதித்தது

யஜுர் வேதத்தை சிரஸ்ஸாகவும், ரிக்வேதத்தை வலது பக்ஷமாகவும், ஸாம வேதத்தை இடது பக்ஷமாகவும் உபதேச வாக்யத்தை உடலாகவும், அதர்வண வேதத்தைப் புச்சமாகவும் வைத்து மூடர்கள் விஷயத்தில் ச்ருதியும் ஆத்மாவைப்போல நடித்துக் காட்டிற்று சக்ஷுரிந்த்ரியம், க்ராணேந்த்ரியம், ச்ரோத்ரேந்த்ரியம், ரஸனேந்த்ரியம், த்வகிந்த்ரியம் என்ற ஐந்து ஞானேந்த்ரியங்களோடு கூடின ஸங்கல்ப விகல்பாதகமாகவும், வாக் என்ற சப்தத்தினால் சொல்லப்பட்ட வேதத்தை அத்யயனம் செய்த காரணத்தினால் ஸம்ஸ்க்ருதமாயும் உள்ள மனதையே மனோமய கோசமென்று அறியவும். மனோமய கோசமானது ஸ்தூல தேகத்தைக் காட்டிலும், ப்ராணமய கோசத்தைக் காட்டிலும், சித்ரூபமான ஆத்ம தத்வத்திற்கு மிகவும் ஸன்னிஹிதமாக இருக்கும் காரணத்தைக்கொண்டு, ஆத்ம ஸ்வரூப பூதமான சைதன்யம் மனதிலும் ப்ரதிபிம்பித்து சேதனம்போல் தோன்றுகிறபடியால், அது ஜடம்தான் என்று தீர்மானிப்பது கஷ்டமென்ற காரணத்தைக்கொண்டு, மனதை ஆத்மா இல்லையென்று சொல்ல முடியாது ஆகையினால் மனதே ஆத்மாவாக ஆகலாம் என்று நினைத்து வெகு காலமாக மனதையே ஆத்ம ஸ்வரூபமென்று உபாஸித்து வந்தார்கள். பழகப் பழக மனதுதான் எப்படி ஆத்மாவாக முடியும்? ஒரு க்ஷணத்தில் இருப்பதுபோல் மற்றொரு க்ஷணத்தில் இருப்பதில்லை; இது அந்தந்த ப்ராணிகளுடைய அனுபவத்தில் ப்ரஸித்தமானது பாலானது தயிராகப் பரிணமிப்பது போல், மனதும் ஒரு ஸமயத்தில் காமமென்ற ஆசையாகவும், மற்றொரு ஸமயத்தில் க்ரோதமென்ற த்வேஷமாகவும் பரிணமிக்கின்றது ஆகையால் மனது விகாரியாக ஆகிவிடுகிறது, ஆத்ம தத்வமென்ற ப்ரம்மமோ அவிகாரியான வஸ்து; விகாரியான மனதை அவிகாரியான ப்ரம்மம் என்று எப்படித்தான் சொல்ல முடியும்? ஆகையினால் மனதும் ஆத்மாவாக ஆகமுடியாததுதான். मनोमयः आत्मा न भवति, विकारित्वात् देहवत्। (மனோமய: ஆத்மா ந பவதி விகாரித்வாத் தேஹவத்) என்ற அனுமான ப்ரமாணத்தினால் மனோமய கோசத்திலும் ஆத்மத்வ புத்தியை பரித்யாகம் செய்துவிட்டு மனோமய கோசத்திற்கும் விலக்ஷணமாக ஆத்ம ஸ்வரூபம் இருக்கவேண்டும். அதை நாம் எப்படி அறிய முடியும் என்று கவலைப்படும் ஸூக்ஷ்ம புத்தியை

உடையவர்கள் விஷயத்தில் ச்ருதியானது மிகுந்த கருணையுடன் ப்ராணிகளைப் பார்த்து "நீங்கள் நினைப்பது ந்யாயந்தான். கார்ய மானதினால் தேஹமும் ஆத்மா இல்லை; ஜடமானதினால் ப்ராண னும் ஆத்மா இல்லை; விகாரியானதால் மனதும் ஆத்மா இல்லை; நிச்சய ஸ்வரூபமான விக்ஞானம் என்ற புத்தி தத்வத்தை ஆத்மாவாகத் தெரிந்து கொள்வதில் முன் சொன்ன ஒருவிதமான தோஷங்களுக்கும் அவகாசம் இல்லையே; ஆகை யினால் அதையே ஆத்ம ஸ்வரூபமாக அறியவேண்டும் என்று ப்ராணிகளுடைய புத்தியை அனுஸரித்து மறுபடியும் ச்ருதி நடித்துக் காட்டியது

புத்தி தத்வத்தையும், பக்ஷம், சிரஸ், புச்சம் முதலிய அலங் காரங்களால் அலங்கரித்தது. புத்தி தத்வம் என்ற ஆத்மாவிற்கு ச்ரத்தையைச் சிரஸ்ஸாகவும், ருதம் என்ற யதார்த்தியத்தினுடைய பெருமையை வலது பக்ஷமாகவும், ஸத்யம் என்ற ஸத்ய வசனத்தை (அதாவது நிஜத்தைப் பேசுவதை) இடது பக்ஷ மாகவும், யோகமென்ற சாஸ்த்ரத்தின் அர்த்தத்தை மறக்காமல் தரித்துக்கொண்டிருப்பது என்ற ஸமாதியை உடலாகவும், மஹத் தத்வத்தைப் புச்சமாகவும் வர்ணித்து, விக்ஞானத்தை ப்ரம்மமாக வர்ணித்தது. விக்ஞானம் என்றால் நிச்சய ஸ்வரூபமான புத்தி முன்சொன்ன ஐந்து விதமான ஞானேந்த்ரியத்தோடும் கூடின வேதத்தினுடைய அர்த்தமாகிய தர்ம தத்வ ஞானமாகிய விக்ஞானத்தையே விக்ஞானமய கோசமாக அறியவேண்டும். அந்த கோசமானது மனதைக்காட்டிலும் ஆத்மாவிற்கு ஸன்னி ஹிதமானதினால் ஜடமோ என்ற சங்கைக்கு அவகாசம் மந்தாதி காரிகளுடைய விஷயத்தில் ஏற்படாது ஆகையினால் எக்காரணத் தைக் கொண்டும் அதை ஆத்மா இல்லையென்று தள்ளுவது ச்ரம ஸாத்தியமானதினால் அதையே ஆத்ம ஸ்வரூபமாக வெகு கால மாகப் பாவித்து வந்த புருஷர்களுக்கும் கால க்ரமத்தில் ஆத்ம பாவனையென்ற ஸம்ஸ்காரத்தினால் ஸப்சுத்தி ஏர்பட்டு புத்தியையும் ஆத்மாவாக ஒப்புக்கொள்ள முடியாது என்ற எண்ணம் ஏற்பட்டு விடுகிறது विज्ञानमपि आत्मा न भवति, विलयाद्यवस्थावत्वात् घटवत्। (விக்ஞாநமபி ஆத்மா ந பவதி விலயாத்யவஸ்தாவத்வாத் கடவத்) என்ற அனுமானத்தினால் ஸுஷுப்தி அவஸ்தையில்

கடம் முதலிய ப்ரபஞ்சத்தைப்போல் புத்தியும் லயித்துப்போகும் வஸ்துவானபடியினால், ஸர்வலயத்திற்கும் ஆதாரமாயும், தனக்கு லயமில்லாததாயும் உள்ள ஆத்ம ஸ்வரூபமாக விக்ஞானமும் ஆகாது என்று தீர்மானித்து, புத்தியென்ற விக்ஞானமய கோசத்திலும் ஆத்மத்வ புத்தியை பரித்யாகம் செய்துவிட்டு, விக்ஞானமய கோசத்திற்கும் ஆத்மா வேறாக இருக்கவேண்டும்; அதை நாம் எப்படி அறிவது, என்று கவலையுள்ள ஸூக்ஷ்ம தர்சிகளை முன்னிட்டு மறுபடியும் ச்ருதியானது கருணையுடன் "அதுவும் ந்யாயந்தான்; விக்ஞானமய கோசமும் ஆத்மாவாக ஆகாது; ஆனந்தமய கோசத்தை ஆத்ம ஸ்வரூபமாக அறிய வேண்டு"மென்ற எண்ணத்துடன் ஆனந்தமயனை ஆத்மாவாக போதித்தது.

ஆனந்தமயனுக்கு புச்சம், பக்ஷம், சிரஸ் இவைகளையும் போதித்தது. ஸுகத்தில் ப்ரியம், மோதம், ப்ரமோதம், ஆனந்தம் என்று நான்கு வகைகளுண்டு. இஷ்டமான பதார்த்தத்தின் லாபத்தை காதினால் கேட்பதால் ஏற்படும் ஸுகத்தை ப்ரியம் என்றும், இஷ்டமான பதார்த்தத்தின் லாபத்தை கண்ணினால் பார்ப்பதினால் ஏற்படும் ஸுகத்தை மோதம் என்றும், இஷ்டமான பதார்த்தத்தை லாலனை செய்வதினால் ஏற்படும் ஸுகத்தை ப்ரமோதம் என்றும் இஷ்டமான பதார்த்தத்தின் லாபத்திற்குப் பிறகு தான் பரம ஸுகமாக வாழும் காலத்தில், தனக்கு ஏற்படும் ஸுகத்தை ஆனந்தமென்றும், நான்கு வகையாக சாஸ்த்ரத்தில் ஸுகமானது பிரிக்கப்பட்டுள்ளது. அவைகளில், ஆனந்தமய கோசத்திற்கு ப்ரியத்தை சிரஸ்ஸாகவும், மோதத்தை வலது பக்ஷமாகவும், ப்ரமோதத்தை இடது பக்ஷமாகவும், ஆனந்தத்தை உடலாகவும், பரப்ரம்மம் என்ற ஆத்ம தத்வத்தை ஆனந்தமய கோசத்திற்குப் புச்சமாகவும் கல்பித்து வேதமானது போதிக்கின்றது. आनन्दमयः (ஆநந்தமய:) என்றதினால், मयट् (மயட்) என்ற ப்ரத்யயத்திற்கு प्राचुर्य (ப்ராசுர்யம்) என்ற அர்த்தத்தை வைத்துக் கொண்டு, ஸுகத்தை அனுபவிக்கிறவன் என்ற அர்த்தமானது வெளியாகிறது. ஸுகத்தை அனுபவிக்கிறவனே அவித்யையில் ஏற்பட்ட ப்ரம்மத்தினுடைய ப்ரதிபிம்பமாகிற ஜீவனாகவே ஆவான், அந்த ஜீவனே "சிதாபாஸன்" என்றும் சொல்லப் படுவான். அந்த ஜீவனைத்தான் கர்த்தாவென்றும், போக்தா

வென்றும், ஸம்ஸாரியென்றும் வேதாந்திகள் சொல்லுவார்கள். முன்பாக அன்னமய கோசத்தினால் ஸ்தூல சரீரமென்ற போக உபகரணங்களையும் அடைந்து முன் ஜன்மங்களில் தான செய்த புண்ய பாபத்தின் பலத்தை அனுபவிக்கின்ற போக்தாவான ஜீவனைத்தான் ஆனந்தமய கோசமென்று அறிய வேண்டும் அந்த ஆனந்தமய கோசமும் பரமாத்மாக ந்யாயமில்லை; அவனே ஸுகத்தை அனுபவிக்கிறவனாகி விட்டான்; அவனுடைய ஆனந்தமோ ஆனந்த ஸ்வரூபியான ப்ரம்மத்தினுடைய ப்ரதிபிம்ப ஸ்வரூபமாக உடைத்தான ப்ரம்மமாக ஆனந்தமய கோசனும் ஆக முடியாது. ஆகையினால், आनन्दमयोपि आत्मा भवितुं नार्हति। कादाचित्कत्वात् अभ्रादिपदार्थवत ॥ (ஆனந்தமயோபி ஆத்மா பவிதும் நார்ஹதி காதாசித்கத்வாத் அப்ராதிபதார்த்தவத் என்ற அனுமானத்தினால், ஆனந்தமயன் என்று சொல்லபபடுகிற சிதாபாஸனான ஜீவனும் ஆனந்த ப்ரதிபிம்பத்தை அனுபவிக்கிறவனானதினால், கர்த்தா போக்தாவாக இருந்துகொண்டு ஸம்ஸாரியாக இருப்பதினாலும், நிர்விசேஷ ப்ரம்ம தத்வ ரூபமான ஆத்மாவாக முடியாது. என்று தீர்மானித்து ஆனந்தமய கோசத்திலும் ஆத்மத்வ புத்தியை த்யாகம் செய்துவிட்டு, ஆனந்தமய கோசத்திற்கும் விலக்ஷணமாக ஆத்ம ஸ்வரூபம் இருக்கவேண்டும் அதை நாம் எப்படி அறிவோம் என்று தீவ்ரமான ஜிக்ஞாஸையோடு கூடின உத்தமாதிகாரிகளை முன்னிட்டு ச்ருதியும் மிகுந்த பரம கருணையுடன் "ஹே மஹானீயர்களே! நீங்கள் தீர்மானம் செய்தது ந்யாயமானதே; கார்யமானதினால் தேகமும் ஆத்மா இல்லை, ஜடமானதினால் ப்ராணனும் ஆத்மா இல்லை; விகாரியானதினால் மனதும் ஆத்மாவாக ஆகாது; லயிக்கும் ஸ்வபாவமுடைய புத்தியும் ஆத்மாவாக ஆகாது; அநித்தியமானதினாலும் ஆனந்தமயனுங்கூட ஆத்மா இல்லை. அன்னமய கோசமென்ற போக ஆயதனம ப்ராணமய கோசம், மனோமய கோசம், விக்ஞானமய கோசம் என்று மூன்றுவித போக உபகரணங்கள், ஆனந்தமய கோசமென்ற போக்தா இந்த ஐந்திற்கும் விலக்ஷணமாகவும், இந்த ஐந்தோடு கூடின ஸர்வ ஜகத்திற்கும் அதிஷ்டானமாகவும் விளங்கி வரும் ப்ரம்ம தத்வமோ இந்த ஆனந்தமய கோசத்திற்கும் புச்சம் போல்

வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ब्रह्म पुच्छं प्रतिष्ठा (ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா) என்று புச்ச வாக்ய நிர்திஷ்டமான ப்ரம்மம் தான் ஆத்ம ஸ்வரூபமாகும் என்ற உண்மையை மந்தமத்யமாதி காரிகளைப் பரீக்ஷித்து, அவர்கள் உத்தமாதிகாரிகளாக ஆன பின் ப்ரம்ம தத்வத்தை வேதமானது போதித்தது. "புச்சம்" என்றதின் தாத்பர்யத்தை அறியவும். வால் என்ற அர்த்தத்தை நினைக்கக் கூடாது.

பாராயணம், பரம அதிஷ்டானம், போக்யம், யோகாயதனம், போகோபகரணம், போக்தா என்ற ஸகல த்வைதமும் எந்த இடத்தில் கல்பிதமோ, எதனுடைய ஸத்தையினால், ஸத்தையோடு கூடினது போல் தோன்றுகிறதோ, எந்த வஸ்துவினுடைய ஜ்யோதிஸ்ஸால் ப்ரகாசிக்கிறதோ, எந்த வஸ்துவிற்கும் ஸ்வரூப ரூபமான ஆனந்தத்தின் ப்ரதிபிம்பத்தினால் ஸுகத்தோடு கூடியவை போலத் தோன்றுகிறதோ, அந்த பிம்ப பூதமாயும், ஸர்வ ப்ரபஞ்சா திஷ்டானமாயும், நிர்விசேஷமாயும், ஸ்வப்ரதானமாயும், புச்ச வாக்யத்தில் போதிக்கப்படுகிறதாயும் உள்ள ப்ரம்மம் தான் ஆத்ம ஸ்வரூபம் என்ற தத்வத்தை ச்ருதியானது பரம கருணையுடன் உத்த மாதிகாரிகளுக்கு கடைசியாகப் போதிக்கின்றது.

அப்படி புச்சமென்று போதிக்கப்பட்ட பரப்ரம்மம் தான் ப்ரக் ருதத்தில் ஸ்ரீமத் ராமாயண கதாநாயகனான ஸ்ரீராமன் என்று அறிய வேண்டும்.

रमन्ते योगिनोऽनन्ते सत्यानन्दे चिदात्मन ।
इति रामपदेनासौ परं ब्रह्माभिधीयते ॥

ரமந்தே யோகினோநந்தே ஸத்யாநந்தே சிதாத்மநி
இதி ராமபதேநாஸௌ பரம் ப்ரம்மாபிதீயதே

என்ற ச்ருதி வாக்யமே ராமன் ப்ரப்ரம்மம் தான் என்பதில் முக்யமான ப்ரமாணமாக ஆகும். அந்த பரப்ரம்மமாகிய ராம னுடைய பட்ட மஹிஷியான ஸீதா ப்ராட்டியும் "பரப்ரம்ம மஹிஷி" என்பதில் ஸந்தேஹமே இல்லை. ஸீதையாகிய ப்ரப்ரம்மத் தின் மஹிஷியை ஆஞ்ஜனேய ஸ்வாமி கண்டவுடன் தன்னுடைய

ஆனந்தம் தாங்க முடியாமல் புச்சமென்று சாஸ்த்ரத்தில் குறிப்பிடப் பட்டிருக்கும் ராமனுகிய தாரக ப்ரம்மத்தை மனதினுல் பாவிக்க, அந்த திவ்ய விக்ரகமும் ப்ரத்யக்ஷமாக பரம யோகியான ஆஞ்ஜனேய ஸ்வாமிக்கு ஸ்புரிக்க, உடன் ஆலிங்கனுதிகளைச் செய்து அந்த மங்கள விக்ரஹத்தை உச்சி முகர்ந்து முத்தமிட்டுக் கொண்டார். தன் பாக்யமே பாக்யமென்றும் ச்லாஹித்தார். கண்டேன் ஸீதையை என்று நர்த்தனம் செய்தார். இந்த ப்ராட்டியைக் காணுவதற்கு வேதமாகிய ஸ்தம்பத்தில் ஏறி உச்சியில் பார்க்கவேண்டும் என்பதை ஸூசிப்பிக்க ஸ்தம்பத்தில் ஏறுவதும், இறங்குவதுமாக நடித்தார். ப்ரம்மத்தை ஸாக்ஷாத்கரித்துக் கொண்ட ஆசார்ய புருஷர்களுடைய ப்ரக்ருதி இதுதான் என்றும் ப்ரகடனம் செய்தார்.

இந்த தத்வங்கள் எல்லாம் காந்தா ஸம்ஹிதையான ஸ்ரீமத் ராமாயணத்தில் आस्फोटयामास चुचुम्ब पुच्छं (ஆஸ்போடயாமாஸ சுசும்ப புச்சம்) என்ற ச்லோகத்தில் அடங்கியுள்ளதென்பதை வித்வான்கள் ஊஹித்து அறியவேண்டும்.

இவ்விதமான ஆனந்தத்தை அனுபவிக்கிறவராக இருந்தாலும் "ராவணனுடைய அந்தப்புரத்தில் ஸீதையை நாம் பார்த்தோம் என்று நினைத்தது மிகவும் ந்யாய விரோதமானது, மஹா பதிவ்ரதா சிரோமணியான ஸீதாதேவி இவ்விதம் ராவணனுடைய அந்தப் புரத்தில் திவ்யமான பர்யங்கத்தில் தூங்கிக் கொண்டிருக்க ந்யாயம் உண்டா? ராமனைக் காட்டிலும் வேறு புருஷனுடைய ஸமீபத்தில் ஸீதாதேவி இவ்விதமான ஆபரணங்களை அலங்கரித்துக் கொண் டிருக்க ந்யாயம் ஏற்படுமா? ஆகையினுல் நாம் பார்த்தவள் ஸீதை யல்ல; ஸீதையைப்போல் சற்றேறக்குறைய ஸௌந்தர்யமுள்ள ஒரு ராக்ஷஸ ஸ்த்ரீதான்.

न रामेण वियुक्ता सा स्वप्तुमर्हति भामिनी ।
न भोक्तुं नाप्यलंकर्तुं न पानमुपसेवितुम् ॥
नान्यं नरमुपस्थातुं सुराणामपि चेश्वरम् ।
न हि रामसमः कश्चिद्विद्यते त्रिदशेष्वपि ॥
अन्येयमिति निश्चित्य पानभूमौ चचार सः ।

ந ராமேண வியுக்தா ஸா ஸ்வப்துமர்ஹதி பாமிநீ ।
ந போக்தும் நாப்யலம்கர்த்தும் ந பாநமுபஸேவிதும் ॥
நாந்யம் நரம் உபஸ்தாதும் ஸுராணாமபி சேச்வரம் ।
ந ஹி ராமஸம: கச்சித் வித்யதே த்ரிதசேஷ்வபி ॥
அந்யேயம் இதி நிச்சித்ய பாநபூமௌ சசார ஸ: ।

ராமனைவிட்டுப் பிரிந்த ஸீதையோ இவ்விதம் தூங்க ந்யாய மில்லை. போஜனாதிகளையும் செய்யமாட்டாள். ஆகையினால் இவள் வேறு யாரோ ஸ்த்ரீதான் என்று தீர்மானித்துவிட்டு மறுபடியும் அந்தப்புரத்திலேயே ஸீதையைத் தேடினார். ஆஞ்ஜநேயருடைய த்ருஷ்டிக்கு யோக்யமாக அதிஸுந்தரிகளான அநேகம் ஸ்த்ரீகள் தென்பட்டாலும் ஸீதையை மாத்ரம் தேடித் தேடிப் பார்த்தும் ஆஞ்ஜநேயரால் கண்டுபிடிக்க முடியவில்லை. அத்துடன் வேறு விதமான சிந்தையும் ஆஞ்ஜநேயருக்கு ஏற்பட்டுவிட்டது 'இந்த ஸ்த்ரீகளெல்லோரும் ராவணனால் போகம் செய்யப்பட்டு ச்ரமத்துடன் தன் தன் வஸ்திராபரணாதிகளைக்கூட கவனிக்காமல் அயர்ந்து தூங்குகிறார்களே? அவர்களை நாம் பார்த்ததினால் நைஷ்டிக ப்ரம்ம சர்யம் என்ற நமது பரம தர்மத்திற்கு லோபம் வந்துவிடாதா? ஒரு அந்தப்புரத்தில் சென்று பர தாரங்களைப் பாரப்பது என்பது அதர்மம் தானே! அவ்விதம் ஒருவர் இருவர் அல்ல. வெகு ஸ்த்ரீகளைப் பார்த்தோம். தர்மலோபத்தை அடையாமல் நாம் எப்படி இருக்க முடியும்? ஸீதையைத் தேடவந்த நமக்கு இவ்விதம் தர்மலோபம் வந்து ,சேர்ந்துவிட்டதே'' என்று மிகவும் கவலையை அடைந்தார் பிறகு தானாகவே ஸமாதானமும் செய்துகொண்டார்.

न हि मे मनसः किञ्चिद्वैकृत्यं उपपद्यते ।
मनो हि हेतुः सर्वेषां इन्द्रियाणां प्रवर्तने ॥
शुभाशुभास्ववस्थासु तच्च मे सुव्यवस्थितम् ।
नान्यत्र हि मया शक्या वैदेही परिमार्गितुम् ॥
स्त्रियो हि स्त्रीषु दृश्यन्ते सर्वथा परिमार्गणे ।
यस्य सत्त्वस्य या योनिः तस्यां तत्परिमार्ग्यते ॥

ந ஹி மே மநஸ: கிஞ்சித் வைக்ருத்யம் உபபத்யதே ।
மநோ ஹி ஹேது: ஸர்வேஷாம் இந்த்ரியாணாம் ப்ரவர்த்தநே ॥

சுபாசுபாஸ்வவஸ்தாஸு தச்ச மே ஸுவ்யவஸ்திதம் ।
நாந்யத்ர ஹி மயா சக்யா வைதேஹீ பரிமார்கிதும் ॥
ஸ்த்ரியோ ஹி ஸ்த்ரீஷு த்ருச்யந்தே ஸர்வதா பரிமார்கணே ।
யஸ்ய ஸத்வஸ்ய யா யோநி: தஸ்யாம் தத்பரிமார்க்யதே ॥

என்று தன்மனதை ஸமாதானம் செய்து கொண்டார். அதாவது

'இந்த அந்தப்புரத்தில் அநேக ஸ்த்ரீகளை நாம் பார்த்தது மாத்ரம் தானே தவிர இவர்களைப் பார்த்த மாத்ரத்தினால் நமது மனதிற்கு ஒரு விகாரமும் ஏற்படவில்லை மனோபாவத்தில் கெடுதல் ஏற்பட்டால் தானே தர்மலோபம் ஏற்படும். இந்த்ரியங்கள் விஷயாதிகளில் ப்ரவ்ருத்திப்பதற்கும் மனது தான் மூலகாரணமாகும். அந்த மனதோ இவ்வளவு ஸ்த்ரீகளை நாம் பார்த்தும் கொஞ்சமேனும் கலக்கத்தை அடையாமல் நமக்கு உபாஸ்யமான தாரக ப்ரம்மத்தினிடத்தில் ஸ்திரமாக இருந்துவருகிறது; நாமோ ஸீதையைத் தேட வந்தோம் எந்த ப்ராணி எந்த ஜாதியில் சேர்ந்ததோ அதை அந்த ஜாதியில்தானே தேடவேண்டும். ஆகையினால் ஸீதை ஸ்த்ரீயான படியினால் ஸ்த்ரீயினுடைய கூட்டத்தில் தான் அவளைத் தேட வேண்டும் என்று இந்த அந்தப்புரத்திற்கு வந்து ஸீதையை நாம் தேடினோம். ஆனால் நமது மனதோ ஸுசுத்தமாகத்தான் இருந்து வருகிறது; கொஞ்சமேனும் விகாரத்தை அடையவில்லை அதனால் தர்மலோபமும் கொஞ்சமேனும் கிடையாது' என்று தீர்மானித்துக் கொண்டு மறுபடியும் ஸீதையை ராவணனுடைய அந்தப்புரத்திலேயே தேடினார். தேவஸ்த்ரீகள், கந்தர்வஸ்த்ரீகள், நாகஸ்த்ரீகள் என்று பலவாறாக அதிரூபவதிகளான அநேக ஸ்த்ரீகள் ஆஞ்ஜநேய ஸ்வாமியினுடைய கண்ணில் தென்பட்டாலும் ஸீதையை மாத்ரம் கண்டுபிடிக்க முடியாமல் மிகவும் கஷ்டத்தை அடைந்தார். ஸீதையை நாம் காணாமல் வானரஸமூகத்தின் மத்தியில் திரும்பிப் போய் என்ன சொல்லுகிறது? ஆனாலும் நாம் கவலையை அடையக் கூடாது. மனதில் தைர்யக் குறைவு ஏற்பட்டால் ப்ரக்ருதமான கார்யத்திற்கு ஹானி வந்துவிடும்.

अनिर्वेदः श्रियो मूलं अनिर्वेदः परं सुखम् ।
अनिर्वेदो हि सततं सर्वार्थेषु प्रवर्तकः ॥
करोति सफलं जन्तोः कर्म यत्तत्करोति सः ।
तस्मादनिर्वेदकरं यत्नं चेष्टेऽमुत्तमम् ॥

அநிர்வேத : ச்ரீயோ மூலம் அநிர்வேத; பரம ஸுகம் ।
அநிர்வேதோ ஹி ஸததம் ஸுவார்த்தேஷு ப்ரவர்த்தக: ॥
கரோதி ஸபலம் ஜந்தோ : கர்ம யத்தத்கரோதி ஸ : ।
தஸ்மாதநிர்வேதம் யத்நம் சேஷ்டேஹமுத்தமம் ॥

என்று தீர்மானித்துக்கொண்டு, ஒரு காரியத்தை ஒரு மனிதன் ஆரம்பித்தால் நடுவில் அதில் ஏற்படுகிற கஷ்டத்திற்காக தனது உத்ஸாஹத்தை கைவிடக்கூடாது. உத்ஸாஹத்தினால் அளவற்ற ஸம்பத்தையும் அடையலாம். உத்ஸாஹம்தான் பரம ஸௌக்யத்திற்குக் காரணமாகும் உத்ஸாஹம்தான் அந்தந்த கர்மாவிலும் மனிதனை ப்ரவ்ருத்திக்கச் செய்கிறது. ஆகையினால் உத்ஸாகத்துடன் நான் மறுபடியும் ஸீதையைத் தேடத்தான் போகிறேன் என்ற தைர்யத்தை அவலம்பித்து லங்காநகரத்தில் ஒரு இடமும், ஒரு ப்ரதேசமும் கூட பாக்கி இல்லாமல் தேடினார். ஆஞ்ஜநேய ஸ்வாமியினால் ஸீதையைத் தேடுவதான நிமித்தம் ஸஞ்சரிக்கப்படாததான தேசம், நாலு அங்குலம் கூட இல்லாமல் ஆகிவிட்டது. 'அனேக ஸ்த்ரீகளை நாம் கண்டோமே ஸீதையை மாத்திரம் நாம் காணவில்லையே; ஆகையினால் நாம் மிகவும் தௌர்பாக்யத்தைச் செய்தவனாகிவிட்டோம். ஸம்பாதியோ ஸீதை இந்த லங்கா நகரத்திலிருப்பதாக தெரிவித்தாரே; பார்த்தும் காணமுடியவில்லையே' என்று கவலையை அடைந்து மிகவும் துக்க ஸாகரத்தில் முழுகித் தவித்தார்.

'ஸீதையைக் காணாமல் நாம் திரும்பிப் போனால் அநேக குலங்களை அழித்த பாபமும நமக்கு ஏற்படும். ராம லக்ஷ்மணர்கள் ஸீதையைக் காணவில்லை என்ற என் வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் உடன் ஜீவனை இழந்து விடுவார்கள். இந்த வ்ருத்தாந்தம் பரதனுக்குத் தெரிந்தால் பரத சத்ருக்னர்களும் ஜீவனை இழந்து விடுவார்கள் புத்ரர்கள் இவ்விதமான கதியை அடைந்தார்கள் என்பதைக்கேட்டு கௌஸல்யை முதலிய மாத்ருவர்க்கங்களும் உயிரை விட்டுவிடுவார்கள் இவ்விதமான அவஸ்தையில் ஸுக்ரீவன் தான் எவ்விதம் ப்ராணனை வைத்துக்கொள்வான்? அங்கதன்தான் ஜீவிப்பானா? இந்த தசையில் ஸகல வானரர்களும் மரித்துவிடுவார்கள். ஆகையினால் நாம் திரும்பிப்போய் ஸீதையைக் காணவில்லை என்று சொல்லுகிற வார்த்தையானது இவ்வளவு துக்கத்திற்குக் காரண

மாகிறபடியினுல் இங்கிருந்து நாம் திரும்பிப் போவது உசித மில்லை. லங்காநகரத்திலேயே ஸமுத்ரத்தில் விழுந்தாவது உயிரை விடுகிறேன். அல்லது தபஸ்வியாகி ஆஹாரம் செய்யாமலிருந்து உண்ணுவிரதத்தினுல் ப்ராணனை விடுகிறேன். அல்லது ராவணனே டாவது யுத்தம் செய்து, அவனை வதித்து அவனுடைய ம்ருத சரீரத்தை ராமனுக்கு எதிரில் கொண்டு போட்டு ஸீதையைத் தூக்கி வந்ததற்கு பதில் செய்தாகிவிட்டது என்ருவது சொல்கிறேன். இவ்விதமான செய்கையைத் தவிர நான் செய்யவேண்டியது வேருென்றுமே ப்ரக்ருதத்தில் இல்லை' என்று வெகுவிதமாக கவலையை அடைந்தார். மறுபடியும் உத்ஸாஹ சக்தியைக் கைவிடாமல் 'நாம் லங்காநகரத்திற்குப் புறப்பட்டு வரும்பொழுது ஒரு பிசகு செய்து விட்டோம். அக்காரணத்தினுல்தான் இவ்வளவு கஷ்டம் நமக்கு இங்கு நேர்ந்தது. எவ்வளவோ ஸ்திரீகளை நாம் பார்த்தும் ராம பத்னியைக் காணுமல் நமது மனம் தவிப்பதற்கு அந்த அபராதம்தான் மூலகாரணமாகும். கண்ட தேவதைக்கெல்லாம் நமஸ்காரம் செய்து விட்டு ஸமுத்ரத்தைத் தாண்ட ஆரம்பித்தோமே; அந்த ஸந்தர்ப் பத்தில் நமக்கு இந்த ராமனும் ஸீதையும் ஒரு ப்ரதான தேவதை யென்று புத்தியில் தோன்ருமல் போனதே ஒரு பெரிய அபராத மல்லவா? அதனுடைய பலத்தைத் தான் இப்பொழுது நாம் அனுப விக்கிருேம். லங்காநகரத்தில் ஸீதை இருக்கிருள் என்று சொன்ன ஸம்பாதியினுடைய வசனமும் பொய்யாக ந்யாயமில்லை. ராக்ஷஸிகளாலோ, ராவணனுலேயோ ஒரு ஸமயம் ஸீதை பக்ஷிக்கப்பட்டு விட்டாளோ, அல்லது ராவணனுடைய பலாத்காரமான செய்கைக்குப் பயந்துகொண்டு ராவணனுடைய வசமாகத்தான் ஆகிவிட்டாளோ என்றும் நினைக்க இடமில்லை. ஸீதையினுடைய பாதிவ்ரத்யத்தின் பெருமையை யாரால்தான் வர்ணிக்க முடியும்? அப்படி ஏதாவது விபரீத ஸம்பவம் நேர்ந்திருந்தால் அந்த பாதிவ்ரத்யத்தினுல் லங்கா நகரமே பஸ்மமாகியிருக்க வேண்டும் மேற்சொன்ன ப்ரகாரம் நாம் செய்த பாபத்தினுல் நமது திருஷ்டிக்கு யோக்யமாக வில்லை ப்ர தேவதையினுடைய தரிசனம் நமக்குக் கிடைக்க வேண்டுமானுல் சென்ற வெகு ஜன்மங்களில் நாம் பெரும் தவத்தைச் செய்திருக்க வேண்டாமா! தேவிக்கோ ராமனுக்கோ நாம் நமஸ்கரிக்காமல் புறப்பட்டு வந்த நமது ஸாஹஸத்தை மன்னிக்குமாறு வேண்டிக் கொண்டு இப்பொழுதாவது நாம் மறுபடியும் ராமனையும் ஸீதா

ப்ராட்டியையும் நமஸ்கார பூர்வமாக த்யானம் செய்துகொண்டு நமது பக்தியைத் தெரிவித்துக் கொள்வோம்' என்று எண்ணி மஹானுபாவனான ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் கதாநாயகனாகிய ப்ரதான தேவதையான ராமருக்கு நமஸ்காரம் செய்கிறார்.

नमोऽस्तु रामाय स लक्ष्मणाय
देव्यै च तस्यै जनकात्मजायै ।
नमोऽस्तु रुद्रेन्द्रयमानिलेभ्यो
नमोऽस्तु चन्द्रार्कमरुद्गणेभ्यः ॥

நமோஸ்து ராமாய ஸ லக்ஷ்மணாய
தேவ்யை ச தஸ்யை ஜனகாத்மஜாயை ।
நமோஸ்து ருத்ரேந்த்ரயமாநிலேப்ய : ।
நமோஸ்து சந்த்ரார்க்க மருத்கணேப்ய : ॥

என்ற ச்லோகத்தினால் தாரக ப்ரம்மமான ராமனின் பொருட்டும், ஆதிசேஷ பகவானான லக்ஷ்மண ஸ்வாமியின் பொருட்டும், சித்ரூபிணியான பரதேவதையான ஸீதா தேவியின் பொருட்டும் அங்கதேவதைகளான ருத்ரன், இந்த்ரன், யமன், அக்னி, சந்திரன், ஸூர்யன், ஸப்த மருத்துக்கள் இவர்களின் பொருட்டும் நமஸ்கரித்து விட்டு த்யானயோகத்தில் ஒரு முகூர்த்தம் பரிநிஷ்டிதனாக விளங்கி வந்தார்.

உடன் புத்தியில் ஒரு ஸ்பூர்த்தி ஏற்பட்டது. அதாவது 'லங்கா நகரம் முழுவதும் தேடிவிட்டோம் என்ற அஹங்காரத்தை அடைந்தோமே, அசோக வனத்திலல்லவா ஸீதை இருப்பதாக ஸம்பாதி சொன்னார். அந்த இடத்திற்கு நாம் போகவே இல்லையே அங்கு போய் நாம் தேடினால் நிச்சயமாக ஸீதையைப் பார்த்து விடலாம் என்ற நிச்சயத்துடன்,

ब्रह्मा स्वयंभूर्भगवान देवाश्चैव दिशन्तु ।
सिद्धिमग्निश्च वायुश्च पुरुहूतश्च वज्रभृत् ॥
वरुणः पाशहस्तश्च सोमादित्यौ तथैव च ।
अश्विनौ च महात्मानौ मरुतः शर्व एव च ॥
सिद्धिं सर्वाणि भूतानि भूतानां चैव यः प्रभुः ।

ப்ரும்மா ஸ்வயம்பூ' பகவான் தேவாச்சைவ திசந்து மே ।
ஸித்திமக்நிச்ச வாயுச்ச புருஹூதச்ச வஜ்ரப்ருத் ॥
வருண : பாசஹஸ்தச்ச ஸோமாதித்யௌ ததைவ ச ।
அச்விநௌ ச மஹாத்மாநௌ மருத: சர்வ ஏவ ச ॥
ஸித்திம் ஸர்வாணி பூதாநி பூதாம்நாம் சைவ ய: ப்ரபு: ।

என்ற வாக்யங்களால், ப்ரும்மா, முப்பத்தி மூன்று கோடி தேவதைகள் ரிஷிகள், மற்ற பூதங்கள், எல்லா அநுக்ரஹ சக்தியுள்ள பெரியோர்களும், ஸீதா தர்சன நிமித்தமான ஒரு பெரிய ஸித்தியை எனக்கு அளிக்கட்டும்' என்று ப்ரார்த்தித்துக் கொண்டு வெகு வேகமாக ப்ராகாரத்தைத் தாண்டி அசோக வனத்திற்கு வந்து சேர்ந்தார்.

அசோகவனத்தில் அனேகவிதமான வ்ருக்ஷ விசேஷங்களும், அழகிய க்ரீடா பர்வதங்களும், க்ரித்ரிமமான நதிகளும், ஆஞ்ஜநேய ஸ்வாமியினுடைய த்ருஷ்டிக்கு விஷயமாகப் புலப்பட்டன. அவைகளின் நடுவில் தங்கமயமான வர்ணமுள்ள சிம்சுபா வ்ருக்ஷமும் காணப்பட்டது அந்த வ்ருக்ஷத்தினுடைய அடிபாகத்தில் ஸீதா தேவியை ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் மிகவும் கவனமாகத் தேடினர் அந்த சிம்சுபா வ்ருக்ஷத்தினுடைய ஸமீபத்தில் அழகான ஒரு நதியைப் பார்த்து விட்டு,

सन्ध्याकालमनाः श्यामा ध्रुवमेष्यति
नदीञ्चेमां शिवजलां संध्यार्थे वरवर्णिनी ॥

ஸந்த்ய காலமநா: ச்யாமா த்ருவமேஷ்யதி ஜாநகீ ।
நதீஞ்சேமாம் சிவஜலாம் ஸந்த்யார்த்தே வரவர்ணிநீ ॥

என்று ஸீதாதேவியானவள் கர்ம பரதந்த்ரனை ஜனக வம்சத்தி லுதித்தபடியினால் ஸந்த்யா காலத்தில் ஸந்த்யா தேவதையை த்யானம் செய்யும் விஷய தத்பரையாகத்தான் இருக்கவேண்டும். ஸீதைக்கு உசிதமான புண்ய ஜலமும் இந்த நதியில் ஓடுகிறது. ஆகையினால் ஸீதாதேவியானவள் அவச்யம் ஸந்த்யா காலத்தில் இந்த நதிக்கு வரக்கூடும். அப்பொழுது நாம் தர்சனம் செய்து விடலாம் என்று ஹனுமார் தீர்மானித்தார்.

ப்ரக்ருதத்தில் ஸந்த்யா சப்தத்தினால் ப்ராதக்காலத்தை க்ரஹித்துக் கொள்ளவும். ஆஞ்ஜநேயஸ்வாமி இரவு முழுதும் ராவணனுடைய அந்தப்புரத்தில் ஸீதையைத் தேடிவிட்டு, இரவு முடியும் ஸமயத்தில், காலை ஸுமார் நான்கு மணிக்கு அசோகவனம் சென்றார். அசோக வனத்திலுள்ள காக்ஷிகளையும் பார்த்து மகிழ்ந்தார். மறுநாள் காலையில் ஸ்நானம் முதலிய ஸத்கர்மாக்களைச் செய்ய ஸீதை அவச்யம் அங்கு வரக்கூடுமென்று தீர்மானித்தார்.

ஸந்த்யாகாலமென்ற பதத்தினால் ப்ராதக்காலம் என்ற அர்த்தத்தை க்ரஹித்துக்கொள்ளும்பொழுது, ப்ராதக்காலத்தில் செய்ய வேண்டிய ஸ்நாநாதிகளில் ஸ்த்ரீகளுக்கும் அதிகாரத்தை சாஸ்த்ரம் அநுமதிக்கின்றபடியால், ப்ராதக்காலத்தில் செய்யவேண்டிய ஸ்நானத்திற்கு ஸீதை வருவாள் என்ற தாத்பர்யத்தை க்ரஹித்தால் ஒருவிதமான தோஷத்திற்கும் அவகாசமில்லை. ஸந்த்யாவந்தனம் என்ற கர்மாவில் ஸ்த்ரீகளுக்கு அதிகாரம் உண்டு என்ற ப்ரமமும் ஏற்படாது.

संधीयते अनया अयं जीवः (ஸந்தீயதே அநயா அயம் ஜீவ:) என்ற ஸமாஸத்தினால், ஜீவனை பரப்ரம்மனிடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்து வைக்கிற தேவதா விசேஷத்தை ஸந்த்யா என்ற சப்தத்தினால் க்ரஹித்துக்கொள்ள வேண்டியது அவச்யமானதினாலும், நன்றாகச் செய்யப்படும் பகவத் த்யானத்தையே 'ஸந்த்யை' என்ற சப்தத்தின் அர்த்தமாக க்ரஹித்துக்கொள்ளவேண்டியபடியினாலும், ஸந்த்யை என்ற காயத்ரீ தேவதையை த்யானம் செய்கிற விஷயத்தில் ஸ்த்ரீகளுக்குப் அதிகாரம் உண்டு என்றும் க்ரஹித்துக் கொள்ளலாம். இந்த விஷயத்தில் सन्ध्यार्थे वरवर्णिनी (ஸந்த்யார்த்தே வரவர்ணிநீ) என்ற வசனமே ப்ரமாணமாகும். அர்த்த ஞான பூர்வகமாக மந்த்ரோச்சாரணம் செய்து கொண்டு தேவதையை த்யானம் செய்வதில் த்விஜனுக்குத்தான் அதிகாரம் என்று ஸந்த்யா வந்தனத்தில் ஸ்த்ரீகளுக்கு அதிகாரத்தைத் தடுக்கிற சாஸ்த்ரத்திற்கு ஸங்கோசம் செய்து கொள்ளவேண்டும்.

एवं तु मत्वा हनुमान्महात्मा
प्रतीक्षमाणो मनुजेन्द्रपत्नीम् ।
अवेक्षमाणश्च ददर्श सर्वं
सुपुष्पिते पर्णघने निलीनः ॥

ஏவம் து மத்வா ஹநுமாந் மஹாத்மா
ப்ரதீக்ஷமாணோ மநுஜேந்த்ரபத்நீம் ।
அவேக்ஷமாணச்ச ததர்ச ஸர்வம்
ஸுபுஷ்பிதே வர்ணகநே நிலீநः ॥

மேற்கண்டபடி ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் தீர்மானித்து, ராஜ ச்ரேஷ்டனுன ராமனுடைய தர்மபத்னியை நாலு பக்கங்களிலும் தேடினுர். தானும் மற்றவர்களுடைய த்ருஷ்டிக்கு யோக்யமாகாம லிருக்கும்படி. சிம்சுபா வ்ருக்ஷத்தினுடைய கிளைகளில் மறைந்து கொண்டு ஸூக்ஷ்மமான சரீரத்துடன் இருந்து வந்தார்.

ஆங்காங்கு த்ருஷ்டியைச் செலுத்தி ஸீதையைத் தேடும்பொழுது சிம்சுபா வ்ருக்ஷத்திற்கு ஸமீபத்தில் ப்ரம்மாண்டமான கோபுரத்தோடு கூடின ஒரு ஆலய விசேஷத்தைப் பார்த்தார். அதைப் பார்க்கும் பொழுது ஜைனருடைய கோவிலைப்போல் புலப்பட்டது அந்த ஆலயத்தினுடைய முன் மண்டபத்தில் அழுக்கடைந்த வஸ்த்தத் தோடு கூடினவளாயும், தன்னை ராவணனுடைய வசமாக்குவதில் உத்யுக்தர்களான ராக்ஷஸ ஸ்த்ரீகளால் சூழப்பட்டவளாயும், ஆஹாரமில்லாத காரணத்தினுல் மிகவும் க்ருசமான சரீரத்தோடு கூடியவளாயும், பெருமூச்சு விட்டுக்கொண்டு ராம த்யானத்தில் ஈடுபட்டவளாயுமுள்ள ஸீதையை ஆஞ்ஜநேய ஸ்வாமி கண்டார். அவர் ஸீதையைப் பார்க்கும்பொழுது புகையினுல் சூழப்பட்ட ஜ்வாலைபோல் ஸீதை விளங்கி வந்தாள் தாமரைப் புஷ்பமே இல்லாததான தாமரை ஓடை போலும் விளங்கினுள். ஆஞ்ஜநேய ஸ்வாமிக்கே இந்த அவஸ்தையில் ஸீதையைப பார்க்கும்பொழுது மனது மிகவும் கஷ்டத்தை அடைந்தது ஆனலும் அநேக ஹேதுக் களைக்கொண்டு இவள்தான் ராம பத்னியான ஸீதையாக இருக்க வேண்டுமென்று ஊஹித்தார்.

इयं कनकवर्णांगी रामस्य महिषी प्रिया ।
प्रनष्टाऽपि सती यास्य मनसो न प्रणश्यति ।
इयं सा यत्कृते रामः चतुर्भिः परितप्यते ।
कारुण्येनानृशंस्येन शोकेन मदनेन च ॥
स्त्री प्रनष्टेति कारुण्यात आश्रितेत्यानृशंस्यतः ।
पत्नी नष्टेति शोकेन प्रियेति मदनेन च ॥

இயம் கநகவர்ணாங்கீ ராமஸ்ய மஹிஷீ ப்ரியா |
ப்ரநஷ்டாபி ஸதீ யாஸ்ய மநஸோ ந ப்ரணச்யதி ||
இயம் ஸா யத்க்ருதே ராம: சதுர்பி: பரிதப்யதே |
காருண்யேநாந்ருசம்ஸ்யேந சோகேந மதநேந ச ||
ஸ்த்ரீ ப்ரநஷ்டேதி காருண்யாத் ஆச்ரிதேத்யாந்ருசம்ஸ்யத: |
பத்நீ நஷ்டேதி சோகேந ப்ரியேதி மதநேந ச ||

இவள்தான் ராமனுடைய பட்டமஹிஷியான ஸீதாதேவியாக இருக்கவேண்டும். வெளிக்கு ராமனை விட்டு இவள் பிரிந்தவள்போல் தோன்றினாலும், ராமனுடைய மனதினால் த்யானம் செய்யப்பட்டவளாகத்தான் இருந்து வருகிறாள். ஸ்ரீராமனானவர், யாருடைய விஷயத்தில் காருண்யம், ஆந்ருசம்ஸ்யம், சோகம், மதனம் என்ற நான்கினால் தாபத்தை அடைந்துகொண்டு வருகிறாரோ அந்த ஸ்த்ரீயானவள் இவள்தான். ஆபத் காலத்தில் ஸ்த்ரீகள் ஸ்வயமாக அபலைகளானதினால் அவர்களை புருஷன்தான் ரக்ஷிக்க வேண்டும். தான் அப்படி ஸீதையை ரக்ஷிக்கவில்லையே என்ற கருணையினால் தாபத்தை அடைகிறார். தன்னை ஆச்ரயித்தவர்களை ரக்ஷிக்க வேண்டிய கடமை தன்னைச் சேர்ந்தது. அதுதான் 'ஆந்ருசம்ஸ்யம்' என்ற சப்தத்தின் பொருளாகும். ஸீதை தன்னை ஆச்ரயித்த படியினால், ஆச்ரயித்த ஜனத்தை நாம் ரக்ஷிக்கவில்லையே என்றும் ராமன் தாபத்தை அடைகிறார்.

अर्धो वा एष: आत्मनः यत्पत्नी (அர்த்தோ வா ஏஷ: ஆத்மந: யத் பத்நீ) என்ற ரீதியாக, புருஷனுடைய பாதி சரீரமாக ஸ்த்ரீயைச் சொல்லியிருப்பதினால், நமது பாதி உடலான ஸீதையை நாம் ரக்ஷிக்காமல் ஆகிவிட்டோமே! இனி அக்னிஹோத்ரம் முதலிய கர்மாக்களை நாம் எவ்விதம் செய்கிறதென்றும் தாபத்தை அடைகிறார். அதிஸுந்தரியானதினால், அந்த ஸீதையை நினைத்து நினைத்து மன்மத தாபம் அதிகமாக ஆகிறபடியினால் அதனாலும் பகவானான ஸ்ரீராமன் தாபத்தை அடைகிறார்.

இவ்விதம் நான்குவிதமான காரணங்களைக்கொண்டு ராமன் எந்த ஸீதையினுடைய விஷயத்தில் தாபத்தை அடைகிறாரோ, அந்த ஸீதை இவள்தான் என்பதில் ஸந்தேஹமேயில்லை. ராமனுடைய

ஸௌந்தர்யம், அவயவ விசேஷங்கள் எவ்விதமோ, அவ்விதமே ஸீதையினுடைய ஸௌந்தர்யமும் அவயவ விசேஷங்களும் காணப் படுகின்றன. இந்த ஸீதையினுடைய அவயவ ஸௌந்தர்ய விஷயம் எப்படியோ, அப்படியேதான் ராமனுடைய ஸௌந்தர் யாதிகளும், ரூபம், அவயவ ஸந்நிவேசங்கள் இவைகளில் ராமனுக்கு ஸமானமாகவே இந்த ஸ்த்ரீ காணப்படுகிறபடியினால், இவள் ராமனுடைய தர்மபத்னியான ஸீதைதான் என்றும் தீர்மானித்தார்.

தவிரவும்,

अस्या देव्या मनस्तस्मिन तस्य चास्यां प्रतिष्ठितम् ।
तेनेयं स च धर्मात्मा मुहूर्तमपि जीवति ॥

அஸ்யா தேவ்யா மந: தஸ்மிந் தஸ்யசாஸ்யாம் ப்ரதிஷ்டிதம்
தேநேயம் ஸ ச தர்மாத்மா முஹூர்த்தமபி ஜீவதி ॥

ராமனுக்கும் ஸீதைக்கும் அனுராகம் நிகரற்றது. ராமனுடைய ஸமீபத்தில் தான் இந்த ஸீதையினுடைய மனதானது இருந்து வருகிறது. அவ்விதமே ராமனுடைய மனதும் ஸீதையினுடைய ஸமீபத்தில்தான் இருந்து வருகிறது. அதனால் சரீரத்தினால் இருவர் களுக்கும் பிரிவு ஏற்பட்டதுபோல் மூடர்களுக்குத் தோன்றினாலும் மனதினால் இருவர்களுக்கும் கொஞ்சமேனும் பிரிவேயில்லை. அக் காரணத்தைக்கொண்டுதான் ஸீதையைவிட்டுப் பிரிந்து ராமனும் ஜீவிக்கிறார். ராமனைவிட்டுப் பிரிந்து ஸீதையும் ஜீவிக்கிறாள்.

दुष्करं कृतवान रामो हीनो यदनया प्रभुः ।
धारयत्यात्मनो देहं न शोकेनावसीदति ॥

துஷ்கரம் க்ருதவாந் ராம: ஹீநோ யதநயா ப்ரபு: ।
தாரயத்யாத்மநோ தேஹம் ந சோகேநாவஸீததி ॥

ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர், ராம கோஷ்டியில் தான் சேர்ந்த பிறகு ஸீதையை நினைத்து ப்ரலாபிக்கும் ஸமயங்களில், ராமனும் இவ்விதம் ஸ்த்ரீ நிமித்தமாக ப்ரலாபிக்கின்றாரே, பரம தீரனான ராமனுக்கு அது உசிதமாகுமா? என்று நினைத்ததுண்டு. இப்பொழுதோ ஸீதையைப் பார்த்தவுடன் ஸீதையை விட்டுப்

பிரிந்த ராமன் ஸீதை நிமித்தமாக ப்ரலாபித்தது மாத்ரம் போதாது; தன் சரீரத்தைக்கூட த்யாகம் செய்திருக்க வேண்டும் என்றும் எண்ணுகிறுர். ஸீதையினுடைய ஸௌந்தர்யாதிசயத்தைப் பார்த்தால் ராமன் இவளை விட்டுப் பிரிந்த அடுத்த க்ஷணத்திலேயே சரீரத்தை த்யாகம் செய்திருக்க வேண்டும். அந்த த்யாகம் ஸீதைக்கும் வராதா என்று கேட்கக் கூடாது. ஸீதையினுடைய சரீரமோ, ஸீதையினுடையதல்ல; ராமனுடையதே. ராமனுக்கல்லவா ஸீதையினுடைய சரீரம் உபபோக்யமாகும். ராமனை விட்டுப் பிரிந்தும் ஸீதைக்கு தன்னுடையது போல் தோன்றுகிற சரீரத்தில் ஸ்வாதந்த்ரியம் இல்லாததினுல்தான் தன் சரீரத்தை த்யாகம் செய்யாமல் துக்கத்தை ஸஹித்துக் கொண்டிருந்தாள் என்பது ந்யாயமாகும். ராமனுக்கோ தன் சரீரத்தில் தனக்கு ஸ்வாதந்த்ரியம் இருப்பதினுல் ஸீதையை விட்டுப் பிரிந்தவுடன் தன சரீரத்தை த்யாகம் செய்யாமல் ஜீவித்துக் கொண்டிருக்கிறுர் என்பதுண்டே அது மற்றவர்களால் செய்ய முடியாததான கார்யமாகும். ஸீதையை விட்டுப் பிரிந்த ராமன் தேஹத்தை தரித்துக் கொண்டிருப்பது என்பது மிகவும் அசக்யமானது ராமன் ப்ரபுதான். யானைகளோ, குதிரைகளோ இவைகளை சிக்ஷிப்பதில் ஸமர்த்தர்தான். ப்ரணயதாரையின் முதலாவதான அம்சங்கூட ராமனுக்குத் தெரியாதோ என்று ஊஹிக்கவேண்டியதா யிருக்கிறது. அளவுக் கடங்காத அழகு பொருந்திய ஸீதையை விட்டுப் பிரிந்தும் அவர் சரீரத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறுர் என்பதே தான் அதன் காரணமாகும், இதனுல் ஸீதையினுடைய ஸௌந்தர்யாதிசயமானது ப்ரம்மாதி தேவர்களாலும் இவ்வளவு தான் என்று நிர்ணயிக்க முடியாதது என்பது தீர்மானமாகிறது.

இவ்விதம் ஸீதையைக் கண்டுவிட்டு ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் மனதினுல் ராமனை ஸ்மரணம் செய்தார். தன் புத்தியில் ஸன்னிஹிதமான ராமனை ச்லாஹித்துப் பேசினுர். "ஸ்ரீ ராமா, உன்னுடன் மறுபடியும் சேருவதற்கு உபயுக்தமாக பாதிவ்ரத்யத்திலிருந்தும் கொஞ்சங்கூட நழுவாமல், ஸீதை இருப்பதினுல், நீ மஹா பாக்யம் செய்தவன்" என்று ஸ்தோத்ரம் செய்தார். இவ்விதமான ஸுந்தரியை விட்டுப் பிரிந்த ராமனுக்கு மஹத்தான சோகம் ஏற்பட்டதே. அது மிகவும் யுக்தந்தான் என்றும் ச்லாஹித்தார்.

இவ்விதம் ஸீதையைப் பார்த்து பரம ஆச்சர்யத்தை அடைந்த ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர், கொஞ்ச காலம் த்யானம் செய்து விட்டு,

मान्या गुरुविनीतस्य लक्ष्मणस्य गुरुप्रिया ।
यदि सीतापि दुःखार्ता कालो हि दुरतिक्रमः ॥

மாந்யா குருவிநீதஸ்ய லக்ஷ்மணஸ்ய குருப்ரியா ।
யதி ஸீதாபி துக்கார்த்தா காலோ ஹி துரதிக்ரம: ॥

ஆசார்ய புருஷர்களுடைய ஸமீபத்தில் அநேக காலம் சிக்ஷை பெற்ற லக்ஷ்மண ஸ்வாமிக்கு பூஜ்யையாகவும், ஸர்வ தேவதைகளுக்கும் முன் நிற்கும் தெய்வமான ஸ்ரீ ராமனுக்கு ப்ரியையாகவும் உள்ள ஸீதா தேவியே இவ்விதம் துக்கப்படுவாளேயானால் காலமானது யாரையும் விடாது என்பது ஸித்தமாக ஆகிறது. ராமனுடைய பராக்ரமத்தையும், லக்ஷ்மணனுடைய பராக்ரமத்தையும் அறிந்தவளானதினால் ஸீதையானவள் என்றும் தனக்கு ராவணனிடமிருந்து கட்டாயம் விமோசனம் ஏற்படுமென்ற தைர்யத்தினால் ஜீவித்துக்கொண்டிருக்கிறாள். வர்ஷ ருதுவில், அதாவது மழை காலத்தில், மேகங்கள் அபரிமிதமாக வர்ஷித்தாலும் க்ஷுத்ரமான நதிகள் கலக்கத்தை அடையுமன்றியில் கங்கா நதியானது க்ஷோபத்தை அடையாது. அதுபோல் ஸீதா தேவியானவள் பதிவ்ரதா சிரோமணியானதினால் கொஞ்சமேனும் இவ்விதமான ராமனை விட்டுப் பிரிந்திருக்கும் துக்க காலத்திலும் க்ஷோபத்தை அடையவில்லை. இந்த ஸீதையினுடைய நிமித்தம்தான் மஹா பராக்ரமசாலியான வாலியும் ராமனால் கொல்லப்பட்டு பரலோகத்தை அடைந்தான். ராவணனுக்கு ஸமானமான பராக்ரமத்தோடு கூடின கபந்தனும் இந்த ஸீதையினுடைய நிமித்தமாகத்தான் ஸ்ரீ ராமனால் வதிக்கப்பட்டான். அதுபோலவே பயங்கரமான பராக்ரமத்தோடு கூடின விராதனே பதினாலாயிரம் ராக்ஷஸர்களோடு கூடிய கரன், தூஷணன், த்ரிசிரஸ் முதலிய ராக்ஷஸர்களோ, ராமனால் கொல்லப்பட்டு நாசத்தை அடைவதற்கு இந்த ஸீதைதான் மூலகாரணமாக ஆவாள், ஸுக்ரீவன் கிஷ்கிந்தா ராஜ்யத்தை அடைந்ததற்கும் இந்தப் பரதேவதையே காரணம். நான் இந்த அபாரமான

ஸமுத்ரத்தைத் தாண்டி வந்ததற்கும் இந்த தேவியினுடைய அனுக்ரஹம்தான் மூலகாரணமாக ஆகும். ஸ்ரீ ராமன் ஸமுத்ரத்தினால் சூழப்பட்ட இந்த பூமியை தலைகீழாகக் கவிழ்த்து வைத்தாலும் இந்த தேவியினுடைய விஷயத்தில் அது உசிதமாகத்தான் ஆகும். மூன்று லோகங்களில் உள்ள ஸ்வராஜ்யமும் இந்த ஸீதையின் விஷயத்தில் உள்ள லாபத்தினால் பதினான்கிலோர் அம்சத்திற்குக்கூட ஈடாகாது.

இந்த தேவியோ மிதிலாபுரியில் ஜனக மஹாராஜன் யாகம் செய்வதற்காக தங்கக் கலப்பையில் பசுக்களைக் கட்டி யக்ஞ பூமியை உழுது சுத்தம் செய்யும்பொழுது கலப்பையினுடைய முகத்தினின்றும் உண்டானவள். அதனால்தான் ஸீதையென்ற பெயரும் ஏற்பட்டது. இவள் அயோனிஜை. பரம தர்ம சீலனான தசரத சக்ரவர்த்தியினுடைய நாட்டுப் பெண்ணாகவும் இந்த ஜகதீச்வரியானவள் ஆகும் படியான பாக்யத்தைச் செய்தாள் தர்ம ஸ்வரூபியான ராமனுடைய பத்னியாகவும் ஏற்பட்டாள், ஆகிலும் ஸமஸ்தமான போகங்களையும் இழந்து விட்டு நிர்ஜனமான அரண்யத்திற்கும் ராமனிடத்திலுள்ள ப்ரீதி வசத்தினால் வந்து சேர்ந்தாள். அரண்யத்திலும் பர்த்தாவிற்கு சுச்ரூஷைகள் செய்துகொண்டு பலமூலங்களைக் கொண்டே த்ருப்தியை அடைந்து, தான் ராஜ்யத்தில் இருந்தால் எவ்வளவு ஸந்தோஷமாக இருப்பாளோ, அவ்வளவு ஸந்தோஷமுள்ளவளாகவே அரண்யத்திலும் ஸ்ரீ ராமனுடைய ஸந்நிதியில் இருந்து வந்தாள்.

அவ்வித மஹிமையுள்ள இந்த ஸீதையோ ‘ஆபத்து’ என்ற சப்தத்தைக்கூட காதினால் கேட்டிருக்க முடியாது. அவள் இப்பொழுது கஷ்டத்தை அனுபவிக்கிறாள். இந்த நிமிஷமே ஸ்ரீ ராமன் வந்து இந்த ஸீதையைப் பார்க்கவேண்டும். மறுபடியும் இந்த ஸீதையை ராமன் அடைந்து ஸந்தோஷத்தை அடையத்தான் போகிறார். ராமனுடைய ஸமாகமத்தை எதிர்பார்த்துக் கொண்டு தான் இந்த ஸீதையும் தன் சரீரத்தை வைத்துக்கொண்டிருக்கிறாள். ஸீதைக்கோ இந்த அசோகவனத்திலுள்ள வ்ருக்ஷங்களிலோ, புஷ்ப பலங்களிலோ, ராக்ஷஸிகளிடமோ, த்ருஷ்டி

செல்லவேயில்லே. ராமனிடத்திலேயே ஏகாக்ரமான சித்தத்தோடு தன்னுடைய ஸகலமான பாவங்களேயும் அர்ப்பணம் செய்து த்யானம் செய்து வருகிருள்.

भर्ता नाम परं ार्या भूषणं भूषणादपि ।
एषा तु रहिता तेन भूषणार्हा न शोभते ॥

பர்த்தா நாம பரம் நார்யா பூஷணம் பூஷணுதபி ।
ஏஷா து ரஹிதா தேந பூஷணர்ஹா ந சோபதே ॥

உலகில் உத்தம ஸ்த்ரீகளுக்கு எவ்விதமான அலங்காரங்கள் ஏற்பட்டிருந்தாலும்கூட எல்லாவற்றையும் காட்டிலும் தனது பர்த்தா தான் தனக்கு பெரிய ஆபரணமாக அவர்களுக்குத் தோன்றும். இந்த ஸீதையும் உத்தம ஸ்த்ரீயானதினுல் ராமனுகிற பர்த்தாவை விட்டுப் பிரிந்திருக்கும்பொழுது கொஞ்சமேனும் சோபை இல்லாதவளாக விளங்கி வருகிருள்

दुष्करं कुरुते रामः हीनो यदनया भुः ।
धारयत्मनो देहं न दुःखेनावसीदति

துஷ்கரம் குருதே ர மஃ ஹீநோ யதநயா ப்ரபு : ।
தாரயத்யாத்மநோ தேஹம் ந துக்கேநாவஸீததி ॥

ஸ்ரீ ராமனே இந்த ஸீதையை விட்டுப் பிரிந்த ஸந்தர்ப்பத்திலும் அதாவது பரம துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருக்கும் காலத்திலும் அந்த துக்கத்தினுல் தனது தேஹத்தை த்யாகம் செய்யாமலிருக்கிருர் என்பது யாதொன்று உண்டோ, அது அன்யர்களால் அனுஷ்டிக்க முடியாததான க்ருத்யமாகத்தான் ஆகும். அளவு கடந்த ஸௌந்தர்யத்தோடு கூடின இந்த ஸீதையை விட்டுப் பிரிந்தும் ராமன் ஜீவித்துக்கொண்டிருக்கிருர் என்பது ராமனுக்குத் தான் ஸாத்யமாகுமன்னியில், மற்ற புருஷர்களுக்கு ஸாத்யமாகாது. கேவல ஜீவனுக்கு தன்னுடைய சரீரத்தில் ஸ்வாதந்த்ரியம் இல்லாதது போலவே ஸர்வேச்வரனுன ஸ்ரீ ராமனுக்கும் தன்னுடைய சரீரத்தினுடைய ஸ்வீகார பரித்யாகத்தில் ஸ்வாதந்த்ரியம் கிடையாது

அதற்குக்காரணமோ हीनो यदनया प्रभुः (ஹீநோ யதநயா ப்ரபு:) என்ற வாக்யத்தினுல் ப்ரகாசிப்பிக்கப்படுகிறது. अनया (அனயா) = பராசக்தி ஸ்வரூபமான இந்த ஸீதையினுல், यत (யத்) = யாதொரு காரணத்தினுல், रामः (ராம:) = ராமனுனவர், हीनः (ஹீந:) = பிரிந்துவிட்டாரோ, (அதாவது சக்திரஹிதனுக ஆகி அக்காரணத்தினால்), अप्रभुः (அப்ரபு:) = என்று பதச்சேதம் செய்து கொள்ளவேண்டும். தனக்கு தன் சரீரத்தினுடைய ஸ்வீகார பரித்யாகத்தில் கூட ஸாமர்த்யம் இல்லாதவராக ஆகிவிட்டார். கர்ம பரதந்த்ரனுன ஜீவனைப்போல் சொல்லக்கூடிய நிலைமைக்கு ராமனும் ஆகிவிட்டாரோ என்று தோன்றக்கூடியதாக இருக்கிறது தன் சரீரத்தில் ராமனுக்கு ஸ்வாதந்த்ரியம் இருந்தால், இந்த ஸீதையை விட்டுப் பிரிந்தும், தன் தேஹத்தை அவர் தரித்துக் கொண்டிருக்க மாட்டார் தேஹத்தை தரிக்கிறபடியினுல், தன் தேஹத்திலும் அவருக்கு ஸ்வாமித்வம் இல்லையென்றுதான் தோன்றுகிறது சக்தியை விட்டுப் பிரிந்தால் சிவனும் அசிவனுவான் என்ற ந்யாயமும் ப்ரக்ருதத்தில் அனுகூலமாகவே ஏற்படுகிறது ஸீதையை விட்டு ராமன் பிரிந்ததற்கு காரணத்தையும் துஷ்கரம் குருதே என்ற வாக்யமானது வெளிப்படுத்துகின்றது.

துஷ்க என்ற பதத்தினு துஷ்டனென்ற அர்த்தத்தையும், ரங்கு என்ற சப்தத்தினுல் மான் என்ற அர்த்தத்தையும் க்ரஹித்துக் கொண்டால், மான் வேஷத்தை க்ரஹித்துக்கொண்டு வந்த துஷ்ட ராக்ஷஸனுன மாரீசன் என்ற தாத்பர்யமானது வெளியாகிறது. ருதம் என்றதினுல் சப்தம் என்ற அர்த்தத்தை க்ரஹித்துக்கொள்ள வேண்டும். மாயா ம்ருகவேஷதாரியான மாரீசனை ஸ்ரீ ராமச் சந்த்ரமூர்த்தியானவர் வதம்செய்யும் காலத்தில் ராம நாமாவினுல் அலங்கரிக்கப்பட்ட பாணத்தினுல் அடிபட்ட காரணத்தைக் கொண்டு மாரீசனுடைய ஸ்வரமும் ராமனுடைய குரலைப் போல் ஸாரூப்யத்தை அடைந்த காரணத்தினுல் ஏற்பட்டு விட்டது. அந்த மாரீசன் ராக்ஷஸ சரீரத்தை விடும் காலத்தில் "ஹா ஸீதே, ஹா லக்ஷ்மண" என்று கதறினுன். அந்த சப்தமானது ஸீதையின் காதில் பட்டவுடன்! ராமனைத்தான் யாரோ ஹிம்ஸை செய்து விட்டார்களோ என்ற பயத்தினுல் லக்ஷ்மணனை ராமனுடைய

மார்க்கத்தை அனுஸரித்துப் போகும்படி செய்துவிட்டாள். ஆச்மத்தில் ஸீதை தனியாக இருக்கும்படி நேர்ந்து விட்டது. அக்காரணத்தைக்கொண்டு ராவணனும் அபஹரித்து விட்டான் அதிலிருந்துதான் ஸீதைக்கு ராமனை விட்டுப் பிரிதலும், ராமனுக்கு ஸீதையை விட்டுப் பிரிதலும் ஏற்பட்டது என்ற கதையும் ப்ரஸித்தமானது. இதனால் ஸீதையைவிட்டு ராமன் பிரிந்ததற்கு மாயையினால் மான் வேஷம் தரித்துக்கொண்ட மாரீசனுடைய சப்தம்தான் காரணம் என்பது வெளியாகிறதல்லவா? ஸீதையை விட்டுப் பிரிந்ததும் சக்தியைவிட்டுப் பிரிந்த புருஷனாகிவிட்டார். கர்ம பரதந்த்ரனான ஜீவனுடைய ஸாம்யமும் ஏற்பட்டு விட்டதோ என்று நினைக்கக்கூடியதாக ஆகிவிட்டது. அதனால்தான் அளவுக்குட்படாத ஸௌந்தர்யத்தை அடைந்த இந்த ஸீதையை விட்டுப் பிரிந்தும் न जीवेयं क्षणमपि विनातां असितेक्षणां । (ந ஜீவேயம் க்ஷணமபி விநாதாம் அஸிதேக்ஷணாம்) என்று ஒரு க்ஷணகாலம் கூட ஸீதையை விட்டு நான் பிரிந்திருந்தால் ஜீவிக்கமாட்டேன் என்று ப்ரதிக்ஞை செய்யும் ராமன் ப்ரக்ருதத்தில் தேஹத்தை தரித்துக் கொண்டிருக்கிறார் என்று கவியானவர் ஆஞ்ஜநேயருடைய வாக்ய மூலமாக துஷ்கரம் குருதே என்ற ச்லோகத்தினால் உத்ப்ரேக்ஷை செய்கிறார்.

தவிரவும், न दुःखेनावसीदति (ந துக்கேநாவஸீததி) என்ற வாக்யத்தில் इति न (இதி ந) = கஷ்டப் படவில்லை என்பது இல்லை; கஷ்டத்தைத்தான் ஸ்ரீ ராமனும் அனுபவிக்கிறார் என்ற தாத்பர்யத்தை வைத்துக்கொண்டு முன் அர்த்தத்தை அன்வயித்துக் கொள்ள வேண்டும். இப்பொழுதோ துக்கேந என்று த்ருதீயாந்தமாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். இந்த ரீத்யாக இந்த ச்லோகத்திற்கு ஏற்படும் தாத்பர்யத்தை அடியிற் கண்டபடி அறியவும்.

ஸீதையை விட்டுப் பிரிந்த கஷ்டத்தினால் ராமன் துக்கப்படவே இல்லை. தைர்யமாகத்தான் இருந்து வருகிறார். அதன் காரணத்தை धारयत्यात्मनो देहं (தாரயத்யாத்மநோ தேஹம்) என்ற வாக்யமானது வெளிப் படுத்துகிறது. ராமனோ, வைகுண்டத்திற்கதிபதியான மஹா விஷ்ணுவென்றே ஆங்காங்கு ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது விஷ்ணுவிற்கோ, புருஷஸூக்தத்தில் சொல்லியபடி சேதன, அசேத

த்மகமான ஸகல ஜகத்தும் சரீரமாக ஏற்படுகிறது. விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திலும், சித், அசித் இரண்டையும் சரீரமாக உடையவனே பரமாத்மா என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது ப்ரக்ருதத்தில் ராமனை விஷ்ணு என்ற பாவனையோடு. இந்த ச்லோகத்திற்கு அர்த்தம் செய்கின்ற வித்வான்களுக்கு ஆத்மனோ தேஹம் என்ற பதத்தினால், தன்னுடைய விராட் சரீரத்தில் அந்தர்பூதமாக ஸம்பந்தப்படாத வஸ்துவே வேறொன்றுமில்லை. தன் சரீரத்திற்குள்ளேயே சேதனாசேதன ப்ரபஞ்சம் அடங்கி விட்டது. அப்படியிருக்கும்பொழுது, ஸீதையை அபஹரித்த ராவணன், ராவணனால் அபஹரிக்கப்பட்ட ஸீதை, லங்கா நகரம், அசோகவனம், ஸமுத்ரம் இவைகளெல்லாம் தன்னுடைய தேஹத்திற்குள் அடங்கிவிட்டபடியினால் ராவணன் ஸீதையை அபஹரித்தாலும், தன் தேஹத்திற்கு வெளியில், தன்னைவிட்டு ஸீதை பிரிந்துவிட்டாள் என்று சொல்ல அவகாசமுண்டா? ஆகையினால், மஹாவிஷ்ணுவான ராமன் சேதனா சேதனாத்மகமான ப்ரபஞ்சத்தை சரீரமாக உடைத்தாயிருக்கும் காரணத்தினால் ஸீதையும் தனது சரீரத்திற்குள் அந்தர்கதையாக இருந்து கொண்டு நேரில் தர்சனம் முதலிய ஸம்பந்தங்களும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் காரணத்தினால், ப்ராக்ருத புருஷர்களுடைய த்ருஷ்டியை அனுஸரித்து ஸீதையைவிட்டுத் தான் பிரிந்தவன் போல் தோன்றினாலும், அதற்காக தன் த்ருஷ்டியை அனுஸரித்தும், தன்னுடைய தத்வத்தை அறிந்த வித்வத் த்ருஷ்டியை அனுஸரித்தும் ராமன் கொஞ்சமேனும் கஷ்டப்படவில்லை என்பது ந்யாயம்தான்.

**रामो हीनः यदनया** (ராமோ ஹீநநः யதநயா ப்ரபு:) என்ற இதிலும் முன்சொன்ன காரணத்தையே கொண்டு **अहीनः** (அஹீநः) என்று பதச்சேதம் செய்துகொண்டு சக்தியோடு எப்போதும் சேர்ந்தே இருக்கும் காரணத்தினால் ராமன் எப்பொழுதும் ஸர்வ கார்யத்தையும் நிர்வாக செய்வதில் ஸமர்த்தன் என்பது வெளியாகிறது.

ஸர்வ ப்ராகாரத்திலும் புருஷாகார ரூபமான ஸீதையென்ற சக்தியினுடைய ஸம்பந்தம் ராமனுக்கில்லாமலிருந்தால் ஸீதை

யில்லாமலிருக்கும் ஸமயத்தில் வாலியைக் கொல்லும்படியான ஸாமர்த்யத்தை எப்படி அடைந்தார்? ராவணனைத்தான் எவ்விதம் கொன்ருர்? என்ற கேள்விகளுக்கு அவகாசம் ஏற்படக்கூடும் மேற்சொன்ன தாத்பர்யத்தைக் கொண்டுதான் இதற்கு ஸமாதானம் செய்து கொள்ளவேண்டும். அதனுல் தான் ராமனுடைய மஹிமையைப்பற்றி ஆச்சர்யப்பட்டுக்கொண்டு துஷ்கரம் குருதே ராம: என்று ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் சொல்லுகிருர். ராமன் தன்னுடைய அவதாரத்தில் செய்த கார்யங்களோ அமானுஷமான க்ருத்யங்களாகும். அன்னியர்களால் ஒரு ஸமயத்திலும் செய்ய முடியாது. அதற்கு உதாஹரணம் ப்ரக்ருதத்திலேயே பார்த்துக்கொள்ளலாம். கரவதம், ராவண வதம் முதலியதைகளெல்லாம் அமானுஷமான க்ருத்யம் என்பது கூடப் பிறகே சொல்லவேண்டும். பாஹ்ய த்ருஷ்டிக்கு ஸீதையை விட்டுத் தான் பிரிந்தது போலவும், அந்தர்ஷ்டிக்குத் தான் எப்போதும் ஸீதையை விட்டுப் பிரியாமல் ஸீதாஸமேதனுகவே இருப்பதாகவும், யோகமாயையைத் தன் வசத்தில் வைத்துக்கொண்டு நடித்துக் காட்டுவது ஒன்றே ராமனுடைய அமானுஷ க்ருத்யம் என்பதற்கு உதாஹரணமாகப் போதா? என்ற தாத்பர்யமும் மேற்சொன்ன ச்லோகத்தில் த்வனிப்பதை வித்வான்கள் அறிந்து கொள்ளவேண்டும். இந்த தாத்பர்யத்தை ஞ்ஜநேய ஸ்வாமியானவர் மனதில் வைத்துக் கொண்டுதான்

अस्या देव्या मनस्तस्मिन् तस्य चास्यां प्रतिष्ठितम् ।
तेनेयं स च धर्मात्मा मुहूर्तमपि जीवति ॥

அஸ்யா : தேவ்யா : மநஸ்தஸ்மின் தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம் ।
தேநேயம் ஸ ச தர்மாத்மா மூஹூர்த்தமபி ஜீவதி ॥

என்று ஸீதையைக் கண்டமாத்ரத்தில் சொல்லியிருக்கிருர்

दुष्करं कुरुते (துஷ்கரம் குருதே) என்ற ச்லோகத்திற்கு மற்ருெரு அபிப்ராயத்தையும் அறியவேண்டும்.

दुष्करं कुरुते सति रामः अनया हीनोपि प्रभुः भवति, अतएव दुःखे सत्यपि आत्मनः देहं धारयति न अवसीदति च (துஷ்கரம் குருதே ஸதி ராம: அநயா ஹீநோபி ப்ரபு: பவதி, அத ஏவ துக்கே ஸத்யபி ஆத்மந: தேஹம் தாரயதி ஆவஸீததி ச) என்ற ப்ரகாரம்

அந்வயித்துக்கொண்டு அர்த்தத்தை அறியவேண்டும்.

ரங்கு (ரங்கு) என்ற பதம் மான் என்பதைக் குறிப்பிட்டுக் காட்டும், மானினுடைய ஸ்வபாவமோ ஸங்கீதத்தைக் கேட்டு வலையில் அகப்பட்டுக்கொண்டுவிடும். இதற்கு ஸமானமாக ரூப, ரஸ, கந்த, ஸ்பர்ச, சப்தம் என்ற விஷயாதிகளில் மனதைப் பரி கொடுத்து அதனல் தனது ஆத்மஸ்வரூபத்தை அறியாத ப்ராக்ருத ஜனங்களை ப்ரக்ருதத்தில் ரங்கு என்ற சப்தத்தால் அறிந்துகொள்ள வேண்டும் ப்ராக்ருத ஜனங்களோ அக்ஞானம் என்ற தோஷத் தோடும், ராக-த்வேஷங்களோடும், காமக்ரோதாதிகளோடும் கூடிக் கொண்டிருக்கும் காரணத்தால் துஷ்கரங்கு (துஷ்கரங்கு) என்றும் சொல்லப்படுவார்கள். அந்தப் ப்ராணிகளுடைய ருதம் என்ருல் பொதுவாக சப்தம் என்று காட்டினலும், அவர்கள் ஒருவருக் கொருவர் பேசிக்கொண்டிருக்கும் காலத்தில், ஸங்கேதமாகவோ, ஸ்தோபமாகவோ, ஹேளனமாகவோ, யத்ருச்சையாக ஸம்பாஷணத்தினுடைய மத்தியில் ஸம்பவிக்கும் ஸ்ரீ ராகவனுடைய தாரக நாமத்தையே ப்ரக்ருதத்தில் ருதம் என்ற சப்தத்தால் க்ரஹிக்க வேண்டும். அதாவது, அவித்வத் ஜனங்களால் யத்ருச்சையாகச் சொல்லப்படும் பகவானுடைய நாமாவாகும். அந்த சப்தத்தை பகவான் கேட்ட மாத்ரத்தில் பகவானன ஸ்ரீ ராமன் யோகமாயா ரூபிணியான ஸீதா தேவியைவிட்டுப் பிரிந்து நாம ஸங்கீர்த்தனம் செய்த பக்தனுக்கு, மாயா ஸம்பந்தமில்லாத நிர்விசேஷமான தன் ஸ்வரூபத்தைத் தர்சனம் கொடுத்து, ஸம்ஸார ஸாகரத்திலிருந்தும் அவனைக் கரையேற்றி விடுவதில் ஸமர்த்தராகிருர். தன் திரு நாமத்தை ஸங்கீர்த்தனம் செய்த பக்தர்களின் விஷயத்தில், நிர் விசேஷமாக தன் ஸ்வரூபத்தைத் தர்சனம் கொடுப்பதற்கு மூல ப்ரக்ருதியை விட்டுத் தான் பிரிந்து ப்ரகாசிக்கும் சக்தியுள்ளவராக இருந்து பழக்கமுள்ளவரானதால், ப்ரக்ருதத்திலும் (மனித அவதாரத் திலும்) தான் ப்ரம்மமாக இருந்த காலத்தில் ப்ரக்ருதியைவிட்டுப் பிரியும் பழக்கத்தை முன்னிட்டு, இப்பொழுது ஸீதையை விட்டுப் பிரியும்படி நேர்ந்தாலும் தன்னுடைய சரீரத்தையும் விட்டுவிடாம லிருந்து வருகிருர்; தைர்யத்துடனும் விளங்கிவருகிருர்.

இதனல், அபக்தர்களுடைய விஷயத்தில் மாயா சபலிதனுக விளங்கிவருகிறதும், பக்தர்களுடைய விஷயத்தில் மாயையை

விட்டுப் பிரிந்து சுத்த ஸ்வரூபத்துடன் விளங்கிவருகிறதும் பரப்ரம்மத்தினுடைய ஸ்வாபாவிக தர்மமானதினால், ப்ரக்ருத ஸந்தர்ப்பத்தைக் கவனிக்கும் காலத்தில் ராமன் ஸகல வேதாந்தங்களாலும் கூறப்படும் சுத்த பரப்ரம்மமே என்று அறிந்து ஆஞ்ஜனேயர் மகிழ்ந்தார் என்ற தாத்பர்யமும் வெளியாகிறது.

ஸீதையையும் பார்த்துவிட்டு, ஸீதையினுடைய ஸமீபத்தில் ஸீதையை ரக்ஷிப்பதற்காக ராவணனால் ஆக்ஞாபிக்கப்பட்ட அநேக விதமான ராக்ஷஸ ஸ்த்ரீகளையும் ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் பார்வையிட்டார். அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகளோ, விகாரமான ரூபங்களோடும், பார்க்கிறவர்களுக்கு பயத்தை உண்டுபண்ணக் கூடிய ஸ்வபாவத்தோடு கூடினவர்களாகவும் இருந்தார்கள். அவர்களுடைய நடுவில், ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்த காரணத்தினால் ஸீதாதேவி மிகவும் துக்க ஸாகரத்தில் மூழ்கியவளாயும், மிகவும் க்ருசமான சரீரத்தோடு கூடியவளாயும், உபவாஸப்ரயாசவும், அழுக்கடைந்த வஸ்த்ரத்தோடு கூடியவளாயும், எப்போதும் ஸ்ரீராமனுடைய த்யானத்திலேயே ஈடுபட்டவளாயும், தனது பாதிவ்ரத்யத்திற்குக் கொஞ்சமேனும் லோபமில்லாமலும் நடந்து கொண்டு கவலையுடன் இருந்துவந்தாள்,

அவளைப் பார்த்ததும் ஆஞ்ஜநேயஸ்வாமி, நாம் ஸமுத்ரத்தைத் தாண்டி வந்த ச்ரமமானது பயனற்றதாகிவிடுமோ என்று நினைத்தோமே. அது அவ்விதமாகாமல் ஸபலமாகிவிட்டது; அதற்குக் காரணம் இந்த தேவியினுடைய பரிபூர்ணமான அனுக்ரஹம் தான். அக்ஷதையாகவும் தேவியை நாம் கண்டுவிட்டோம். அதுவும் ஸ்ரீராமனுடைய பரம பாக்யோதயமே' என்று மனதில் பரம ஸந்தோஷத்தை அடைந்து. வ்ருக்ஷத்தில் இலைகளின் மறைவில் ஸூக்ஷ்மமான ரூபத்தோடு மறைந்துகொண்டு, 'நாம் ஸீதையினுடைய ஸமீபம் சென்று எவ்விதம் ராமனுடைய வ்ருத்தாந்தத்தைச் சொல்லுவது' என்ற கவலையுள்ளவராக இருந்துவந்தார்.

அன்றைய இரவு அநேகமாக முடிந்து, ப்ரபாத நேரம் வந்துவிட்டது. லங்காநகரத்தில் ஒவ்வொரு ராக்ஷஸர்களுடைய க்ருஹத்திலும் ஏற்பட்ட வேத கோஷங்களைக்கேட்டு ஆஞ்ஜனேயர் பரம ஆனந்தத்தை அனுபவித்தார். ராக்ஷஸ ராஜனான ராவணன் ஸஹித,

மாகத, வந்திகளால் ப்ரபாத காலத்தில் ஸ்துதி மூலமாக எழுப்பப் பட்டு விழித்துக் கொண்டான். விழித்துக்கொண்டதும் ஸீதையி னுடைய நினைவாகவே இருந்த காரணத்தினுல் ஸீதையைப் பார்ப் பதற்கு அசோக வனத்திற்குப் புறப்பட்டான். ராவணனைத்துடர்ந்து அநேக விதமான அந்தப்புர ஸ்த்ரீகளும், தேவ கந்தர்வ ஸ்த்ரீகளும், தங்கமயமான தீவர்த்திகளில் தீப ஜ்வாலையை வ்ருத்தி செய்து கொண்டு வந்தார்கள். சில ஸ்த்ரீகள் 'சமரீ' ம்ருகத்தின் வால் மயிரி னுல் செய்யப்பட்டு, தங்கமயமான பிடிகளால் அலங்கரிக்கப்பட்ட சாமரங்களை ராவணனுக்கு வீசிக்கொண்டு வந்தார்கள். சிலர் தங்கமயமான வெற்றிலைப் பெட்டிகளையும் கையில் க்ரஹித்துக் கொண்டு, ஸுரையினுல் பூர்ணமான தங்கமயமான கும்பங்களையும் கையில் ஸ்வீகரித்துக்கொண்டு ராவணனை அனுஸரித்து வந்தார்கள். தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்ட காரணத்தினுலும், மத்யபானம் செய்த காரணத்தினுலும், சுழல்கின்ற நேத்ரத்தோடு கூடியிருக்கும் காரணத்தினுலும், ஆடி ஆடி விழுந்து கொண்டு மெதுவாக ஸீதையி னுடைய ஸமீபத்திற்கு ராவணன் வந்து சேர்ந்தான். அவ்விதமான அவஸ்தையில் ராவணனைப் பார்த்த ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் இவன்தான் ராவணனுக இருக்கவேண்டுமென்று தீர்மானம் செய்து அவனுடைய கண்ணில் தென்படாமல் இருப்பதில் மிகவும் ஜாகரூக ராக இலைகளின் நடுவில் மறைந்துகொண்டு இருந்தார். ராவணன் பலமான ஆடம்பரத்துடன் ஸீதையினுடைய ஸமீபத்திற்கு வந்த வுடன், ஸீதை அவனைப் பார்த்துவிட்டு பெருங்காற்றில் வாழை மரம் ஆடுவதுபோல் நடுங்கி, மிகவும் பயந்து கஷ்டப்பட்டாள். ராமனுடைய ஸ்வரூபத்தையே த்யானம் செய்துகொண்டு தன் னுடைய மனோரதமாகிய ரதத்தில் ராமனையே தான் அடைய வேண்டுமென்கிற ஸங்கல்பமாகிய குதிரைகளைக் கட்டிக்கொண்டு, அந்த ரதத்திலேறி ராமனுடைய ஸமீபம் போகிறவள்போல், ராவணனுக்கு ஸீதையைப் பார்க்கும் காலத்தில் மனதில் புலப் பட்டது.

தவிரவும், ராவணன் ஸீதையைப் பார்க்கும்போது அவ னுடைய த்ருஷ்டிக்கு, அவள் ஸர்ப்பகன்னிகையைப் போலவும், தூமகேதுவினுல் ஆக்ரமிக்கப்பட்ட ரோஹிணியைப் போலவும்,

ஸம்பவிக்கக்கூடாத அபவாதத்தினால் குறைந்துபோன கீர்த்தியைப் போலவும், அப்யாஸமில்லாத காரணத்தினால் மறக்க ஆரம்பித்த வேத வித்யை போலவும், ச்ரத்தையாகச் செய்யப்படாத பூஜையைப் போலவும், யானையினால் கலக்கப்பட்ட தாமரை ஓடையைப் போலவும், ஸேனாபதியை இழந்த ஸேனையைப் போலவும், புகையினால் மூடப்பட்ட அக்னி சிகையைப் போலவும், ராகுவினால் பக்ஷிக்கப்பட்ட சந்த்ரிகை போலவும், மிகவும் கவலையுள்ளவளாக, க்ஷீணித்துப் போனவளாகப் புலப்பட்டாள்.

## ஸீதா – ராவண ஸம்வாதம்

இவ்விதமான மஹா பதிவ்ரதையான ஸீதையை ராவணன் பார்த்து தன்னுடைய அபிப்ராயத்தை ஸீதையினிடம் தெரிவிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் சில வார்த்தைகளைச் சொன்னான்.

मां दृष्ट्वा नागनासोरू गूहमाना स्तनोदरम ।
अदर्शनमिवात्मानं भयान्नेतुं त्वमिच्छसि
कामये त्वां विशालाक्षि बहुमान्यस्व मां प्रिये ॥

மாம் த்ருஷ்ட்வா நாகநாஸோரு கூஹமாநா ஸ்தநோதரம் ।
அதர்சநமிவாத்மாநம் பயாந்நேதும் த்வமிச்சஸி ।।
காமயே த்வாம் விசாலாக்ஷி பஹுமாந்யஸ்வ மாம் ப்ரியே ।।

'ஹே நாகநாஸோரு! அடி பெருத்து, வரவர சிறுத்து அழகாக விளங்கும் யானையினுடைய தும்பிக்கையைப் போன்ற துடையோடு கூடினவளே! என்னைப் பார்த்த மாத்திரத்தில் மிகவும் பயத்துடன் உன்னுடைய ஸ்தனங்களையும், நாபீதேசங்களையும் மறைத்துக் கொண்டு உன் சரீரத்தின் அழகை நான் பார்க்காமலிருக்கும்படி நீ செய்ய விரும்புகிறாயே. எனக்கோ உன்னிடத்தில் அபிலாஷை அதிகமாக இருந்து வருகிறது. உன்னையே நான் ஆசைப்படுகிறேன். ஹே விசாலாக்ஷி! தாமரையின் தளம்போல் விசாலமான நேத்ரத் தோடு கூடினவளே! என்னை நீ மதிக்கவேண்டும். உன்னை நான் ப்ரியையாக வரித்து விட்டேன்''. இதுதான் மேற்சொன்ன ச்லோகங்

களின் ப்ராதீதிகமான பொருளாகும். அதாவது பஹிர்முகர்களாக உள்ளவர்களுக்கு வாச்யமாகத் தோன்றும் தாத்பர்யமாகும்.

அந்தர்முகர்களான வித்வான்களுக்கு மேற்சொன்ன தாத்பர்யமானது ஸ்புரிக்காது. ப்ரக்ருதமான ஸ்ரீமத் ராமாயணத்தை ஆதி காவ்யமென்றும், அக்காரணத்தைக் கொண்டு காந்தாஸம்ஹிதை யென்றும் முன்பு பல தடவை சொல்லி யிருக்கிறோம். உத்தம காவ்யத்திற்கோ ப்ராதீதிகமான அர்த்தத்தை, அதாவது வாச்யார்த்தத்தை உல்லங்கனம் செய்து ப்ரகாசிக்கும் வ்யங்க்யார்த்தமே ப்ரதானமாகும் அந்த வ்யங்க்யார்த்தமோ, பதகதம், வாக்ய கதம், ப்ரபந்த கதம் என்று பல வகைகளுண்டு மேற்சொன்ன ச்லோகங்களால் ஏற்படும் வ்யங்க்யத்தை, வித்வான்கள், மாத்ஸர்யத்தைக் கொஞ்சமேனும் அடையாமல், நன்றாக அறிந்து ஸந்தோஷிக்க வேண்டும். இதற்கு மூல ப்ரமாணம், "மஹேச்வர தீர்த்தியம்" என்ற வ்யாக்யானம். கோவிந்த ராஜீய வ்யாக்யானத்தை விரும்பாது ஆக்ரஹம் உள்ளவர்களும் இந்த ஸுந்தரகாண்டத்தில், 'த்ரிஜடா ஸ்வப்ன' ஸர்க்கத்தில் पक्षी च शाखानि लयः प्रहृष्टः (பக்ஷீ ச சாகாநிலய: ப்ரஹ்ருஷ்ட:) என்ற ச்லோக வ்யாக்யான ஸந்தர்ப்பத்தில், இந்த ஸ்ரீமத் ராமாயணத்தை ஸ்ரீ கோவிந்தராஜாசார்யர்கள் எவ்விதமாக உபயோகப்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதைக் குறிப்பிட்டிருப்பதைப் பார்த்து அறிந்து கொள்ளவும். வ்யங்க்யார்த்தம் தான் ராமாயணத்திற்குச் சொல்ல வேண்டுமென்று வ்யாக்யானத்தை அபேக்ஷிக்காமல் வால்மீகியினுடைய ச்லோகங்களுக்கு அர்த்தம் சொல்லும்படியான சக்தி உள்ள ஸ்வதந்த்ரப்ரக்ஞர்களாக மனிதர்களை ஒருக்காலும் சொல்லவே முடியாது. வ்யாக்யாதாக்களுடைய ரீதியை அனுஸரித்து ஸ்ரீமத் ராமாயணத்திற்கு அர்த்தம் சொல்லும்படியான புத்தி ஏற்படுவதே ராமானுக்ரஹத்தால்தான் என்று தீர்மானிக்கவேண்டும். ஆகையினால், வ்யாக்யாதாக்களுடைய உத்தம காவ்யம் என்பதை முன்னிட்டும், மேற்சொன்ன ச்லோகங்களுக்கு வ்யங்க்ய மர்யாதையை அனுஸரித்துப் பொருள் வர்ணிக்கப்படுகிறது.

மேற்சொன்ன ச்லோகங்களில் नागनासोरू (நாகநாஸோரு) என்று ராவணன் ஸீதையைப் பார்த்து ஸம்போதனம் செய்கிறான். அதனுடைய தாத்பர்யத்தை அறியவும். नाग (நாகம்) என்றால் யானை என்றும், नासः (நாஸ:) என்றால் துதிக்கை என்றும், नागस्य नास इव नसः (நாகஸ்ய நாஸ இவ நாஸ:) என்ற ஸமாஸத்தினால் யானையினுடைய தும்பிக்கையைப் போன்ற தும்பிக்கையோடு கூடினவன் என்ற பொருள் விளங்குகிறபடியினால் மஹாகணபதி என்ற தத்வத்தை नागनासः (நாகநாஸ:) என்ற சப்தத்தினால் அறிந்துகொள்ள வேண்டும். नागनासः ऊर्वो यस्याः सा नागनासोरूः तस्याः संबुद्धिः नागनासोरू (நாகநாஸ: ஊர்வாம் யஸ்யா: ஸா நாகநாஸோரு தஸ்யா: ஸம்புத்தி: நாகநாஸோரு) என்று பிரித்துக் கொண்டால் தன் துடையில் மஹாகணபதியை வைத்துக்கொண்டிருக்கும் தேவதை என்ற பொருள் வெளியாகிறது.

பரமசிவனுக்கு மகாகணபதி யென்றும், ஷண்முகனென்றும், இரு குமாரர்களென்று யாவரும் அறிந்த விஷயம் இந்த இரு குமாரர்களும் மஹா கைலாஸத்தில் தாயாரான பார்வதியினுடைய ஸமீபத்தில் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது, துர்வாஸ மஹர்ஷியானவர், பார்வதியினுடைய தர்சனத்திற்காக வந்து சேர்ந்தார். வரும்பொழுது, रिक्तहस्तेन नोपेयात् राजानं दैवतं गुरुं (ரிக்த ஹஸ்தேந நோபேயாத் ராஜாநாம் தைவதம் குரும்) என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து துர்வாஸ் மஹர்ஷியானவர். அழகான ஒரு பெரிய மாதுளம் பழத்தை, பார்வதியினுடைய சரணாரவிந்தத்தில் ஸமர்ப்பித்து நமஸ்கரித்தார். இதைப் பார்த்த இரு குமாரர்களும் தனக்குத்தான் அந்தப் பழத்தைத் தரவேண்டுமென்று தாயை வற்புறுத்தினார்கள். பழத்தை இரண்டு பாகமாகச் செய்து கொடுப்பதில் ஒருவருக்கும் ஸம்மதமில்லை அந்த ஸந்தர்ப்பத்தில் தாயான பார்வதி, 'உங்களிருவர்களில் யார் பூமியைப் ப்ரதக்ஷிணம் செய்து முதலில் வருகிறார்களோ அவர்களுக்குத் தருகிறேன் என்று சொல்லிவிட்டாள்.

ஷண்முகனோ, உடன் பரம உத்ஸாகத்துடன் தனது மயில் வாஹனத்தின் மீதேறி பூமியை ப்ரதக்ஷிணம் செய்யக் கிளம்பி விட்டார். அவர் போயிருக்கும்பொழுது மஹாகணபதி,

கைலாஸத்தின் வாயிலில் நிற்கும் பசுவை ப்ரதக்ஷிணம் செய்து விட்டு 'பூமி ப்ரதக்ஷிணம் முடிந்துவிட்டது; தாயே! மாதுளம் பழத்தை எனக்குக் கொடுத்துவிடு' என்று கேட்டார். அது ந்யாயமாகத் தோன்றியதனால், பார்வதிதேவியும் மாதுளம்பழத்தை மஹாகணபதிக்குக் கொடுத்துவிட்டாள்.

பிறகு ஸுப்ரமண்யர் வெகுகாலம் கழித்து பசி தாகத்துடன் பூமியை ப்ரதக்ஷிணம் செய்துவிட்டு வந்து பழத்தைக் கேட்டார். பார்வதியோ, "கோவினிடத்தில் பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணமான பூமியும் அடங்கியிருக்கிறது; அந்த கோவை கணபதி ப்ரதக்ஷிணம் செய்துவிட்டபடியினால் அவரிடம் பழத்தைக் கொடுத்துவிட்டேன். அது என்னுடைய எதிரில் நடந்த கார்யமானதினால் ஸந்தேஹத் திற்கு அவகாசமில்லை. நீ எங்கேயோ போய்ச் சுற்றிவிட்டு வந்திருக்கிறாய். ப்ரதக்ஷிணம் முடிந்து விட்டதென்பதற்கு யார் சாக்ஷி? ஓரிடமும் விடாமல் நீ ப்ரதக்ஷிணம் செய்துவிட்டா யென்பதை நான் எப்படி நம்புவேன்? பழமும் என்னிடத்திலில்லை. கணபதியினால் புசிக்கப்பட்டுவிட்டது" என்று சொன்னாள். குமார குருவும், அதைக் கேட்ட மாத்திரத்தில் தன்னுடைய பால பாவத்தை சேஷ்டையினால் காட்ட, வெளியில் சுற்றிவந்த ச்ரமத்தினால் பசி, தாகம் அதிகமாக ஏற்பட்டுக் கீழே விழுந்து புரண்டு அழுதார்,

அந்த ஸந்தர்ப்பத்தில் பார்வதி தேவியும், குமாரனை கையினால் எடுத்து அணைத்துக்கொண்டு ஸ்தன்யபானம் செய்துவைத்தாள். மஹாகணபதியும் அதே ஸந்தர்ப்பத்தில், தாயினிடம் ஸ்தன்ய பானத்திற்கு விரும்பிப் போக, குமார குருவானவர் தன்னுடைய மற்றொரு முகத்தால் மற்றொரு ஸ்தன்யத்தையும் பானம் செய்துகொண்டு, மஹாகணபதிக்கு ஸ்தன்யபானத்திற்கவகாசம் கொடுக்காமலே செய்துவிட்டார். அதிலிருந்து இருவர்களுக்கும் பெரிய கலகம் ஏற்பட்டுவிட்டது. பார்வதியோ, மஹா கணபதியைப் பார்த்து "நீதான் இப்பொழுது மிகப் பெரிய மாதுளம்பழத்தைச் சாப்பிட்டிருக்கிறாயே, உனக்கு ஸ்தன்யா பேக்ஷை எப்படி ஏற்படும்? உன் தம்பி குமாரன் பூமி முழுவதும் அலைந்துவிட்டு பசி தாகத்துடன் கஷ்டத்தோடு வந்திருக்கிறான்,

அவனுக்குத்தான் ஸதன்யத்தைக் கொடுக்க வேண்டும். உனக்கு கொடுக்க மாட்டே"னென்று மறுத்து விட்டாள்.

தாய் மறுத்ததைப் பார்த்து மஹாகணபதிக்கு அடக்க முடியாத கோபம் வந்துவிட்டது 'நீ தாயாராக இருந்தால் உன்னுடைய குழந்தைக்கு ஸ்தன்யத்தை மறுப்பாயா? ஆகையினால் நீ எனக்கு தாயாரே இல்லை' என்று மஹாகணபதியானவர் கூறி விட்டு, 'நான் எங்கேயாவது வெளியில் போகிறேன்' என்று தன்னுடைய மாதுலக்ரஹமாகிற வைகுண்டத்திற்கு ஓடிவந்துவிட்டார். லக்ஷ்மி தேவிக்கோ, விஷ்ணுவினிடத்தில் புத்ரனில்லாததினால், மஹா கணபதியை புத்ர வாத்ஸல்யத்துடன் வளர்த்து வந்தாள்.

पुत्रवात्सल्यतो नार्याः स्तन्यं त्वत्र प्रवर्धते। (புத்ர வாத்ஸல்யதோ நார்யாः ஸ்தந்யம் த்வத்ர ப்ரவர்த்ததே) ஸ்த்ரீகளுக்கு ஸ்தன்யாபிவ்ருத்தியில், புத்ரவாத்ஸல்யமே நிமித்தகாரணமென்று தெரிகிறபடியினால், அந்த புத்ரவாத்ஸல்யத்தை மஹாகணபதியினிடத்தில் வைத்ததிலிருந்தும் மஹாலக்ஷ்மிக்கு ஸ்தன்யம் அபிவ்ருத்தியாகி, மஹாகணபதிக்கு ஸ்தன்யபானத்தினாலும் ஸந்தோஷத்தைக் கொடுத்துக்கொண்டு வளர்த்து வந்தாள்.

அநேகமாக எங்கும் விஷ்ணுவினுடைய ஆலயத்தில் மஹாகணபதி ப்ரதிஷ்டை செய்வதற்கு இதே முக்ய காரணமாகும். இவ்விதம் மஹாலக்ஷ்மியானவள் தனது துடையில் மஹாகணபதியை உட்காரவைத்துக் கொண்டு மஹா கணபதிக்கு ஸ்தன்யபானம் செய்து வைத்துக்கொண்டிருக்கும்பொழுது வைகுண்டத்தில் ஜய-விஜயர்களென்று பாரிஷதர்களாக, அதாவது த்வாரபாலகர்களாக இருந்தவர்களே ஸநகாதிகளுடைய சாபத்தினால், ஜயனென்றவன் ராவணனாகவும், விஜயனென்றவன் கும்பகர்ணனாகவும் ராக்ஷஸ பாவத்தை அடைந்திருக்கிறார்கள் என்று புராணாந்தங்களிலிருந்து தெரிகிறபடியினால், அடிக்கடி வைகுண்டத்தில் மஹாகணபதிக்கு மஹாலக்ஷ்மியானவள் ஸ்தன்யபானம் செய்துவைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்துப் பழக்கமிருக்கும் காரணத்தைக் கொண்டே, ராவணனும், ஸீதாதேவியை மஹாலக்ஷ்மீ என்றறிந்தவனானதினால் அந்த தேவியினிடம் "நான் யாரோ ராக்ஷஸனென்று நீ நினைக்கக்

கூடாது. வைகுண்டத்தில் பாரிஷதனுயிருந்த ஜயனென்பவனே நான்; ஸனகாதிகளுடைய சாபத்தினுல் இவ்விதமான கதியேற்பட்டு விட்டது; உன்னுடைய உபாஸனத்தினுல் ராக்ஷஸபாவத்தினின்றும் நான் முக்தியை அடையவேண்டும். வேறுவிதமாக அபிப்ராய பேதமே என்னிடத்தில் தங்களுக்கு ஏற்படக்கூடாது. ஏதோ ஒரு ஸந்தர்ப்பத்தில் மஹாவிஷ்ணுவானவர் ஏகாந்தமாக இருந்து கொண்டு ஒருவரையும் உள்ளே போகக்கூடாது என்று சொன்னதி லிருந்தும், ஸனகாதிகள் தர்சனத்திற்காக வந்தபொழுது, நான் அவர்களை உள்ளே போகக்கூடாது என்று மறுத்துவிட்டேன். தாங்கள் அந்த ஸமயத்தில் ஸநகாதிகளுக்குத் தர்சனம் கொடுத்து, 'ஸ்வாமி ஒருவர்களையும் உள்ளே விடாதே என்று சொன்னாலும் ஸனகாதிகள் விஷயத்தில் மாத்திரம் அது இல்லை; ஆகையினுல் உள்ளே விட்டுவிடு' என்று என்னை வற்புறுத்த, தங்களை நான் அதிக்ஷேபமாக 'உன்னுடைய வார்த்தையை நான் கேட்கத் தயாராக இல்லை; ஸ்வாமியாகிற விஷ்ணுவினுடைய வார்த்தையைத் தான் பரிபாலனம் செய்யவேண்டு'மென்று பேசின காரணத்தினுல் ஸநகாதிகளுடைய சாபத்திற்குத் தாங்களும் அனுமதித்ததினுல்தான் எனக்கிவ்விதமான கதி வந்துவிட்டது. இதை அறிந்து ஸர்வலோக ஜனனியான தங்களை ஆராதனம் செய்து தங்களுடைய ப்ரஸாதத் தினுல் சாப விமோசனத்தை எதிர்பார்க்கும் பூர்வபாரிஷதனை ஜயன்தான் நான்" என்றதை மஹாலக்ஷ்மியாகிற ஸீதையினிடம் தெரிவிக்கும் பொருட்டு அதற்கு ஸ்மாரகமாக நாசநாஸோரு என்று ஸம்போதனம் செய்கிறுன். அதாவது அடிக்கடி வைகுண்டத்தில் மஹாகணபதியை துடையில் வைத்துக்கொண்டு ஸ்தன்யபானம் செய்துவைத்துக் கொண்டிருக்கும் மாஹலக்ஷ்மியே ஸீதை என்று அந்த ஸம்போதனத்தின் அபிப்ராயமாகும்.

அத்துடன், ப்ரியே என்றும் ஸம்போதனம் செய்கிறுன். அதனுல் ஒருவரும் ப்ராந்தியை அடையவேண்டாம். ப்ரிய சப்த மானது ப்ரேமைக்கு ஸ்பதமான வஸ்துவாகும். ப்ரேமை யென்றுல் அபிலாஷை. குழந்தைகளுக்கு மாதாவினிடத்தில் ப்ரேமை இயற்கையாகவே உள்ளது. இதை அனுஸரித்து, ஸர்வ லோகத்திற்கும் தாயாரான ஸீதா தேவியே, தனக்கு தாயா

ரென்று பாவித்துத் தான் குழந்தையினுடைய ஸ்தானத்திலிருந்து கொண்டு 'தாயே' என்ற வாத்ஸல்யத்தோடு அழைப்பதே அந்த ஸம்போதனத்தின் பொருளாகும். ராவணன் ஸீதையினிடம் மாத்ருத்வ புத்தியோடு பூஜை செய்யவேண்டுமென்ற அபிப்ராயத்துடன் தான் ஸீதையை க்ரஹித்தான் என்ற விஷயத்தை जग्राह रावणः सीतां बुधः खे रोहिणीमिव । (ஜக்ராஹ ராவண: ஸீதாம் புத: கே ரோஹிணீமிவ) என்ற ச்லோகத்தின் வ்யாக்யான அவஸரத்தில், ஆரண்ய காண்டத்தில் சொல்லி யிருக்கிறோம். அதனால் ராவணன் ஸநகாதிகளுடைய சாபத்தினின்றும் தனக்கு விமோசனத்தைக் கருதி ஸர்வலோக ஜனனியாகவும் மஹாலக்ஷ்மியாயுமுள்ள ஸீதாதேவியை மாத்ருத்வ புத்தியோடு தான் பூஜை செய்வதற்காக க்ரஹித்தான் என்ற வ்யங்க்யத்தை அறிந்துகொள்ள வேண்டும். ஸீதையை அபஹரித்த கட்டத்தில் இந்த விஷயம் விவரிக்கப்பட்டிருக்கிறது. "ஹே தாயே, நானோ புத்ரனுக்கு ஸமானமான ப்ருத்யனுவேன். புத்ரனுக்கு ஸமானமான ப்ருத்யனுடைய விஷயத்தில் பயந்தவள்போல் உன்னுடைய சரீரத்தை பார்க்க முடியாததான நிலையில் நீ வைத்துக் கொள்கிறாயே. புத்ரனுடைய விஷயத்தில் அது உசிதமாகுமா? வாஸ்தவத்திலேயே உன்னை நான் ஈச்வரியாக இருக்க வேண்டுமென்று இச்சிக்றேன். त्वां कामये (த்வாம் காமயே) உன்னை ஈச்வரியாக நான் இச்சிக்கிறேன். அல்லது ஹே தாயே! குழந்தையான என்னை நீ தள்ளிவிட்டால் कां (காம்) யாரைத்தான், உன்னை விட்டு விட்டு अये (அயே) அடைவேன். ஆகையால் என்னை நீ ஸ்வீகரிக்க வேண்டும். ஆகையினுல் என்னை உன்னுடைய பக்த கோடிகளில் ஒரு பக்தனுகச் சேர்த்துக்கொண்டு வெகுமதிக்க வேண்டும். நீயோ விசாலாக்ஷி. விசாலமாய் விஸ்தாரமான பத்ம பத்ரம்போல் காது வரையில் தீர்க்கமான ரச்மிகளோடு கூடின நேத்ரத்தோடு கூடியவள். அதனுல் நீ மஹாலக்ஷ்மியென்ற நிச்சயமே எனக்கு நேத்ரத்தின் வைபவத்தினுலேயே தெரிந்து விட்டது. அதனுல் உன்னை நான் பூஜிக்க விரும்புகிறேன். எனக்கு உன்னுடைய பூஜையில் அதிகாரத்தைக் கொடுக்கவேண்டும். உன்னுடைய ஸ்வரூபத்தை மஹாலக்ஷ்மியென்று நான் அறிந்து கொண்டவனுனதினுல் உன்னுடைய ஆராதனத்தினுல்தான் எனக்கு முக்தி கிடைக்க வேண்டுமென்கிற எண்ணத்துடன் பூஜிக்க விரும்புகிறேன்.

என்னுடைய மனோரதத்தை நீ பூர்த்தி செய்யவேண்டும்'' என்று மேற்சொன்ன ச்லோகத்தின் ஸாரபூதமான தாத்பர்யமாகும். இது மஹேச்வரதீர்த்தீய வ்யாக்யானத்தின் ஸாராம்சம்.

सर्वांगगुणसंपन्ने सर्वलोकमनोहरे ।
नेह केचिन्मनुष्या वा राक्षसः कामरूपिणः ॥
व्यपसर्पतु ते सीते भयं मत्तः समुत्थितम् ।

ஸர்வாங்ககுணஸம்பந்நே ஸர்வலோக மநோஹரே ।
நேஹ கேசிந்மநுஷ்யா வா ராக்ஷஸா: காமரூபிண: ॥
வ்ய பஸர்பது தே ஸீதே பயம் மத்த: ஸமுத்திதம் ।

ஸகல விதமான அவயவங்களிலும், ஸௌந்தர்ய ஸம்பத்தியோடு கூடினவளே! ஸர்வலோகங்களுடைய மனதையும் நீ அபஹரிப்பவள்; மனிதர்களோ, ராக்ஷஸர்களோ, தனது இச்சையை அநுஸரித்து வேறு உருவங்களை அடையக் கூடிய ஸமர்த்தர்களோ, இந்த அசோகவனத்தில் எவரும் வரமுடியாது. என்னிடத்திலிருந்தும் உனக்கேற்பட்ட பயத்தை நீ விட்டுவிடு. என்னை நீ ஸ்வீகரிக்க வேண்டும்'' என்று இதற்கும் அடுத்து மேலுள்ள ச்லோகங்களுக்கும் ப்ராதீதிகமான அர்த்தமாகும்.

வ்யங்க்யார்த்தமோ, ''நீ ஸர்வேச்வரி, ஸகல ப்ராணிகளுடைய மனதையும் உன்னை தர்சனம் செய்த மாத்ரத்தில் அபஹரித்துக் கொண்டு, மனோநாசம் வாஸனு பர்யந்தமான பதவியை அந்த ப்ராணிகளுக்குக் கொடுக்கும் வல்லமையுள்ள ப்ரம்மவித்யா ஸ்வரூபிணியே நீ. அத்துடன் அனந்த கல்யாண குண ஸம்பன்னையும் நீ தான். ஒவ்வொரு குணத்திற்கும் அநேக அங்கங்களுண்டு. அதாவது ஸத்யம் என்ற குணம் இருக்கின்றது. அதற்கு மனஸ், வாக்கு, செய்கை மூன்றும் அங்கங்களாக ஆகும். இதில் ஏதாவது ஒரு அங்கம் தவறினால், ஸத்யம் என்ற குணஸம்பன்னனாக ஆனாலும் அங்கம் குறைந்து விட்டபடியினால் புஷ்களமான அங்கத்தோடு கூடிய ஸத்யத்தை உடையவனாக அந்த புருஷன் ஆகமாட்டான். அவ்விதமே தயை என்ற ஒரு குணம் இருக்கின்றது அதற்கும் தேசம், காலம், வஸ்து மூன்றும் அங்கங்களாகும். ஓர் அங்கம் குறைந்தாலும் அந்த குணம்

புஷ்களாங்கங்களோடு கூடினதாக ஆகாது. அப்படியே அஹிம்ஸையும் ஒரு குணமாகும். அதற்குமுன் சொன்ன தேசம் காலம், ப்ரயோஜனம், வஸ்து இவைகள் அங்கங்கள். அவைகளில் ஏதாவது ஒன்று இல்லாவிட்டாலும் புஷ்களாங்கத்தோடு கூடியதாக அந்த குணம் ஆகாது. இதுபோல ஒவ்வொரு குணத்தையும் அறிந்து கொள்ளவேண்டும். ஸ்ரீ தேவியான ஸீதாதேவியே புஷ்களமான அங்கங்களோடு கூடின ஸத்யம், அஹிம்ஸை முதலிய கல்யாண குணங்களால் அலங்கரிக்கப் பட்டவள் என்பது வெளியாகிறது இதை सर्वाङ्ग गुणसंपन्ने (ஸர்வாங்க குணஸம்பந்நே) என்ற ஸம்போதனத்தினால் ராவணன் ஸூசிபிக்கிறான். ஓரிடத்திலும், ஒரு ப்ரகாரமாகவும் பயத்தை, ஸர்வேச்வரியான நீ அடைய அவகாசமே இல்லை. காமரூபிகளான ராக்ஷஸர்களோ, தேவர்களோ, மனிதர்களோ, அல்லது ராக்ஷஸ ராஜனான நானோ ஏதாவது உன்னுடைய பாதிவ்ரத்யத்திற்கு பங்கம் ஏற்படும்படி செய்துவிடுவோமோ என்ற பயசங்கையே உனக்கு வேண்டாம் நிர்ப்பயமாக நீ இருந்து வரலாம். புத்ரனுடைய ஸாமீப்யத்தினால் தாய் பயப்படுவதுண்டா? அதுபோல் நீயும் என் தாயாரானபடியினால் தைர்யத்துடன் இருந்துகொண்டு உன் பூஜையில் எனக்கு அதிகார ஸம்பத்தியைக் கொடுத்துவரவேண்டும்'' என்ற தாத்பர்யத்தை மேற்சொன்ன ச்லோகங்களுக்கு அறியவும்.

स्वधर्मो रक्षसां भीरु सर्वथैव न संशयः ।
गमनं वा परस्त्रीणां हरणं संप्रमथ्य वा ॥
एवं चैतत् अकामां तु न त्वां स्प्रक्ष्यामि मैथिलि ।
कामं कामः शरीरे मे यथा कामं प्रवर्तताम् ॥

ஸ்வதர்மோ ரக்ஷஸாம் பீரு ஸர்வதைவ ந ஸம்சய : ।
கமநம் வா பரஸ்த்ரீணாம் ஹரணம் ஸம்ப்ரமத்ய வா ॥
ஏவம் சைதத் அகாமாந் து ந த்வாம் ஸ்ப்ரக்ஷ்யாமி மைதிலி ।
காமம் காம சரீரே மே யதா காமம் ப்ரவர்த்ததாம் ॥

''ஹே பரதேவதையே! நான் ராக்ஷஸனானதினால், ராக்ஷஸர்களுக்கோ. பாதார கமனமும் பரதாரங்களை பலாத்காரமாக அபஹரிப்பதும் ஸ்வதர்மம்தான். ஆகிலும் உன்னுடைய ஸந்நிதியில் ஸ்வபாவத்தை நான் ப்ரகாசரபடுத்துவேனோ என்பதை மாத்ரம்

நீ கனவிலும் நினைக்க வேண்டாம். எவ்விதமான துஷ்ட ஸ்வபாவமுள்ள பிள்ளைகளும், தன்னுடைய காமபாரவச்யத்தை தன்னுடைய தாயாரிடம் காண்பிப்பது என்பது உலகத்தில் கிடையாது. என்னுடைய சரீரத்தைப் பார்க்கும்பொழுது சில இங்கிதங்களால் நான் காமுகன் போலவும் உன் த்ருஷ்டிக்குப் புலப்படலாம். என் சரீரத்திலேயே என்னுடைய காமதாபத்தை ப்ரகாசப்படுத்தக் கூடிய விகாரங்கள் காணப்பட்டாலும், என்னுடைய இஷ்டதெய்வான உன்னிடத்தில் அவைகள் ப்ரவ்ருத்திக்காது என்பதை நிச்சயமாகச் சொல்லுகிறேன்.

தவிரவும் நீயோ அகாமை. அதாவது, என்னை ப்ருத்யனாக ஸ்வீகரித்துக்கொள்வதில் இச்சை இல்லாதவள், அல்லது அகாரத்தின் பொருளான விஷ்ணுவினிடத்தில் காமனையோடு கூடினவள். இவ்விதமான அகாமையான உன் ஸமீபத்தில் கூட நான் வர மாட்டேன். உன்னுடைய ஆக்ஞை இல்லாதபோனால் உன் பூஜையைச் செய்வதில் கூட நான் மிகவும் பயப்படுகிறேன்.

என்னை உன் பூஜையில் அதிகாரம் கொடுத்து, ப்ருத்யனாகச் சேர்த்துக் கொண்டு, திவ்யமான ஆபரணாதிகளையும் புஷ்பங்களையும் சந்தனாதிகளையும், பூஜை மூலமாக நீ அடையலாம்.

स्त्रीरत्नमसि मैवं भूः कुरु गात्रेषु भूषणम् ।
मां प्राप्य हि कथन्नु स्याः त्वमनर्हा सुविग्रहे ॥

ஸ்த்ரீரத்நமஸி மைவம் பூ: குரு காத்ரேஷு பூஷணம் ।
மாம் ப்ராப்ய ஹி கதந்நு ஸ்யா: த்வமநர்ஹா ஸுவிக்ரஹே ॥

அகண்ட ஐச்வர்ய ஸம்பன்னனான என்னை ப்ருத்யனாக நீ ஸ்வீகரித்துக் கொண்டும் திவ்யமான ஆபரணாதிகளைத் தரித்துக் கொள்ளாமல் அனர்ஹமானவள் போல் இருந்து வருகிறாயே! அது உனக்கு தகுந்ததல்ல. மோக்ஷமென்ற புருஷார்த்தத்தை இச்சிக்கின்ற மஹானுபாவன் பரவித்யாரூபிணியான பராசக்தியை அறுபத்திநான்கு விதமான உபசாரங்களால் பூஜிக்கும் பொழுது அந்த உபாஸகனும் ஸ்ரீமானாக இருக்கும் பக்ஷத்தில் விலைமதிக்க முடியாததான திவ்யமான ஆபரணங்களையும், வஸ்த்ரங்களையும், மாலைகளையும், சத்ர சாமராதிகளையும், சயன

ஆஸனங்களையும் தன்னுடைய இஷ்ட தேவதைக்கு அர்ப்பணம் செய்து கண்குளிர தர்சனம் செய்கிற ஸ்வபாவமுள்ளவனாகத் தானே இருப்பான்? அதை அந்த தேவதை நிராகரிக்க முடியுமா? அல்லது தான் அவைகளுக்கு அனர்ஹதை என்று சொல்லலாமா?

स्ववैभवानुरोधेन स्वेष्टदेवार्चनं स्मृतम् । (ஸ்வவைபவாநுரோதேந ஸ்வேஷ்டதேவார்ச்சனம் ஸ்ம்ருதம்) என்ற ஸ்ம்ருதியை அனுஸரித்து அவனவன் தன்னுடைய சக்திக்குத் தகுந்தபடி லோபத்தன மில்லாமல் அபிஷேகம், அர்ச்சனை, தர்ப்பணம், ப்ராம்மண ஸந்தர்ப்பணம், ஹோமம் முதலிய அங்கங்களினால் தனக்கிஷ்டமான தெய்வத்தை ஆராதிக்கத்தானே ஆராதிப்பான். அதைக் கட்டாயம் நீ ஸ்வீகரிக்க வேண்டும்.

इदं ते चारु सञ्जातं यौवनं ह्यतिवर्तते ।
यदतीतं पुनर्नैति स्रोतः शीघ्रमपामिव ॥

இதம் தே சாரு ஸஞ்ஜாதம் யௌவநம் ஹ்யதிவர்த்ததே ।
யததீதம் புனர்நைதி ஸ்ரோத: சீக்ரமபாமிவ ॥

உன்னுடைய யௌவனமானது நாளுக்கு நாள் காலாதிக்ரமத்தை அடைகிறது போன யௌவனம் திரும்பி வராது. அதற்குள் நீ போகபோகாதிகளை அனுபவிக்க வேண்டாமா? என்ற வாச்யார்த்தமானது வெளியாகிறது. வ்யங்க்யார்த்தமோ, மேற் சொன்ன ச்லோகத்தில், यौवनं (யௌவநம்) என்ற பதத்துடன் ते (தே) என்ற பதத்தைச் சேர்த்தால் உன்னுடைய யௌவனம் என்று அர்த்தம் ஏற்படுகிறது அதை க்ரஹித்துக் கொள்ளாமல், உன்னுடைய ஆராதனத்திற்கு யோக்யமான என்னுடைய யௌவனம் என்ற அர்த்தத்தை ஸ்வீகரித்துக்கொள்ளவேண்டும்.

कौमारे आचरेत् प्राज्ञः धर्मान् भागवतानिह । (கௌமாரே ஆசரேத் ப்ராக்ஞ தர்மாந் பாகவதாநிஹ) என்ற ந்யாயத்தை அனுசரித்து பகவத்ப்ராப்திக்கு ஸாதன பூதமான தர்மங்களை வார்த்தக்யம் வருவதற்கு முன்பே அனுஷ்டிக்க வேண்டுமென்று தெரிகிறபடியினால், உன்னுடைய ஆராதனத்திற்கு யோக்யமான

என்னுடைய யௌவனவஸ்தையானது நதியின் ப்ரவாஹம் போல் போய்க்கொண்டே இருக்கிறது போன யௌவனமோ எனக்குத் திரும்பி வராது. வார்த்தக்ய அவஸ்தை வந்து அசக்தி ஏற்படுவதற்கு முன் உன்னை நான் பூர்ண அங்கங்களோடு பூஜித்து முக்தியை ஸம்பாதித்துக் கொள்ளாமல் போனால்,

आत्मानं मानुषं प्राप्य प्राप्य तत्रापि पौरुषम् ।
इतः कोन्वस्ति मूढात्मा यत्तु स्वार्थे प्रमाद्यति ॥

ஆத்மாநம் மாநுஷம் ப்ராப்ய ப்ராப்ய தத்ராபி பௌருஷம் ।
இத: கோந்வஸ்தி மூடாத்மா யத்து ஸ்வார்த்தே ப்ரமாத்யதி ॥

என்ற சாஸ்த்ரப்படி மனிதனாகப் பிறந்தும், அதிலும் பௌருஷத்தை ஸம்பாதித்துக்கொண்டும், ஸ்வார்த்தமாகிய பரம புருஷார்த்தத்தினின்றும் ப்ரஷ்டனாக ஆகிவிட்டால் அவனைப்போல் மூடன் வேறொருவனுமில்லை என்ற நிந்தைக்கல்லவா நான் பாத்ரனாக ஆகிவிடுவேன். ஆகையினால் உன்னுடைய பூஜைக்கு அர்ஹமான வயதை நான் இப்பொழுது அடைந்திருக்கிறேன். புஷ்பங்களையோ, தீர்த்தங்களையோ அன்னியர்கள் மூலமாகக் கொண்டுவந்து ஆகவேண்டுமென்ற துர்தசை எனக்கு வரவில்லை. அன்னியர்களுடைய தயவை எதிர்பார்த்து நான் பூஜாத்ர வ்யங்களை ஸம்பாதிக்கும் வயது வருவதற்குமுன், உன்னுடைய ப்ருத்யனாக என்னை நீ ஸ்வீகரித்துக்கொண்டு உன் பூஜையில் என்னை அதிகாரியாகச் செய்யவேண்டும்.

त्वां कृत्वोपरतो मन्ये रूपकर्ता स विश्वसृट् ।
न हि रूपोपमा त्वन्या तवास्ति शुभदर्शने ॥
त्वां समासाद्य वैदेहि रूपयौवनशालिनीम् ।
कः पुमानतिवर्तेत साक्षादपि पितामहः ॥

த்வாம் க்ருத்வோபரதோ மந்யே ரூபகர்த்தா ஸ விச்வஸ்ருட் ।
ந ஹி ரூபோபமாத்வந்யா தவாஸ்தி சுபதர்சநே ॥
த்வாம் ஸமாஸாத்ய வைதேஹி ரூபயௌவநசாலிநீம் ।
க: புமாநதிவர்த்தேத ஸாக்ஷாதபி பிதாமஹ: ॥

நாமரூப ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கின்ற ப்ரம்மாவானவர் உன்னை ஸ்ருஷ்டித்துவிட்டு, உன்னுடைய சரீரத்திலேயே ஸகல

விதமான ரூபலாவண்ய ஸம்பத்தியையும் பூர்த்தி செய்துவிட்டு இதற்கு மேலான ரூபவதியான மற்றொரு ஸ்த்ரீயை ஸ்ருஷ்டிக்க முடியாமல் உபரதியை அடைந்து விட்டாரோ என்று நான் நினைக்கின்றேன். உனக்கு ஸமானமாக அழகில் மற்றொரு ஸ்த்ரீ சதுர்த்தச புவனத்திலும் இல்லவே இல்லை. ஸௌந்தர்யத்திலும் யௌவனத்திலும் முதன்மையான உன்னைப் பார்த்த எந்த புருஷன் தான் மனக்கலக்கத்தை அடையாமலிருப்பான்? ப்ரும்மாவானாலும் கொஞ்சம் கலங்கி மயங்கித்தான் திண்டாடுவார் என்றே மேற் சொன்ன ச்லோகங்களுக்கு வாச்யார்த்தமாகும். வாஸ்தவமான வ்யங்க்யார்த்தமோ :—

ஸீதாலக்ஷ்மீ: பவாந் விஷ்ணு: என்ற சாஸ்த்ரப்படி மஹா லக்ஷ்மீயான உன்னை பூஜார்த்தமாக ஸ்ரீசக்ரத்தில் ஸ்தாபனம் செய்துவிட்டு, ஸாக்ஷாத் ப்ரும்மாவானாலும் உன்னை ஆராதிக்க வேண்டாமென்று உபரதியை அடைய முடியாது. உன்னுடைய ஆராதனத்தினால் ஸர்வ ஸொத்திற்கும் நஷ்டம் வந்தாலும் அனர்த்த பரம்பரை மேன்மேலும் வ்ருத்தியானாலும், உன்னுடைய ஆராதனத்தை முமுக்ஷுக்களான மஹான்கள் விடவே மாட்டார்கள். அப்படி இருக்கும்பொழுது, ஸாதாரணமான ஒரு மனிதனோ, ராக்ஷஸனோ உன் கடாக்ஷத்திற்கு பாத்ரபூதனாகி விட்டு, அவனுடைய மனதில் உன்னைப் பூஜை செய்யவேண்டுமென்று எப்படித் தோன்றாமல் இருக்கக்கூடும்? பூஜை செய்ய வேண்டுமென்றுதான் தோன்றும்.

यदि वा पश्चिमं जन्म यदि वा शङ्करः स्वयम् ।
तेनैव लभ्यते विद्या श्रीमत्पञ्चदशाक्षरी ॥

யதி வா பச்சிமம் ஜந்ம யதி வா சங்கர: ஸ்வயம் ।
தேனைவ லப்யதே வித்யா ஸ்ரீமத்பஞ்சதசாக்ஷரீ ॥

என்ற சாஸ்த்ர ப்ரகாரம், ப்ராரப்த சரீர பதனத்திற்குப் பிறகு வேறு சரீரத்தை ஆரம்பிக்கக்கூடிய கர்மாவாவது இல்லாமலிருக்க வேண்டும். அல்லது பரமேச்வரனுடைய அவதாரமாகவாவது இருக்கவேண்டும். அப்படியானால் அவ்விதம் தபோ மஹிமை

யோடு கூடின மஹான்கள் உன்னை உபாஸிக்காமல் இருக்க ந்யாயமே இல்லை. கட்டாயம் உபாஸித்தே தீருவார்கள்.

यद्यत पश्यामि ते गात्रं शीतांशुसदृशानने ।
तस्मिन तस्मिन पृथुश्रोणि चक्षुर्मम निबध्यते ॥
भव मैथिलि भार्या मे मोहमेनं विसर्जय ।
बह्वीनां उत्तमस्त्रीणामाहृतानामितस्ततः ॥
सर्वासामेव भद्रन्ते ममाग्रमहिषी भव ।

யத்யத் பச்யாமி தே காத்ரம் சீதாம்சுஸத்ருசாநநே ।
தஸ்மிந் தஸ்மிந் ப்ருதுச்ரோணி சக்ஷுர்மம நிபத்யதே ॥
பவ மைதிலி பார்யா மே மோஹமேநம் விஸர்ஜய ।
பஹ்வீநாம் உத்தமஸ்த்ரீணும் ஆஹ்ருதாநாமிதஸ்தத: ॥
ஸர்வாஸாமேவ பத்ரந்தே மமாக்ரமஹிஷீ பவ ।

ஹே பரதேவதையே ! உன்னுடைய அங்கங்களிக்குள் எந்தெந்த அவயவ விசேஷங்களை நான் பார்க்கிறேனே அந்தந்த அவயவ விசேஷத்திலேயே என்னுடைய சக்ஷுரிந்த்ரியமானது க்ஷிணமாகிவிடுகிறது. இந்த்ரியங்களுடைய உபஸம்ஹாரத்தை மோக்ஷமென்று வேதாந்திகள் கூறுவார்கள், இந்த்ரியங்களுக்குள் சக்ஷுரித்த்ரியம் ப்ரதானமானதினல், உன்னுடைய ஒவ்வொரு அவயவங்களும் முக்திக்கு ஸாதனமானதினுலும், எந்தெந்த அவயவ விசேஷங்களை நான் பார்க்கிறேனே, அங்காங்கு என்னுடைய இந்த்ரியமானது உபஸம்ஹாரத்தை அடைந்து என்னை முத்தனுகச் செய்துவிடுகிறது உன்னுடைய தேஹமோ பராக்ருத மான ஜீவனுடைய தேஹம் போல் கர்ம பரதந்த்ரமல்ல.

न भूतसङ्घसंस्थानः देहोऽस्य परमात्मनः । (ந பூதஸங்க ஸம்ஸ்தாந: தேஹோஸ்ய பரமாத்மந ), न तस्य प्राकृता मूर्तिः (ந தஸ்ய ப்ராக்தாமூர்த்தி ) என்ற சாஸ்த்ர வசனங்களினல். அப்ராக்ருதமான தேஹமே உன் விக்ரஹமாகும் மந்த்ர வர்ணத்மிகையே நீ. உன்னுடைய தேஹம் மந்த்ர வர்ண ஸ்வரூபமானபடியினுல் ஒவ்வொரு அவயவ விசேஷங்களிலும் श्रीं, ह्रीं, क्लीं, ऐं, सौः (ஸ்ரீம், ஹ்ரீம், க்லீம், ஐம் ஸௌ:) என்று ப்ரணவ ஸ்வரூபங்களாக விளங்கி வருகிறபடியினுலும், ஒவ்வொன்றும் முக்தி ஸாதனமான பீஜாக்ஷரமானதினல், ஒவ்வொன்றையும் நான் கவனித்து

யோஜிக்கும்பொழுது என்னுடைய திவ்ய சக்ஷுஸ்ஸானது அந்த பீஜாக்ஷரத்தில் லீனமாகி உன்னுடைய ஸாயுஜ்யத்தை அடைய ஆத்தமாகிவிடுகிறது. ஹே மைதிலி! உன்னுடைய காந்தியினால் ஸிர்யையாகவும் ச்ரேஷ்டையாகவும் என் விஷயத்தில் நீ விளங்கு கிறாய் भव मैथिलि भार्या मे (பவ மைதிலி பார்யா மே) என்ற இடத் தில் இந்த விசேஷ அர்த்தத்தை க்ரஹித்துக் கொள்ள வேண்டும். भया कान्त्या आर्या पूज्या (பயா காந்த்யா ஆர்யா பூஜ்யா) என்ற பொருளை க்ரஹித்துக்கொண்டு பார்ய என்ற சப்தத்தை உபயோகப் படுத்திக்கொள்ளவேண்டும். என்னிடத்தில் சத்ருத்வ சங்கையை எல்லாவிதத்திலும் விட்டுவிடு. தவிரவும் அநேக ஸ்த்ரீகளையும் ஆங்காங்கு நான்கு திக்குகளிலிருந்தும் நான் பத்னியாக அடைந் திருக்கிறேன் அவ்வளவு ஸ்த்ரீகளுக்கும் அக்ரமஹிஷியான மண்டோதரிக்கும் நீ ஈச்வரியாக இருந்து வரவேண்டும்" என்று தன்னையும் தன்னைச் சேர்ந்த வஸ்துக்களையும் இஷ்டதேவதைக்கு அர்ப்பணம் செய்து, தன்னை தேவதையினுடைய ஆராதனத்தில் அர்ஹனென்று ஒப்புக்கொள்ளும்படி ராவணன் ப்ரார்த்திக்கிறான்.

लोकेभ्यो यानि रत्नानि संप्रमथ्याहृतानि वै ।
तानि मे भीरू सर्वाणि राज्यञ्चैतत् अहं च ते ॥

லோகேப்யோ யாநி ரத்நாநி ஸம்ப்ரமத்யாஹ்ருதாநி வை ।
தாநி மே பீரு ஸர்வாணி ராஜ்யஞ்சைதத் அஹம் ச தே ॥

தான் ஸம்பாதித்த ரத்ன விசேஷங்களையும், தன்னுடைய ராஜ்யத்தையும் பரதேவதையான மஹாலக்ஷ்மிக்கு அர்ப்பணம் செய்தான். अहं (அஹம்) என்ற பதத்தினால் ஆத்ம ஸமர்ப்பணமும் रत्नानि (ரத்நாநி) என்பததினால் ஆத்மீய ஸமர்ப்பணமும் செய்ததாக ஏற்படுகிறது.

மஹாமந்த்ரத்தை உபதேசிக்கின்றவனே, அந்த மஹா மந்த்ரத்தை ஸித்தி செய்து அதனுடைய வைபவத்தை அனுபவித்த வனே, அந்த மஹாமந்த்ரத்தினால் பூஜிக்கவேண்டிய மூர்த்தியை தன் த்ருஷ்டிக்கு கோசரமாக செய்துகொள்ளும்படி ஸ்தாபித்த புண்யவானே. இவர்களுக்கு ஸத்புருஷனாயிருந்தால் ராஜ்யத்தையே ஸன்மானமாகச்செய்து அவர்களுடைய அனுக்ரஹத்தை அடைய வேண்டும் என்று

मन्त्रोपदेष्टा द्रष्टा च मूर्तिदाता महेश्वरः ।
तस्मै राज्यं प्रदत्वा तु तस्यानुग्रहमाप्नुयात् ॥

மந்த்ரோபதேஷ்டா த்ரஷ்டா ச மூர்த்திதாதா மஹேச்வர: ।
தஸ்மை ராஜ்யம் ப்ரதத்வா து தஸ்யானுக்ரஹமாப்நுயாத் ॥

என்ற சாஸ்த்ரத்தின்படி தெரிகிறபடியினுல், ப்ரம்ம வித்யா அதிதேவதையான மஹாலக்ஷ்மியினுடைய ஸ்வரூபத்தைத் தன்னைப் போன்ற பாமரர்களும் ஸுலபமாகப் பார்க்கும்படி இந்த பூலோகத்தில் அவதரிக்கச் செய்த புண்யவானுன ஜனகராஜனுக்கு, மேற்கண்ட சாஸ்த்ரத்தை அறிந்தவனுன ராவணன், தனது ஸகல ஐச்வர்யத்தையும் ராஜ்யத்தையும் ஸன்மானம் செய்யவேண்டுமென்ற தீர்மானத்தைச் செய்துகொண்டு "ஹே பரதேவதையே! உன்னுடைய நிமித்தமாக ஜனகமஹாராஜனுக்கு என்னுடைய ராஜ்யத்தையே நான் கொடுத்து விடுகிறேன்; எனக்கு சத்ருக்களே உலகத்திலொருவருமில்லே, யுத்தத்தில் எல்லோரையும் நான் ஜயித்தவன்; அகண்டமான ராஜ்யஸ்ரீயை ஜனக மஹாராஜனுக்குப் பாரிதோஷிகமாகக் கொடுத்து நான் தன்யனுக ஆகிறேன். உன் பூஜையில் மாத்ரம் எனக்கு நீ அதிகார பதவியைக் கொடுக்க வேண்டும். அறுபத்திநான்கு விதமான உபசாரங்களுக்கு வேண்டிய ஆபரணுதிகள், நூதனமாக நிர்மாணம் செய்து அன்யர்களால் தரிக்கப்படாமலும், இதோ விளங்கி வருகின்றன. அவைகளை எடுத்து நீ அலங்கரித்துக்கொண்டு விலாஸினியாக விளங்க உன்னை நான் ப்ரார்த்திக்கிறேன். உன்னுடைய ப்ரஸாதம் எனக்கு அவச்யம் ஏற்படவேண்டும்.

यया तदक्षरमधिगम्यते सा परा विद्या (யயா ததக்ஷரமதிகம்யதே ஸாபரா வித்யா ।) என்று முண்டகோபநிஷத்தில் கூறியபடி, அக்ஷர வஸ்துவைக் காட்டிக் கொடுக்கிற பரவித்யையே நீ. உன்னுடைய ப்ரஸாதம் ஏற்பட்டுவிட்டால் தாரகப்ரம்மமாகிய ராமனென்ற அக்ஷர வஸ்துவை நான் ஸாக்ஷாத்கரித்துக்கொண்டு ராக்ஷஸ பாவத்தினின்று முக்தனுக ஆகிவிடுவேன். உன்னுடைய ப்ரஸாதத்தினுல் நான் மாத்ரம் தன்யனுக ஆவேன் என்பது இல்லே. என்னைச் சேர்ந்தவர்களும் முக்தர்களாகிவிடுவார்கள். எனக்கும் ஆனந்தாவாப்தி உண்டு. என்னைச் சேர்ந்த பந்துக்களுக்கும் ஆத்மரதியினுல்

ஏற்படக்கூடிய ஸௌக்யம் கிடைக்கும். ஆகையினால் அவ்விதம் நீ எனக்கு அனுக்ரஹம் செய்ய உன்னை நான் வேண்டிக் கொள்ளு கிறேன்.

ऋद्धिं ममानुपश्य त्वं श्रियं भद्रे यशश्च मे
किं करिष्यसि रामेण सुभगे चीरवाससा
निक्षिप्त विजयो रामः गतश्रीः वनगोचरः
व्रती स्थंडिलशायी च शङ्के जीवति वा न वा
न हि वैदेहि रामस्त्वां द्रष्टुं वाप्युपलप्स्यते
पुरो बलाकैः असितैः मेघैः ज्योत्स्नामिवावृताम्
न चापि मम हस्तात्त्वां प्राप्तुमर्हति राघवः

ரித்திம் மமாநுபச்ய த்வம் ச்ரியம் பத்ரே யசச்ச மே।
கிம் கரிஷ்யஸி ராமேண ஸுபகே சீரவாஸஸா ||
நிக்ஷிப்தவிஜயோ ராம: கதஸ்ரீ: வனகோசர: ||
வ்ரதீ ஸ்தண்டிலசாயீ ச சங்கே ஜீவதி வா நவா ||
ந ஹி வைதேஹி ராமஸ்த்வாம் த்ரஷ்டும் வாப்யுபலப்ஸ்யதே ।
புரோ பலாகை: அஸிதை: மேகை: ஜ்யோத்ஸ்நாமிவாவ்ருதாம் ||
ந சாபி மம ஹஸ்தாத்த்வாம் ப்ராப்துமர்ஹதி ராகவ: ।

"என்னுடைய ஸமஸ்தமான ஐச்வர்யத்திற்கும் நீ நாயகியாக இருப்பதோடு கூட என்னுடைய ஸ்த்ரீகளுக்கும் அக்ர மஹிஷியாக நீ இருந்துகொண்டு இந்த ராஜ்ய லக்ஷ்மியை உன் வசமாக்கிக் கொள்ளலாம். இவ்வளவு ஸௌகர்யங்கள் உனக்கேற்படக் கூடுமானதினால் என்னுடைய மனோரதத்தை நீ ஏன் பூர்த்தி செய்யக்கூடாது?" என்று சொன்ன ராவணனுடைய அபிப்ராயத்தின் ஸாராம்சத்திற்குமேல் ஸீதை ஆக்ஷேபித்ததாக சங்கை செய்து கொள்ளவேண்டும். அதாவது, 'ராவணா, ராமனை விட்டு என்னை நீ பிரித்தது மிகவும் பிசகான கார்யம்தான் ராமனோடு என்னை நீ சேர்த்து வைத்துவிட்டால் உனக்கு அகண்டமான ஸம்பத்தையும் கொடுக்க ஸித்தமாக இருக்கிறேன். ஆகையினால் ராமனோடு சேர்த்து வைத்து நீ என்னை பூஜிக்கவேண்டும்" என்று தான அந்த சங்கையின் ஸாராம்சமாகும்,

"ஹே ஜகதீச்வரி! நான் ஸம்பத்தை எதிர்பார்த்து உன்னை ஆராதிக்கவில்லை. கேவலம் மோக்ஷத்தையே நான் எதிர்பார்த்

தவன். மோக்ஷத்தை எனக்கு நீ கொடுக்கும் வரை உன்னுடைய சரணாரவிந்தத்தை நான் விடமாட்டேன். சாஸ்த்ரத்தில் ப்ரக்ருதி உபாஸனம், புருஷ உபாஸனம், ப்ரக்ருதி புருஷ உபாஸனம் என்று உபாஸனங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. ப்ரக்ருதி புருஷர்களைச் சேர்த்துவைத்து உபாஸனம் செய்தால் ஐச்வர்ய ஸம்ருத்தியும், புருஷனை மாத்ரம் உபாஸித்தால் க்ரம முக்தியும், ப்ரக்ருதியினுடைய உபாஸத்தினுல் உடனே முக்தியும் ஏற்படுகிறதென்று பலமும் பிரிக்கப்பட்டிருக்கிறது நான் ஐச்வர்யத்தை எதிர்பார்த்தவனல்ல; என்னிடத்திலிருக்கும் ஐச்வர்யத்தையும் யசஸ்ஸையும் நீயே நன்ருக எண்ணிப் பார்த்து அதற்கு மேலாக ராவணனுக்குக் கொடுக்கக் கூடிய ஐச்வர்யம் இருக்கிறதா என்று ஆலோசிக்கலாம், இந்த பூமண்டலத்தில் ஸார்வபௌம ஆனந்தத்திற்கு ஹேதுவான ஐச்வர்யம் எவ்வளவு உண்டோ, அவ்வளவையும் நான் அடைந்து விட்டேன். எனக்கு இனிமேல் அடையவேண்டிய புருஷார்த்தமோ, ராக்ஷஸ பாவத்தினின்றும் விமுக்தனுக ஆகி, பவ பந்தமாகிய மஹாரோகத்தினின்றும் விடுபட்டவனுக ஆகவேண்டும். அதுதான் என்னுடைய முக்யமான கோரிக்கை.

विद्यया अमृतमश्नुते (வித்யயா அம்ருதமச்னுதே) என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து வித்யாதத்வரூபிணியாயும், மூல ப்ரக்ருதி ஸ்வரூபமாயும் உள்ள உன்னுடைய ஆராதனத்தைத் தவிர நான் மோக்ஷத்தை அடைவதற்கு வேறு ஒரு உபாயத்தையும் ஸாதனமாக நான் காணவில்லை. ராமனேடு சேர்த்து வைத்து உன்னை நான் உபாஸித்தால் நீ எனக்கு என்ன செய்யப் போகிருய் ? ஐச்வர்யத்தைத்தானே கொடுக்கமுடியும். அது என்னிடம் ஸம்பூர்ணமாக இருந்துவருகிறதே. ராமனும் மோக்ஷத்தை கொடுக்கும்படியான சக்தி வித்யாதத்வ ரூபிணியான உன்னுடைய ஆராதனம் மூலம் என்று எனக்கு அதிகார ஸம்பத்தியை அனுக்ரஹகம் செய்திருக்கிருர். என்னிடத்தில் இந்த ராக்ஷஸ சரீரம் உள்ள வரையிலும், என்னை நீ முக்தனுகச் செய்கிறவரையிலும், ராமனே உன்னை அடையமாட்டார், அது நிச்சயம் தான். பகவானுன ராமனே ஸத்ய ஸங்கல்பனுனதினுல் என்னுடைய மோக்ஷார்த்தம் அபராஜிதமான வைகுண்டத்திலிருந்து பூலோகத்தில் அவதாரம் செய்து, என்னுடைய மோக்ஷமும் உன்

அதீனமாக ஏற்படவேண்டுமென்று. உன் ஆராதனத்தில் எனக்கதிகார ஸம்பத்தியையும் கொடுத்திருக்கும்பொழுது என்னை நீ உதாஸீனமாகத் தள்ளிவிடுவது ந்யாயமில்லை. ஆகையினால் பரவித்யாஸ்வருபிணியான நீ எனக்கு முக்தியைக் கொடுக்கும் வரையிலும் உன்னுடைய பாதாரவிந்தத்தை நான் விடமாட்டேன். ராமனுடைய ஸவபாவமோ உதாஸீனமான நிலையில் இருந்து வரும் ஸ்வபாவமாகும்.

शुभगे चीरवाससा (சுபகே சீரவாஸஸா) என்ற இடத்தில் अचीरवाससा (அசீரவாஸஸா) என்று பதச்சேதம் செய்துகொள்ள வேண்டும். तचीरं (அசீரம்) என்றால் பீதாம்பரம் என்று அர்த்தமானதினால் பீதாம்பரதாரியான மஹா விஷ்ணுவே ஸ்ரீராமன். "உதாஸீனமான ஸ்வபாவத்தோடு கூடிய ராமனைக்கொண்டு எனக்கு நீ என்னதான் செய்யப்போகிறாய்? நான் எதிர்பார்க்கும் மோக்ஷம் உன்னுடைய அதீனமல்லவா. தவிரவும் ராமனோ नक्षिप्त विजयः (நிக்ஷிப்த விஜய:) நிக்ஷிப்தம் என்றால் ஸ்வதஸ்ஸித்தம் என்ற அர்த்தம் ஏற்படுகிறது அதாவது ராமன் ஸ்வதஸ்ஸித்தமான விஜயத்தோடு கூடினவன் என்று வெளியாகிறது. धनुषा युधि शात्रवान् (தநுஷா யுதி சாந்த்ரவாந்) என்ற ந்யாயத்தை அநுஸரித்து எவரும் ஸ்வயமாகவே தன்னிடத்தில் இருந்துவரும் ஜயத்தோடு கூடின ஸ்ரீராமனிடம் யாரால் எதிர்த்து நின்று போரில் யுத்தம் செய்யமுடியும்? மேலும் என்னுடைய மோக்ஷ இச்சையானது ராமனோடு எதிர்த்து யுத்தம் செய்து ஜெயித்து உன்னை ஸ்வீகரிக்கவேண்டுமென்ற பௌருஷத்திற்கு ப்ரதிபந்தகமல்லவா. என்னுடைய பௌருஷம்தான் ராமனிடம் பலிக்குமா?

வஸிஷ்டபகவானிடம் ஸர்வ தனத்திற்கும் நிதியாக ஒரு காமதேனு இருந்தது. விச்வாமித்ரர் அரசனாக இருக்கும்பொழுது அந்த காமதேனுவைத் தான் அடைய வேண்டுமென்று எண்ணினதும் தெரிந்த விஷயம். வஸிஷ்டரிடத்தில் கேட்டார். அவர் அதைக் கொடுக்கவில்லை. ஏதோ தன்னுடைய பலத்தினால் காமதேனுவை அபஹரிக்க யத்னம் செய்தார். வஸிஷ்டருக்கு எதிரில் அந்த காம

தேனுவை அபஹரிக்க அவர் யத்னம் செய்ததினுல் விச்வாமித்ர மனோரதம் பூர்த்தியாகாமல் முடிந்தது. விச்வாமித்ரருக்கோ வஸிஷ்டரை எப்படியும் ஜயித்துவிடலாமென்ற ஆக்ரஹம் மட்டும் இருந்தது. அது பலிக்கவில்லை. அந்த வ்ருத்தாந்தத்தை நான் அறிந்தவன்தான், மோக்ஷத்தில் விருப்பமுள்ள நான் பராசக்தி ரூபமான உன்னைத் தனியாக रहोयागक्रमाराध्य (ரஹோயாகக்ரமா ரத்யா) என்ற சாஸ்த்ரத்தை அநுஸரித்துப் பூஜிக்க வேண்டு மென்று தீர்மானித்தேன். ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணும் என்று ஒரு க்ஷணம் கூட ஸீதையை விட்டுப் பிரிந்து நான் ஜீவிக்கமாட்டேனென்று சொன்ன ராமனிடம் நான் பூஜிக்க யாசித்தால் அவர் ஸம்மதிப்பாரா ? விச்வாமித்ரரைப்போல் பௌருஷத்தை அவலம்பித்து பலாத்காரம் செய்யலாமோ என்ருலும், ராமனே ஸ்வதஸஸித்த விஜயனென்று நான் வைகுண்டத்தில் பாரிஷதனுக இருந்து வரும் காலத்திலிருந்தே எனக்கநுபவ மானதினுல், அந்த பௌருஷ வ்யாபாரத்திலும் ப்ரவ்ருத்திக்கவில்லை. மோக்ஷ இச்சையோ எனக்கு த்ருடதரமாக ஏற்பட்டுவிட்டது. அதற்கு ஸாதனம் பர வித்யா ரூபிணியான உன்னுடைய ஆராதனம் தான் உன்னுடைய கடாக்ஷ வீக்ஷணம் எப்படியாவது லங்கா நகரத்திலுள்ள ராக்ஷஸர்களுக்கேற்பட்டு அவர்களும், நானும், என்னைச் சேர்ந்த பந்துக்களும் நித்யஸூரிகளாக ஆகி, அந்தப் பதவி ஸித்திக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் ராமனுக்குத் தெரியாமல் திவ்ய ரதத்தில் உன்னை எழுந்தருளச் செய்து உன்னை மாத்ருத்வ புத்தியோடு அழைத்து வந்தேன். அப்படி அழைத்து வந்ததற்கோ, ராமனிடம் என்னுல் எதிர்க்க முடியாது. ராமன் ஸ்வதஸ்ஸித்த விஜயன் என்பதேதான் காரணமாகும். மோக்ஷத்தி லுள்ள ஆவல் என்னை இவ்விதமான அபராதம் செய்யும்படி செய்துவிட்டது புத்ரனுடைய அபராதத்தைப் பொறுத்துக் கொள்வது போல், எனனுடைய அபராதத்தைப் பொறுத்துக் கொண்டு எனக்கு நீ அனுக்கிரஹிக்க வேண்டும்.

ராமனை வனகோசரன் என்று நான் நன்ருய் அறிந்திருக்கின் றேன்' वनं जलं गोचरं स्थानं निवासस्थानं यस्य सः (வனம் ஜலம் கோசரம் ஸ்தானம் நிவாஸஸ்தானம் யஸ்ய ஸ:) என்ற ஸமா

ஸத்தினுல் ஜலசாயியான ஸ்ரீமந் நாராயணனென்றே தீர்மானித்திருக்கிறேன். एको हवै नारायणः आसीत् (ஏகோ ஹ வை நாராயண: ஆஸீத்) என்ற ச்ருதியினுல், அந்த மஹானுபாவன் ஒருவன்தான் ஸர்வஜகத்தினுடைய உத்பத்திக்கும் முதலிலிருப்பவனுனதினுல் ஸர்வஜகத்திற்கும் மூலகாரணமான வஸ்து என்றும் எனக்கு நன்ருய்த் தெரியும் அக்காரணத்தைக் கொண்டுதான் க்ஷீராப்தியில் உதித்த மஹாலக்ஷ்மியான நீயும் அந்த மஹா புருஷனை பர்த்தாவாக அடைய இச்சித்தாய். பக்த பரிபாலனத்தில் தன்னுடைய திருமேனியின் ஸுகத்தையும் எதிர்பார்க்காமல் பித்ரு வாக்கிய பரிபாலனம் என்ற தர்மத்தை வ்யாஜமாக வைத்துக் கொண்டு பூமியில்கூட சயனம் செய்துகொள்ளுகிருர். அந்த ப்ரபுவானவர் எனக்கு இந்த ராக்ஷஸ ஜன்மா இருக்கும் வரையிலும் உன்னை அடைய யத்னம் செய்யமாட்டார் என்றும் நினைக்கிறேன். என்னுடைய விமோசனத்திற்காக தன்னுடைய அவதாரம் ஏற்பட்டிருக்கும்பொழுது, அது உன்னுடைய வசமாக ஏற்பட வேண்டியதாக இருக்க அந்தக் கார்யம் ஸித்திப்பதற்கு முன்பு உன்னை அடைய ராமனுலும் முடியாது என்று நான் எண்ணுகிறேன். ஆகையினுல் எவ்விதமான அபராதங்கள் என்னிடம் தென்பட்டாலும் நீ க்ஷமித்துக் கொண்டு இந்த ராக்ஷஸ பாவத்தினின்றும் என்னை விமோசனம் செய்துவைக்க வேண்டுமாக ப்ரார்த்திக்கிறேன். நான் ஐச்வர்யாதிகளை அபேக்ஷித்து உன்னை உபாஸிக்க வரவில்லை. என்னிடத்திலிருக்கும் ஐச்வர்யாதிகளைக் காட்டிலும் நான் உன்னிடமிருந்து இச்சிக்க வேண்டிய அதிகமான அம்சம் ஒன்றும் இல்லையென்று தீர்மானித்துவிட்டேன். ஆகையினுல் கேவலமான மோக்ஷத்தை உத்தேசித்து பராசக்தியினுடைய ஆராதனம்தான் முக்யமென்று ச்ருதிகள் மூலம் தெரிகிறபடியினுல் நான் முமுக்ஷுவாக ஏற்பட்ட காரணத்தைக் கொண்டு रहस्तर्पणतर्पिता (ரஹஸ் தர்பணதர்பிதா) என்ற ந்யாயத்தை அனுஸரித்து ராமனை விட்டுப் பிரிந்து உன்னை நான் பூஜிக்கின்றேனே தவிர வேறு விதமாக என்னிடம் யாதொரு விதமான சிந்தைக்கோ, ஸந்தேஹத்திற்கோ அவகாசத்தை நீ அடையக் கூடாது.

மேலும் யாராவது மஹா புருஷர்கள், கேவலம் ப்ரக்ருதி உபாஸனம் மோக்ஷத்திற்குப் போதாது; ப்ரக்ருதி, புருஷன் இருவர்களையும் உபாஸித்துத்தான் ஆகவேண்டுமென்று ப்ரமாணத்துடன் நிரூபித்தால் நான் அதற்குக் கட்டுப்பட்டு அவ்விதமே ஆதரிக்கவும் ஸித்தனாக இருந்துவருகிறேன். நீயோ ப்ரக்ருதி, புருஷன் இருவர்களையும் உபாஸித்தாக வேண்டுமென்று சொல்லுகிறாய். ஸம்பத்துக்களை எதிர்பார்க்கிறவனுக்கு அதுதான் ஸாதனமென்று நான் ஒப்புக்கொள்ளுகிறேன். நானோ கேவல மோக்ஷார்த்தீ; அதனால் பரமசாக்தனாகத்தான் இருக்கவேண்டும். विद्यया तदधिगम्यते (வித்யயா ததகிம்யதே) என்ற சாஸ்த்ரமே அதில் ப்ரமாணம். இப்பொழுது நாமிருவர்களும் வாதி ப்ரதிவாதிகளாக ஆகிவிட்டபடியினால் ப்ரக்ருத தத்வத்தை நிர்த்தாரணம் செய்வதில் யாராவது ஒரு மஹா புருஷன்தான் மத்யஸ்தனாக இருந்துகொண்டு நம் இருவர்களுடைய விவாதத்தை ஸமாப்தி செய்யவேண்டும் நாமிருவர்களும் பேசிக்கொள்வதில் ப்ரயோஜனமில்லை" என்று ராவணன் சொன்னான்

'நான் ஜீவிக்கும்பொழுது ராமன் உன்னை பார்க்கக்கூட முடியாது, என்று சொன்ன ராவணனுடைய அபிப்ராயம், அவனுடைய வதத்திற்குப் பிறகு ராமன் ஸீதையை அவச்யம் அடைந்து திவ்ய ஸௌபாக்யத்தை அவளுக்குக் கொடுப்பார். ஆகையினால் அவள் கொஞ்சமேலும் கவலையை அடைய வேண்டாம் என்பதே.

क्लिष्टकौशेयवसनां तन्वीमप्यनलङ्कृताम् ।
त्वां दृष्ट्वा स्वेषु दारेषु रतिं नोपलभाम्यहम् ॥
अन्तः पुरनिवासिन्यः स्त्रियः सर्वगुणान्विताः ।
यावत्यो मम सर्वासां ऐश्वर्यं कुरु जानकि ॥
मम ह्यसितकेशान्ते त्रैलोक्यप्रवराः स्त्रियः ।
तास्त्वां परिचरिष्यन्ति श्रियं अप्सरसो यथा ॥

க்லிஷ்டகௌசேயவஸநாம் தந்வீமப்யநலங்க்ருதாம் ।
த்வாம் த்ருஷ்ட்வா ஸ்வேஷு தாரேஷு ரதிம் நோபலபாம்யஹம்
அந்த: புரநிவாஸிந்ய: ஸ்த்ரிய: ஸர்வகுணாந்விதா: ॥
யாவத்யோ மமஸர்வாஸாம் ஐச்வர்யம் குரு ஜானகி ॥
மம ஹ்யஸிதகேசாந்தே த்ரைலோக்யப்ரவரா: ஸ்த்ரிய: ।
தாஸ்த்வாம் பரிசரிஷ்யந்தி ச்ரியம் அப்ஸரஸோ யதா ॥

என்னுடைய இஷ்டதேவதையான உன்னை நான் தர்சித்த மாத்ரத்தில், தாராதிகளில் ரதியை, அதாவது விருப்பத்தை நான் அடையவேயில்லை. இஷ்டதேவதா தர்சனமாத்ரத்தினால் ஆனந்த பரிபூர்ணனாக நான் ஆன காரணத்தைக்கொண்டு ஸகல விதமான போகபோக்யங்களிலிருந்தும் நிவ்ருத்தனாக ஆகிவிட்டேன். என்னுடைய அந்தப்புரத்தில் வஸிக்கும் ஸகல விதமான ஸ்த்ரீகளுக்கும் நீயே ஆதிபத்யத்தை வஹிக்கவேண்டும், அப்ஸரஸ் ஸ்திரீகள் மஹாலக்ஷ்மிக்குப் பரிசாரம் செய்துகொண்டு இருப்பது போல் என்னுடைய அந்தப்புர ஸத்ரீகளும் உனக்கு இருப்பார்கள். தபஸ்ஸிலோ, பலத்திலோ, பராக்ர்மத்திலோ, தனத்திலோ, தேஜஸ்ஸிலோ, யசஸ்ஸிலோ ராமனுடைய அருகாமையில்கூட நிற்க நான் சக்தியற்றவன். தர்மம், ஞானம், வைராக்யம், யசஸ், ஸ்ரீ, காமம் என்ற ஆறுவிதமான குணங்களோடு கூடின பகவானான ஸ்ரீ ராமன், மிகவும் உத்க்ருஷ்டமானவன் என்பதில் எனக்கு ஆசேஷபணையே இல்லை, அவனுடைய ஸந்நிதியில் முன்போலவே நான் எப்பொழுதும் பரிசாரனாக இருந்துவரவேண்டும் என்ற உத்தேசத்துடன் தான அதற்கு ராக்ஷஸபாவம் ப்ரதிபந்தகமாக இருப்பதினால், அந்த ப்ரதிபந்தகத்தை நிவ்ருத்தி செய்து கொள்ளு வதற்காக நான் உன்னை உபாஸித்து வருகிறேன் நான் உன்னுடைய ப்ருத்ய வர்க்கங்களில் ஒருவனாக ஆவேன். என் விஷயத்தில் நீ யாதொருவிதமான சங்கையும் அடையவேண்டாம், ஸந்தோஷமாக இந்த உபவனங்களில் ஸஞ்சாரம் செய்துகொண்டு ஸுகமாக வாழ வேண்டும்'' என்று ஸீதையைப் பார்த்து ராவணன் ப்ரார்த்திப்பதாக மேற்சொன்ன ச்லோகங்களிலிருந்தும் வ்யங்க்யமாக ஸ்புரிக்கிறது.

இவ்விதமான ராவணனுடைய வார்த்தையைக் கேட்ட ஸீதாதேவியே ராவணனுக்குப் பதில் சொல்லுகிறாள்.

तृणमन्तरतः कृत्वा प्रत्युवाच शुचिस्मिता ।
निवर्तय मनो मत्तः स्वजने क्रियतां मनः ॥

த்ருணமந்தரத: க்ருத்வா ப்ரத்யுவாச சுசிஸ்மிதா ।
நிவர்த்தய மநோ மத்த: ஸ்வஜநே க்ரியதாம் மந ॥

இந்த ச்லோகத்தில், ஸீதாதேவியானவள் ராவணனுக்கு பதில் சொல்லும் அவஸரத்தில், ராவணனுடைய முகத்தைப்

பார்த்து தான் பதில் சொல்லக்கூடாது என்று நினைத்து, ராவணனுக்கும் தனக்கும் நடுவில் ஒரு த்ருணத்தை, அதாவது புல்லை, இடையே வைத்துக்கொண்டு அதன் மூலமாக ராவணனுக்குப் பதில் சொல்லுகிறாள். இதனால் பதிவ்ரதா ஸ்த்ரீகளுடைய ஸ்வபாவமானது வெளியாகிறது. பர புருஷனோடு கூட நேர்முகம் பார்த்துப் பதிவ்ரதா ஸ்த்ரீகள் ஸம்பாஷிக்க மாட்டார்கள் என்பதே அதன் தாத்பர்யமாகும்.

அத்துடன் ராவணனுடைய ஸித்தாந்தமோ, மோக்ஷத்திற்கு பராசக்தியினுடைய ஆராதனம் மாத்ரம் போதுமென்பதே. ஸீதையினுடைய ஸித்தாந்தமோ, ப்ரக்ருதி, புருஷன் இருவர்களையும் உபாஸிக்கவேண்டுமென்பதே. அந்த இரண்டு பக்ஷங்களுக்குள் எந்த பக்ஷமானது ஸ்வீகரிக்கத் தகுந்தது, எந்த பக்ஷமானது நிராகரிக்கத் தகுந்தது என்பதை நிர்ணயிக்க, ஸர்வக்ஞனான பகவான் ஒருவர்தான் சக்தனாக ஆகமுடியும். அந்த பகவானோ புல், பூண்டு முதலான ஸகல ஜகத்திலும் அனுவர்த்தித்துக்கொண்டு இருக்கிறான் என்பது ஸித்தமானதே

ப்ரக்ருதத்தில், ஸீதாதேவியானவள் த்ருணத்தைப் பார்த்துக்கொண்டு ராவணனுக்குப் பதில் சொல்லுகிற அவஸரமானதினால் த்ருணத்திலும் அந்தராத்மாவாக இருக்கும் பகவானை ப்ரக்ருதமான வாதத்தில் தத்வ நிர்ணயம் செய்வதற்காக ஸீதாதேவியானவள் கவனித்துப் பார்த்து அழைக்கின்றாளோ என்பதும் தொனிக்கிறது அத்துடன் அதற்கு அந்தாக்ஷியாக ப்ரஹ்லாதனுடைய 'எங்கும் பரமாத்மா இருக்கிறான்' என்ற ஸித்தாந்தத்திற்கும், 'எங்கும் நிறைந்தவனில்லை' என்ற ஹிரண்யகசிபுவினுடைய ஸித்தாந்தத்திற்கும் மத்தியில் நிர்ணயம் செய்வதற்காக ஸ்தம்பத்திலிருந்து ஆவிர்ப்பவித்த பகவானான லக்ஷ்மீந்ருஸிம்மம்போல் தன் விஷயத்திலும் ஏன் பகவான் அனுகூலம் செய்யக்கூடாது என்று எண்ணித்தான் ஸீதை த்ருணத்தை கவனித்தாளோ என்றும் தோன்றுகிறது.

சித்ரகூட பர்வதத்தில் ராமனுடன் ஸீதை சேர்ந்து வஸிக்கும் காலத்தில் ஜயந்தன் என்ற காகாஸுரன் அவள் விஷயத்தில்

செய்த அபராதத்திற்கு ராமன் ப்ரம்மாஸ்த்ர மந்த்ரத்தினுல் அபிமந்த்ரணம் செய்து த்ருணத்தை காகாஸுரனைச் சிக்ஷிக்க ப்ரயோகம் செய்தார் என்ற கதையும் ராமாயணத்தில் ப்ரஸித்த மானது.

இதனுல் பதிவ்ரதா ஸ்த்ரீகளுக்கு விரோதத்தைச் செய்கிறவர்கள் மஹா பராக்ரமசாலிகளாக ஆனுலும் த்ருணத்திற்கு ஸமானமானவர் கள்தான் அவர்கள். அவர்களை அவமானப் படுத்த த்ருணம் ஒன்றே போதும். இந்த எண்ணத்துடன் ஸீதையானவள் "ஹே த்ருணமே, உன் ஜாதியிலுள்ள ஒரு த்ருணமானது என் விஷயத்தில் அபராதித்த காகாஸுரனை விரட்டியடிக்கவில்லையா? நீயும் அதே ஜாதியில் சேர்ந்த வஸ்துவன்றே என் விஷயத்தில் விரோதமாகப் பேசுகிற ராவணனை ஏன் உபேக்ஷிக்கிருய்?" என்று ஸமிக்ஞை செய்வது போலவும் தோன்றுகிறது.

அப்படி த்ருணத்தை நடுவில் வைத்துக்கொண்டு ராவணனு கு ஸீதை பதில் சொன்னதோ, "என்னைப் பூஜிக்க வேண்டுமென்று எண்ணுகிற உன் மனதை என்னிடமிருந்து திருப்பிக்கொள். என்னுடைய ஸ்வஜனமோ ராமன் ஒருவன்தான். உனக்கும் ராமன் ஒருவன்தான் ஸ்வஜனமோ ஆகக்கூடும். நானும் ராமனுடைய ஒரு சேஷபூதமான வஸ்துவே. நீயும் ராமனுடைய ஒரு சேஷபூதமான புருஷன்தான். பரமசேஷியான ராமனிடம் உனக்கு பக்தி ஏற்பட வேண்டுமன்னியில் ஒரு சேஷமான வஸ்துவிற்கு மற்ருெரு சேஷ வஸ்துவினிடத்தில் பக்தி ஏற்பட ந்யாயமில்லே. சேஷபூதமான வஸ்துக்களுக்குள் ஒன்றுக்கொன்று ஸ்வஸ்வாமிபாவ ஸம்பந்தமோ சாஸ்த்ரத்தில் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையினுல் என்னை மாத்ரம் தனியாக உபாஸிப்பது என்ற வ்ரதத்தைவிட்டுவிட்டு ராமபூஜனத்தில் நீ ஈடுபடவேண்டும். ராமனேடு சீக்ரத்தில் என்னைச் சேர்த்தும் வைக்கவேண்டும், சாஸ்த்ரத்திற்கு விருத்தமான ஆசாரத்தை அனுஷ்டிக்கிறவர்கள் பகவானுக்கு ப்ரதிகூலமாக ஆகிருர்கள். அவ்விதம் நீ பகவானுக்கு ப்ரதிகூலமாக ஆகாமல் அனுகூலமாக இருந்தால் உன்னுடைய மனேரதம் பூர்த்தியாகும்".

मित्रं औपयिकं कर्तुं रामः स्थानं परीप्सता ।
वधञ्चानिच्छता घोरं त्वयाऽसौ पुरुषर्षभः ॥
विदितः स हि धर्मज्ञः शरणागतवत्सलः ।
तेन मैत्री भवतु ते यदि जीवितुमिच्छसि ॥
प्रसादयस्व त्वं चैनं शरणागतवत्सलम् ।
मां चास्मै प्रयतो भूत्वा निर्यातयितुमर्हसि ।
एवं हि ते भवेत्स्वस्ति संप्रदाय रघूत्तमे ।

மித்ரம் ஔபயிகம் கர்த்தும் ராம: ஸ்தாநம் பரீப்ஸதா ।
வதஞ்சாநிச்சதா கோரம் த்வயாஸௌ புருஷர்ஷப ॥
விதித: ஸ ஹி தர்மக்ஞ: சரணாகதவத்ஸல: ।
தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி ॥
ப்ரஸாதயஸ்வ த்வம் சைநம் சரணாகதவத்ஸலம் ।
மாம் சாஸ்மை ப்ரயதோ பூத்வா நிர்யாதயிதும் அர்ஹஸி ॥
ஏவம் ஹி தே பவேத்ஸ்வஸ்தி ஸம்ப்ரதாய ரகூத்தமே ।

ஸீதாதேவியானவள் ராவணனுக்கு அதி ஸாரபூதமான சாஸ்த்ரார்த்தத்தை உபதேசிக்கின்றாள், ஸகல சாஸ்த்ரங்களுக்கும் பரம தாத்பர்ய விஷயீபூதமான அர்த்தமோ சரணாகதியென்ற தர்மம்தான், அந்த சரணாகதியைத்தான் ராவணனுக்கு ஸீதை மாத்ரு ஸ்தானத்தில் இருந்துகொண்டு போதிக்கிறாள். ராவணன் அஹங்காரியானதினால், 'ராமனைச் சரணமடை' என்று சொன்னால் அவன் அதை ஸஹிக்கமாட்டான் என்று எண்ணி அவனுடைய புத்தியை அனுசரித்தே ராமனைச் சரணமடைய வேண்டுமென்று கடைசியில் பர்யவஸானம் ஏற்படக்கூடிய சப்தத்தினால் உபதேசிக்கிறாள், அதாவது, ராமனை நீ உனக்கு ஸுஹ்ருத்தாகச் செய்து கொள்வது உசிதமாகும் என்று சொல்லுகிறாள். அதிலிருந்தும் ராமனைக் சரணமடை என்ற அர்த்தம் கிடைக்கிறது ஏனெனில், ஸ்ரீ ராமனானவர், யார் தன்னைச் சரணமடைகிறானோ அவனைத் தனக்குக் கீழாக நினைப்பதில்லை.

தர்ம, ஞான, ஐச்வர்யாதிகளில் தனக்கு ஸமான வைபவமுள்ளவனாகவே சரணம் என்று சொன்ன மாத்ரத்தினால் அந்த பக்தனைச் செய்துவிடுகிறார். ஸமமான இருவர்களுக்குத்தானே மைத்ரம் என்பதும் ஏற்படும் ராமச்சந்த்ரமூர்த்திக்கோ न तत्समश्चा-

ஶ்யதிகஶ்ச விദ്യതേ (ந தத்ஸமச்சாப்யதிகச்ச வித்யதே) என்ற ச்ருதியினால் தனக்கு ஸமமான புருஷனில்லாததினால் 'மைத்ரீ' என்ற கல்யாண குணத்தைத் தான் அடைய ச்ரமப்படும். அதற்காக சரணமென்று சொன்னவனைத் தனக்கு ஸர்வ விதத்திலும் ஸமமாகச் செய்து கொண்டு மைத்ரியைத்தான் அனுஷ்டிக்கிறார். ராமன் மித்ரனாக ஆகவேண்டுமானால் ராமனுக்கு ஸமானமாக ஆகவேண்டும் ராமனுக்கு ஸமானமாக ஆவதற்கோ, சரணாகதிதான் பரமோபாய மாகும். சரணாகதியினுடைய பலமாகிய மைத்ரியை ராவணனுக்கு ஸீதை உபதேசம் செய்வதிலிருந்தும் ராமனைச் சரணமடை என்று சொல்லுவதாகவே ஆகின்றது. ரகவணனுடைய புத்தியை அனுஸரித்தும் ஏற்பட்ட உபதேசமாக ஸித்திக்கின்றது.

"உனக்கு ஒரு இடத்தில் நிலை ஸ்திரமாக ஸித்திக்க வேண்டு மானால் ராமனை ஸ்நேகிதனாகச் செய்துகொள்ளவேண்டும். மார்கத்தில் சௌர்யத்தைக் கொண்டு ஜீவிக்கிறது, பூமியில் அடிவைத்துக் கொண்டுதான் சௌர்யத்தையும் செய்யவேண்டும். அதுபோல் உனக்கு ஒரு ஸ்தானம் ஏற்பட வேண்டுமென்று இஷ்டம் இருந்தால் ராமனையே நீ அவச்யம் சரணமடைந்துதான் ஆகவேண்டும், சரணாகதி செய்கிறதைக் காட்டிலும், ராமன் உன்னை வதித்தாரே யானால் அந்த மரணமே உனக்கு மேலானது என்று உனக்குத் தோன்றும் பக்ஷத்தில் அதுவும் ஸரியல்ல; மனுதனுக்கு ஏற்படுகிற மரணமும் ஸன்மரணமாக ஏற்பட வேண்டாமா? துர்மரணம் சாஸ்த்ரத்தில் நிஷித்தமல்லவா? ராமனோ உன்னை கோரமாக வதிப்பார். உன்னை ஜீவிக்கச் செய்துவிட்டு உன்னுடைய எதிரில் உன் புத்ரர்களான இந்த்ரஜித் முதலானவர்களைக் கொன்றுவிட்டு, அதனால் உனக்கு மஹத்தான துக்கத்தையும் உண்டுபண்ணி, பிறகு உன்னை சித்ரவதை செய்வார். அதாவது, உன் கையிலுள்ள பாணங்களால் உன்னை நீயே ஹிம்ஸை செய்துகொள்ளும்படி செய்வார். அதைப் போலுள்ள கஷ்டம் வேறு மனிதனுக்கு உண்டா? அந்த ஸந்தர்ப்பம் உனக்கு வாய்க்காமலிருப்பதற்காகவாவது அவச்யம் நீ ராமனைச் சரணமடைந்தே ஆகவேண்டும். ராமனை நான் சரணமடைந்தால் என்னை கட்டாயம் ரக்ஷிப்பார் என்பதில் என்ன

ப்ரமாணம் என்று நீ கேட்கக்கூடாது. ப்ரத்யக்ஷமே ப்ரமாணமாகும்'' என்று சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது ஸீதைக்கு நிரந்தரமான த்யான மஹிமையினால் ஸ்ரீ ராமச்சந்த்ரமூர்த்தியானவர் ப்ரத்யக்ஷமாகவே புலப்பட்டார், அதைத்தான் असौ (அஸௌ) என்ற பதத்தினால் ஸீதை நிர்த்தேசம் செய்கிறாள். ராவணனுக்கும், மாயா ம்ருகத்தை அனுஸரித்துப்போகும் ஸமயத்தில் ராமனுடைய உருவத்தைப் பார்த்த மாத்ரத்தில் அந்த பயத்தினால் ஒவ்வொரு வ்ருக்ஷங்களிலும், த்ருணகுல்மங்களிலும் ராமனைப்போலவே ராவணனுடைய கண்களில் பகவான் தென்படுகிறபடியினால், ராவணனுடைய விஷயத்திலும் असौ (அஸௌ) என்ற ப்ரத்யக்ஷவாசகமான சப்தத்தை ஸீதாதேவியானவள் உபயோகப்படுத்தி, ராமன் சரணாகதவத்ஸலன் என்பதில் ப்ரத்யக்ஷமே ப்ரமாணம், அவனுக்கு அது அனுபவ கோசரமானது என்பதைக் காட்டுகிறாள்.

''நீ என்ன அபராதம் செய்திருந்தாலும் ராமனுக்கு அநுகூலனென்பதை அல்பமான கார்யத்தில் நீ காட்டிவிட்டாலே ஸர்வ அபராதங்களையும் மறந்துவிட்டு உன்னை அவர் ரக்ஷிப்பார் என்பதில் ஸந்தேகமில்லை. ஆகையினால் ராமனை நீ ஸந்தோஷப்படுத்த வேண்டும். நானும் ராமனைக்கொண்டு உனக்கனுக்ரஹம் செய்யும்படி சிபார்சு செய்கிறேன். ஆகையினால் ராமனுடைய விஷயத்தில் நீ ப்ரதிகூல ஆசரணத்தை விட்டுவிடு. என்னையும் ராமனோடு சீக்ரத்தில் சேர்த்து வைத்துவிட்டால் உனக்குப் பரம க்ஷேமம் உண்டாகும். ஆகையினால் இவ்விதமான விபரீத புத்திகளை விட்டுவிட்டு ராமனுக்கனுகூலமான கார்யத்தில் நீ ப்ரவ்ருத்திக்க வேண்டும்.

ராம லக்ஷ்மணர்களால் சூன்யமாக ஆச்ரமத்தைச் செய்து விட்டு நீ என்னை அபஹரித்துக் கொண்டுவந்தது மிகவும் தப்பான விஷயமாகும் ராமனுடைய எதிரில் என்னை அபஹரிக்க நீ யத்னம் செய்திருந்தால் உன்னுடைய கதி எப்படி ஆயிருக்குமோ! நீ செய்த பிசமான கார்யத்திற்கு எங்கு போனாலும் ராமனிடத்திலிருந்து விமோசனத்தை நீ அடைய முடியாது. அவச்யம் ராமனை நீ சரணம் அடைந்தால் தான் ஜீவிக்கமுடியும்'' என்று ஸீதையானவள் ராவணனுக்கு நன்மையைப் போதித்தாலும் ராவணன் துர்மரணிவாக இருந்த

காரணத்தினுல், ஸீதையைப் பார்த்து கடோரமான வார்த்தை களையே பேசினுன்.

द्वौ मासौ रक्षितव्यौ मे योऽवधिस्ते मया कृतः ।
ततश्शयनमारोह मम त्वं वरवर्णिनि ॥
ऊर्ध्वं द्वाभ्यां तु मासाभ्यां भर्तारं मां अनिच्छतीम ।
मम त्वां प्रातराशार्थं आलभन्ते महानसे ॥

த்வௌ மாஸௌ ரக்ஷிதவ்யௌ மே யோவதிஸ்தே மயா க்ருத:
ததச்சயனமாரோஹ மம த்வம் வரவர்ணிநி
ஊர்த்வம் த்வாப்யாம் து மாஸாப்யாம் பர்த்தாரம் மாம் அநிச்சதீம்
மம த்வாம் ப்ராதராசார்த்தம் ஆலபந்தே மஹாநஸே

இந்த ச்லோகத்தின் வாச்யமான அர்த்தம் ப்ரஸித்தமானதுதான். இதனுல் ஏற்படும் வ்யங்க்யார்த்தம் மாத்ரம் ப்ரகாசப்படுத்தப்படும். ராமனை விட்டுப் பிரிந்த காரணத்தினுல் பரம துக்கத்தை அனுபவித்து கொண்டு ஆகாரம், நித்ரை முதலானவைகளை அடையாமல் கஷ்டப்பட்டுக்கொண்டுவரும் ஸீதையைப் பார்த்து ராவணன் கெஞ்சிக் கேட்டு ஸமாதானம் செய்கிருன்.

இந்த ச்லோகத்தில் द्वौ मासौ रक्षितव्यौ मे (த்வௌ மாஸௌ ரக்ஷிதவ்யௌ மே) என்ற வாக்யத்தில் मे (மே) என்ற பதமானது ஸம்போதன ப்ரதமையாக ஏற்பட்டது. ஹே மே! ஹே லக்ஷ்மியே என்று அதன் பொருளாகும். "ஹே ஸீதையே! நான் உன்னை ஒரு ஸம்வத்ஸரம் ஆராதிக்க, அதாவது பன்னிரண்டு மாத காலமாவது பூஜிக்க, ஸங்கல்பம் செய்து வ்ரதானுஷ்டானம் செய்துகொண்டு வருகிறேன், அவ்விதமே நான் உன்னை ப்ரார்த்தித்துக் கேட்டுக் கொண்டதிலும் பாக்கி இரண்டு மாதங்கள் தான் இருக்கின்றன. நீ ப்ரதீக்ஷிக்கவேண்டியதும அவ்வளவு காலம்தான். அந்த இரண்டு மாதம் முடிந்தவுடன் உன்னுடைய பர்த்தாவான ராமனையும், என்னிடத்திலிருக்க இஷ்டமில்லாத ராஜ்யலக்ஷ்மியையும் நீயே அடையப்போகிருய் என்பதையும் நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

அதாவது. இரண்டு மாத காலத்திற்குள் என்னுடைய உபாஸனம் முடிந்துவிடுமானதினுல், ராக்ஷஸபாகத்திலிருந்து என்னை

ராமன் விமுக்தனுகச் செய்துவிடுவார். பிறகு உன்னையும் ராமன் அடைந்து விடுவார். லங்கா ராஜ்ய ஸ்ரீக்கு நாதனில்லாததினுல் அதையும் ராமனே அடைந்து விடுவார். இரண்டு மாதத்திற்குப் பிறகு பர்த்தாவையும் நீ அடையலாம், லங்கா ராஜ்ய ஸ்ரீயையும் நீ அடையலாம். பரிசுத்தமான பாகசாலையில் பரிசுத்தமான பசுக்களை பரிசாரகர்கள் பக்வம் செய்கிருர்கள். அதையும் நீ கொஞ்சமேனும் சங்கையில்லாமல் பக்ஷிக்கவேண்டும்.''

சாக்தர்களுடைய உபாஸனு ப்ரகாரத்தில், மது மாம்ஸாதிகளும் தேவிக்கு உபஹார த்ரவ்யமானதினுல் அவைகளையும் ராவணன் பராசக்தியினிடம் அர்ப்பணம் செய்கிருன். அந்த உபஹார த்ரவ்யங்களைப் பெற்றுக்கொண்டு அவன் ஜன்மாவை ஸீதை ஸபலமாகச் செய்யவேண்டும் என்பதை ப்ரார்த்தித்துக் கொள்ளுகிருன். இதுதான் மேற்கண்ட ச்லோகத்தின் வ்யங்க்யமாகும். மஹேச்வர தீர்த்திய வ்யாக்யானத்தில் ஸ்பஷ்டமாகப் பார்த்து வித்வான்கள் அறிந்து கொள்ளலாம்.

ராமாயணம் என்ற உத்தம காவ்யத்தினுடைய ரீதியையும், காந்தா ஸம்ஹிதைக்கு அர்த்தம் சொல்லவேண்டிய க்ரமத்தையும், வ்யாக்யாதாக்கள் போகும் மார்க்கத்தையும் அனுஸரித்துக் கொண்டு, மாத்ஸர்யம், அஸூயை முதலிய தோஷங்களுக்கு அவகாசம் கொடுக்காமல் ஸீதையினுடைய பாதிவ்ரத்யத்திற்கும் குறைவில்லாமல் ஸ்ரீ ராமனுடைய அபாரமான மஹிமைக்கும் தாழ்வு ஏற்படாமல் தாத்பர்யத்தை கவனித்துப் பார்க்கும் ஸூக்ஷ்ம புத்தியோடு கூடினவர்களுக்கு வ்யங்க்யார்த்தம் ப்ரதானமாக பாஸிக்குமன்னிபில் ப்ராதீதிகமான அர்த்தம் மேலானதாகத் தோன்றுது என்பது நிச்சயம். அவரவர்களுடைய அனுபவத்திற்கும் தேவியினிடத்திலுள்ள பக்திக்கும் தக்கவாறு தத்வமானது ப்ரகாசிக்கும்.

இவ்விதம் ராவணன் சொன்னவுடன் தேவ, கந்தர்வ கன்னிகைகள் ஸீதாதேவியை ஆச்வாஸம் செய்து ஸமாதானம் செய்தார்கள். ஸீதாதேவியும் ராவணனைப் பார்த்து,

असन्देशात्तु रामस्य तपसश्चानुपालनात् ।
न त्वां कुर्मि दशग्रीव भस्म भस्मार्हतेजसा ।

அஸந்தேசாத்து ராமஸ்ய தபஸ்ச்சாநுபாலநாத் ।
ந த்வாம் குர்மி தசக்ரீவ பஸ்ம பஸ்மார்ஹதேஜஸா ॥

"ஹே ராவணா ! என்னுடைய எதிரில் ந்யாய விரோதமாகப் பேசுகிற உன்னை என்னுடைய பாதிவ்ரத்ய மஹிமையினால் சாம்பலாகச் செய்துவிடுவேன். சாம்பலாகச் செய்வதற்கு நீ அர்ஹன் தான். அப்படி நான் செய்யாமலிருப்பதற்குக் காரணமோ அவ்விதம் ராமனுடைய ஆக்ஞை இல்லாமலிருப்பதேதான் ஆகும். மாயா ம்ருகத்தை அனுஸரித்துப்போகும் காலத்தில் ராமன் 'ஹே ஸீதே ! யாராவது உனக்கு விரோதத்தை ஆசரித்தால் அவர்களை நீ உன் பாதிவ்ரத்யத்தினால் பஸ்மாகச் செய்துவிடலாம்' என்று உன்னை ஆக்ஞாபித்து இருந்தாரேயானால் உன்னை இவ்வளவு காலம் நான் வைத்திருக்கமாட்டேன். அப்படி பகவானுடைய ஆக்ஞை எனக்கில்லாமல் இருப்பதால்தான் நீ ஜீவித்திருக்கிறாய். ஆனால் सर्वतो आत्मानं रक्षयेत (ஸர்வதோ ஆத்மாநம் ரக்ஷயேத்) என்ற ச்ருதியினால், ஆபத்காலத்தில் பதிவ்ரதா ஸ்த்ரீகள் தன்னை ரக்ஷித்துக் கொள்கிற விஷயத்தில் பர்த்தாவினுடைய அனுக்ஞையை எதிர் பார்க்க வேண்டாமென்று ஏற்பட்டாலும், என்னுடைய பாதிவ்ரத்ய மென்ற தபஸ்ஸைப் பரிபாலனம் செய்துகொள்ள வேண்டுமென்று ஆவல் உள்ளவளாக இருப்பதினால் உன்னைச் சபித்துவிட்டால் தபஸ்ஸிற்குக் குறைவு வந்துவிடுமோ என்ற எண்ணத்தினாலும் உன்னை நான் பஸ்மமாகச் செய்யவில்லை. மேலும் ராமனே நேரில் வந்து உன்னை வதித்து என்னை துக்கஸாகரத்திலிருந்து கரையேற்றி விடுவதுதான் அவருடைய ப்ரதாபத்திற்கு அழகு" என்று சொன்னாள்.

மேற்கண்ட ச்லோகத்திற்கு இதுவும் ப்ராதீதிகமான அர்த்தம் தான்.

ராவணன் ஸீதாதேவியை மஹாலக்ஷ்மியென்ற எண்ணத்துடன் பூஜித்து மோக்ஷத்தை அடைய வேண்டுமென்ற விருப்பமுள்ளவனானான். ஸீதாதேவியானவள் மேற்கண்ட ச்லோகத்தினால் உன்னை நான் என் பாதிவ்ரத்யத்தினால் எரித்துவிடுவேன் என்று சொல்லுவது ந்யாயமாகுமா ? தனக்கு பூஜை செய்கிறவனுக்கு பரிபூர்ணமான அனுக்ரஹத்தைச் செய்வதல்லவா

தேவதையினுடைய ஸ்வபாவமாகும். அவ்விதமிருக்க, இந்த ச்லோகமானது எவ்விதம் ஒத்துவரும் என்று ஸந்தேஹிக்கலாம். வ்யங்க்ய மர்யாதையை அனுஸரித்து இந்த ச்லோகத்தின் தாத்பர்யத்தை அறியவும்,

அதாவது, பதிவ்ரதா ஸ்த்ரீகளுடைய மஹாத்ம்யமானது இந்த ச்லோகத்தினுல் வெளியிடப்படுகிறது.

'ராவணு! ராக்ஷஸ ஜன்மத்தை ஸனகாதிகளுடைய சாபத்தினுல் அடைந்துவிட்டோமே என்று நீ மிகவும் வருந்துகிருய், முன்போலவே பகவானுடைய பாரிஷதனுக நாம் ஆவோமோ, ஆகமாட்டோமோ என்று பயந்துகொண்டு என்னை உபாஸிக்க விரும்புகிருய். உபாஸனம் என்ற கஷ்டமான ஒரு ஸாதனத்தை நீ அனுஷ்டிக்கும்படியான ச்ரமமிலலாமலே என் பாதிவ்ரத்ய மஹிமையைக்கொண்டு உன்னுடைய ராக்ஷஸ ஜன்மத்தை பஸ்மமாகச் செய்துவிடுவேன் அந்த சக்தி எனக்கு உண்டு, என்னைப் போன்ற பதிவ்ரதா ஸ்த்ரீகளுக்கும் உண்டு.

पतिव्रतायाः नार्यास्तु पापदुष्टोऽपि भूतले ।
नरश्शुद्धिं समाप्नोति विष्णुलोके महीयते ॥
यद्यदिच्छति सा नारी तत्तत्कर्तुं विचक्षणा ।
पतिव्रतायाः समतां न याति भगवानपि ॥

பதிவ்ரதாயா: நார்யாஸ்து பாபதுஷ்டோபி பூதலே
நரச்சுத்திம் ஸமாப்நோதி விஷ்ணுலோகே மஹீயதே
யத்யதிச்சதி ஸா நாரீ தத்தத்கர்த்தும் விசக்ஷணு
பதிவ்ரதாயா: ஸமதாம் ந யாதி பகவாநபி

என்ற ஸ்ம்ருதி வசனத்தினுல், பாதிவ்ரத்யம் உள்ள ஸ்த்ரீகளுடைய வாக்கினுல் மஹாபாபியும், அனுக்ரஹம் செய்யப்படும் பக்ஷத்தில் சுத்தனுக ஆகிவிடுவான். ஈச்வரனுக்குக்கூட அந்த சக்தி கிடையாது. பதிவ்ரதா ஸ்த்ரீகளுக்கு மாத்ரம் அபூர்வமான அந்த சக்தி உண்டு. அனஸூயை என்ற அத்ரி மஹர்ஷியினுடைய தர்மபத்னியானவள் தன் பாதிவ்ரத்ய மஹிமையினுல் தன் ஸகியான ஒரு ரிஷி பத்னிக்கு ஏற்பட்ட வைதவ்ய துக்கத்தையும் நிவ்ருத்தி செய்து வைத்திருக்கிருள். ராத்ரி காலத்தையும் தீர்க்கமாகச் செய்தவளல்லவா. அநாவ்ருஷ்டியினுல் ஏற்பட்ட துர்பிக்ஷ

காலத்தில் தன் பாதிவ்ரத்ய மஹிமையைக் கொண்டு ஸுபிக்ஷமாகச் செய்தாள். எதை எதை அந்த பதிவ்ரதா ஸ்த்ரீகள் இச்சிக்கிறார்களோ அதை யெல்லாம் செய்ய சக்தியுள்ளவர்களாக ஆகிறார்கள். ஆகையினால் உன்னை நான் நினைத்த மாத்ரத்தில் ராக்ஷஸ பாவத்தினின்றும் விமோசனம் செய்துவைத்து இப்போதே அபராஜிதமான வைகுண்டத்திற்கு அனுப்பிவிட வேண்டுமென்று நினைத்தால் அனுப்பிவிடுவேன். ஈச்வரன் எப்படி ஸத்ய காமனோ, ஸத்ய ஸங்கல்பனோ அதுபோல்தான் பதிவ்ரதா ஸ்த்ரீகளும் ஸத்ய காமர்கள், ஸத்ய ஸங்கல்பத்தோடு கூடினவர்கள்.

कुतो निर्गुणतां याति ब्रह्मापि भो गुरो !
साधारण्याद्गुणानान्तु पातिव्रत्येन योषितः ॥

குதோ நிர்குணதாம் யாதி பரம் ப்ரம்மாபி போ குரோ
ஸாதாரண்யாத்குணானாந்து பாதிவ்ரத்யேந யோஷித :

என்று வாஸிஷ்ட மஹா ராமாயணத்தில், வால்மீகி மஹர்ஷியைப் பார்த்து அரிஷ்டநேமி என்ற அரசன் ப்ரச்னம் செய்கிற ஸமயத்தில், 'லோகத்தில் ப்ராணிகள் குணவானாக இருப்பதற்குத் தானே இச்சையுள்ளவர்களாக இருக்கிறார்கள். அவ்விதம் இருக்கும்போழுது பரப்ரும்மமானது நிர்க்குணமாக இருக்கக் காரணம் யாது?' என்று ராஜன் கேட்டார். மஹர்ஷியோ, 'அரசனே! நீ கேழ்ப்பது உசிதமானதே; ப்ரும்மத்திற்கோ இதர ஜனங்களைப்போல் ஸாதாரணமான குணத்தோடு தான் இருப்பதில் இச்சை கிடையாது. அதனால் தனக்கு ஒரு பெருமையும் ஸித்திக்காது. எவ்விதமான குணங்களையும் வேதாந்தங்கள் தன்னிடத்தில் அபூர்வ குணமாக ஸமர்ப்பணம் செய்ய வந்தாலும் அந்த குணத்தையும் இந்தப் புண்ய பூமியில் பாரத வர்ஷத்தில் ஜனித்த ஒரு ஸ்த்ரீகூட தன் பாதிவ்ரத்யத்தினால் ஸம்பாதித்துக் கொண்டுவிடுகிறாள். இதனால் பதிவ்ரதா ஸத்ரீகளுக்கும், பரப்ரும்மத்திற்கும் குணத்தினால் ஸாம்யமே ஸித்தித்துவிட்டது. न तत्समश्चाप्यधिकः कुतोऽन्यः (ந தத்ஸமச்சாப்யதிக: குதோந்ய:) என்ற சுருதி பொய்யாகிவிடும். அதற்காக ப்ரும்மமானது நமக்கு ஒரு குணமும் வேண்டாம்; நிர்குணமாகவே இருந்து வருவோம் என்று நினைத்து அவ்விதமே இருந்து வருகிறது' என்று கூறினார்.

இப்படி நிர்குண ப்ரம்மத்திற்கே ஸமமான பெருமையை பதிவ்ரதா ஸ்த்ரீகள் அடைகின்றூர்கள் என்றால் அந்த பதிவ்ரதைகளுக்கு எக்கார்யத்தை தான் நினைத்த மாத்ரத்தில் செய்யமுடியாது? ப்ரக்ருதத்தில் இந்த ஸ்ரீமத் ராமாயணத்திலேயே अप्रमेयं हि तत्तेजः यस्य सा जनकात्मजा । (அப்ரமேயம் ஹி தத்தேஜ: யஸ்ய ஸா ஜநகாத்மஜா) என்ற ச்லோகத்தினால், ஸீதையினுடைய ஸந்நிதியில் ராமனுடைய தேஜஸ்ஸானது அளவிடமுடியாததான வைபவத்தோடு கூடியது என்று தெரிகிறதிலிருந்தே ஸீதையினுடைய அபார பாதிவ்ரத்ய மஹிமை வெளியாகவில்லையா? ஆகையினால், பதிவ்ரதா ஸ்த்ரீகளுக்கு இந்த லோகத்தில் ஸாத்யமில்லாத கார்யமே ஒன்றுமில்லை.

''உன்னை நான் ராக்ஷஸ சரீரத்தினின்றும் விடுவித்து, அந்த சரீரத்தைப் பஸ்மமாகச் செய்துவிட்டு, வைகுண்ட பதவிக்கர்ஹமான திவ்யமான தேஜோமங்கள விக்ரஹம் உனக்கேற்படும்படி செய்துவிடுவேன். பர்த்தாவான ராமனுடைய ஆக்ஞை அவ்விதமிருந்தால் என்னுடைய உடாஸனத்தில் உனக்கு ச்ரமத்தை கொடுக்காமலே அப்படியே செய்திருக்கக்கூடும்; அவ்விதம் எனக்கு பர்த்தாவான ஸ்ரீ ராமனுடைய அனுக்ஞை கிடைக்கவில்லை அதனால் தான் நான் அவ்விதம் உன்னைச் செய்யவில்லை. பர்த்தாவினுடைய அனுக்ஞையில்லாமலே நான் ஸ்வதந்த்ரையாக ஒரு பக்தனுக்கு அனுக்ரஹம் செய்வதிலோ, அபக்தனை நிக்ரஹம் செய்வதிலோ ப்ரவ்ருத்தித்தால் ஸ்வாதந்த்ரியத்தைக் கொண்டாடுகிறவளாக ஆகிவிடுவேன். அதனால் பாதிவ்ரத்யத்திற்குக் கொஞ்சம் லோபம் வந்துவிடுமோ என்ற பயமும் எனக்கு இருக்கிறது. ஆகிலும் ஸ்ரீ ராமன் பூலோகத்தில் அவதாரம் செய்ததே

स हि देवैरुदीर्णस्य रावणस्य वधार्थिभिः ।
अर्थितो मानुषे लोके जज्ञे विष्णुः सनातनः ॥

ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:
அர்த்தித: மாநுஷே லோகே ஜக்ஞே விஷ்ணு: ஸநாதந:

என்ற ச்லோகத்தை அனுஸரித்து, ராவண வதத்திற்காகவே மஹாவிஷ்ணு ராமாவதாரம் செய்திருக்கும்பொழுது, அந்த பகவானுடைய மனதில் ராவண வதம் அபிமதமானதினால் பர்த்தாவினுடைய அனுமதமான கார்யத்தை, பர்த்தாவினுடைய அனுக்

ஞையை எதிர்பார்க்காமலே செய்யும் ஸ்த்ரீகளுக்கு பாதிவ்ரத்யம் ஓங்கி வளருமன்னியில் அதற்குக் குறைவு எப்படி ஏற்படும் என்று நீ நினைக்கக்கூடும். அது உண்மையே. பகவான் உன்னை வதிப்ப தற்காகவே ப்ரத்யக்ஷமாக ஆவிர்பவித்திருக்கிருர். அவர் மூலமாக நிச்சயமாக உனக்கு ராக்ஷஸ பாவத்தினின்று விமோசனமே ஏற்படப்போகின்றது. அது ஸித்தமாக இருக்கும்பொழுது எதற்காக பாதிவ்ரத்யம் என்ற பரம தர்மத்திற்குக் கொஞ்சம் லோபத்தை ஸம்பாதித்துக் கொள்ளவேண்டும் என்றுதான் என்னுடைய அபிப் ராயமாகும்'' என்பதையும் தபஸச்சாரு பாலநாத் என்ற வாக்யத்தி ஞல் ஸீதையானவள் தெரிவித்துக் கொள்கிருள்.

அத்துடன், ''ராமன் மூலமாகவே உனக்கு ராக்ஷஸ சரீரத்தி னின்றும் விமோசனம் கிடைத்தால்தான் ராமனுக்கு ஒரு அபூர்வ மான உத்கர்ஷம் ஏற்படும். என் பாதிவ்ரத்யத்தினுல் உன்னை துக்கத்தினின்று நிவ்ருத்தி செய்துவிட்டால் ராமனுக்கேற்படுகிற உத்கர்ஷத்தை நான் குறைத்தவளாக அல்லவா ஆகிவிடுவேன். அந்த பயத்தினுலும் உன்னை ராக்ஷஸ பாவத்தினின்றும் விமோ சனம் செய்துவைக்க நான் முயற்சிக்கவில்லை'' என்ற ரீதியாக மேற்சொன்ன ச்லோகத்தின் அர்த்தத்தை அபிக்ஞர்கள் கவனித் தார்களேயாஞல், ஸீதாதேவியைப் பூஜித்து. தான் க்ருதார்த்தனுக ஆகவேண்டுமென்ற எண்ணத்துடன் ராவணன் இருந்தால், ஸீதா தேவியானவள் மேற்கண்ட ச்லோகப்ரகாரம் ராவணனை பௌருஷ மாகப் பேசலாமா என்ற கேள்விக்கு அவகாசமே இராது

தவிரவும், ''நீ என்னை சௌர ப்ரகாரத்தை அனுஸரித்து அபஹாரம் செய்தே, ராமன் மூலமாக உனக்கு ராக்ஷஸ பாவத்தி னின்று விமோசனத்தை விதித்திருக்கிற தெய்வத்தின் செயல்தான். அன்னியில் ராமனை வஞ்சித்துவிட்டு என்னை அபஹரிக்க உன்னுடைய புத்தியில் அபிப்ராயம் ஏற்பட்ட காலத்திலே நீ எரிந்துபோயிருக்கலாம். அது தெய்வத்தினுடைய செயலானதினுல்

யாராலும் அதைத் தடுக்க முடியவில்லை दैवं हि परमागतिः (தைவம் ஹி பரமாகதி:) என்ற ந்யாயத்தை அனுஸரித்து யாரும் தெய்வத்திற்கு உட்பட்டுத்தான் ஆகவேண்டும். அவ்விதம் ராமன் மூலமாக உனக்கு வதத்தை தெய்வமானது கல்பித்திருக்கும் பொழுது என் பாதிவ்ரத்யத்தினுல் நான்தான் உன்னை என்ன செய்யமுடியும்? அக்காரணத்தையும் கொண்டுதான் உன்னை நான் பஸ்மமாகச் செய்யவில்லை. இல்லாதுபோனுல், அதாவது விதியாவது இவ்விதம் கல்பிக்காமலிருந்தால் ராமனுடைய ஸந்நிதியை விட்டு நீ இங்கு என்னை அபஹரித்தும் வரமுடியாது.''

नापहर्तुमहं शक्या त्वया रामस्य धीमतः ।
विधिस्तव वधार्थाय विहितो नात्र संशयः ॥

நாபஹர்த்துமஹம் சக்யா த்வயா ரமஸ்ய தீமத ।
விதிஸ்தவ வதார்த்தாய விஹிதோ நாத்ர ஸம்சய: ॥

என்ற ச்லோகமே மேற்சொன்ன அர்த்தத்திற்கு ப்ரமாணமாகும்.

இவ்விதம் ஸீதையினுடைய வார்த்தையைக் கேட்டுக் கொண்டிருநத ராவணன், உண்மையை அறியாமல் மஹத்தான கோபத்தை அடைந்து, ஸீதையைப் பார்த்துப் பௌருஷமாகப் பேசினுன்.

अनयेनाभिसंपन्नं अर्थहीनमनुव्रते ।
नाशयांयहमद्यत्वां सूर्यः सन्ध्यामिवोजसा ॥

அநயேநாபிஸம்பந்நம் அர்த்தஹீநமநுவ்ரதே ।
நாசயாம்யஹமத்யத்வாம் ஸூர்ய: ஸந்த்யாமிவோஜஸா ॥

''அநீதியோடு கூடினவனுயும், பயனற்ற வ்ரதத்தை அனுஷ்டிக்கிறவனுயும் உள்ள ராமனையே நீ அனுஸரித்துவருகிருய். நான் எவ்வளவு ப்ரார்த்தித்தும் என்னிடத்தில் உனக்குக் கொஞ்ச மேனும் பஹுமான புத்தி ஏற்படவில்லையே ஆகையினுல் ஸூர்யன் உதித்தவுடன் ஸந்த்யா தேவியை நாசம் செய்வதுபோல், நான் உன்னை இப்பொழுதே நாசம் செய்துவிடுகிறேன்'' இது வாச்யார்த்த மாகும்.

न विद्यते नयः न्यायः यस्याः अन्यत्र सा अनघा! तस्या संबुद्धि अनघे! (ந வித்யதே நய: ந்யாய: யஸ்யா: அந்யத்ர ஸா அநயா, தஸ்யா: ஸம்புத்தி: அநயே). "ஹே ஸீதே! ந்யாயம் உன் னிடத்தில் குடியிருக்கிறது. 'கேவலம் சக்தியினுடைய உபாஸனத் தினுல் மோக்ஷம் என்பது என் ஸித்தாந்தம்' 'சக்தியைத் தனியாக வைத்துப் பூஜிக்கக்கூடாது ராமனோடு என்னை நீ சேர்த்துப் பூஜிக்கவேண்டுமென்று' நீ ப்ரதிவாதம் செய்தாய். அது மிகவும் நீதிக்கு ஒத்ததாக இருக்கிறது என்று இப்பொழுதுதான் எனக்குப் புலப்படுகிறது மௌட்யத்தினுல் ஸாஹஸ வாதத்தை அவலம்பித்து நான் ப்ரஸங்கம் செய்ததற்கு மன்னித்து நீ என்னை ரக்ஷிக்கவேண்டும். நானோ அபிஸம்பன்னன். உனக்கபிமுகமாக உன்னை ப்ரபத்தி செய்தவன். அர்த்தஹீனன். வைகுண்டத்திலனுபவித்து வந்த பரம புருஷார்த்தத்தை இழந்தவன். நீயோ அநுவ்ரதை; अनुसृतानां आश्रितानां प्रपन्नानां संरक्षणमेव व्रतं यस्याः सा अनुव्रता (அநுஸ்ருதாநாம் ஆச்ரிதாநாம் ப்ரபந்நாநாம் ஸம்ரக்ஷணமேவ வ்ரதம் யஸ்யா: ஸா அநுவ்ரதா) என்றபடி ஆச்ரித ஸம்ரக்ஷண வ்ரதத்தோடு கூடினவள்.

இவ்விதமுள்ள நீ தீனனான என்னை ஸந்த்யாதேவியை ஸூர்ய பகவான் ஸ்வீகரிப்பதுபோல், உன்னுடைய பாதிவ்ரத்ய மஹிமையினுல் உன் பக்தகோடியில் அங்கீகாரம் செய்யாத பக்ஷத்தில், உன்னை நிமித்தமாக வைத்து நான் என்னுடைய ஆத்மாவை நாசம் செய்துகொண்டுவிடுவேன். சௌர்ய மார்க் கத்தை அவலம்பித்து உன்னை நான் அபஹரித்துவந்த தோஷங் களேயும், ஸூர்யபகவான் தன்னுடைய ப்ரதாபாதிசயத்தினுல் ஸந்த்யாதேவியின் ராகத்தை, சிவப்பு நிறத்தைப் போக்கடித்துத் தன் கோஷ்டியில் சேர்த்துக்கொண்டதுபோல், உன்னுடைய ப்ரதாபாதிசயத்தினுல் என் தோஷத்தையும் நிவர்த்தி செய்து வைத்து உன்னுடைய பக்தகோடியில் என்னேயும் ஒரு பக்தனுகச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறேன்" என்பதே மேற்சொன்ன ச்லோகத்தின் தத்வார்த்தமாகும்.

இவ்விதம் ராவணன் ஸீதையைப் பார்த்துச் சொல்லிவிட்டு அநேக விதமான ராக்ஷஸ ஸ்த்ரீகளை ஸீதையைத் தன் வசமாக்க உபாயங்களை அனுஷ்டிக்கும்படி ஆக்ஞாபித்துவிட்டு தன்

னுடைய திருமாளிகைக்குத் திரும்பச் சென்ருன். ராக்ஷஸ ஸ்த்ரீகள் ஸீதையினிடம் கொடூரமான வார்த்தைகளைப் பேசி ஸீதைக்கு துக்கத்தை உண்டுபண்ணின விஷயத்தையோ, ஸூக்ஷ்மதர்சிகள் ப்ரபந்தகதமான வ்யங்க்ய மர்யாதையை அனுஸரித்து அடியிற்கண்டபடி அறிந்துகொள்ளவும்.

ஸீதை என்ற சப்தத்திளுல் பகவானுடைய பாரதந்த்ரியத்தை வஹித்துவரும் அனுதியான ஜீவன் என்ற அர்த்தத்தை க்ரஹித்துக் கொள்ளவேண்டும். ராமனே தாரக ப்ரம்மமே. தாரக ப்ரம்மமான ராமனிடத்தில் ஒரு க்ஷணகாலம் கூட விட்டுப் பிரியாமல் இருந்து வந்த அந்தரங்கமான ஸீதையென்ற ஜீவனுக்கு ராமனை விட்டுப் பிரியும்படியான கஷ்டகாலம் நேர்ந்ததற்கு, மாரீசன் மான் வேஷம் போட்டுக்கொண்டு ஸீதைக்கு எதிரில் வந்து துள்ளிக் குதித்து, ஸீதைக்குத் தன்னிடத்தில் பற்றுதல் ஏற்படும்படி செய்து. அதனுல் ஸீதைக்கும் மாயா ம்ருகத்தினிடத்தில் ஏற்பட்ட வாத்ஸல்யமே காரணமாகும் விஷயாதிகளில் ஆஸக்தியை வைத்த ஜீவன் ப்ரம்மத்திற்கு வெகு தூரத்தில் உள்ளவனுக ஆகி விடுவான் என்பது இதனுல் வெளியாகிறது.

அப்படி ப்ரம்மத்தை விட்டுப் பிரிந்த ஜீவனும், ஸீதை ராவணனுடைய வசத்தில் அகப்பட்டாள் என்ற கதையினுல், रावयति असत्प्रलापात कारयतीति रावणः अविवेकः (ராவயதி அஸத் ப்ரலாபாத் காரயதீதி ராவணः அவிவேக:) என்ற ஸமாஸத்தினுல், மஹா மோகம் என்ற அவிவேகத்தினுல், அந்த ஜீவன் பாரவச்யத்தை அடைந்து கஷ்டப்படுவான் என்பதும் வெளியாகிறது. ராவணன் ஸீதையை அபஹரித்துக்கொண்டு போய் தன் வசத்தில் வைத்துக் கொண்ட ஸாஹஸத்தை அடக்கி 'ஜடாயுஸ்' என்ற க்ருத்ரராஜன் ப்ராணன் போகிறவரையிலும் ராவணனுடன் மன்ருடியும் அவனுல் ஸாத்யப்படவில்லை என்ற அம்சத்தினுல், அவிவேகத்தி னுடைய வசத்தில் அகப்பட்டுக்கொண்ட ஜீவன் அவிவேகம் என்ற மூலாக்ஞானத்தை நிவ்ருத்தி செய்துகொண்டு, தாரக ப்ரம்மமாகிய ஸ்ரீ ராமனேடு முன்போலவே சேர்ந்து பரம ஸௌக்யத்தை அனுபவிக்க கர்மாக்களால் ஸாத்யமில்லை. அக்நி ஹோத்ரம் முதலிய கர்மாக்கள் மோக்ஷத்திற்கு ஸாதனமாகாது என்பதும் வெளியாகிறது.

ராவணன் ஸீதையை கடலின் நடுவிலுள்ள லங்கையில் அசோகவனத்தில் ஸ்தாபித்தான் என்பதினால், அவிவேகியான ஜீவன் ஸம்ஸார ஸாகரத்தின் நடுவிலுள்ள பாஞ்சபௌதிகமான சரீரம் என்ற லங்கா நகரத்தில் ஹ்ருதயமாகிற அசோக வனத்தில் பரிச்சின்ன பாவத்தோடு கூடினவன்போல் இருந்து வருவான் என்பதும் ப்ரகாசிக்கிறது. அவிவேகம் இந்த ஜீவனை ப்ரம்மத்தோடு சேராமல் செய்து, தன் வசத்திலேயே வெகு ஜன்மங்களாக இருக்கும்படி கஷ்டப்படுத்தும் என்ற தத்வமும் ராவணன் ஸீதையைப் பார்த்துச் சொன்ன வார்த்தைகளால் தெரிகிறது. ஸீதை ராவணனுக்கு உட்படாமல் இருந்த நிலையானது ஸத் ஸங்கத்தினால் மிகவும் சுத்தமான ஜீவன் அவிவேகத்தினுடைய பாரவச்யத்தை அடைந்திருந்தாலும், அவிவேகத்தோடு மன்றாடி வேதாந்த விசாரதிகளால் அவிவேகத்தையும் நாசம் செய்து கொண்டு, ராமனாகிய தாரகப்ரம்மத்துடன் மறுபடியும் சேருவதில் விடாமுயற்சியாக இருப்பான் என்பதை ஸூசிப்பிக்கின்றது. ராவணனுடைய ஆக்ஞைக்குட்பட்டு வெகுவிதமான ராக்ஷஸ ஸ்த்ரீகள் ஸீதையைக் கண்டபடி துக்ககரமான வார்த்தைகளைப் பேசினார்கள் என்பதைக் கவனிக்க இந்த்ரிய வ்ருத்திகளால் ஜீவனுக்கு துக்கானுபவம்தான் ஏற்படுமன்னியில், ஸுகத்தை அடைய அவஸரம் நேரிடுவது மிகவும் அரிது என்பதும் வெளியாகிறது.

அத்துடன், ஆத்யாத்மிகம் என்த சரீரதத்தையொட்டின தாபங்களும், ஆதிதைவிகம் என்ற முன் ஜன்மத்தில் செய்த கர்மாவை அனுஸரித்து ஏற்படுகிற துக்கமும், ஆதிபௌதிகம் என்ற ப்ருத்வி முதலான பூதங்கள் மூலமாக ஏற்படுகிற துக்கமும் சேர்ந்து மூன்று விதமான தாபங்களும் அவிவேகியான ஜீவனைப் பாதிக்கும் என்பதும் வெளியாகிறது.

இவ்விதமான ராக்ஷஸ ஸ்த்ரீகளுடைய கூட்டங்களில் பரம பாகவதோத்தமனான விபீஷஸ்வாமியினுடைய புத்ரியானவள் ஒரு ஸாத்வீயான விதூஷி என்று சொல்லக்கூடியவளாக இருந்து வந்தாள். அவளுக்கு 'ஸரமா' என்று பெயர். த்ரிஜடை யென்றும் சொல்லுவார்கள். ஸர்வ ப்ராணிகளுக்கும் மாரகமான

கடலிலும் நவரத்னம் இருப்பதுபோல், ஸீதையினுடைய துக்கத்திற்குக் காரணமான க்ரூரமான ராக்ஷஸ ஸ்த்ரீகளுடைய மத்தியில் அந்த மஹானுபாவையான ஸ்த்ரீ ஒருவள் விளங்கி வந்தாள் என்ற கதா பாகத்தினுல், அவிவேகத்தினுடைய பாரவச்யத்தை அடைந்த ஜீவன் இந்த்ரிய வ்ருத்திகளாலும், தாபத்ரயத்தினுலும் பரம துக்கத்தை அனுபவித்துக்கொண்டு வருகிற ஸமயத்திலும், ஜன்மாந்தரத்தில் செய்த புண்ய விசேஷத்தினுல், தற்காலத்தில் துக்க உபசாந்திக்குக் காரணமான ஸத்ஸங்கதியேற்பட்டு கொஞ்சம் ஸமாதானத்தை அடையலாம் என்பதும் வெளியாகிறது.

விபீஷண ஸ்வாமியினுடைய புத்ரியோ, ராவணனுடைய கக்ஷியில் அபஜயத்தையும், ராமனுடைய கோஷ்டிக்கு மேலான ஜயத்தையும், ஸீதாதேவிக்கு ஸௌபாக்யாதிசயத்தையும் தான் ஸ்வப்னத்தில் கண்டு, விழித்துக்கொண்டவுடன் ராக்ஷஸ ஸ்த்ரீகளிடத்தில் அந்த வ்ருத்தாந்தத்தைச் சொல்லி அவர்களையும் கண்டித்து, ஸீதாதேவியையும் ஸமாதானப்படுத்தினுள். இதனுல் மஹா புருஷர்களுடைய ஸமாகரயணம் ஏற்பட்டால் அவர்களுடைய உபதேச வாக்யத்தினுல் இந்த ஜீவன் எந்த அவிவேகத்தினுடைய பாரதந்த்ரியத்தை அடைந்திருக்கிருனே அதிலிருந்து விடுபடுகின்றுன். அவிவேகம் என்பதுதான் மூலாக்ஞானம். அவிவேகம் என்ற மூலாக்ஞானமோ அனுதியாக, தாரகப்ரம்மமாகிய ஸ்ரீ ராமனிடத்தில் கல்பிதம். கல்பிதமான பதார்த்தங்களுக்கு அதிஷ்டான ஸாக்ஷாத்காரத்தில் நிவ்ருத்தி ஏற்பட்டு ஸ்வரூபம் பாதிக்கப்பட்டுவிடும் என்று அவிவேகத்தினுடைய பக்ஷத்தில் தோன்றலாம்.

பரம அதிஷ்டான தாரகப்ரம்மத்திற்கு, எக்காலத்திலும், எக்காரணத்தைக்கொண்டும் பாதை என்பதே யில்லை. அது காலத்ரயத்திலும் அபாத்யமான பொருள். தேசத்தாலோ, காலத்தினுலோ, வஸ்துவினுலோ பரிச்சேதமற்றது. ஸ்வயமாகவே தானும் ப்ரகாசித்துக்கொண்டு, மற்றவர்களையும் ப்ரகாசிக்கச் செய்யும் தன்மையுள்ளது. பேரின்பம் என்று சொல்லப்படும் நிரதிசயமான ஆனந்தமே அந்த அதிஷ்டான ஸ்வரூபமாகும் என்று தாரகப்ரம்மத்தினுடைய கக்ஷிக்கு மேலான ஜயத்தைக்

கண்டு, இந்த ஜீவன் கொஞ்சம் ஸமாதானத்தை அடையக்கூடும் என்பதும் வெளியாகிறது

இவ்விதம் ஸரமையென்ற விபீஷணஸ்வாமியினுடைய புத்ரியின் ஸ்வப்ன வ்ருத்தாந்தத்தினுல் ஸீதைக்குக் கொஞ்சம் ஸமாதானம் ஏற்பட்டு சாந்தியேற்பட்டதினுல், ராமனைவிட்டுத் தான் பிரிந்துவிட்டோமோ என்ற துக்கத்தினுல் தன்னுடைய உயிரை விட்டுவிட வேண்டுமென்ற யத்னத்தை நிறுத்திக் கொண்டாள். ப்ரம்ம ப்ராப்திக்கு விரோதமான அவிவேகத்தினுடைய பாரவச்யத்தை அடைந்த ஜீவன் இவ்விதம் மஹா அவிவேகியாக நாம் ஆகிவிட்டோமே; எப்படி நாம் ப்ரம்ம பாவத்தை அடைகிறது ப்ரம்ம பாவத்தை அடையாத ஜீவனையோ,

असूर्या नाम ते लोका अन्धेन तमसावृताः ।
तांस्ते प्रेत्याभिगच्छन्ति एके चात्महनो जनाः ॥

அஸூர்யா நாம தே லோகா: அந்தேந தமஸா வ்ருதா:
தாம்ஸ்தே ப்ரேத்யாபிகச்சந்தி ஏகே சாத்மஹநோ ஜநா:

என்ற ச்ருதியானது, ஆத்மஹத்தி செய்தவன் என்று நிந்திக்கிறது. அவ்விதமான ஜன்மத்தை நாம் எதற்காக வைத்துக் கொள்ளவேண்டும் என்று வருந்தி ப்ரம்ம ப்ராப்திக்கு ஸாதனமாயும், அபரோக்ஷமான அவிவேகத்திற்கு நிவர்த்தகமாயும் உள்ள அபரோக்ஷ ஸாக்ஷாத்காரம் இல்லாத நம் ஜன்மத்தை நெருப்பு வைத்துக்கூட பொசுக்கலாம்' என்று தன் ஜன்மத்தில் வெறுப்பு ஏற்பட்டு கஷ்டப்படும்போது, மஹா புருஷர்களுடைய உபதேச வாக்யத்தினுல் இனிமேல் நமக்கு நல்ல காலம் வந்துவிட்டது என்று ஸந்தோஷமடைந்து ஜீவன் கொஞ்சம் சாந்தியை அடைவான் என்பதும் தெரிகிறது

விபீஷணஸ்வாமியினுடைய புத்ரியான த்ரிஜடை கண்ட ஸ்வப்னத்திற்கு அனுகுணமாக, ஸீதைக்கு மிகவும் சீக்ரத்தில் ராகவனேடு சேரும் ஸௌபாக்யம் ஏற்படப்போகிறது என்பதை சில சுபஸூசகங்கள் ஸூசிப்பித்தன. தேஹத்திலும், தேஹத்திற்கு வெளியிலும் ஸீதைக்கு சுபஸூசங்கள் ஏற்பட்டன.

அதனால் இந்த ஜீவனுக்கு அவிவேகத்தை நிவ்ருத்தி செய்து கொள்ள அந்தரங்கமான ரஹஸ்யத்தை உபதேசம் செய்வதற்கு பரமாத்மாவினாலேயே ஏவப்பட்ட ஒரு மஹாபுருஷன் பரம குருவாக இந்த ஜீவனுடைய ஸமீபத்திற்கு வந்து சேர்ந்து, தாரக ப்ரம்மமாகிய ஸ்ரீ ராமனிடத்தில் தத்பாவாபத்தி என்ற கைவல்யம் அதிசீக்ரத்தில் ஏற்படச் செய்வார் என்பதை ஸூசிப்பிக்க தன்னுடைய எதிரில் சில சுபமான ஸூசகங்களும் தென்படும். தனக்கே கனவிலும் சுபமான பதார்த்தங்களைப் பார்க்கக்கூடிய ஸந்தர்ப்பங்களும், ஜாக்ரத்திலும் சில சுபமான வைபவங்களும், தன்னுடைய சரீரம் ஏற்பட்ட ஜன்ம லக்னத்தை அனுஸரித்து மோக்ஷஸ்தானத்தில் ஞானகாரகனின் க்ரஹமும், அந்த ஸ்தானத்திற்கு அதிபதியும், தேவ குருவுமான ப்ரஹஸ்பதியினுடைய ஸம்மந்தமோ, அவருடைய பார்வையோ சுப ஸூசகமாக ஏற்படும் என்பதையும் அறியவும்.

पक्षी च शाखानिलयः प्रहृष्टः पुनः पुनश्चोत्तमसान्त्ववादी ।
सुस्वागतां वाचमुदीरयानः पुनः पुनश्चोदयतीव हृष्टः ॥

பக்ஷீ ச சாகாநிலய: ப்ரஹ்ருஷ்ட: புந: புநச்சோத்தமஸாந்த்வவாதீ
ஸுஸ்வாகதாம் வாசமுதீரயாந: புந: புநச்சோதயதீவ ஹ்ருஷ்ட:

पक्षी (பக்ஷீ) என்பதினால் पिङ्गलिका (பிங்கலிகா) என்ற பெயரால் ப்ரஸித்தமான ஒரு பக்ஷி விசேஷம். அதாவது, பஞ்சவர்ணக் கிளி என்றே அதைச் சொல்லலாம். அந்த பக்ஷி ஸீதையினுடைய எதிரிலுள்ள ஒரு மரத்தினுடைய கிளையில் உட்கார்ந்துகொண்டு தனக்கு வேண்டிய ஆஹாரங்களை சாப்பிட்டு த்ருப்தியாய் இருக்கும் காரணத்தினால் மேன்மேலும் மதுரமான ஸ்வரத்துடன் ஸீதையைப் பார்த்து ஸீதைக்கு மிகவும் பரம பந்துவான ராமனுடைய ஆகமனத்தை ஸூசிப்பதுபோல் அழகாக சப்தித்து வந்தது. இதைக் கவனித்த ஸீதையோ, ராமனை நேரில் பார்த்தால் எவ்வித ஸந்தோஷத்தை அடைவாளோ அவ்வித ஆனந்த ஸாகரத்தில் மூழ்கினாள். இந்த ச்லோகத்திற்கு இவ்விதமாக மேலாகப் பொருள் வெளியாகிறது.

வேதாந்தாசார்யாளோ, இந்த பக்ஷியை கருடனென்றே வர்ணிக்கின்றார்கள். पक्षौ अस्यस्त इति (பக்ஷௌ அஸ்யஸ்த இதி)

என்ற ஸ்மாஸத்தினுல், பக்ஷி என்றதினுல் ஸாக்ஷாத் கருடபகவான் என்ற அர்த்தம் வெளியாகிறது. கருடபகவானே ஸீதைக்கு எதிரில் ஆகாசத்தில் தனது இரண்டு இறக்கைகளையும் விரித்துக் கொண்டு ப்ரதக்ஷிணமாக ஸஞ்சாரம் செய்துவிட்டு. புஷ்பத்தோடு கூடினதாயும், துளிர்களால் அலங்கரிக்கப்பட்டதாயும் உள்ள ஒரு பச்சையான மரத்தினுடைய கிளையில் உட்கார்ந்துகொண்டு ஸ்திரமாக அந்தக் கிளையிலேயே வாஸம் செய்து வந்தார்.

கருடன் ப்ரதக்ஷிணமாக ஆகாசத்தில் பறப்பதும், ஆர்த்ரமான கிளையில் வந்து உட்காருவதும, அதிலும் அந்த கிளையிலேயே ஸ்திரமாக இருந்து வருவதும் சுபத்தை எதிர்பார்க்கிறவர்களுக்கு நல்லது என்பது சாஸ்த்ரத்தினுல் தெரியவருகிறது. கருடபகவான் ஸந்தோஷமாக சப்தித்துக் கொண்டிருந்தார். அந்தக் கிளையிலுள்ள பழத்தை உட்கொண்டு ஸந்துஷ்டமான ஹ்ருதயத்தோடு கூடிய வராகவும் விளங்கினுர். அடிக்கடி ஸீதையைப் பார்த்து மேலான ஸந்தோஷ வார்த்தையைச் சொல்லி ஸமாதானப்படுத்துவதுபோல் தன் மதுரமான சப்தத்தினுல் ஸூசிப்பித்தார். அந்த சப்தத்தைக் கவனித்தால், "ஹே ஸீதே! நீ துக்கப்படாதே; அதிசீக்ரத்தில் உன்னுடைய பர்த்தா வருவார்; துக்கத்திற்கு இது ஸமயமல்ல" என்று சொல்லுவதுபோல் ஸூக்ஷ்மதர்சிகளுக்கு புலப்படுகின்றது. மறுபடியும் சோபனமான வார்த்தையையே ஸீதையைப் பார்த்து அந்த கருடன் சொல்வது போலவும் தோன்றுகிறது.

तपति तनुगात्रि मदनस्त्वामनिशं मां पुनर्दहत्येव ।
ग्लपयति यथा शशाङ्कं न तथा हि कुमुद्वतीं दिवसम् ॥

தபதி தநுகாத்ரி மதநஸ்த்வாமநிசம் புநர்தஹத்யேவ
க்லபயதி யதா சசாங்கம் ந ததாஹி குமுத்வதீம் திவஸம்

என்ற ந்யாயப்படி. ராமனை விட்டுப் பிரிந்த ஸீதையினுடைய துக்கத்தைக் காட்டிலும், ஸீதையைவிட்டுப் பிரிந்ததினுல் ராமருடைய துக்கம் அதிகமாக ஏற்படுகிறது 'நாயகியினுடைய ஸமீபத்தில் நாயகனைவிட்டுப் பிரிந்ததினுல் நீ படுகிற கஷ்டம் கஷ்டமாக ஆகாது உன்னைவிட்டுப் பிரிந்த நாயகன் படுகிற கஷ்டம்தான அதிகமானது' என்று நாயகிக்கு சொல்லுவதே அவளுக்கு ஒரு பெரிய ஸமாதானமாகும்.

அவ்விதமே மேற்குறிப்பிட்ட நாடக ச்லோகத்தினுல், தன் மனைவியைப் பார்த்து துஷ்யந்த மஹாராஜன் 'அழகான சரீரத்தோடு கூடின ஹே ப்ரியே! என்னை விட்டுப் பிரிந்ததினுல் மன்மதன் உன்னைத் தபிக்கச் செய்கிருன். என்னையோ எரிக்கவே செய்து சாம்பலாக்கிவிட்டான். பகலானது குமுத புஷ்பங்களுடைய வரிசைகளை வாட மாத்ரம் செய்யுமே தவிர நாசப்படுத்தாது ஆனுல் சந்த்ரனை கண்ணுக்குத் தென்படாமலே அடித்துவிட்டது' என்று சொல்வதினுல் மேற்கண்ட தாத்பர்யமே வெளியாகிறது.

அதுபோலவே இந்த கருடபகவானும் ராமனுடைய நாயகியான ஸீதையைப் பார்த்து ''ஹே ஸீதே! உன் துக்கம் துக்கமல்ல; உன்னை விட்டுப் பிரிந்த நாயகனுன ஸ்ரீராமனுடைய துக்கம்தான் அஸஹ்யமான துக்கம்'' என்று சொல்லி ஸமாதானப்படுத்துவது போலவே தன் மதுரமான சப்தத்தினுல் ஸூசிப்பித்துக் காட்டினுர். सुस्वागतां वाचं उदीरयानः (ஸுஸ்வாகதாம் வாசம் உதீரயாந) என்ற வாக்யத்தினுல் இதை வேதாந்தாசார்யாள் வெளிப்படுத்துகிருர்கள். நாயகனை விட்டுப் பிரிந்த நாயகியினிடத்தில் அவனுடைய ப்ரதியோகியான நாயகனுடைய ஸந்தாபாதிசயத்தைச் சொல்வதே நாயகியினிடத்தில் ஏற்பட்ட ஸுஸ்வாகத வசனமாகும்.

இவ்விதம் ஸீதையை ஸமாதானப்படுத்திக்கொண்டு ராமனுடைய ஆகமனத்தை வரவேற்க ஸீதையை துரிதப்படுத்துவது போல் மறுபடியும் அந்த பக்ஷி சப்தித்தது. அதை चोदयतीव पुनः पुनः (சோதயதீவ புந புந:) என்பதினுல் வெளிப்படுத்துகிருர்.

''ஹே ஸீதே! நாயகனுன ராமனுடைய ஆகமனம் நிச்சயமாகிவிட்டது ஸ்நான அலங்காராதிகளை ஏன் செய்துகொள்ளாமலிருக்கிருய்'' என்று ஸீதையை துரிதப் படுத்துகிறது. அத்துடன் கருடனுடைய ஸந்தோஷத்தைச் சொல்லி முடியாது ''உன் நாயகன் உன் ஸமீபத்தில் வந்து உன்னேடு சேர்ந்திருப்பதில் எனக்குத்தான் மிகவும் ஸந்தோஷம்'' என்பதையும் தன்னுடைய ரோமாஞ்சங்களால் ஸூசிப்பித்துக்கொண்டு ஸீதையை ஆச்வாஸப் படுத்தியது.

இந்த ராமாயணமோ உத்தம காவ்யமானதினுல், வாச்யார்த்தத்தை அதிக்ரமித்து வ்யங்க்யார்த்தத்தை இந்த காவ்யத்தினுல்

அறியவேண்டியது அவச்யமாகும். வ்யங்க்யமும், பதத்தை அனுஸரித்தும், வாக்யத்தை அனுஸரித்தும், ப்ரபந்தத்தை அனுஸரித்தும், மூன்று விதமாக ஏற்படுகிறது.

இந்த ஸுந்தர காண்டம் என்ற ப்ரபந்தத்தினால், அனாதிகாலமாக பகவானுடைய ஸம்பந்தத்தை அடைந்த சேதனமாகிற ஒரு ஜீவன், விஷயாதிகளில் ப்ராவண்யத்தை அடைந்த காரணத்தினால், பகவானை விட்டுப்பிரிந்து இருக்கும்படியான கஷ்டம் நேர்ந்து, எப்பொழுது நாம் பகவானை அடையப்போகிறோம் என்ற கவலையினால் தவிக்கும்பொழுது, அந்த துக்கமானது ஆசார்யனுடைய அதீனமாக நிவ்ருத்தி ஆகவேண்டியதாக இருப்பதினால், அந்த சேதனமான ஜீவனை உஜ்ஜீவிக்கச் செய்வதில் ஆசார்யனுடைய ப்ரவ்ருத்தியானது காரணமாகச் சொல்லப்படுகிறது. இந்த பொருளை இந்த காண்டத்தின் ஆரம்பத்தில் ततो रावणनीतायाः (ததோ ராவணநீதாயா.) என்ற ச்லோக வ்யாக்யான அவஸரத்தில் நிருபிக்கப்பட்டது.

ஸ்ரீமத் ராமாயணத்தில், லங்கை என்ற பதத்தினால் சரீரத்தை க்ரஹித்துக் கொள்ளவேண்டும். ஸீதையாகிற சேதனத்திற்குக் காவலாளியாக இருந்த ‘ஏகாக்ஷி’ முதலிய ராக்ஷஸ ஸ்த்ரீகளை இந்த்ரியங்களாகவும், ராவணன், கும்பகர்ணன் இருவர்களையும் அஹங்கார, மமகாரமாகவும், விபீஷணஸ்வாமியை விவேகமாகவும், இந்த்ரஜித் முதலிய மந்த்ரிகளை காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்ற அரிஷ்ட வர்க்கங்களாவும், சரிரமாகிய லங்கா நகரத்தில், அந்தக்கரணம் என்ற உபாதியினால் பரிச்சேதத்தை அடைந்ததுபோல் தோன்றுகிற ஆத்ம சைதன்யத்தை ஸீதையாகவும் அறியவும். அந்த ஜீவனுக்கு பகவானுடைய தத்வ ஞானத்தை உபதேசம் செய்கிற பரம ஆசார்ய புருஷனாகவே ஆஞ்ஜனேய ஸ்வாமியை அறியவேண்டும். ஸம்ஸார ஸாகரத்தினின்றும் சேதனமான ஜீவனை உஜ்ஜீவிக்கச் செய்யும் ஆசார்ய புருஷனுடைய மஹிமையானது இந்த ச்லோகத்தினால் ப்ரகாசப் படுத்தப்படுகிறது.

पक्षी (பக்ஷி) = ஞான யோகம், கர்ம யோகம் என்ற இரண்டையும், இரண்டு இறக்கைகளாக உடைய பரம ஞானி

என்ற அர்த்தம் வெளியாகிறது. பக்ஷிகளுக்கு இறக்கைகள் பறக்க ஸாதனமாவதுபோல், ஞானிகளுக்கு ஞானோத்பத்திக்கு முன்பு கர்ம யோகம் கமன ஸாதனமாகவும், ஞானமேற்பட்ட பிறகு ஞான யோகம் கமன ஸாதனமாகவும், கர்ம யோகமும், ஞான யோகமும் அங்காங்கி பாவத்தை அடைந்து, கமன ஸாதனமாக ஆகின்றபடியினால் பக்ஷிங்களோடு கூடின பக்ஷிக்கு ஸமானமாக ஆசார்ய புருஷன் வர்ணிக்கப் படுகிறன்.

கர்ம யோகமும், ஞான யோகமும் பரஸ்பரம் விருத்தமானதினுல், ஒரே காலத்தில் ஒரே புருஷனுல் அனுஷ்டிக்க முடியாதபோனுலும் கூட, ஞானத்திற்கு முன்பு சித்த சுத்திக்கு ஸாதனமாக கர்ம யோகத்தை அனுஷ்டானம் செய்துவிட்டுப் பிறகு அந்த புருஷன் ஞானயோகியாக ஆகக்கூடுமானதினுல், க்ரமமாக கர்மயோகத்திற்கும் ஞானயோகத்திற்கும் ஸமுச்சயமானது ஸர்வ சாஸ்த்ர ஸம்மதமானதினுல் அதுதான் पक्षी (பக்ஷி) என்ற சப்தத்தினுல் இங்கு சொல்லப்படுகிறது.

उभाभ्यामेव पक्षाभ्यां यथा खे पक्षिणां गतिः ।
तथैव ज्ञानकर्मभ्यां नियता परमा गतिः ॥

உபாப்யாமேவ பக்ஷாப்யாம் யதா கே பக்ஷிணும் கதி ।
ததைவ ஞாநகர்கப்யாம் நியதா பரமா கதி :

என்ற ச்லோகத்தினுல், பக்ஷிகள் எப்படி ஆகாசத்தில் இரண்டு இறக்கைகளால் பறக்குமோ. அதுபோலவே வித்வான்களும் ஆகாசமென்ற பதத்தினுல் சொல்லப்படும். ப்ரம்மத்தை அடைய அங்காங்கி பாவத்தோடு கூடின கர்மயோகம், ஞானயோகம் இவைகளைக்கொண்டு பரம கதியை அடைகிருர்கள் என்ற அர்த்தம் வெளியாகிறபடியால், ஞானத்திற்கும் கர்மாவிற்கும் ஸமகாலத்தில் ஸமுச்சயம் இல்லாதுபோனுலும்கூட. கர்க ஸமுச்சயத்தை யாராலும் ஒப்புக்கொள்ளாமல் இருக்கமுடியாது. யக்ஞ, யாகங்களான கர்மாக்களுக்கோ ஞான ஸாதனத்வமென்ற தன்மையை तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसा अनाशकेन (தமேதம் வேதாநுவசநேந ப்ராம்மணு விவிதிஷந்தி யக்ஞேந தாநேந தபஸா அனுசகேந) என்ற ச்ருதி போதிக்கின்றது. ஆசார்யன் ச்ரோத்ரியனுயும், ப்ரம்மநிஷ்டனுயும் இருக்கவேண்டு

மென்று சொல்லுகிற श्रोत्रियं ब्रह्मनिष्ठं (ச்ரோத்ரியம் ப்ரம்மநிஷ்டம்) என்ற ச்ருதியும் இந்த அபிப்ராயத்தைத்தான் வெளிப்படுத்துகிறது.

आचिनोति हि शास्त्रार्थान् आचारे स्थापयत्यपि ।
स्वयं आचरते यस्मात् तस्मादाचार्य उच्यते ॥

ஆசிநோதி ஹி சாஸ்த்ரார்த்தாந் ஆசாரே ஸ்தாபயத்யபி
ஸ்வயம் ஆசரதே யஸ்மாத் தஸ்மாதாசார்ய உச்யதே

என்ற ஸ்ம்ருதியினுலும், தான் சாஸ்த்ரங்களை விசாரித்து அறிந்து அந்யர்களையும ஸதாசாரத்தில் ஸ்தாபனம் செய்து கொண்டு, தானும் சாஸ்த்ரத்தில் சொல்லிய உபாயங்களை ஆதரித்து வருபவனே ஆசார்யன் என்ற சப்தத்திற்குப் பொருளாகக் கூடுமானதினுல், அந்த ஆசார்ய சப்த நிர்வசனமே பக்ஷீ என்ற சப்தத்தினுல் சொல்லப்படுவதாக அறியவும்.

शाखानिलयः (சாகாநிலய:) சாகை என்ருல் வேத சாகைகள், நிலய: என்ற பதத்தினுல் அத்யயனம் செய்த வேத சாகையை மறக்காமல் எப்பொழுதும் ஸ்பூர்த்திக்கு வரும்படி ஆவ்ருத்தி செய்து. அந்த வேத சாகையை ப்ரத்யக்ஷமாக விளங்கும்படி வைத்துக்கொண்டிருக்கும் தன்மை.

அத்துடன், निलयः (நிலய:) என்ற சப்தத்தினுல் வேதத்தின் அர்த்தத்தை குருமுகமாக ச்ரவணம் செய்வது; பிறகு மனனம் செய்வது; பிறகு த்யானம் செய்வது என்ற வேதார்த்தத்தின் அனுஷ்டானம், இவைகள் அத்யயனம் செய்தவர்களுக்கு அவச்யம் என்பதையும் ஸூசிப்பிக்கின்றது அர்த்த ஞானமில்லாமலும், வேதத்தில் சொல்லியிருக்கும் கர்ம லாபங்களையோ, உபாஸனங்களையோ அனுஷ்டானம் செய்து, அதன் மூலம் சித்தத்தை சுத்தமாயும், ஏகாக்ரமாகவும் செய்துகொண்டு, ஞான காண்டத்தின் அர்த்தமாகிய ஆத்மஞானத்தை அடையாமல் சப்த ராசிகளை மாத்ரம் அத்யயனம் செய்தவர்கள் ஆசார்ய பதவிக்கு அர்ஹர்களாக மாட்டார்கள். அத்யயனம் செய்த வேதத்தை மறந்தவர்களும் ஆசார்யன் என்று சொல்ல அர்ஹதை அற்றவர்கள்.

अधीतमपि यो वेदं विमुञ्चति नराधमः ।
भ्रूणहा सतु विज्ञेयो वियोनिमधिगच्छति ॥

அதீதமபி யோ வேதம் விமுஞ்சதி நராதம ।
ப்ருணஹா ஸது விக்ஞேயோ வியோநிமதிகச்சதி

என்ற சிக்ஷா சாஸ்த்ரத்தால், அத்யயனம் செய்த வேதத்தை எவன் மறக்கின்ருனே, அவன் நராதமன், ப்ருணன் என்ற சப்தத்தினுல் சொல்லப்படுவான். மஹா தபஸ்வியைக் கொன்ற பாபத்திற்கு ஸமானமான பாபத்தோடு கூடினவனுக ஆகிருன். இந்த ஜன்ம" முடிந்த பிறகு அவனுக்கு திர்யக்யோனியில்தான் ஜன்மா ஏற்படும் என்று தெரிகிறபடியினுல். அத்யயனம் செய்த வேதத்தை மறக்காமல் வைத்துக்கொள்ள வேண்டும் என்பது சாகாநிலய: என்ற சப்தத் தினுல் வெளியாகிறது. அத்துடன், ஆசார்ய பதவியில் அமர்ந் திருக்கப்பட்ட புருஷனுக்கு வேத ஸம்பத்தி மிகவும் முக்யமானது என்பதை ஆசார்ய லக்ஷணத்தைச் சொல்லும் சாஸ்த்ரமானது வெளிப்படுத்துகிறது.

आचार्यो वेदसंपन्नः विष्णुभक्तो विमत्सरः ।
मन्त्रज्ञः मन्त्र भक्तश्च सदा मन्त्रार्थतः शुचिः ॥
गुरुभक्तिसमायुक्तः पुराणज्ञो विशेषतः ।
एवं लक्षणसंपन्नः गुरुरित्यभिधीयते ॥

ஆசார்யோ வேதஸம்பந்ந: விஷ்ணுபக்தோ விமத்ஸர:
மந்த்ரக்ஞ: மந்த்ர பக்தச்ச ஸதா மந்த்ரார்த்த: சுசி:
குருபக்தி ஸமாயுக்த: புராணக்ஞோ விசேஷத:
ஏவம் லக்ஷணஸம்பந்ந: குருரித்யபிதீயதே

என்ற சாஸ்த்ரத்தினுல், ஆசார்யன் வேதாத்யயனம் செய்த வனுயும்; விஷ்ணு பக்தியோடு கூடினவனுயும்; தன்னைக் காட்டிலும் அதிக வைதுஷ்யம் உள்ள வித்வான்களிடத் தில் மாத்ஸர்யம் இல்லாதவனுயும்; மந்த்ர ரஹஸ்யங்களை அறிந்தவனயும்; மந்த்ர ஜபத்தில் நம்பிக்கையுள்ளவனுயும்; தான் எப்பொழுதும் அந்த மந்த்ரத்தை ஜபிக்கிறவனுயும்; தன்னுடைய குருவினிடத்தில் பக்தி உள்ளவனுயும்; பதினெட்டுப் புராணங் களையும் நன்ருகப் படித்து அறிந்தவனுயும்; சிஷ்யனுடைய அக்ஞானத்தைப் போக்கக்கூடிய ஞான மஹிமையோடு கூடின

வனாயும் இருப்பவனே ஆசார்யனாக யோக்யதை உள்ளவன் என்று தெரிகிறபடியினால், அந்த பரிபூர்ணமான ஆசார்யனுடைய லக்ஷண மானது சாகாநிலய: என்ற பதத்தினால் சொல்லப்படுகிறது.

प्रहृष्टः (ப்ரஹ்ருஷ்ட:) ஆசார்யன் எப்பொழுதும் ஸந்துஷ்டமான ஹ்ருதயத்தோடு கூடினவனாக இருக்கவேண்டும். இதனால் எப் பொழுதும் சிஷ்யர்களுக்கு ஸேவிக்கத் தகுந்தவனாக ஆகிறான்.

आह्लाद शीतनेत्राम्बुः पुलकीकृतगात्रवान ।
सदा परगुणाविष्टः द्रष्टव्यः सर्वदेहिभिः ॥

ஆஹ்லாத சீதநேத்ராம்பு: புலகீக்ருதகாத்ரவாந்
ஸதா பரகுணாவிஷ்ட: த்ரஷ்டவ்ய: ஸர்வதேஹிபி:

என்ற வசனத்தினால் ஆசார்ய புருஷனாக இருப்பவர்கள் எப்பொழுதும் பரம ஆஹ்லாதத்தோடு 'ஆனந்தாச்ரு' என்ற அம்ருதத்தினால் பூரிக்கப்பட்ட நேத்ரத்தோடும், ரோமாஞ்சத்தோடு கூடின தேஹத் தோடும், அந்ய ஜனங்களிடத்திலுள்ள குணத்தை மாத்ரம் க்ரஹிக் கிறவர்களாயும் இருக்க வேண்டும் இவ்விதம் இருந்தால்தான் ஸகலமான ப்ராணிகளாலும் தர்சிக்கத் தகுந்த மஹிமையோடு கூடினவர்களாகுவார்கள் என்பதும் प्रहृष्टः (ப்ரஹ்ருஷ்ட:) என்ற பதத்தினால் வெளியாகிறது.

पुनः पुनश्चोत्तमसन्त्ववादी (புந: புநச்சோத்தம ஸாந்த்வவாதீ) उत्तमः (உத்தம:) என்ற பதத்தினால் उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः (உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:) என்ற கீதா வாக்யத்தினால் பரமாத்மா என்ற பொருளை அறிந்துகொள்ளவும். அந்த பரமாத்மாவைப் பற்றியுள்ள ஸாந்த்வ வசனம், அதாவது, ஸமாதான வார்த்தை; ரஹஸ்யமான உபதேசம் இதை சிஷ்யர் களுக்குச் சொல்லுகிறவனே உத்தம ஸாந்த்வ வாதியாகுவான்.

त्वं मे अहं मे कुतस्तत् तदपि कुत इदं वेद मूलप्रमाणात्
एतच्चानादि सिद्धात् अनुभव विभवात् तर्हि साक्रोश एव ।
काक्रोशः कस्य गीतादिषु मम विदितः कोत्र साक्षी
सुधी स्यात् हन्त त्वत्पक्षपाती स इति नृकलहे मृग्यमद्धशस्थवत्त्वम् ॥

த்வம் மே அஹம்மே குதஸ்தத் ததபி குத இதம் வேத மூலப்ரமாணாத்
ஏதச்சாநாதி ஸித்தாத் அநுபவ விபவாத் தர்ஹி ஸாக்ரோச ஏவ
க்வாக்ரோச: கஸ்ய கீதாதிஷு மம விதித: கோத்ர ஸாக்ஷீ
ஸுதீ ஸ்யாத் ஹந்த த்வத்பக்ஷபாதீ ஸ இதி ந்ருகலஹே
ம்ருக்யமத்யஸ்தவத்வம்

பகவானுடைய விஷயத்தில், மனுஷ்யர்களுக்கு விவாதம் ஏற்படுகிறது அதாவது, ஒரு மனிதன் பகவத் பக்தியினுடைய மஹிமையினால் தனது ஆத்மஸ்வருபத்தை பரப்ரம்மமாகவே ஸாக்ஷாத்கரித்துக்கொண்டு தன்னையும் ஜகத்தையும் பரமாத்மாவின் ஸ்வரூபமாகவே அனுபவிக்கிறவனாக ஆகிவிட்டான். அந்த மஹா புருஷன் ஒரு ஸமயத்தில் ப்ராரப்த கர்மாவினுடைய அதீனமாக ஏதோ ஒரு புண்ய க்ஷேத்ரத்தில் பகவானுடைய ஸந்நிதிக்குச் சென்றான். ஆனால் அந்த மூர்த்திக்கு யாதொருவித உபசாரங்களையும் செய்யவில்லை. பகவானோ, அவனுடைய ஞான மஹிமையை வெளிப்படுத்தவேண்டுமென்ற உத்தேசத்துடன் ப்ரதிமையிலிருந்தும் ஆவிர்பவித்து அந்த வித்வானைப் பார்த்து, 'त्वं मे (த்வம் மே) நீ என்னுடைய மனிதனல்லவா? அதாவது, நான் உனக்கு ஸ்வாமி, நீ என்னுடைய ப்ருத்யன்: அப்படி இருக்கும் பொழுது உனக்கும் நமக்கும் உள்ள ஸேவ்ய-ஸேவகபாவத்தை ப்ரகாசப்படுத்தாமல் தண்டவத்தாக நின்றுவருகிறாயே; அது ந்யாயமாகுமா?' என்றார்.

இதற்கு வித்வான், 'अहं मे (அஹம் மே) நான் என்னுடைய அதீனமன்னியில் மற்றவனுக்கு ப்ருத்யனாக மாட்டேன். எனக்கு வேறான மற்றவனும் இல்லை. அப்படியிருக்க யார் ஸேவ்யன்? யார் ஸேவகன்? ஸேவ்ய-ஸேவகபாவ ஸம்பந்ததிற்கே அவகாசமில்லை' என்றான். 'நீ ஸேவ்யன் நான் ஸேவகன் என்பதில் என்ன ப்ரமாணம்?' என்ற அபிப்ராயத்துடன் कुतस्तत् (குதஸ்தத்) 'எங்கிருந்து அந்த பேதம் ஏற்பட்டது' என்று பகவானைப் பார்த்து அந்த வித்வான் ப்ரச்னம் செய்தான்.

பகவான் அந்த வித்வானைப் பார்த்து, 'உனக்கும் எனக்கும் பேதமில்லை; அபேதம்தான் என்ற ஸித்தாந்தமும் எந்த ப்ரமாணத்தினால் ஏற்பட்டது? நீதான் அந்த ப்ரமாணத்தை முன்பாக நிரூபணம் செய்' என்றார். வித்வானோ, 'वेदमूलप्रमाणात् (வேத

மூலப்ராமணத்) என்ற பதத்தினுல் மூலப்ரமாணமான तत्त्वमसि (தத்வமஸி) என்பது முதலான அபேத ச்ருதிகளைக் கொண்டே நீயும் நானும் ஒன்று என்ற ஐக்யத்தை நான் ஸாதிக்கின்றேன்' என்ருன். இதைக் கேட்ட ஈச்வரனும் அந்த வித்வானைப் பார்த்து, 'நான் உபாஸ்யன், நீ உபாஸகன் என்ற உனக்கும் நமக்கும் உள்ள ஸேவ்ய-ஸேவகபாவமும், அனுதிகால ஸித்தமான அனுபவம் என்ற ப்ரமாணத்தினுல் ஏற்பட்டதே' என்ருர். வித்வானே, ஆகமத்தினுல் ஐக்யம் ஸித்தமாக இருக்கும்பொழுது, ப்ரத்யக்ஷத்தினுல் ஆகமத்திற்கு விரோதமாக ஜீவேச்வர பேதத்தை ஸாதிக்கிறவர்கள் துராக்ரஹத்தோடு கூடியவர்கள்தான் என்று தீர்மானிக்க வேண்டும்' என்று சொன்னுன். பகவானும் யாருக்கு எந்த விஷயத்தில் ஆக்ரோசம்? என்னுடைய ஸ்வரூபம் நித்ய ஸேவ்யம் என்றே போதிக்கும்.

मन्मना भव मद्भक्तः मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोसि मे ॥
ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।

மந்மநா பவ மத்பக்த: மத்யாஜீ மாம் நமஸ்குரு
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோஸி மே
மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந:

என்ற கீதா சாஸ்த்ரமே ஜீவேச்வர பேதத்தில் ப்ரமாணமாகாதா?' என்ருர். 'அந்த சாஸ்த்ரங்கள் லோகஸித்தமான பேதத்தை அனுவரதம் செய்கிறதா. அல்லது ஜீவேச்வரபேதத்தையே தாத்பர்யத்தோடு நிரூபணம் செய்வதற்காக ஏற்பட்டதா என்பதை விசாரித்தால், அனுவரத சாஸ்த்ரமாக ஆகுமன்னியில், விதிரூபமாக ஆகாது' என்று வித்வான் ஆக்ஷேபித்து, 'क्षेत्रज्ञं चापि मां विद्धि, सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज (க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வதர்மாந்பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ) என்பது முதலான சாஸ்த்ரங்களினுல் ஜிவேச்வர ஐக்யமானது போதிக்கப் பட்டிருக்கும்பொழுது, ஐக்யத்தைப் போதிக்கிற வாக்யம் அபூர்வமான அர்த்தத்தைப் போதிக்கும் காரணத்தினுல், நிரவகாசமாகி ப்ரபல சாஸ்த்ரமாக விளங்கும்பொழுது, லோகப்ரஸித்தமான ஜீவேச்வர பேதத்தைச் சொல்லுகிற சாஸ்த்ரம் [ஞாதமான அர்த்தத்

ஜதச் சொல்லும் காரணத்தால் வ்யவஹாரதசையில் ஸாவகாசத்தை அடைந்து துர்பல ப்ரமாணமாக ஆனதினுல், ஜீவேச்வர பேதத்தை ப்ரபோதிக்கிற விஷயத்தில் தாத்பர்யம் உள்ளவையாக ஆகாது. அந்த சாஸ்த்ரமும் ஜீவேச்வர பேதத்தில் தாத்பர்யம் உள்ளதுதான் என்பதற்கு யார் ஸாக்ஷி?' என்ருன்.

பகவானே, सुधी (ஸுதீ) என்ற பதத்தினுல் ''வித்வான்களே ஸாக்ஷி'' என்ருர்.

அதற்குப் பதிலாக இந்த வித்வானே, 'கீதா சாஸ்த்ரத்தினுல் ஜீவேச்வர பேதத்தை ஸாதிக்கிற வித்வான்கள் ஏதோ உன்னிடத்தி லிருந்தும் ப்ரயோஜனத்தை எதிர்பார்த்து, உன் பக்ஷமாகப் பேசுகிற உன் பக்ஷபாதிகள். மத்யஸ்த பதவிக்கு அவர்கள் அர்ஹதை உடையவர்கள் அல்ல. ஆகையினுல் ஜீவேச்வர பேதத்தை நீ சொல்லுகிறபடி, நீதான் சொல்லிக்கொண்டு இருக்கவேண்டும். அபேதத்தை நான் ஸித்தாந்தித்த ப்ரகாரம் ஒப்புக்கொண்டுதான் தீரவேண்டும். இந்த நிஷ்பக்ஷபாதியாக இருந்துகொண்டு ஸித்தாந்தம் செய்கிற மத்யஸ்தர்களைத் தேடித்தான் பிடிக்கவேண்டும். பேத–அபேத வாதிகளுடைய கலஹத்தில், மத்யஸ்த பாவத்தை வஹித்துக்கொண்டு ஸமாதானம் செய்யும் சக்தியுள்ள மஹா புருஷனே 'உத்தம ஸாந்த்வவாதி' என்று சொல்லப்படுவான். அவன் சொல்லுகிற ஸாந்த்வ வசனமோ,

यमो वैवस्वतो राजा यस्तवैष हृतिस्थितः ।
तेन चेद् विवादस्ते मागङ्गां मा गुरून मम ॥

யமோ வைவஸ்வதோ ராஜா யஸ்தவைஷ ஹ்ருதிஸ்திதః
தேந சேதம் விவாதஸ்தே மாகங்காம் மா குருந் மம

என்ற வசனமே, அதாவது காலகாலகனுன பரமேச்வரன் ப்ராணிகளுடைய ஹ்ருதயபுண்டரிகத்தில்.

ईश्वरस्सर्वभूतानां हृद्देशे अर्जुनतिष्ठति ।
भ्रामयन्सर्वभूतानि यन्त्ररूढानि मायया ॥

ஈச்வரஸ்ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசே அர்ஜுனதிஷ்டதி
ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா

என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து. வாஸம் செய்கிருர். அந்த ஈச்வரனேடு கூட இந்த ஜீவனுக்கு விவாதம் இல்லாமல் இருந்தால்,

அதாவது விவாதம் என்பது இருவர்களுக்குள் ஏற்பட்ட கலஹ மாகும். அந்த கலஹமானது இருவர்கள் என்ற பாவம் இருக்கும் வரையில் ஓயாது. ஈச்வரனே தான், தானே ஈச்வரன் என்ற ஐக்ய ப்ரதிபத்தி வந்தால்தான் கலஹம் தொலையும். இதனால் ஈச்வரனோடு உனக்கு விவாதம் இல்லாமல் இருக்கும் பக்ஷத்தில் என்றதினால், ப்ரம்மத்தோடு ஜீவனுக்கு ஐக்யப்ரதிபத்தி ஏற்பட்டுவிட்டால், கங்கை, குருக்ஷேத்ரம் முதலிய தீர்த்தாடனம் செய்யவேண்டிய அவச்யமே ஏற்படாது; அதாவது க்ருதக்ருத்யனாக ஆகிவிடுகிறான். ஜன்மாந்த்ரத்திற்குக் காரணமான ஸர்வ கர்ம க்ஷயம் ஏற்பட்டு விடுகிறது.

भिद्यते हृदयग्रन्थिः छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे ॥

பித்யதே ஹ்ருதயக்ரந்திः சித்யந்தே ஸர்வ ஸம்சயா :
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே

என்ற சாஸ்த்ர ப்ரகாரம் நைஷ்கர்ம்ய ஸித்தியை அடைந்து விடுகிறான் என்ற உபதேசத்தை அந்தப் பரம குருவானவன் சிஷ்யனுக்குச் செய்து, ஈச்வரனுக்கும், ஜீவனுக்கும் ஏற்பட்ட கலஹத்தை நிவர்த்தி செய்து வைக்கிறான். அவ்விதமாக உபதேசிக்கும் ஸாமர்த்யமுள்ள ஆசார்யன்தான் உத்தம ஸாந்த்வவாதியாகுவான் இந்த உபதேசமானது ரஹஸ்யோபதேசமானதினால், ஒரு தடவை சொன்னால் சிஷ்யர்கள் க்ரஹித்துக் கொள்வது கஷ்டமாக இருக்கும் என்று நினைத்துத் திருப்பித் திருப்பி இந்த ரஹஸ்யத்தைக் குரு கொஞ்சமும் ஆயாஸத்தை அடையாமல் சிஷ்யர்களுக்கு உபதேசிக்கவேண்டும் என்ற நிர்ப்பந்தத்தையும் पुनः पुनश्चोत्तमसान्त्ववादी (புநः புநச்சோத்தமஸாந்த்வவாதீ) என்ற வாக்யமானது வர்புறுத்துகின்றது.

ஒரு பூமியில் க்ருஷியைச் செய்கிற கர்ஷகன் ஒரு வருஷத்தில் தான் பயிரிட யத்னம் செய்து அது பலிக்கவில்லை என்பதற்காக இந்த க்ருஷியை விட்டுவிட மாட்டான். மறு வருஷமும் ப்ரயத்னம் செய்யத்தான் செய்வான். அப்படி இரண்டொரு வருஷங்கள் நஷ்டத்தை எதிர்பார்க்காமல் யத்னம் செய்து வந்தானேயானால் முன் வருஷங்களில் ஏற்பட்டிருக்கும் நஷ்டங்களையும் சேர்த்துப்

பரம லாபத்தை அவன் அந்த க்ருஷியிலிருந்தும் அடைந்துவிடலாம். அதுபோல் ஆசார்ய ஸ்தானத்திலுள்ளவன் தான் ஒரு தடவை உபதேசம் செய்ததை சிஷ்யன் ஸரியாக க்ரஹிக்கவில்லை என்பதற்காக அந்த சிஷ்யனை விட்டுவிடமாட்டான். பல தடவைகளில் திருப்பித் திருப்பிச் சொல்லி அந்த சிஷ்யனை க்ருதார்த்தனுகவே ஆக்கிவிடுவான். அப்படிச் செய்கிறவன்தான் ஆசார்ய பதவிக்கு அர்ஹதை உள்ளவன் என்பதும் पुनः पुनश्चोत्तमसान्त्ववादी (புநः புநச்சோத்தமஸாந்த்வவாதீ) என்ற வாக்யத்திஞல் வெளியாகிறது. இதனுல் பகவானைக் காட்டிலும் ஆசார்யன் மேலானவன் என்பதும் ப்ரகாசமாகிறது.

பகவானே, அர்ஜுனனுக்குக் கீதையை உபதேசம் செய்தார். அர்ஜுனன் அந்த கீதையை காலக்ரமத்தில் மறந்து விட்டான். பிறகு அச்வமேத யாகம் நடக்கும் காலத்தில், பகவானுடைய ஸந்நிதியில், தனக்குப் பகவானுல் உபதேசிக்கப்பட்ட கீதையை மறந்தது தப்பு என்று நினைத்து, மறுபடியும் உபதேசம் செய்துகொள்ள வேண்டுமென்று விநயத்துடன் கேட்டான். பகவானே 'நான் மறுபடியும சொல்லமாட்டேன்' என்று சொல்லிவிட்டார். அது மாத்ரமல்ல: नूनं अश्रद्धानोऽसि दुर्मेधाश्चासि पाण्डव (நூநம் அச்ரத்ததானேஸி துர்மேதாச்சாஸி பாண்டவ) "அர்ஜுனு கொஞ்சமேனும் ஸத்விஷயத்தில் உனக்கு ச்ரத்தையே இல்லை, மேதையும் போதாது. அப்பேர்ப்பட்ட உனக்கு நான் மறுபடியும் சொல்லி என்ன ப்ரயோஜனம்?" என்று அர்ஜுனனை மிகவும் தாழ்மையாகவும் கூறிவிட்டார். இதனுல், பகவான் ஒருவனுக்கும் உபதேசம் செய்யவேமாட்டார். உபதேசித்தாலும் ஒரு தடவைதான் சொல்லுவார் சிஷ்யன் தன் மேதையைக் கொண்டு ஜாக்ரதையாக க்ரஹித்துக்கொள்ள வேண்டும். திருப்பிக் கேட்டானேயானுல் முடியாது என்று சொல்லிவிடுவார். ஆசார்யனே சிஷ்யனுடைய புத்தியில் பதியும்படி எவ்வளவு தடவை சொல்லவேண்டுமானுலும், சொல்ல ஸித்தனுக இருப்பான். இதை அறிந்தால் பகவானைக் காட்டிலும் ஆசார்யன் மேலானவன் என்பது ஸித்தமாகவில்லையா ?

தவிரவும், सुस्वागता वचं उदीरयानः (ஸுஸ்வாகதாம் வாசம் உதீரயாந) सुष्टु (ஸுஷ்டு) ஸம்ப்ரதாயத்திற்குக் கொஞ்சமேலும்

எப்படி விச்சேதம் வராமலிருக்குமே, அப்படி ஆசார்ய பரம்பரையிலிருந்து தனக்குக் கிடைத்த அஷ்டாக்ஷரம் முதலிய மந்த்ர ராஜரூபமான வாக்கை ப்ரதிப்ரயோஜனத்தை எதிர்பார்க்காமலும், பரம கருணையினால் உபதேசிக்கிறவனே ஆசார்யனென்று மேற் சொன்ன வாக்யத்தினால் பொருள் வெளியாகிறது. இதனால் சிஷ்யனுக்கு ஆசார்ய பரம்பரையினுடைய ஞானமும் அவச்யம் இருக்கவேண்டும். அப்படியானால்தான் அந்த ஞானம் மோக்ஷம் என்ற பலனை அளிப்பதில் ஸாமர்த்யம் உள்ளதாகும் என்பதும் வெளியாகிறது.

पुनः पुनश्चोदयतीव (புந: புநச்சோதயதீவ) என்று தான் உப தேசித்த அர்த்தத்தை சிஷ்யன் சரியாக அறிந்துகொண்டானா என்பதைத் தெரிந்துகொள்வதற்குத் திருப்பித் திருப்பிச் சிஷ்யனைப் பார்த்து "விஷயம் புரிந்ததா? சொல் பார்ப்போம். இந்த தத்வம் மிகவும் கடினமானதினால் அடிக்கடி அனுஸந்தானம் செய்யவேண்டும்" என்று சிஷ்யனை சாஸிப்பான். அப்படி சாஸிக்காமல்போனால் தான் செய்த உபதேசமும் வீணாகவே ஆகிவிடுமல்லவா!

स्खालित्ये शासितारं (ஸ்காலித்யே சாஸிதாரம்) என்றும் சாஸ்த்ரமானது, சிஷ்யன் சலிக்காமலிருக்க அடிக்கடி ஆசார்யன் சாஸித்துக்கொண்டு வரவேண்டும் என்று தெரிகிறது. அவ் விதமான உத்தம சிஷ்யனை சாஸித்துத் தான் உபதேசித்த அர்த் தத்தை திருப்பிச் சொல்லிவிட்டானேயானால் அதனால் ஆசார்ய னுக்கு ஏற்படுகிற பரம லாபமோ, பரம ஸந்தோஷம்தான் என்றதையும் ஹ்ருஷ்ட: என்ற பதமானது ஸூசிப்பிக்கின்றது. அந்நியில் ப்ரபூதமான தனத்தைக் கொடுத்து ஆசார்யனுடைய மனதை ஸந்தோஷிக்கச் செய்ய முடியாது என்பதும் வெளி யாகிறது.

இவ்விதமான ஸந்தர்ப்பத்தினால், தாரக ப்ரம்மமாகிற ராம னுடைய அருகிலேயே அனாதிகாலமாக நித்யானந்தத்தை அனு பவித்து வந்த ஸீதையென்ற ஜீவதத்வத்திற்கு மாரீசன் மான் வேஷம் போட்டுக்கொண்டு வ்யாமோஹப்படுத்திய காலத்தில் பொய்யான விஷயாதிகளில் ப்ராவண்யம் ஏற்பட்ட காரணத்தினால் தாரக ப்ரம்மாகிய ராமனையும் விட்டுப் பிரியும்படியான துர்த்

தசை ஏற்பட்டு, அவிவேகமாகிய ராவணனுடைய பாரவச்யத்தையும் அடைந்து, ஜடாயுஸ்ஸினுடைய யுத்தம் பலிக்கவில்லை என்ற காரணத்தினால், கர்மாக்களினால் ஜீவனுக்கு அவிவேகத்தினின்றும் முக்தி கிடையாது என்பது ஸித்தமாகி, ஸம்ஸார ஸமுத்ரத்தினுடைய நடுவில் பாஞ்ச பௌதிகமான சரீரமென்ற லங்காநகரத்தில் புத்தி என்ற சிம்சுபா வ்ருக்ஷத்தினுடைய மூலத்தில் ஹ்ருதயமென்ற அசோக வனத்தில், இந்த்ரிய வ்ருத்தியாகிற ராக்ஷஸ ஸ்த்ரீகளுடைய நிர்ப்பந்தத்திற்கு உட்பட்டு, ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்ற தாபத்ரயத்தினால் பரம துக்கத்தையும் அனுபவித்துக்கொண்டு வருகிற ஜீவனுக்கு, ஆசார்ய புருஷனுடைய அதீனமாக துக்க நிவ்ருத்தியும், ப்ரம்மானந்த அவாப்தியும் ஏற்படவேண்டுமென்ற சாஸ்த்ரத்தையும் அனுஸரித்து, இந்த ஸீதையென்ற ஜீவன் உத்தம ஜீவனானபடியினால், பாகவதோத்தமானதினாலும். பகவானுடைய ஆக்ஞானுஸாரியான பரமாசார்யனே ஆஞ்ஜனேய ஸ்வாமி உருவமாக ஸீதையென்ற ஜீவனை மேற்சொன்ன துக்கத்திலிருந்தும் விமோசனம் செய்து வைக்க தத்வோபதேசம் செய்யக் கருணையுடன் ஆவிர்பவித்தார் என்ற வ்யங்க்யார்த்தமான பக்ஷீ ச சாகாநிலய: ப்ரஹ்ருஷ்ட: என்ற ச்லோகத்தினால் ப்ரகாசிக்கின்றது.

सा राक्षसेन्द्रस्य वचो निशम्य
तद्रावणस्याप्रियं अप्रियार्ता ।
सीता वितत्रास यथा वनान्ते
सिंहाभिपन्ना गजराजकन्या ॥

ஸா ராக்ஷஸேந்த்ரஸ்ய வசோ நிசம்ய
தத்ராவணஸ்யாப்ரியம் அப்ரியார்த்தா ।
ஸீதா விதத்ராஸ யதா வநாந்தே
ஸிம்ஹாபிபந்நா கஜராஜகந்யா ॥

ஸீதாதேவிக்குப் பாவியான ஸௌபாக்யத்தை சுபமான நிமித்தங்கள் ஸூசிப்பித்தாலும்கூட ராக்ஷஸ ச்ரேஷ்டனான ராவணன் ஸீதையைப் பார்த்து முன்பு பருஷமாகப் பேசின வார்த்தைகளை நினைக்கும்பொழுது, ஸீதையானவள் உலக த்ருஷ்டியை அனுஸரித்து மிகவும் துக்கத்தை அடைந்தாள்.

நிர்ஜனமான அரண்யத்தில் ஒரு பெண் யானையானது ஸிம்ஹத்தினுல் சூழப்பட்டிருந்தால் எவ்விதம் தபிக்குமோ, அவ்விதம் ஸீதையானவள் தபித்தாள். அந்த ஸந்தர்ப்பத்தில் ஸீதைக்குத் தான் மரித்துவிட்டால் தேவலை என்றுகூட எண்ணம் உதித்தது. அகாலத்தில் ம்ருத்யு துர்லபம் என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து, மனதை ஸமாதானம் செய்துகொண்டாள் இவ்விதமான துக்கத் தீர்க்குத் தனக்கு அவகாசத்தைக் கொடுத்துத் தன்னை ரக்ஷிக்காமல் விளம்பம் செய்கிற ராமனை அடிக்கடி நினைத்து மிகவும் வருந்தினுள்.

अनन्यदैवत्वं इयं क्षमा च
भूमौ च शय्या नियमश्च धर्मे ।
पतिव्रतात्वं विफलं ममेदं
कृतं कृतघ्नेष्विव मानुषाणां ॥

அநந்யதைவத்வம் இயம் க்ஷமா ச
பூமௌ ச சய்யா நியமச்ச தர்மே ।
பதிவ்ரதாத்வம் விபலம் மமேதம்
க்ருதம் க்ருதக்நேஷ்விவ மாநுஷாணும் ॥

"ராமா! உன்னைத்தவிர எனக்குப் பூஜிக்கத் தகுந்த தேவதையே வேறொன்றுமில்லை என்று நினைத்துத்தானே सहपत्न्या विशालाक्ष्या नारायणं उपागमत् (ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணம் உபாகமத்) என்று அயோத்யா காண்டத்தில் சொல்லியபடி, நீ நாராயணனைப் பூஜிக்கும்பொழுது உனக்குப் பரிசாரிணியாக நான் இருந்துவந்தேனே தவிர, நான் ஸ்வயமாக ஏதாவது பூஜைகளைச் செய்தேனு? பதிவ்ரதா ஸ்த்ரீகளுக்கு பார்த்தாவிற்குப் பரிசர்யை செய்வதைத் தவிர, தான் ஸ்வயமாக ஒரு வ்ரதாதிகளை அனுஷ்டிப்பதில் அதிகாரம் கிடையாது அந்த சாஸ்த்ரத்தை அனுஸரித்து உன்னேயே தெய்வமாகப் பாவித்து வந்த எனக்கு இவ்விதமான கதி ஏற்படலாமா? அது உனக்கு அழகா? அத்துடன் என்னுடைய பொறுமையையும் நீ கவனிக்க வேண்டாமா? ராவணனே அஸஹ்யமான பருஷமான வார்த்தைகளைப் பேசி என்னைத் துக்க ஸாகரத்தில் மூழ்கச் செய்தான. ராவணனுடைய ஆக்ஞையை அனுஸரித்து ராக்ஷஸ

ஸ்த்ரீகளும் பருஷமான வார்த்தைகளைப் பேசி என்னை ஹிம்ஸித்தார்கள். அவைகள் எல்லாவற்றையும் உன்னுடைய மதுரமான வசனங்களைக் கேட்கும்படியான பாக்யம் வருமென்ற எண்ணத்துடன் ஸஹித்துக்கொண்டிருக்கும் என் பொறுமையை நீ கவனிக்க வேண்டாமா?

அத்துடன், பூமியில் நான் சயனம் செய்துகொண்டு கஷ்டப் படுவதையும் நீ கவனிக்கவேண்டும். உன்னுடைய மடியில் நான் படுத்துக்கொண்டு ஸுகமாக நித்ரை செய்யும் காலம் ஸித்திக்காமலே ஆகிவிடுமா என்று எண்ணிக்கொண்டல்லவா பூமி சயனத்தையும் ஸஹித்துக்கொண்டு வருகிறேன். नियमश्च धर्मे (நியமச்ச தர்மே) தர்மத்திலுள்ள நியமத்திற்கு என்னால் பங்கம் வரக்கூடாதென்ற எண்ணத்துடன் நான் இருந்து வருகிறேன். ராவணனை என்னுடைய பாதிவ்ரத்யத்தினால் பஸ்மமாகச் செய்துவிடுகிறது என்று நான் நினைத்தால் முடியாதா ? நீ ஸர்வ ஜனங்களுக்கும் ரக்ஷகனாக இருக்கும் பொழுது என் விஷயத்திலும் நீயே ரக்ஷகன் என்று நான் நினைத்து உன்னிடத்திலுள்ள ரக்ஷக ஸ்வரூபம் என்கிற பரம தாமத்திற்குப் பங்கம் வரக்கூடாது என்று நினைத்துதான் ராவணனை நான் பஸ்மமாகச் செய்யாமலிருந்துவருகிறேன். அதற்கு நீ என்னிடத்தில் க்ருதக்ஞதையைப் பாராட்டவேண்டும்.

पतिव्रतात्वं (பதிவ்ரதாத்வம்) உன்னைத் தெய்வமாக வைத்து பூஜிப்பதைத் தவிர வேறு ஒரு வ்ரதத்தையும் நான் அனுஷ்டானம் செய்தவளல்ல. யாரிடத்தில் நான் பேசினாலும், எனக்கு வ்ரதம் பர்த்தாவினுடைய பரிசர்யைதான் என்று நான் சொல்வதுண்டு एतत् व्रतं मम (ஏதத்வ்ரதம் மம) என்று நான் கர்ஜிக்கவில்லையா ? அந்தப் பாதிவ்ரத்ய வ்ரதமானது விபலமாக ஆகிவிட்டதே. அவ்விதமாகலாமா ?

कृतं कृतघ्नेष्विव मानुषाणां (க்ருதம் க்ருதக்நேஷ்விவ மானுஷாணாம்) மனிதர்களுக்குள் ஒருவன் மற்றொருவனுக்கு ஒரு உபகாரத்தைச் செய்தால் அதற்கு ப்ரத்யுபகாரம் செய்வது என்ற ஸ்வபாவம் மிகவும் குறைந்தது. க்ருதக்னர்கள் என்று சொல்லவேண்டுமானால் மனிதர்களைத்தான் சொல்லவேண்டும். आत्मानं मानुषं मन्ये

(ஆத்மாநம் மாநுஷம் மந்யே) என்று உன்னுடைய தீர்மான மானதினால் மனித ஸ்வபாவத்தை அனுஸரித்து க்ருதக்ஞதையை நீ பாராட்டுகிறாயோ என்று நினைக்கக்கூடியதாக இருந்து வருகிறது. இவைகளுக்கெல்லாம் காரணம் உன்னிடத்தில் யாதொரு தோஷமும் இல்லை; என்னுடைய துஷ்க்ருதம்தான் காரணமாகும். இனி மேலாவது இவ்விதம் நீ என்னை உபேக்ஷிக்காமல் துக்கத்தினின்றும் விமோசனம் செய்து வைக்கவேண்டும். நீ என்னை உபக்ஷிப்பதினால் நான் உன்னை எப்படி நினைக்கவேண்டியதாக இருக்கின்றது என்றால்,

पितुर्निदेशं नियमेन कृत्वा
वनान्निवृत्तः चरितव्रतश्च ।
स्त्रीभिस्तु मन्ये विपुलेक्षणाभिः
त्वं रंस्यसे वीतभयः कृतार्थः ॥

பிதுர்நிதேசம் நியமேந க்ருத்வா
வநாந்நிவ்ருத்த: சரிதவ் ரதச்ச !
ஸ்த்ரீபிஸ்துமந்யே விபுலேக்ஷணாபி:
த்வம் ரம்ஸ்யஸே வீதபய: க்ருதார்த்த: ||

பிதாவினுடைய ஆக்ஞையை புஷ்களமாக நிறைவேற்றிவிட்டு, வனவாஸத்தினின்றும் நிவ்ருத்தனாக ஆகி, विपुलेक्षणाभिः (விபுலேக்ஷணாபி:) விசாலமான நேத்ரத்துடன் கூடிய காரணத்தினால், "அதிஸுந்தரிகளான ஸ்த்ரீகளோடுகூட ரமித்து வருகிறாயோ! வனவாஸ பயமும் இல்லாமல் ஸர்வ புருஷார்த்தத்தையும் அடைந்து வேறு உத்தம ஸ்த்ரீகளையும் நீ உத்வாஹம் செய்துகொண்டு ஸுகமாக ரமிக்கிறாயோ! என்றுதான் ஊஹிக்கக்கூடியதாக இருந்துவருகிறது. இல்லாவிடில் என்னை நீ இவ்விதம் உபேக்ஷிக்கக் காரணமேயில்லை.''

இதனால் ஸ்ரீராமபிரானுக்கு ஏகபத்னி வ்ரத பங்கம் வருமா என்று யோசிக்கவேண்டும். ஸீதை சொன்னதற்காக ஸ்ரீராமன் அன்ய ஸ்த்ரீகளோடு க்ரீடிக்கிறார் என்ற தாத்பர்யத்தை க்ரஹித்துக் கொள்ளக்கூடாது துக்காதிசயத்தினால், ஸந்தாபத்தை ஸஹிக்க முடியாமல், ப்ரேமையை முன்னிட்டு ஸீதை ராமனைப் பார்த்துச் சொன்ன வார்த்தையாகத்தான் ஆகக்கூடும்.

யுத்தகாண்டத்தில், நவபாஷாணம் என்ற மஹா க்ஷேத்ரத்தில் பகவான் ஸமுத்ராஜனுக்குப் ப்ராயோபவேசம் செய்யும் ப்ரகரணத்தில், கிழக்கு முகமாக தர்பைகளைப் பரப்பி அதன் மீது தன்னுடைய இடது புஜத்தை உபதினமாக வைத்துக்கொண்டு சயனம் செய்து கொண்டிருக்கும் ஸமயத்தில், ம்ருதுவான பகவானுடைய பாஹுவில் கடினமாயும், கூர்மையாயும் உள்ள தர்பங்களுடைய ஸம்பந்தத்தைக் கவனித்த ஆதி கவிக்கே துக்கம் ஸஹிக்கமுடியாமல், भुजैः परनारीणां परिमृष्टमनेकधा (புஜை: பரநாரீணாம் பரிம்ருஷ்டமநேகதா) என்ற வாக்யத்தினால் உத்தம ஸ்த்ரீகளுடைய ம்ருதுவான புஜங்களினால் வெகு ப்ரகாரமாகப் பிடித்துவிடப்பட்ட கைகள் இப்பொழுது தர்பையின் மீது அமர்ந்திருக்கின்றனவே என்று கஷ்டப்பட்டுக் கூறுகிறார். அதனால் परमनारीणां भुजैः (பரமநாரீணாம் புஜை:) என்று பஹு வசனத்தில் ராமனுக்குப் பல ஸ்த்ரீகள் உண்டு என்பதை நாம் அர்த்தம் செய்துகொள்ளக் கூடாது.

அதனால் ஏகபத்னீ வ்ரதத்வம் என்பதற்கும் பங்கம் நேரிடாது. ஸீதை ஒருவளைத் தவிர ராமனுக்கு வேறு ஒரு ஸ்த்ரீயும் இல்லை. தர்ம பத்னிகளும் இல்லை; போக பத்னிகளும் இல்லை. அப்படியானால் எவ்விதமாம இந்த பஹுவசனம் ஒத்துவருமென்று விசாரிக்க வேண்டும். स्त्रीभिः (ஸ்த்ரீபி) என்ற பஹுவசன ஸ்வாரஸ்யத்தினாலும், ராமன் மனிதனல்ல, ஸாக்ஷாத் மஹாவிஷ்ணு என்ற தத்வமானது வெளியாகிறது.

விஷ்ணுவிற்கோ ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி, கங்கை, ஸரஸ்வதி, துளஸீ முதலான அநேக பத்னிகள் அபராஜிதமான வைகுண்டத்தில் விளங்கி வருகிறார்கள். ப்ரக்ருதத்தில் ஸீதையோ ஸ்ரீதேவியாக ஆகிவிட்டாள். தன்னுடைய மஹிமையைத் தான் ஸ்மரித்துக்கொண்டு ராமனையும் அபராஜிதமான வைகுண்டத்திற்கதிபதியான விஷ்ணுவென்றே தீர்மானித்து ஹே ராமா! நான் ஒருவள்தானா உனக்குப் பத்னி? என்னைப்போல் எவ்வளவோ ஸுந்தரமான ஸ்த்ரீகள் உனக்கு இருக்கிறார்கள். அக்காரணத்தினால் தான் இவ்விதமாம என்னிடத்தில், உனக்கு உபேக்ஷை ஏற்பட்டிருக்கிறதோ என்று நினைக்கிறேன். அது உனக்குத் தர்மமாக ஆகாது

தர்ம விரோதியான ராவணனை வதம் செய்வதற்கே நீ அவதரித்தவன். அந்த ராவண வததத்திற்கு நிமித்தமாகவும் என்னை நீ கருதி, உன் பின்னேடு என்னை அழைத்து வந்தவன் அல்லவா! நீலாதேவி முதலிய உன்னுடைய ஸ்த்ரீகள் போக ப்ரவாஹத்தில் உன்னை மூழ்கச் செய்கிற விஷயத்தில் என்னைக் காட்டிலும் அவர்கள் ஸுந்தரிகள் ஆனாலும், தேவகார்யமாகிய ராவண வதத்தில் அவர்கள் நிமித்தமாக ஆகவில்லை; நான்தான் அதில் நிமித்தமாக ஆகின்றேன். அதைக் கவனித்தால் அவர்களைக் காட்டிலும் நான் உனக்கு முக்யமான ஸ்த்ரீ அல்லவா? அப்படியிருக்கும்பொழுது நீ என்னை உபேக்ஷிக்கலாமா? அது மிகவும் அனுசிதம்தான்' என்றுதான் ஸீதையினுடைய ஆசயமாகும் அன்னியில் ராமனுக்கு வேறு ஸ்த்ரீகள் உண்டு என்பதில் தாத்பர்யத்தை க்ரஹிக்கக்கூடாது.

अहं तु राम त्वयि जातकामा
चिरं विनाशाय निवद्धभावा ।
मोघं चरित्वाथ तपोव्रतं च
त्यक्ष्यामि धिग्जीवितमल्पभाग्या ॥

அஹம் து ராம த்வயி ஜாதகாமா
சிரம் விநாசாய நிபத்தபாவா ।
மோகம் சரித்வாத தபோவ்ரதம் ச
த்யக்ஷ்யாமி திக்ஜீவிதமல்பபாக்யா ॥

"ஹே ராமா! உன்னிடத்தில் எனக்கு ஆசையோ அளவு மீறி இருந்து வருகிறது அக்காரணத்தினுல்தான் என்னுடைய மனதை உன்னுடைய மங்கள விக்ரஹத்தை விட்டு ஒரு க்ஷணம்கூட அப்பால் சலிக்காமல் இருக்கும்படி செய்து வருகிறேன் அவ்விதம் நான் இருத்துவருகிறது என் கஷ்டத்திற்குத்தானே என்றுகூட நான் நினைக்கக் காரணமாக இருக்கிறது. என்னுடைய அநசன வ்ரதத்தையோ வர்ணித்து முடியாது அல்பபாக்யத்வதத்தான் நான் செய்தவளாக ஆகின்றேன். உன்னைப் பர்த்தாவாக அடைந்த விஷயத்தில் மாத்ரம என்னுடைய ஜன்மாந்தர ஸுஹ்ருதம் காரணமானதே தவிர, தீர்க்ககாலம் உன்னேடு நித்யானந்தத்தை அனுபவிக்கும்படியான பாக்யத்திற்கு ஜன்மாந்தர ஸுஹ்ருதம் காரணமாகவில்லை.

ஆனால் இப்பொழுது உன்னை விட்டுப்பிரிந்து நான் பத்து மாத காலமாகப் படுகிற கஷ்டங்களுக்கோ பலம் இப்பொழுது இந்த ஜன்மத்தில் ஏற்படப் போவதில்லை அனேகமாக வேதத்தில் சொல்லிய ஸகல தர்மங்களும் அத்ருஷ்டத்தில் தானே பலத்தைக் கொடுக்கக் கூடியது. என்னுடைய பாதிவ்ரத்யமும் மற்றொரு ஜன்மத்தில் பலித்தால் பலிக்கலாம். இந்த ஜன்மத்தில் நிஷ்பலம் தான். அதனாலேயே நான் அல்ப பாக்யத்தைச் செய்தவளாக ஆகிவிட்டேன். இனிமேல் எனக்கு ஜீவிதத்தை வைத்துக்கொள் வதற்கு இஷ்டமேயில்லை துர்ப்பகையான எனக்கு எதற்காக உயிர் இருக்கவேண்டும்?

सा जीवितं क्षिप्रमहं त्यजेयं
विषेण शस्त्रेण शितेन वापि ।
विषस्य दाता न हि मेऽस्ति कश्चित्
शस्त्रस्य वा वेश्मनि राक्षसस्य ॥

ஸா ஜீவிதம் க்ஷிப்ரமஹம் த்யஜேயம்
விஷேண சஸ்த்ரேண சிதேந வாபி ।
விஷஸ்ய தாதா ந ஹி மேஸ்தி கச்சித்
சஸ்த்ரஸ்ய வா வேச்மநி ராக்ஷஸஸ்ய ॥

விஷத்தை உட்கொண்டாவது மரணத்தை அடைவதே இந்த ஸந்தர்ப்பத்தில் எனக்கு ச்லாக்யம் என்று தோன்றுகிறது. அல்லது கூர்மையான கத்தி அகப்படடாலும் நானாகவே தற்கொலை செய்துகொண்டு விடுவேன். இந்த க்ரூரனான ராக்ஷஸனுடைய நகரத்தில் இவ்விதமான உபகாரம் எனக்குச் செய்பவர்கள் யார் இருக்கிறார்கள்?'' என்று வெகுப்ரகாரமாக தேவியானவள் ப்ரலாபம் செய்துவிட்டு புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட அசோக வ்ருக்ஷத்தினுடைய ஸமீபம் சென்று,

शोकाभितप्ता बहुधा विचिन्त्य
सीताथ वेण्युद्ग्रथनं गृहीत्वा ।
उद्बुध्य वेण्युद्ग्रथनेन शीघ्रं
अहं गमिष्यामि यमस्य मूलम् ॥

சோகாபிதப்தா பஹுதா விசிந்த்ய
ஸீதாத வேண்யுத்க்ரதநம் க்ருஹித்வா ।
உத்பந்ய வேண்யுத்க்ரதநேந சீக்ரம்
அஹம் கமிஷ்யாமி யமஸ்ய மூலம் ॥

"என்னுடைய வேணியை, அதாவது பின்னலை கழுத்தில் சுறுக்கிட்டுக்கொண்டு சிம்சுபா வ்ருக்ஷத்தினுடைய கிளையில் த்ருடமாகக் கட்டி இந்த நிமிஷமே நான் யமலோகம் செல்கிறேன்" என்று ஸங்கல்பம் செய்துகொண்டு அவ்விதம் செய்யத் துணிந்தாள். ஆகிலும், அந்தக் கிளையைக் கையினுல் பிடித்துக்கொண்டு ராமனையும் லக்ஷ்மணஸ்வாமியையும் நினைத்து, 'உங்கள் இருவருக்கும் இந்தக் கார்யம் த்ருப்தியாக இருக்குமா?" என்று கதறிக்கொண்டு சுறுக்குப் போட்டுக் கொள்ளும் ஸந்தர்ப்பத்தில்,

शोकानिमित्तानि तथा बहूनि
धैर्यार्जितानि प्रवराणि लोके ॥
प्रादुर्निमित्तानि तथा बभूवः
पुरापि सिद्धान्युपलक्षितानि ॥

சோகாநிமித்தாநி ததா பஹூநி
தைர்யார்ஜிதாநி ப்ரவராணி லோகே ।
ப்ராதுர்நிமித்தாநி ததா பபூவு;
புராபி ஸித்தாந்யுபலக்ஷிதாநி ॥

என்ற ப்ரகாரம் ஸீதையைப் பார்த்து, 'ஹே ஸீதே! இவ்விதம் நீ துக்கத்தை அடையக் கொஞ்சமேனும் இது ஸ்தானமில்லை தைர்யத்தை அவலம்பிக்கவேண்டும் இவ்விதம் நீ செய்கிற கார்யம் உன் குலத்திற்கும் அழகில்லை; உனக்கும் அழகில்லை; உன் பர்த்தாவான ராமனுக்கும் அபகீர்த்தியைக் கொடுக்கக் கூடியது' என்று ஸீதையைத் தைர்யப்படுத்துவதுபோல். சுப ஸூசக தேவதைகள் ப்ரத்யக்ஷமாக ஸீதையினுடைய எதிரில் ஆவிர்பவித்து துர்மரணத்திலிருந்தும் ஸீதாதேவியை விடுதலை செய்து வைத்தார்கள்.

இந்த சுபங்களோ. இதற்கு முன்பு தான் ராமனைப் பரிணயம் செய்துகொண்டு அயோத்திக்கு ஸகல ஸந்நாஹத்துடன் வரும்

பொழுது பரசுராமருடையை துராக்ரஹத்தினுல் ஏற்பட்ட மஹா பயத்தில் மூழ்கித் தவித்த ஸீதாதேவிக்கு, 'உனக்கு யாதொரு குறைவுமில்லை, ராமனுக்கு பரம ஜயம் ஏற்படப்போகிறது; நீ தைர்யமாக இருக்கவேண்டும்' என்று சொல்லி தைர்யப்படுத்தின சுபதேவதைகளானதினுல், அதை ஸீதாதேவி பூர்வத்தில் அனுபவித்து அவ்விதமே ஸந்தோஷத்தையும் அடைந்திருக்கும் காரணத்தினுல், இப்பொழுதும் ஸீதாதேவிக்கெதிரில் அவைகளே தென்பட்டபடியினுல், அவைகளை நம்பி ஸீதை தான் செய்த ஸங்கல்பத்தினின்றும் நிவ்ருத்தி அடைந்து ஸமாதானத்தை அடைந்தாள்.

அதைத்தான் கவியானவர் पुरापि सिद्धान्युपलक्षितानि (புராபி ஸித்தாந்யுபலக்ஷிதாநி) என்ற வாக்யத்தினுல் அழகாகத் தெரிவிக்கின்ருர்.

तथागतां तां व्यथितां अनिन्दितां
व्यपेतहर्षां परिदीनमानसाम् ।
शुभां निमित्तानि शुभानि भेजिरे
नरं श्रिया जुष्टमिवोपजीविनः ॥

ததாகதாம் தாம் வ்யதிதாம் அநிந்திதாம்
வ்யபேதஹர்ஷாம் பரிதீநமாநஸாம் ।
சுபாம் நிமித்தாநி சுபாநி பேஜிரே
நரம் ச்ரியா ஜுஷ்டமிவோப ஜீவிந: ॥

வால்மீகி மஹர்ஷி இந்த ஸந்தர்ப்பத்தில் ஸீதையை तथागतां तां (ததாகதாம் தாம்) என்று வர்ணிக்கிருர். அதாவது, அந்த ஜகதீச்வரியினுடைய துக்கத்தை இவ்வளவுதான் என்று என்னுல் நிர்ணயிக்க முடியாமல் இருந்து வருகிறது என்று தானும் கஷ்டப்படுகிருர் रहस्यञ्च प्रकाशञ्च यद्वृत्तं तस्य धीमतः (ரஹஸ்யஞ்ச ப்ரகாசஞ்ச யத்வ்ருத்தம் தஸ்ய தீமத:) என்று ப்ரம்மாவினுடைய அனுக்ரஹத்தினுல், ராமனுடைய ரஹஸ்யமான வ்ருத்தாந்தங்களை ப்ரகாசமான வ்ருத்தாங்களை தனக்குப் புலப்படவேண்டுமென்று வரபலத்தை அடைந்தவரானுலும், வால்மீகி மஹர்ஷியும் இந்த ஸந்தர்ப்பத்தில் ஸீதையினுடைய துக்கத்தில் எல்லையை அறிய முடியாதவராய்க் கஷ்டப்பட்டார்.

ஸீதையினுடைய சரீரம் ஒன்றைத் தவிர மற்ற ஸௌக்யம் யாதொன்றையும் மஹர்ஷி கவனித்து, ஸமாதியில் பார்த்தும் அறிய முடியாமல் கஷ்டப்பட்டார்.

இவ்விதமான துக்க ஸந்தர்ப்பத்தில் எவ்விதமான ஸ்த்ரீயும் தன்னுடைய மனோ தைர்யத்தை இழந்துவிடுவாள். ஜகதீச்வரியோ கொஞ்சமேனும் ராம பக்தியினின்றும் நழுவவேயில்லை. பர்த்தாவைவிட்டுப் பிரிந்த காலத்தில் எப்படி இருக்கவேண்டுமோ அப்படியே இருந்துவந்தாள். ஸீதைக்கு ஸந்தோஷம் மாத்ரம் இல்லாமல் இருந்தது. அளவற்ற ஸந்தோஷம் முன்பு இருந்து தற்காலத்தில் போய்விட்டதோ என்று தோன்றக்கூடிய நிலையில் இருந்தாள் ஸந்தோஷம் தானாக ஸீதையை ஆச்ரயிப்பதற்கு வந்தாலும் தானே அதற்கு அவகாசம் கொடுக்காமலே இருந்து வருகிறாள். இதை परिहीनमानसां (பரிதீனமானஸாம்) என்ற பதத்தினால் கவி வர்ணிக்கிறார்,

இவ்விதமான நிலையில் சுப ஸூசக தேவதைகள் தானாகவே ஸீதையினுடைய ஸமீபத்திற்கு வந்துசேர்ந்து ஸீதையினுடைய ஸௌபாக்யத்தையும் ஸூசனம் செய்து, தங்கள் தங்கள் ஆத்ம லாபத்தை அடைந்தார்கள். ஸீதைக்கு ஸௌபாக்யம் ஏற்பட்டு விடுமென்று அந்த தேவதைகளுக்கே தெரிந்துவிட்டது ஸீதை கஷ்டப்பட்டாலும், சுபஸூசகங்கள் இல்லாமலே மறுபடியும் அவளுக்கு ராமன் என்ற தாரகப்ரம்மத்தினுடைய ஸமாகமம் ஏற்படவில்லையா? அதுபோல் நமக்கும் ஏன் ஏற்படக்கூடாது? சுபமாவது, அசுபமாவது என்று லோகத்தில் ப்ராக்ருத ஜனங்கள் தங்களுக்கு ஒரு யோக்யதையைக் கொடுக்காமல் இருந்து விடுவார்களாம் அதற்காக அந்த தேவதைகளே ஒன்று சேர்ந்து ஸீதையை வந்து சரணமடைந்து 'ஹே பரதேவதே! உங்களுக்குக்கூடக் கஷ்டகாலத்தில் சுபத்தை ஸூசனம் செய்தோம் என்ற கௌரவத்தை எங்களுக்குத் தாங்கள் கொடுத்து லோகத்தில் எங்களை ஆதரிக்கும்படி செய்யவேண்டும்'' என்றார்கள்.

இவ்வாறு சுபஸூசக தேவதைகள் வலுவில் வந்து ஜகதீச்வரியைச் சரணமடைந்தார்கள். ஸார்வபௌமனான ஒரு அரசன் தனது பரிஜனங்களை எதிர்பார்க்காமல் ஏகாங்கியாகப்

போகவேண்டுமென்று புறப்பட்டாலும் பரிஜனங்களாகவே ஓடி வந்து அரசனை சூழ்ந்துகொள்வதுபோல், இந்த சுபஸூசக தேவதைகளும் ஸீதை எதிர்பார்க்காத போதிலும், தாங்களாகத் தங்கள் கௌரவத் தைக் காப்பாற்றிக்கொண்டு அவளை வந்து சரணமடைந்து ஸந்தோஷத்தைக் கொடுத்தார்கள்.

ஸீதையினுடைய இடது கண்ணும், இடது துடையும் மெள்ள துடிக்க ஆரம்பித்தன. ஸ்த்ரீகளுக்கு இடது பாகமானது சுபஸூசகமென்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. அந்த சாஸ்த்ரத்தை ஸீதை அறிந்தவளானதினால் அந்த நிமித்தங்களைப் பார்த்து மிகவும் ஸந்தோஷத்தை அடைந்தாள். அந்த ஸூசகங்களால் ராமன் எதிரில் நிற்பதுபோலவே ஸீதைக்குப் புலப்பட்டது. இவ்விதம் ஏற்பட்ட ஸந்தர்ப்பத்தினால் ஸீதை கொஞ்சம் மனஸ ஸமாதானத்தை அடைந்தாள்.

இந்த ஸந்தர்ப்பத்தில் ஸத்குரு ஸ்வரூபமான ஆஞ்ஜநேய ஸ்வாமியும் ஸீதையினுடைய ஸ்வப்ன வ்ருத்தாங்களையும் த்ரிஜடையினுடைய ஸ்வப்ன வ்ருத்தாங்களையும் அறிந்து பின் வருமாறு ஆலோசித்தார் "எந்த ராம பத்னியை ஆயிரக்கணக்கான வானரகோஷ்டிகள் நான்கு திக்குகளிலும் தேடிவருகின்றார்களோ, அந்த தேவதை இந்த அசோக வனத்தில் சிம்சுபா வ்ருக்ஷத் தினுடைய மூலபாகத்தில் விளங்கிவரும் ஸ்த்ரீ தான். ஏதோ என்னுடைய பாக்யவசத்தினால் ராக்ஷஸர்களுடைய த்ருஷ்டியில் அகப்பட்டுக்கொள்ளாமல் கண்டுபிடித்தேன். ராக்ஷஸராஜனான ராவணனுடைய நகரமும் இரவில் நன்றாய் என்னால் பார்க்கப்பட்டது. ராக்ஷஸர்களுடைய விசேஷ மஹிமையும், ராவணனுடைய விசேஷமான ப்ரபாவமும் என்னால் கூடுமானவரையிலும் அறியப்பட்டதாகவே ஆகிவிட்டது ராம பத்னியான ஸீதையை ஸமாதானம் செய்துவிட்டுப் போவதுதான் என்னுடைய கடமை யாகும் ஸீதையைப் பார்த்துவிட்டு மாத்ரம், அவளை ஸமாதானம் செய்யாமல் போனேனேயானால் அது பெரிய அனர்த்தத்திற்குக் காரணமாகிவிடும் நான் ஸமாதானம் செய்தால் ஸீதை தனக்கு ரக்ஷகர் இருக்கிறார் என்ற தைர்யத்துடன் ஜீவிதத்தை வைத்துக் கொண்டிருப்பாள் இல்லாவிடில், ரக்ஷகர்கள் தனக்கொருவரும் இல்லையென்ற எண்ணத்துடன் உயிரையே இழந்துவிட்டாலும்

இழந்துவிடக் கூடும். அவைகள் ஏற்படாமல் ஸீதையை ஸமாதானம் செய்துவிட்டுத்தான் நான் திரும்பவேண்டும். ஸீதையுடன் பேசி அவளுடைய ஸௌபாக்யத்தை நான் போய் ராமனிடம் சொல்லி, ராமனையும் ஸமாதானம் செய்வதுதான் ப்ரக்ருதத்தில் அழகாகும்.

ஆகையினால் இந்த விஷயத்தில் இனிமேல் அவஸரப்பட்டு முடியாது. ஸீதையைச் சுற்றிவரும் ராக்ஷஸ ஸ்த்ரீகளுக்கு தெரியாமல் நான் எப்படித்தான் ஸீதையோடு பேசமுடியும்? பொழுது விடிவதற்குள் ஸீதையை நான் ஆச்வாஸம் செய்யாத போனால் ஸீதை உயிரைக் கட்டாயம் விட்டுவிடுவாள். ராமனிடம் நான் திரும்பிப் போவது ப்ரயோஜனமில்லாமலாகிவிடும். 'ஸீதை என்ன செய்கிறாள்? என்ன சொல்லி அனுப்புனாள்?' என்று ஸ்ரீராமன் என்னைக் கேட்டால் நான் என்னதான் பதில் சொல்லுகிறது? ஸீதையினுடைய ஸமாசாரத்தைச் சொல்லாமல் வ்ருதாவாக நான் ராமனுடைய ஸமீபம் சென்றால் உக்ரமான சக்ஷுஸ்ஸினால் என்னைப் பஸ்பமாகச் செய்து விடுவார். ஆகையினால் ராக்ஷஸ ஸ்த்ரீகளுக்குத் தெரியாமல் மிகவும் ஸூக்ஷ்மமான ரூபத்துடன் கோஸல தேசத்தில் பிறந்தவர்களுக்கு மாத்ரம் அறியக்கூடியதாயும், ராக்ஷஸ ஸ்த்ரீகளுக்கு புரிந்துகொள்ள முடியாததாயும் உள்ள மனிதர்களுக்கேற்பட்ட பாஷையோ ஸம்ஸ்க்ருத பாஷையாகும். அந்த பாஷையில் ராமனுடைய வ்ருத்தாந்தத்தை நான் கொஞ்சம் எடுத்து உரைத்தால், ஸீதைக்குக் கொஞ்சம் ஆச்வாஸம் ஏற்பட்டு நம்மோடு பேசுவாளோ'' என்று ஆலோசித்தார்.

''ராவணன்தான் இந்த வானர உருவத்துடன் வந்திருக்க வேண்டுமென்று நினைக்காமலிருக்கவேண்டுமே! வானரத்திற்கு ஸம்ஸ்க்ருத பாஷையில் எப்படி பரிச்சயம் ஏற்பட்டது? நமது உருவத்தை ஸீதை பார்த்து பேச்சையும் கேட்பாளேயானால் முன்பு ராக்ஷஸர்கள் மூலமாகப் பயத்தை அடைந்ததுபோல மறுபடியும் ஸீதை அதிகமாகப் பயத்தை அடைந்துவிடுவாளே! பயந்து கூச்சலிடவும் ஆரம்பிப்பாள். ராவணன்தான், தன்னை அபஹரித்த காலத்தில் ஸந்யாஸி வேஷத்துடன் வந்ததுபோல்,

இப்பொழுது வானர உருவத்தோடு வந்திருக்கிறன் என்று எண்ணுவாள். ஸீதையினுடைய கூச்சலைக் கேட்டதும் ராக்ஷஸர்களும் நானாவிதமான ஆயுதங்களை எடுத்துக்கொண்டு நம்மை வதிக்கக் கூட்டமாக வந்துவிடுவார்கள். திரும்பி ராமனிடம் போக நமக்கு ஸந்தர்ப்பம் வாய்க்காமல் நிக்ரஹம் செய்துவிடுவார்கள். நமது நிமித்தமாக ஸீதையை ஏதாவது ஹிம்ஸை செய்தாலும் செய்வார்கள். நமக்கு இவ்வித கதி வந்துவிட்டால் ராம கார்யத்தில் ஸஹாயம் செய்கிறவன் வேறு யார் என்று எனக்குத் தெரியவில்லை. இதற்காக நாம் ஸீதையோடு பேசாமல் திரும்பிச் சென்றுவிட்டால், ஸீதை கட்டாயம் ப்ராணனை த்யாகம் செய்துவிடுவாள். இவ்விதமான தர்ம ஸங்கடத்தில் நாம் என்ன செய்கிறது ?

தைர்யமும், புத்தி சக்தியும் இல்லாத தூதன் பலனை அடையும் வரையில் ஸித்தித்த கார்யத்தையும் கெடுத்துவிடுவான். புத்திமானுயிருந்தால் அந்தந்த தேசத்தையும், அந்தந்த காலத்தையும் ஒட்டி கார்யத்தைத்திதைச் செய்யும் ஸாமர்த்யம் உடையவனுவான். அரசர்களால் இந்தக் கார்யம் அவச்யம் செய்யத் தகுந்தது இந்தக் கார்யம் செய்யத் தகாதது என்ற விஷயத்தில் த்ருடமாக நிச்சயிக்கப்பட்ட புத்தியும் தூதனுடைய மௌட்யத்தினுல் ஏற்படக்கூடிய தோஷங்களெல்லாம் ப்ரக்ருதத்தில நம்மிடத்தில் எப்படி வராமலிருக்கும்? ஸ்வாமியான ராமனுடைய கார்யம் ஸபலமாக எப்படி ஆகும்? நான ஸமுத்ரத்தைத் தாண்டினதும் வீணுக ஆகாமல் எப்படி நான் நடந்துகொண்டால் முடியும்? ஸீதைதான் என்னுடைய வார்த்தையை எப்படி கேட்பாள்? எப்படி நம்பிக்கையை அடைவாள" என்று பலவாருக ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் ஆலோசித்துவிட்டு பின் ஒண்ட தீர்மானத்திற்கு வந்தார்.

அதாவது, 'ராமன் ஸீதைக்கு முக்யமான பந்துவல்லவா ! ராமனுடைய சுபமான வ்ருத்தாந்தங்களை சற்று நேரம் நான் ஸம்ஸ்க்ருத பாஷையிலெடுத்து உரைக்கிறேன். தர்மத்தை ப்ரகாசப்படுத்தக்கூடிய ராமனுடைய வ்ருத்தாந்தத்தை எடுத்து உரைத்தால், ஸீதைக்கு என்னிடம் கொஞ்சம் நம்பிக்கை ஏற்படக்கூடும்' என்று எண்ணி சிம்சுபா வ்ருக்ஷத்தினுடைய கீழ்க் கிளை

நுனியில் துளிர்களால் மறைக்கப்பட்ட சரீரத்தோடு இருந்துகொண்டு ஸீதையினுடைய காதில் கேழ்க்கும்படியான ஸ்வரத்துடனும், ராக்ஷஸ ஸ்த்ரீகளால் அறியமுடியாததான பாஷையினால் ராமனுடைய வ்ருத்தாந்தத்தைச் சொன்னார்.

"உத்தர கோஸல தேசத்தில் சதுரங்க பல ஸம்பன்னரான தசரதர் என்ற பெயரால் ஒரு அரசன் விளங்கிவந்தார். அவர் மஹா யசஸ்வி; பரம தார்மிகர்; ராஜச்ரேஷ்டர்களுக்குள் கல்யாண குணங்களினால் முதன்மையில் கொண்டாடத் தகுந்தவர். தபோமஹிமையினால் ரிஷிகளையும் வெல்லக்கூடியவர். இந்திர னென்றே அவரைச் சொல்லலாம். அஹிம்ஸையென்ற குணமும் அவரிடத்தில்தான் குடியிருந்துவந்தது. நான்கு ஸமுத்ரத்திற்குட் பட்ட பூமியில் அவருடைய கீர்த்தியானது எங்கும் பரவியது. அவ்விதமான மஹானுபாவனுக்கு ராமன் என்ற பெயருடன் ஒரு ஜேஷ்ட புத்ரன் விளங்கிவருகிறார். ஸ்வதர்மத்தை ரக்ஷித்துக் கொண்டு வருவதில் அந்த மஹானுபாவனுக்கு ஸமானமான ராஜ புத்ரனை வேறு ஓரிடத்திலும் பார்க்க முடியாது. ஸ்வஜனங்களையும் ரக்ஷிக்கிறவர், ஸ்வஜனம், பரஜனம் என்ற வித்யாஸம் இல்லாமலே பொதுவாக எல்லா ப்ராணிகளையும் ரக்ஷிக்கும் ஸ்வபாவமுள்ளவர். அந்த ராமனே வ்ருத்தரான தன் பிதாவினுடைய வார்த்தையினால் கட்டப்பட்டவராய் லக்ஷ்மணன் என்ற தன் ப்ராதாவோடும், ஸீதை யென்ற தன் தர்மபத்னியோடும் வனத்தில் வஸித்து வந்தார். வனவாஸகாலத்தில் கரதூஷணன், விராதன் முதலிய ராக்ஷஸர்கள் ராமரால் வதிக்கப்பட்டார்கள். ஜனஸ்தானத்தில் வஸித்துவந்த கரதூஷணர்களை ராமன் கொன்ற காரணத்தை முன்னிட்டு. மாத் ஸர்யத்தினால் ராவணன், மாரீசனை மான் வேஷம் தரித்துக்கொள்ளும் படி செய்து, அதன்மூலம் ராமனை வெகு தூரத்திற்கு அப்பால் விரட்டி விட்டு. ஆச்ரமத்தில் ஸீதை தனியாக இருக்கும் காலத்தில் அபஹரித்துக் கொண்டு வந்துவிட்டான். ராமனே, மாரீசனைக் கொன்றுவிட்டு லக்ஷ்மணனுடன் ஆச்ரமத்தில் வந்து ஸீதையைப் பார்க்கும்பொழுது ஸீதை காணப்படவில்லை. ஆங்காங்கு ஸீதையைத் தேடிக் கொண்டு வரும் ஸந்தர்ப்பத்தில் ரிச்யமூக பர்வதத்தில் ஸுக்ரீவன் என்ற வானர ராஜனோடு அக்னி

ஸாக்ஷிகமாக ஸக்யம் செய்துகொண்டார். வாலியைக் கொன்று கிஷ்கிந்தர ராஜ்யத்தில் ஸுக்ரீவனுக்கு பட்டாபிஷேகம் செய்து வைத்தார். ஸுக்ரீவனும் சீதையைத் தேட வானர ஸேனைகளை நான்கு திக்குகளிலும் அனுப்பியிருக்கிறான். தெற்கு திக்கை நோக்கி வந்த வானரர்களுக்குள் நானொருவன். எனக்கு ஹநுமான் என்ற பெயர் ப்ரஸித்தமானது. ஸம்பாதியினுடைய வார்த்தையினால் இந்த லங்காநகரத்தில் அசோக வனத்தில் ஸீதை இருந்து வருகிறாள். என்பதை அறிந்து, நூறு யோஜனை விஸ்தாரமுள்ள இந்த ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கைக்கு வந்து சேர்ந்தேன். லங்கையிலும் பல ஸ்தலங்களில் ஸீதையைத் தேடி காணாமல் மிகவும் விஷாதமுள்ளவனாக ஆனேன். இப்பொழுது தான் என்னுடைய பாக்யவசத்தினால்,

यथा रूपां यथा वर्णां यथा लक्ष्मीं च निश्चिताम् ।
अश्रौषं राघवस्याहं सेयमासादिता मया ॥

யதா ரூபாம் யதா வர்ணாம் யதா லக்ஷ்மீம் ச நிச்சிதாம் ।
அச்ரௌஷம் ராகவஸ்யாஹம் ஸேயமாஸாதிதா மயா ॥

ராமன் ஸீதையைப் பற்றி எவ்விதமான சரீரத்தோடு கூடினவள், என்ன வர்ணத்தோடு கூடினவள், எவ்விதமான காந்தி உள்ளவள் என்று எனக்கு அடையாளமாகச் சொன்னாரோ, அதே சரீரம், அதே நிறம், அதே காந்தியுள்ள இந்த தேவியை நான் இப்பொழுது பார்த்து விட்டேன்'' என்று சொல்லிவிட்டு வானர ச்ரேஷ்டனான ஆஞ்ஜநேய ஸ்வாமி உபரதியை அடைந்தார்.

निशम्य सीता वचनं कपेश्च
दिशश्च सर्वाः प्रदिशश्च वीक्ष्य ।
स्वयं प्रहर्षं परमं जगाम
सर्वात्मना राममनुस्मरन्ती ॥
सा तिर्यगूर्ध्वञ्च तथाप्यधस्तात्
निरीक्षमाणा तमचिन्त्यबुद्धिम् ।
ददर्श पिङ्गाधिपतेरमात्यं
वातात्मजं सूर्यमिवोदयस्थम् ॥

நிசம்ய ஸீதா வசனம் கபேச்ச
திசச்ச ஸர்வா: ப்ரதிசச்ச வீக்ஷ்ய ।
ஸ்வயம் ப்ரஹர்ஷம் பரமம் ஜகாம
ஸர்வாத்மனா ராமமநுஸ்மரந்தீ ॥
ஸா திர்யகூர்த்வஞ்ச ததாப்யதஸ்தாத்
நிரீக்ஷமாணா தமசிந்த்யபுத்திம் ।
ததர்ச பிங்காதிபதேரமாத்யம்
வாதாத்மஜம் ஸூர்யமிவோதயஸ்தம் ॥

ஜகதீஸ்வரியான ஸீதை, ஹனுமாருடைய வார்த்தையைக் கேட்டவுடன் தனது பார்ச்வங்களேயும், ஆகாசத்தையும், பூமியையும் திரும்பிப் பார்த்து, 'யார் ராமனுடைய கல்யாண குணங்களைப் பேசுகிருர்கள்?'' என்று ஆலோசித்துக்கொண்டு, ''இந்த லங்கையில் ப்ரவேசம் செய்வதே மிகவும் துர்லபமானது; ப்ரவேசித்தும் அந்தப்புரத்தினுடைய மத்யத்தில் ப்ரவேசம் செய்து ஒரு ஸ்த்ரீயைத் தேடுவது என்பது மிகவும் துஸ்ஸாத்யமானதல்லவா! இங்கு வந்து ராம நாமாவை தனது காதில் படும்படி கூறின புருஷனே ஸ்வர விசேஷத்தைக் கவனித்தால் வானர ஜாதியில் சேர்ந்தவனென்று தோன்றுகிறது. அதிலும் தான் ஸ்வதந்த்ரனல்ல; தன் ஜாதியிலுள்ள அரசனுடைய மந்த்ரியென்றும், அந்த ராஜனுடைய கார்யம் இவருடைய கைக்குள் இருக்கிறது என்றும் தீர்மானித்து, அதிலும் ராமனுடைய ஜீவனத்திற்கு முக்ய ஹேதுவானது நமது ஜீவிதைதான்; நம்முடைய ஜீவிதையோ ஸர்வ ப்ராணிகளுடைய ஜீவனத்திற்கு ஹேதுவானது. அதற்கு மூலகாரணம் இந்த மஹானுபாவனென்றே தெரிகிறது'' என்று ஆலோசித்துக்கொண்டே ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பார்த்தாள்.

सूर्यमिव उदयस्थं (ஸூர்யமிவ உதயஸ்தம்) என்ற த்ருஷ்டாந்தத்திஞல், ஸூர்யன் உதிப்பதற்கு முன்பு அதற்கு ஸூசகமாக உதயகிரியிலுள்ள அருணனைப் பார்ப்பதுபோல், ராமனுகிய ஸூர்யன் உதிப்பதற்கு முன்பு, அதற்கு ஸூசகமாக அருணனே என்று கூறும்படி விளங்கிவரும் ஆஞ்ஜநேய ஸ்வாமியை ஸீதை பார்த்தாள். அருணனுடைய உதயமானது அதி சீக்ரத்தில் ஸூர்ய பகவானுடைய ஸந்தர்சனத்திற்கு எப்படிக்

காரணமாகுமோ, அதுபோல் ஆஞ்ஜநேயஸ்வாமியினுடைய தர்சனமும் அதிசீக்ரத்தில் தாரகப்ரம்மாகிய ராமனுடைய ஸாக்ஷாத்காரத்திற்குக் காரணமாகிறது என்றும் ஸூசிப்பிக்கப்படுகிறது.

ஆஞ்ஜநேயஸ்வாமி வ்ருக்ஷத்தினுடைய சாகையில் மறைந்து கொண்டு மிகவும் பயந்த ஸ்வபாவத்துடன் இருந்து வந்தார். ஸீதா தேவியும் அங்குமிங்கும் த்ருஷ்டியை ப்ரஸரிக்கச் செய்து விட்டு, ப்ரியமான ராமனுடைய வார்த்தையைத் தன் காதில் படும்படி சொன்ன ஆஞ்ஜநேயரைப் பார்த்தாள். பார்த்தவுடன் ஸீதைக்கு மிகவும் மனதில் கவலை ஏற்பட்டுவிட்டது.

अहो भीममिदं रूपं वानरस्य दुरासदम् ।
दुर्निरीक्ष्यमिति ज्ञात्वा पुनरेव मुमोहसा ॥

அஹோ பீமமிதம் ரூபம் வாநரஸ்ய துராஸதம் ।
துர்நிரீக்ஷமிதி ஞாத்வா புனரேவ முமோஹஸா ॥

"அஹோ ஆச்சர்யம். இந்த வானரத்தினுடைய சரீரமோ, ப்ராக்ருதமான ஜனங்களுக்கு மிகவும் பயத்தைக் கொடுக்கக் கூடியது. பார்ப்பதற்கே பயமாக விளங்கிவருகிறது" என்று வெகு ப்ரகாரமாக ப்ரலாபிக்க ஆரம்பித்துவிட்டாள். "ஹே ராமா! ஹே லக்ஷ்மணா" என்று உச்சைஸ்வரமாகக் கதறிக்கொண்டு தபித்தாள். ராக்ஷஸ ஸ்த்ரீகளுடைய நடுவில் அதிக சப்தம் போட்டால் கலஹம் ஏற்பட்டு விடுமோ என்ற பயத்தினாலும் தாழ்ந்த ஸ்வரத்துடன் எழுந்தாள். 'இதென்ன ஒரு வானர ஜாதியில் பிறந்தது ராமனுடைய வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறதே! இது ஸ்வப்னமோ' என்று நினைத்தாள். "ஸ்வப்னமானால் 'சாகா ம்ருகம்' என்ற குரங்கை ஸ்வப்னத்தில் பார்க்கக்கூடாது என்று சாஸ்த்ரமானது நிஷேதிக்கின்றதே! நாமோ அருணோதய காலத்தில் ஸ்வப்னத்தில் ஒரு குரங்கைப் பார்த்தோமே. ராமன், லக்ஷ்மணன், ஜனக மஹாராஜன் முதலியவர்களுக்கு யாதொரு விதமான பீடையும் இல்லாமலிருக்க வேண்டுமே; தெய்வமே! என்னை நீ இவ்வித கதியில் விட்டு விட்டாயே! பாதிவ்ரத்யம் என்ற தர்மத்தைச் சரணமடைந்த நான் இவ்வித துக்கத்தை அனுபவிப்பது ஈச்வர ஸம்மதமாகுமா?" என்று பலவாறுக

சற்று நேரம் புலம்பிவிட்டுக் கொஞ்சம் மனஸ் ஸமாதானத்தையும் அடைந்து, ''நாம் ஸ்வப்னத்தில் குரங்கைப் பார்த்தோம் என்பது ஸம்பவிக்க ந்யாயமே இல்லை. தூங்கினாலல்லவா ஸ்வப்னம் ஏற்பட ந்யாயமுண்டு. ராமனை விட்டுப் பிரிந்த எனக்குத் தூக்கமேது? ஆகையினால் ஸ்வப்னமே இல்லை. எப்பொழுதும் நான் ராமனையே நினைத்து ப்ரலாபித்துக் கொண்டு வருகிற வாஸனையினால் அதுபோலவே ப்ரக்ருதத்தில் மனதானது பரிணமித்து என்னைத் தவிக்கச் செய்கிறது.

அதாவது மனோராஜ்யமென்றே சொல்லலாம். மனோரதத்திற்கோ உருவம் கிடையாது வானரமோ உருவத்துடன் இருந்து வருகிறது. ஆகையினால் மனோராஜ்யமென்று சொல்லவும் ந்யாயமில்லை. இது ஜாகரம்தான். திவ்யமான ஸ்வரூபத்துடன் வானரம் விளங்கி வருகிறது; சொல்லுகிற வார்த்தையோ ஸ்பஷ்டமாக இருந்து வருகிறது. ஆகையினால் மனோராஜ்யமென்று இதை எப்படிக் கூறமுடியும்? ஆகையினால், ஈச்வரனுடைய அனுக்ரஹத்தினால் இந்தக் கபிராஜனால் சொல்லப்பட்ட தத்வங்கள் அவ்விதமே நடைபெற வேண்டும்.

नमोऽस्तु वाचस्पतये स वज्रिणे
स्वयंभुवे चैव हुताशनाय च ।
अनेन चोक्तं यदिदं ममाग्रतः
वनौकसा तच्च तथाऽस्तु नान्यथा ।

நமோஸ்து வாசஸ்பதயே ஸ வஜ்ரிணே
ஸ்வயம்புவே சைவ ஹுதாசனாய ச ।
அநேந சோக்தம் யதிதம் மமாக்ரத:
வநௌகஸா தச்ச ததாஸ்து நாந்யதா ॥

வாசஸ்பதியான ப்ருஹஸ்பதி பகவானுக்கும், இந்த்ரனுக்கும், ப்ரும்மாவிற்கும், அக்னி பகவானுக்கும் நான் நமஸ்கரிக்கின்றேன். இந்த வானரமானது என்னுடைய எதிரில் ராமனைப் பற்றி யாதொருவிதமான வார்த்தைகளைக் கூறி என் மனதை ஸந்தோஷிக்கச் செய்ததோ, அந்தப்படியே அவைகள் நடக்கவேண்டும். விபரீதமாக ஆகக்கூடாது என்று நான் ஸர்வ தேவதைகளையும் ப்ரார்த்தித்துக் கொள்கிறேன்'' என்று சொல்லிவிட்டு ஸீதை

மௌனமாக இருந்துவிட்டாள். அவ்விதம் இருக்கும்பொழுது ஸீதையைப் பாதுகாத்துவரும் ராக்ஷஸ ஸ்த்ரீகளெல்லோரும் கொஞ்சம் நித்ராபாவசர்களாக இருந்துவந்தார்கள். இதுதான் ஸரியான ஸமயம் என்று ஆஞ்ஜனேயஸ்வாமி நினைத்து மிகவும் உன்னதமான சாகையில் இருந்து ஸீதைக்கு அபிமுகமாக இருக்கும் கீழ் ப்ரதேசத்தில் தொங்குகிற ஒரு கிளையில் இறங்கி அதில் அமர்ந்து கொண்டு முதலாக ஸீதைக்கு நமஸ்காரம் செய்தார். இரண்டு கைகளையும் சிரஸ்ஸில் வைத்துக்கொண்டு பரம வணக்கத்துடன் ஸீதையைப் பார்த்து.

"ஹே பரதேவதே! நீ யாரம்மா? உன்னுடைய தேஜஸ்ஸைப் பார்த்தால் மஹாலக்ஷ்மியோ என்று நினைக்கக்கூடியதாக இருக்கிறதே? எதற்காக இந்த வ்ருக்ஷத்தினுடைய கிளையை அவலம்பித்துக்கொண்டு நீ நின்று வருகிறாய்? தாமரையின் இதழ்கள்போல் சோபிக்கின்ற உன்னுடைய இரு நேத்ரங்களினின்றும் எதற்காக கண்ணீர் ஆறாகப் பெருகி பூமியில் விழுகிறது? ஸுரர்களோ அல்லது அஸுரர்களோ. நாககந்தர்வ ராக்ஷஸர்களோ, யக்ஷர்களோ, கின்னரர்களோ அவர்களுக்குள் யாரைச் சேர்ந்தவள் நீ? சந்த்ரனை விட்டு நழுவின ரோஹிணி என்ற தேவியா? உன்னைப் போல் பதிவ்ரதா சிரோமணியை உலகிலெங்கும் காணமுடியாது. வஸிஷ்டருடைய தர்மபத்னியான அருந்ததியோ? உனக்கு யார் புத்ரன்? பிதா யார்? பர்த்தா யார்? ஸ்வ ஜனங்களைப் பறிகொடுத்தவள் போல் புலம்புகின்றாயே! உன்னை நான் பார்க்கும்பொழுது தேவ ஜாதியில் சேர்ந்த ஸ்த்ரீயாக நான் நினைக்கவில்லை. ராஜ லக்ஷணங்கள் உன்னிடத்தில் பொருந்தியிருக்கின்றது ராஜ புத்ரியாயும், ராஜ பத்னியாகவும் தான் நீ இருக்கவேண்டும். ராவணனால் ஜனஸ்தானத்தினின்றும் அபஹரிக்கப்பட்டு வந்த ஸீதாதேவியாக நீ இருந்தால் அந்த உண்மையை எனக்குச் சொல்லவேண்டும். உன்னுடைய தைன்ய பாவத்தையும், பூலோகத்தில் ஸாமான்ய மனித ஸ்த்ரீகளால் அனுஷ்டிக்க முடியாததான பாதிவ்ரத்ய வ்ரதானுஷ்டானத்தையும் கவனிக்கும்பொழுது நீ ராம பத்னியான ஸீதையாகத்தான் இருக்கவேண்டுமென்று நான் நிச்சயிக்கிறேன். அப்படியானால் அந்த உண்மையை உடன் கூறவேண்டும்" என்று ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் வணக்கத்துடன் பல தடவை ப்ரார்த்தித்தார்.

இதைக் கேட்ட ஸீதாதேவி,

पृथिव्यां राजसिंहानां मुख्यस्य विदितात्मनः ।
स्नुषा दशरथस्याहं शत्रुसैन्यप्रमाथिनः ॥

ப்ருதிவ்யாம் ராஜஸிம்ஹாநாம் முக்யஸ்ய விதிதாத்மந: ।
ஸ்நுஷா தசரதஸ்யாஹம் சத்ருஸைன்யப்ரமாதிந: ॥

என்ற ச்லோகத்தினுல் தன்னுடைய பாதிவ்ரத்யத்தை ப்ரகடனம் செய்கிற அபூர்வமான சில வார்த்தைகளைத் தெரிவித்துக் கொண்டாள்.

ப்ராக்ருதமான ஸ்த்ரீகளுக்கோ, பர்த்ரு க்ருஹத்தில் அகண்டமான ஐச்வர்ய ஸம்பத்தி ஏற்பட்டிருந்தாலும் கூட, தன்னுடைய பித்ரு க்ருஹத்தில் அபிமானத்தை வைத்துப் பேசுவார்கள். அந்த ஸ்த்ரீகளை மூர்கரென்றும், மஹா பாபிகளென்றும் தீர்மானிக்க வேண்டும். ஆயிரத்தில் ஒரு ஸ்த்ரீயானவள் பர்த்ரு க்ருஹத்தில் அபிமானத்தை வைத்தவளாயிருந்தாலும், தன் பர்த்தாவை உயர்ந்த குணத்தோடு கூடியவனுகப் பேசுவாளே யன்றி பர்த்தாவினுடைய பிதாவான தன்னுடைய மாமனுரைக் கௌரவத்துடன் மதித்துப் பேச மாட்டாள். ப்ரக்ருதத்தில் ஸீதையோ, தன் பர்த்தாவான ராமனைக் கூட முதலாகத் தெரியப்படுத்தவில்லை; தன்னுடைய மாமனுரை மெச்சிப் பேசுகிருள். "இந்த பூமண்டலத்தில் எத்தனையோ ராஜ ச்ரேஷ்டர்கள் இருக்கிருர்கள். அவர்களுக்குள் என்னுடைய மாமனுர் முதன்மையானவர். அத்துடன் என்னுடைய மாமனுர் ஆத்ம தத்வத்தை ஸாக்ஷாத்கரித்துக்கொண்ட ப்ரம்ம நிஷ்டனுகக் கூட ஆவார். சத்ருக்களையும் அருகில் அண்ட முடியாமல் செய்யும் பராக்ரமத்தோடு கூடினவர். சத்ருக்கள் ஜீவித்துக் கொண்டிருக்கும்பொழுது, அவர்களை அழித்துவிட்டே மறுகார்யம் பார்ப்பார். அந்த மஹானுபாவன் இப்பொழுது இருந்து நேரேயானுல் நான் இவ்விதமான கஷ்டத்தை அனுபவிக்கமாட்டேன். என்னுடைய பாக்ய வசத்தினுல் அந்த மஹானுபாவனுக்கு நான் நாட்டுப் பெண்ணுக வந்தாலும், தௌர்பாக்யத்தினுல் இப்பொழுது நான் அவரை இழந்துவிட்டேன். அதுவும் என்னுடைய கஷ்டகாலம்தான்" என்று ஸீதையானவள் தன்னுடைய மாமனுரான தசரத சக்ரவர்த்தியினுடைய மகாத்ம்

யத்தை நினைத்து நினைத்து ஆஞ்ஜனேய ஸ்வாமிக்கெதிரில் பரவசமாகி அழுதாள். பிறகு, தான் பிறந்த இடத்தை வர்ணித்தாள்.

दुहिता जनकस्याहं वैदेहस्य महात्मनः ।
सीतेति नाम नाम्नाहं भार्या रामस्य धीमतः ॥

துஹிதா ஜநகஸ்யாஹம் வைதேஹஸ்ய மஹாத்மந: ।
ஸீதேதி நாம நாம்நாஹம் பார்யா ராமஸ்ய தீமத: ॥

कर्मणैवहि संसिद्धिं आस्थिता जनकादयः (கர்மணைவ ஹி ஸம்ஸித்திம் ஆஸ்திதா ஜநகாதய) என்று கீதையில் கூறியபடி தர்ம ப்ரதானமான விதேஹ வம்சத்தில் உதித்த ஜனக மஹாராஜனே உன் பிதா, எனக்கு ஸீதை என்பது காரணப் பெயர். ஏதோ என்னுடைய ஜன்மாந்தரத்திலுள்ள தபோ மஹிமையினால் தீமானான ராமனை நான் பர்த்தாவாக அடைந்தேன் நான் ராம பத்னிதான். ராமனுக்கும் எனக்கும் விவாஹம் நடந்த பிறகு பன்னிரண்டு வருஷ காலம் பர்த்ரு க்ருஹத்தில் ஸகலவிதமான போகோபகரண ஸம்ருத்தியோடு கூடியவளாய்க்கொண்டு அமானுஷமான போகங்களை நான் அனுபவித்தேன் அந்த விஷயத்திலும் என்னைப்போல் பாக்யவதி மற்றொருவள் இருக்கிறாள் என்று சொல்ல முடியாது. பதிமூன்றாவது வருஷ ஆரம்பத்தில் என் மாமனாரான தசரத ராஜன், என் பர்த்தாவான ராமனுக்கு இக்ஷ்வாகு வம்ச ராஜ்யஸ்ரீயை பட்டாபிஷேகம் செய்வதாகத் தீர்மானித்து, அபிஷேகத்திற்கு உபயோகமான ஸம்பாரங்களை ஸுமந்த்ரர் மூலமாக சேகரிக்கும்படி ஏற்பாடு செய்தார். அதைப் பார்த்து கைகேயி தேவி தசரத சக்ரவர்த்தியினிடம் என் பர்த்தாவிற்கு ராஜ்யாபிஷேகத்தைச் செய்யாமலிருக்கும்படி தடுத்தாள்.

न पिबेयं न खादेयं प्रत्यहं मम भोजनम् ।
एष मे जीवितास्यान्तः रामो यद्यभिषिच्यते ॥

ந பிபேயம் ந காதேயம் ப்ரத்யஹம் மம போஜநம் ।
ஏஷ மே ஜீவிதாஸ்யாந்த: ராமோ யத்யபிஷிச்யதே ॥

வ்ருத்தாப்ய தசையில் தசரத சக்ரவர்த்தியை கைகேயி தேவியானவள் கொஞ்சமேனும் பர்த்தா என்ற மான்யதா புத்தியில்லாமல், 'ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடந்தால் அந்த நிமிஷத்தில்

என்னுடைய ப்ராணனுக்கு வியோகம் ஏற்பட்டுவிடும் என்பதை நிச்சயமாக அறிந்துகொள்ளலாம். ராமனை அரண்யம் போகும்படி செய்யவேண்டும். முன்காலத்தில் சம்பராஸுரனோடு தாங்கள் யுத்தம் செய்யும்பொழுது, சம்பராஸுரன் மூலமாக தங்களுக்கு இரண்டு தடவை ஏற்பட்ட ப்ராண விபத்தை நான் ஸாரத்யம் செய்து, ஹஸ்த லாகவத்தினால் ரதத்தைத் திருப்பி தங்களுடைய உயிரைக் காப்பாற்றியதற்கு இரண்டு வரங்கள் எனக்கு அளித்தீர்களல்லவா ? அந்த இரண்டையும் குறிப்பிட்டு இதுவரையில் தங்களிடத்திலிருந்து நான் வாங்கிக்கொள்ளவில்லை. இப்பொழுது எனக்கு அந்த இரண்டும் அவச்யமாக இருக்கிறது. அதில் ஒன்று ராமனுக்கு வனவாஸம், மற்றொன்று என் புத்ரனான பரதனுக்கு ராஜ்யாபிஷேகம்' என்று நிர்ப்பந்தப் படுத்தினாள்.

ராஜனான தசரதரோ, ஸத்யஸந்தனானதினால் ஸத்யத்தினின்றும் நழுவ ஸம்மதமில்லாமல் கஷ்டப்படும்போது, ப்ரிய புத்ரனான ராமர் பரதனுக்கு ராஜ்யத்தைக் கொடுக்கும்படி யாசித்துவிட்டு, ராஜ்யாபிஷேகத்தைக் காட்டிலும் அனேக மஹான்களுடைய தர்சனத்திற்கு ஹேது பூதமான வனவாஸமானது தனக்கு மேலான ப்ரியத்தைக் கொடுக்கக் கூடியதானதினால் பித்ருவாக்ய பரிபாலனம் என்ற வ்யாஜத்தை வைத்துக்கொண்டு ஆரண்யத்திற்கு வந்தார்.

दद्यात् न प्रतिगृह्णीयात् न ब्रूयात् किञ्चिदप्रियम् ।
अपि जीवितहेतोर्वा रामस्सत्यपराक्रमः ॥

தத்யாத் ந ப்ரதிக்ருஹ்ணீயாத் ந ப்ரூயாத் கிஞ்சிதப்ரியம் ।
அபி ஜீவிதஹேதோர்வா ராமஸ்ஸத்யபராக்ரம: ॥

தன்னிடம் வந்தவர்களுக்கு அபீஷ்டத்தைக் கொடுப்பதே ராமருடைய ஸ்வபாவமாகும். தான் ஒருவனிடமிருந்தும் கையை நீட்டி வாங்குகிறதில்லை, ஒருவனுக்கும் அப்ரியமான செய்கையை த்ரிகரணத்தினாலும் செய்யமாட்டார். அப்ரியமாக வாக்கினாலும் வார்த்தையைக் கூறமாட்டார். தன்னுடைய ஜீவிதத்திற்கே ஹானி வரக்கூடியதானாலும் மேற்சொன்ன ஸ்வபாவத்தினின்று கொஞ்சமேனும் நழுவமாட்டார். பராக்ரமத்திலும் பரமார்த்தமான பராக்ரமத்தோடு கூடினவர். அதனால்

ராஜனுடைய ஆக்ஞையுடனவுடன் தனது உத்தரீய வஸ்த்ரத்தைக் கூட கைகேயி தேவிக்கெதிரில் எறிந்துவிட்டு ஆரண்யத்திற்குக் கிளம்பிவிட்டார். என்னை மாதாவிற்குப் பரிசர்யைகள் செய்து கொண்டு கௌசல்யா தேவியினுடைய ஸமீபத்திலிருக்கும்படி ஆக்ஞாபித்தார். ஆகிலும் ராமனை விட்டுப் பிரிந்து ஸ்வர்க்கத்திலும் எனக்கு வாஸம் செய்வதில் த்ருப்தி இல்லாததினால், ராமனுக்கு முன்பே நான் ஆரண்யத்திற்குக் கிளம்பிவிட்டேன். லக்ஷ்மண ஸ்வாமியும் எனக்கு முன்பே கிளம்பிவிட்டார்.

இவ்விதம் நாங்கள் மூவரும் அரண்யத்தில் வந்து தண்டகாரண்யத்தில் வாஸம் செய்தோம். ராக்ஷஸனான ராவணனே, ராம லக்ஷ்மணர்களை மாயா ம்ருக மூலமாக வெகுதூரம் செல்லும்படி செய்துவிட்டு, நான் தனியாக இருக்கும்பொழுது என்னை அபஹரித்துக் கொண்டு வந்துவிட்டான். அந்த ராவணன் எனக்குக் கொடுத்த அவதிகளில் பாக்கி இருக்கும் காலம் இரண்டு மாதங்கள்தான். அதற்குள் நான் அவனுக்கு வசமாகாத போனால் என்னை அவன் சின்னாபின்னமாகச் செய்துவிடுவான். இதுதான் என்னுடைய வ்ருத்தாந்தம்'' என்று ஸீதை ஆஞ்ஜநேயஸ்வாமியினிடத்தில் தன்னுடைய வரலாற்றைக் கூறினாள்.

ஸீதையினுடைய வார்த்தையைக் கேட்டவுடன் ஆஞ்ஜனேய ஸ்வாமி ஸீதைக்கு ஸாந்த்வ வசனத்தைச் சொன்னார்.

अहं रामस्य सन्देशात् देवि दूतस्तवागतः ।
वैदेहि कुशली रामः त्वाञ्च कौशलमब्रवीत् ॥

அஹம் ராமஸ்ய ஸந்தேசாத் தேவி தூதஸ்தவாகத: ।
வைதேஹி குசலீ ராம: த்வாஞ்ச கௌசலமப்ரவீத் ॥

“ஹே ஸீதே! நான் ராமனுடைய தூதன்; ராமனுக்கு தூதனானதினால் உனக்கும் நான் தூதனாக ஆகிவிட்டேன். ராமருடைய ஆக்ஞையினால் உன்னிடம் நான் வந்திருக்கிறேன். ராமன் க்ஷேமமாகவே இருக்கிறார். உன்னுடைய க்ஷேமத்தையும் தெரிந்து கொண்டு வரச்சொன்னார்.

यो ब्राह्ममस्त्रं वेदांश्च वेद वेदविदां वरः ।
स त्वां दाशरथी रामः देवि कौशलमब्रवीत् ॥
लक्ष्मणश्च महातेजाः भर्तुस्ते अनुचरः प्रियः ।
कृतवान् शोकसन्तप्तः शिरसा तेऽभिवादनम् ॥

யோ ப்ராஹ்மமஸ்த்ரம் வேதாம்ச்ச வேத வேதவிதாம் வர: ।
ஸ த்வாம் தாசரதீ ராம தேவி கௌசலமப்ரவீத் ॥
லக்ஷ்மணச்ச மஹாதேஜா: பர்த்துஸ்தே அநுசர: ப்ரிய: ।
க்ருதவாந் சோகஸந்தப்த: சிரஸா தேபிவாதநம் ॥

வேதார்த்த ஞானத்தோடு கூடினவர்களுக்குள், எந்த ராமன் முதன்மையாகச் சொல்லக்கூடிய மஹிமையோடு கூடினவரோ, ப்ரும்மாஸ்த்ரத்தினுடைய தத்வம் எந்த ராமனுக்குத்தான் தெரியுமோ, வேதத்தில் கூறப்பட்ட ஸர்வ கர்மாக்களினுடைய பாரத்தையும் எந்த மஹானுபாவன் அடைந்தானோ, அந்த ராமன் உன்னிடம் க்ஷேமத்தைத் தெரிவிக்கச் சொன்னார். ராமனுக்கு மிகவும் ப்ரீதிபாத்ரமான லக்ஷ்மணனும் உன்னிடத்தில் தலைவணங்கி நமஸ்காரம் செய்து க்ஷேமத்தைத் தெரிவிக்கச் சொன்னார்."

இவ்விதம் சொன்ன ஹனுமாருடைய வார்த்தையை ஸீதை கேட்டதும் பரம ஸந்தோஷத்துடன் ஆஞ்ஜனேயரைப் பார்த்து "ஹனுமன்!

कल्याणी बत गाथेयं लौकिकी प्रतिभातिमां ।
एति जीवन्तमानन्दः नरं वर्षशतादपि ॥

கல்யாணீ பத காதேயம் லௌகிகீ ப்ரதிபாதிமாம் ।
ஏதி ஜீவந்தமாநந்த: நரம் வர்ஷசதாதபி ॥

ஆயிரக்கணக்கான வருஷங்களாக துக்கத்தை ஒரு மனிதன் அநுபவித்துவந்தாலும், எந்த மனிதனும் பாவி காலத்தில் ஆனந்தத்தை அனுபவிப்பான் என்ற கதையானது என் விஷயத்தில் ஸத்யமாகிவிட்டது நான் அனுபவித்த துக்கத்தைப்போல் யாரும் இனி அனுபவிக்கப் போவதில்லை அப்பேர்ப்பட்ட எனக்குப் பின்பு ஸௌபாக்ய ஸூசகமாக தங்களுடைய நல்வரவு ஏற்பட்டு, ராம லக்ஷ்மணர்களுடைய குசல வ்ருத்தாந்தத்தைக் கேழ்க்கும்படியான பாக்யத்தையும் அடைந்தேனல்லவா! இதைக் காட்டிலும் அந்த

லௌகீகமான வசனத்திற்கு வேறு உதரஹரணம் வேண்டுமா ?'' என்று கூறினாள்.

இப்படிச் சொல்லிவிட்டு ஹனுமாருடைய விஷயத்தில் ஸீதையினால் அத்புதமான ஒரு ஆனந்தமானது அனுபவிக்கப்பட்டது. பரஸ்பரம் இருவர்களுக்கும் நம்பிக்கை ஏற்பட்டு பேச ஆரம்பித்தார்கள். ஆகிலும், ராக்ஷஸனுடைய நகரமானதினால் ராவணனுடைய தௌஷ்ட்யத்தையும் கவனிக்கும்பொழுது ஆஞ்ஜநேயஸ்வாமி தன்னுடைய ஸமீபத்திற்கு எவ்வளவுக்கு எவ்வளவு நெருங்கினரோ அவ்வளவுக்கு அவ்வளவு பயம் ஏற்பட்டு, ராவணன்தான் இந்த உருவமாக வேஷத்தைத் தரித்துக்கொண்டு நம்மை வ்யாமோஹப்படுத்துகிறனோ என்றும் ஸீதைக்குத் தோன்றியது. அதனால் 'அஹோ கஷ்டம்' என்று ஸீதை மிகுந்த வ்யஸனத்தை அடைந்து சிம்சுபா வ்ருக்ஷத்தினுடைய கிளையைப் பிடித்துக்கொண்டிருந்தவள் அந்தக் கிளையை விட்டு விட்டுப் பூமியில் உட்கார்ந்துகொண்டு மௌனமாக இருந்துவிட்டாள். மறுபடி ஆஞ்ஜநேயஸ்வாமியை கவனிக்கவே இல்லை

ஆஞ்ஜநேயஸ்வாமியோ ஸாஷ்டாங்கமாக ஸீதைக்கு நமஸ்காரத்தைச் செய்து, ''என்னிடத்தில் யாதொருவிதமான சங்கையையும் அடையவேண்டாம்'' என்று தெரிவித்துக்கொண்டார்.

ஸீதையோ ''நீ மஹா மாயாவியான ராவணனேதான் எதற்காக என்னைத் தவிக்கச்செய்கிறாய் இது உனக்கு அழகல்ல உன்னுடைய குலமே நசித்துவிடும் ஜனஸ்தானத்தில் உன்னுடைய நிஜமான ராக்ஷஸ உருவை மறைத்துக்கொண்டு, த்ரிதண்டியான ஸந்யாஸி போல் வேஷத்தை ஸ்வீகரித்துக்கொண்டு என்னை நீ அபஹரித்த பாபியல்லவா ! அந்த ராவணன்தான் நீ. உபவாஸத்தினால் க்ருசமாயும், பர்த்தாவை விட்டுப் பிரிந்ததினால் தைன்ய ஸ்வபாவத்தோடும் கூடிய என்னை இவ்விதம் தவிக்கச் செய்வது ந்யாயமாகாது'', என்று வெகு ப்ரகாரமாக ஆஞ்ஜநேயஸ்வாமியைப் பார்த்து ராவணன் தான் என்ற சங்கையை அடைந்து ஸீதாதேவி பயந்தாள்.

பிறகு ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பார்த்த மாத்திரத்தில் தன்னுடைய மனதில் ஏற்பட்ட ப்ரஸன்னதை என்ற லிங்

கத்தினுல் ராவணன் என்ற சங்கையை உதறித் தள்ளிவிட்டு, 'ஏன் ராமதூதனுகத்தான் இருக்கக் கூடாது?' என்ற எண்ணத்துடன் ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பார்த்து

"ஹே ஆஞ்ஜநேயரே! நீர் ராமனுல் அனுப்பப்பட்ட தூதனென்பது வாஸ்தவமானுல் ராமனைப் பற்றியுள்ள சில கேள்விகள் உம்மிடத்தில் கேழ்க்கிறேன். ராம கதையைக் கேட்பதில் எனக்கு மிகுந்த ப்ரியமுண்டு. என்னுடைய ப்ரியனுன ராமனுடைய கல்யாண குணங்களை விவரமாக எடுத்துச் சொல்லும். நதிப்ரவாஹமானது கரையை உடைத்துக் கொண்டு போவது போல் ராமனுடைய கல்யாண குணங்கள் என்னுடைய மனதை அபஹரிக்கின்றது. ஸ்வப்னத்திலும் ராமனை நான் கண்டால் பரமானந்தத்தை அனுபவிப்பேன். ஸ்வப்னமும் எனக்குச் சத்ருவாகிவிட்டது. நீர் வந்து ராமனுடைய கல்யாண குணத்தை என்னிடத்தில் வர்ணிப்பது ஸ்வப்னமோ என்றும் நான் நினைக்க ந்யாயமில்லை. வானர ஜாதியில் பிறந்த உம்மை ஸ்வப்னத்தில் பார்த்து நான் க்ஷேமத்தை அடைய முடியுமா? தற்காலத்திலோ என் மனதிற்கு அத்புதமான ப்ரீதி விசேஷம் ஏற்பட்டிருக்கிறது. ஸௌபாக்யத்தை ஸூசிப்பிக்கக் கூடிய சில சுபநிமித்தங்களையும் காண்கிறேன். ஆகையினுல் நீர் பேசினதும் ஸ்வப்னமில்லை. ஒரு ஸமயம் மனதினுடைய ப்ரமமாக இருக்கலாமென்ருலோ, மனதினுடைய ப்ரமமாகவோ, அல்லது இல்லாத விஷயத்தை இருப்பது போல் பாவிக்கச் செய்கிற மனதினுடைய ஸங்கல்பமாகிற வாயுவினுடைய கதிவிசேஷமோ, பர்த்தாவைவிட்டுப் பிரிந்ததினுல் ஸ்த்ரீகளுக்கு ஏற்படும் ப்ராந்தியான உன்மாதமோ இப்படிப்பட்ட மனதினுடைய வ்ருத்தி விசேஷங்களில் ஏதாவது ஒன்ருக இருக்கும் என்று யோசித்தாலும் அவைகளும் இல்லை. அவைகளெல்லாம் ஆச்ரயமான புருஷனை வ்யாமோஹப்படுத்திவிடும் எனக்கோ என்னுடைய ஸ்ம்ருதிக்கு யாதொரு விதமான குறைவும் வரவில்லை ஆகையினுல் ராவணன் காமரூபியானதினுல் ராக்ஷஸ ராஜனுன ராவணனுகத்தான் இருக்கவேண்டும்" என்று தீர்மானித்துக் கூறிவிட்டு மறுபடியும் மௌன முத்ரையையே தரித்தாள்.

ஆஞ்ஜநேய ஸ்வாமியோ, ஸீதையினுடைய ஸந்தேஹத்தை நிவ்ருத்தி செய்துவைக்க ச்ரோத்ரேந்த்ரியத்திற்கு இனிமையைக் கொடுக்கக் கூடிய ராமனுடைய கல்யாண குணங்களை எடுத்து வர்ணிக்க ஆரம்பித்தார்.

"ஹே பரதேவதையே! ராமனே ஸூர்ய பகவானைப்போல் மஹா தேஜஸ்வி. சந்த்ரனைப்போல் ஸர்வ ப்ராணிகளுக்கும் ஆஹ்லா தத்தை உண்டு பண்ணக்கூடியவன். குபேரனைப்போல் ஸர்வ லோகத்திற்கும் அரசன். மஹாவிஷ்ணுவைப்போல் அபரிமிதமான பராக்ரமத்தோடு கூடினவன். மஹா யசஸ்வீ ப்ருஹஸ்பதி பகவானைப் போல் ஸத்யவாதி, மதுரமாகப் பேசுகிறவனும்கூட மிகவும் ஸௌந்தர் யத்தோடு விளங்குபவன். மன்மதன் தானே என்று சொல்லக்கூடிய நிலையில் பாஸிக்கிறவன். அபரிமிதமான காந்தியினால் ஜ்வலிக் கின்றவன். பரம ஸௌபாக்யத்திற்கு இருப்பிடமான வஸ்து. அவச்யம் அங்கீகரிக்க வேண்டிய ஸந்தர்ப்பத்தில் கோபத்தை ஸ்வீகரிப்பான்; தண்டிக்கவேண்டியவனை தண்டிப்பான்; உலகத் திலேயே பரம ச்ரேஷ்டனென்று சொல்லக்கூடியவன். இந்தப் பதினென்கு உலகங்களும் அவனுடைய கைநெடிங்களுக்குள் அடங்கி விட்டது. மாயா ம்ருகத்தினால் அவ்வித மஹிமையுள்ள ப்ரபுவை வெகுதூரத்திற்கப்பால் போகும்படி செய்துவிட்டு எந்த மஹா பாபி யினால் நீ அபஹரிக்கப்பட்டாயோ அந்த மஹாபாபிக்கு அதிசீக்ரத்தில் கிடைக்கும் பலனையும் நீ பார்க்கலாம் மஹா கோபத்தோடு வில்லி லிருந்தும் தொடுத்துவிடப்பட்ட பாணங்களினால் ராவணனை எந்த ராமன் வதிக்கப் போகின்றாரோ அந்த ராமனால் அனுப்பப்பட்ட தூதன் தான் நான். இது ஸத்யமே என்னிடத்தில் வீணாக சங்கையை அடைய வேண்டாம்.

உன்னைவிட்டுப் பிரிந்ததிலிருந்து ராமன் துக்கஸாகரத்தில் மூழ்கிக்கொண்டு வருகிறார். மஹா தேஜஸ்வியான லக்ஷ்மணனும் உனக்கபிவாதனம் செய்து குசலப்ரச்னம் செய்யச் சொன்னார். ராமருக்கு ஸகாவாயிருக்கும் வானர ராஜனான ஸுக்ரீவனும் உனக்கு க்ஷேமத்தைத் தெரிவித்துக் கொண்டார். ஸுக்ரீவனோடு தினந்தோறும் உன்னுடைய கதையைததான் ராமன் ஸ்மரித்துக் கொண்டு உன்னைப் பற்றியே சொல்லிக்கொண்டிருக்கிறார் அதி

சீக்ர காலத்தில் ராம லக்ஷ்மணர்களை நீ பார்க்கலாம். கோடிக் கணக்கான வானரஸேனைகளுக்கு மத்தியில் விளங்கும் ஸுக்ரீவனையும் பார்க்கலாம். நான் ஸுக்ரீவனுடைய மந்த்ரியாவேன். உன்னைத் தேடுவதற்காக ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கா நகரத்திற்குள் அனுப்ரவேசம் செய்தேன் சத்ருவான ராவணனுடைய சிரஸ்ஸில் இடது காலை வைத்துக்கொண்டு நான் லங்கைக்குள் நுழைந்தேன். அதனால் நமக்கு ஜயம்தான் ஏற்படப் போகிறது நீ என்னை ராவணனென்று கொஞ்சமேனும் ஸந்தேஹப்பட வேண்டாம். என்னுடைய வார்த்தையில் நம்பிக்கையை வைக்க வேண்டும்'' என்று ப்ரார்த்தித்துக்கொண்டார்.

இதைக் கேட்ட ஸீதை ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பார்த்து, "ராமரோடு உமக்கு ஸம்பந்தம் ஏற்படக் காரணமென்ன? எங்கே ஏற்பட்டது? குரங்குகளுக்கும் மனிதர்களுக்கும் ஸ்நேஹம் ஏற்படுமா? ராமருக்கோ லக்ஷ்மணருக்கோ என்ன அடையாளங்கள்? ராமருடைய அவயவ விசேஷங்கள் எவ்விதமானவை? ராமருடைய கைகள், துடைகள் முதலியவை எப்படி விளங்குகின்றன? அப்படியே லக்ஷ்மணனுடைய அஸாதாரணமான அடையாளங்களென்ன?'' என்று கேட்டாள்.

ஆஞ்ஜநேய ஸ்வாமியும் ஸீதையினுடைய ப்ரச்னத்திற்கு அனுகுணமாக ராமருடைய ஸ்வரூபத்தை எடுத்து உரைக்க ஆரம்பித்தார்.

"ஹே ஸீதே! ராமருடைய சரீர ஸமஸ்தான விசேஷத்தையும், லக்ஷ்மணனுடைய அடையாளங்களையும், நான் ராமதூதன்தானா என்று பரீக்ஷிக்க நீ கேட்கிறாய் உனக்கெதிரில் அவைகளை எடுத்துக் கூறும்படியான பாக்யம் எனக்கு ஏற்பட்டதிலும் ஸந்தோஷமே. ராமனுடைய அடையாளங்கள் எவைகளோ அவ்விதமே லக்ஷ்மணனுடைய அடையாளங்கள். அவைகளை எனக்குத் தெரிந்தமட்டில் நான் எடுத்து உரைக்கிறேன். அதைக் கேட்ட பிறகாவது இவன் ராமதூதன்தான் என்று நம்பிக்கையை அடைவாயோ என்று பார்க்கிறேன்'' என்று சொல்லிவிட்டு ராமருடைய கல்யாண குணங்களைச் சொல்ல ஆரம்பித்தார்.

रामः कमलपत्राक्षः सर्वसत्वमनोहरः ।
रूप दाक्षिण्य सम्पन्नः प्रसूतो जनकात्मजे ॥

ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமநோஹர: ।
ரூபதாக்ஷிண்ய ஸம்பந்ந: ப்ரஸூதோ ஜநகாத்மஜே ॥

"ராமரோ ஸர்வ ப்ராணிகளேயும் ரமிக்கச் செய்யும் ஸர்வாங்க ஸௌந்தர்யத்தோடு கூடினவர், ராமனுடைய எந்த அவயவங்களைப் பார்த்தாலும் அவைகளில் ஸௌந்தர்ய லக்ஷ்மியானவள் நடனம் செய்கிருள் என்பதில் ஸந்தேஹமேயில்லே. அத்துடன் கமல பத்ராக்ஷன்; செந்தாமரைக் கண்ணன்' நதிப்ரவாஹத்தின் நடுவிலுள்ள சுழலேப்போல் ராமருடைய தேஹ ஸம்பந்தமான காந்தியாகிய ப்ரவாஹத்தில் ப்ராணிகளுடைய த்ருஷ்டியையும் மனதையும் ஆகர்ஷித்து ப்ரவாஹத்திற்குள் மூழ்கும்படி செய்கிற சுழலேப்போல் நேத்ரங்களின் சோபையானது விளங்கி வருகின்றது. அவ்விதமான நநேத்ரத்தின் ஸௌந்தர்யத்திற்கு ஆஸ்தான பூமியாகவே பகவான் விளங்கிவருகிருர் என்பதில் ஆக்ஷேபணையே இல்லே.

सर्वसत्वमनोहरः (ஸர்வ ஸத்வமனேஹர:) எல்லா ப்ராணிகளுடைய மனதையும் அபஹரிக்கின்றவர். நானே திர்யக் ஜாதியில் பிறந்தவன் வ்ருக்ஷத்தில் ஒரு கிளையினின்றும் மற்றென்றுக்குத் தாவுகின்ற சஞ்சல ஸ்வபாவத்தோடு கூடியவன். ஸாமான்யம், விசேஷம் என்ற விபாகத்தை அறியாதவன். அப்பேர்ப்பட்ட என்னுடைய சித்தத்தைக்கூட அபஹரித்துவிட்டார். ராமர் தன்னுடைய ஸௌந்தர்யத்தினுல் என் சித்தத்தையும் அபஹரித்த காரணத்தினுல்தான் என் சித்தம் என்னுடைய அதீனத்திலில்லாததினுல் நான் ராமருக்கு தூதனுக ஆகிவிட்டேன்.

தவிரவும் रूप दाक्षिण्य संपन्नः (ரூபதாக்ஷிண்யஸம்பந்ந:) என்றதினுல், தேஹத்திலுள்ள ஸகல ரூபங்களேயும் க்ரஹித்துக்கொள்ள வேண்டும். தாக்ஷிண்யம் என்பதினுல் ஆத்ம குணங்கள் யாவற்றையும் வாங்கிக்கொள்ள வேண்டும் தேஹ குணங்களாலும் ஆத்ம குணங்களாலும் நிறைந்தவன் என்ற அர்த்தமும் வெளியாகிறது இந்த குணங்களெல்லாம், ராமன் அவதரித்த பிறகு செயற்கையினுல் வந்தவையல்ல. प्रसूतः (ப்ரஸூத:) அதாவது, ஔத்பத்திகம்,

அக்னிக்கு ஔஷ்ண்யம்போல் ஸஹஜமாகப் பிறப்பிலேயே உண்டான குணங்களாகும். ஆனால் மிகவும் மேலானவனாக ராமனை நான் வர்ணித்ததினால் அந்த ராமனுக்கு ஸமானமாக மற்றொருவன் இருக்கின்றானா இல்லையா என்று ஸந்தேஹம் ஏற்பட்டால் அதை நிவ்ருத்தி செய்ய ராமனுக்கு ஸமானமான குணங்களோடு கூடிய மற்றொருவர் தாங்கள் தானென்று தங்களைத்தான் சொல்லமுடியும் என்ற அபிப்ராயத்தை ஹே ஜனகாத்மஜே என்றதினால் தெரிவித்துக் கொண்டார்.

பகவானுடைய அவதாரத்தில். பிறப்போடு கூடவே தேஹ குணங்கள், ஆத்ம குணங்கள் இவைகள் உண்டானது என்று சொல் வதிலிருந்தும் उत्पन्नं द्रव्यं क्षणं अगुणं तिष्ठति (உத்பந்நம் த்ரவ்யம் க்ஷணம் அகுணம் திஷ்டதி) என்ற நையாயிக மதமானது வேத பாஹ்ய மதமானதினால், ச்ரேயஸ்ஸை விரும்புகிறவர்கள் அதை ஆதரிக்கக்கூடாது என்ற ரஹஸ்யமும் வெளியாகிறது.

அத்துடன், தேஜஸ்ஸில் ஸூர்யனுக்கு ஸமானமானவன். பொறுமையில் ப்ருத்விக்கு ஸமானமானவன். புத்தியில் ப்ருஹஸ் பதியை வெல்லக் கூடியவன், யசஸ்ஸில் தேவேந்த்ரனை ஒத்தவன். ஸகல ஜீவகோடிகளையும் ரக்ஷிப்பவன். ஸ்வஜனங்களையும் காப்பாற்று பவன் ஸதாசாரத்தை ரக்ஷிக்கிறவன். தர்ம தேவதையைப் பரிபாலிக்கிறவன். தர்ம விரோதிகளான சத்ருக்களைத் தவிக்கச் செய்பவன் ப்ராம்மணன், க்ஷத்ரியன், வைச்யன், சூத்ரன் என்ற நான்கு வர்ணங்களையும், மந்த்ரத்வ வர்ணங்களுக்கு உசிதமான தர்மங்களையும் கொஞ்சமேனும் அதற்துக் குறைவுவராமல் ரக்ஷிப்பவன் ஸகலவிதமான சாஸ்த்ரீய வ்யவஸ்தைகளையும் உலகத்தில் ப்ரசாரம் செய்து ப்ராணிகளை அனுஷ்டிக்கச் செய்கிறவன். ப்ரம்மவர்ச்சஸ் ஸோடு கூடினவன். ப்ரம்மசர்ய வ்ரதத்தைக் கைவிடாமல் அனுஷ் டிக்கிறவன், ஸஜ்ஜனங்களுக்கு உபகாரம் செய்கிறவன் ஸத் கர்மாவை உலகத்தில் நிலைநாட்டுகிறவன். ஆன்வீக்ஷிகி, த்ரயீ, வார்த்தா, தண்டம், நீதி என்ற ராஜவித்யைகளான நான்கு சாஸ்த் ரங்களையும் அப்யாஸம் செய்தவன். ப்ராம்மணர்களிடம் பரம பக்தி யோடு கூடியவன் ஸகல சாஸ்த்ரங்களையும் அறிந்தவன் ஸௌசீல் யத்தோடு கூடினவன். மிகவும் அதிகமான விஷயத்தைக் கை

கொண்டவன். தன் வேதமான யஜுர் வேதத்திலும், மற்ற வேதங்களிலும் பாண்டித்யம் உள்ளவன். தனுர் வேதங்களிலும் பாண்டித்யம் உள்ளவன். தனுர் வேதங்களில் அபாரமான ஸாமர்த்யத்தோடு கூடினவன். சீக்ஷா, கல்பம், வ்யாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜ்யோதிஷம் முதலிய வேத சாஸ்த்ரங்களிலும் மஹா பாண்டித்யத்தோடு கூடினவன்'' என்று ராமனுடைய ஆத்ம குணங்களை ஆஞ்ஜனேய ஸ்வாமி விஸ்தாரமாக வர்ணித்தார். தேஹ குணங்களைப் பற்றியும் விஸ்தரித்தார்.

विपुलांसो महाबाहुः कम्बुग्रीवः शुभाननः ।
गूढजत्रः सुताम्राक्षो रामो देवि जनैः श्रुतः ॥
दुन्दुभिस्वननिर्घोषः स्निग्धवर्णः प्रतापवान् ।
समः समविभक्ताङ्गः वर्णं श्यामं समाश्रितः ॥
त्रिस्थिरः त्रिप्रलम्बश्च त्रिसमः त्रिषु चोन्नतः ।
त्रिताम्रः त्रिषु च स्निग्धः गम्भीरस्त्रिषु नित्यशः ॥

விபுலாம்ஸோ மஹாபாஹு: கம்புக்ரீவ: சுபாநந: ।
கூட ஜத்ரு: ஸுதாம்ராக்ஷ: ராமோ தேவி ஜநை: ச்ருத: ॥
துந்துபிஸ்வநநிர்கோஷ: ஸ்நிக்தவர்ண: ப்ரதாபவாந் ।
ஸம: ஸமவிபக்தாங்க: வர்ணம் ச்யாமம் ஸமாச்ரித: ॥
த்ரிஸ்திர: த்ரிப்ரலம்பச்ச த்ரிஸம: த்ரிஷு சோந்நத: ।
த்ரிதாம்ர: த்ரிஷு ச ஸ்நிக்த: கம்பீரஸ்த்ரிஷு நித்யச: ॥

வீசாலமான தோள் ப்ரதேசத்தோடும், கூடமாய் மறைபட்ட புஜங்களுடைய ஸந்திகளோடும், சங்கப்போல் வெளுப்பான கழுத்து ப்ரதேசத்தோடும் கூடினவர். நீண்ட கைகள், சிவந்த கண்கள், கம்பீரமான ஸ்வபாவத்தோடும், அழகான தேகத்தின் நிறத்தோடும் விளங்குபவர்; மஹா பராக்ரமசாலி. வலது, இடது பாகங்களில் உள்ள அவயவங்கள் ஸமமாக இருக்கும்படி உள்ள ஸந்நிவேசத்தோடு கூடினவர். மார்பு, மணிக்கட்டு, முஷ்டி இந்த மூன்றிலும் ஸ்திரத் தன்மையோடும் கூடினவர்.

उरश्च मणिबन्धश्च मुष्टिश्च नृपतेः स्थिराः । (உரச்ச மணிபந்தச்ச முஷ்டிச்ச ந்ருபதே: ஸ்திரா:) என்ற ஸாமுத்ரிகா லக்ஷண சாஸ்த்ரத்தில் சொல்லியபடி மேற்சொன்ன மூன்று பாகங்களிலும்

ஸ்திரத்தன்மையோடு கூடினவர். அவ்விதமே மூன்று ப்ரேதேசங்களிலும் தீர்க்கமாக நீண்டு இருக்கும் பாகத்தோடும் கூடினவர்.

दीर्घभ्रूवाहुमुष्कस्तु चिरजीवी धनी नरः। (தீர்கப்ருபாஹுமுஷ்கஸ்து சிரஜீவி தனீ பர:) என்ற சாஸ்த்ரப்படி, புருவங்கள், கைகள் முஷ்கம் இந்த மூன்றும் எந்த மனிதனுக்கு தீர்க்கமாக இருந்து வருகின்றதோ அந்த மனிதன் சிரஞ்ஜீவியாகவும், மஹா தனிகனுகவும் இருந்து வருவான் என்ற சாஸ்த்ர ப்ரகாரம் தீர்க்கமான புருவம் பாஹு, முஷ்கம் இவைகளோடு கூடினவர்.

त्रयश्च यस्य विद्यन्ते प्रलम्बाः मेढ्रबाहवः। (த்ரயச்ச யஸ்ய வித்யந்தே ப்ரலம்பா: மேட்ரராஹவ:) என்ற வசனத்தை அனுஸரித்தும் மூன்று ஸ்தானங்களில் ஸாம்யத்தையும் அடைந்தவன்.

कुशाग्रं वृषणं जानु समा यस्य स भूपतिः। (கேசாக்ரம் வ்ருஷணம் ஜாநு ஸமா யஸ்ய ஸ பூபதி.) என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து தலைமயிரின் நுனிபாகங்கள், இரண்டு வ்ருஷணங்கள், முழங்கால் இவைகள் ஸமமாக மேல், கீழ் என்ற தாரதம்யத்தை இழந்து உத்தம புருஷர்களிடம் காணப்படும். அவ்விதம் பகவானுக ஸ்ரீராமனிடம் இருந்து வருகிறது அதை த்ரிஸம: என்ற பதத்தினுல் ஸூசிப்பிக்கின்ருர்.

தவிர, त्रिषु च उन्नतः (த்ரிஷு ச உந்நத:) என்ற பதத்தினுல்,

उन्नतकुक्षिः क्षितिपाः परिमण्डलोन्नतनाभयः क्षितिपाः।
हृदयं न वेपनं पृथु समोन्नतं मांसलं च नृपतीनाम्॥

உந்நதகுக்ஷி க்ஷிதிபா பரிமண்டலோந்நதநாபய: க்ஷிதிபா
ஹ்ருதயம் ந வேபநம் ப்ருது ஸமோந்நதம் மாம்ஸலம் ச ந்ருபதீனும்

என்று வராஹமிஹிரர் சொல்லியபடி, உதர பாகத்திலும் நாபி ப்ரதேசத்திலும், அப்படியே ஹ்ருதய பாகத்திலும் பெரிதாயும், உன்னதமாயும், ஸமமாயும், மாம்ஸப் பற்று உள்ளதாயும், ஸந்நிவேச விசேஷங்கள் ராஜாக்களிடம் காணப்படுமென்று தெரிகின்றபடியினுல். அந்த விசேஷங்களெல்லாம் ஸ்ரீராமனிடம் ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிறபடியினுல் त्रिषु च उन्नतः (த்ரிஷு ச உந்நத:) என்ற பதத்தினுல் அதை ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் தெரிவிக்கின்ருர்.

அவ்விதமே त्रिताम्रः (திரிதாம்ர:) மூன்று ப்ரதேசங்களில் சிவப்பு நிறமுடையவராயும் இருந்து வருகின்றார் श्लिष्टांगुली रुचिरताम्र नखौ सुपार्ष्णी पादौ करावपि सुरक्तनखात्मरेखौ । (ச்லிஷ் டாங்குலீ ருசி, தாம்ர நகௌ ஸுபார்ஷ்ணீ பாதௌ கராவபி ஸுரக்த நகாத்மரேகௌ) என்ற ஸாமுத்ரிகா சாஸ்த்ரத்தை அனுஸரித்து, சிவப்பான நகங்கள், சிவந்த பார்ச்சவங்கள், கைகள் அவ்விதமே கால்கள் இவைகளோடு கூடினவர்.

स्निग्धाः भवन्ति वै तेषां पादरेखाः शिरोरुहाः। (ஸ்நிக்தா: பவந்தி வை தேஷாம் பாதரேகா: சிரோருஹா) என்ற வசனப்படி கால்கள், ரேகைகள், தலைமயிர் இவைகள் மூன்றும் ஸ்னிக்தமாக, பிசுபிசுப்புள்ளதாக இருந்து வருகின்றது.

தவிரவும், स्वरे गतौ च नाभौ च गम्भीरः त्रिषु सस्यते । (ஸ்வரே கதௌ ச நாபௌ ச கம்பீர: த்ரிஷு ஸஸ்யதே) கண்டஸ்வரத்திலும், காம்பீர்யத்தோடு கூடினவர். ஸாமுத்ரிகா லக்ஷண சாஸ்த்ரத்தில் உத்தம புருஷனுடைய அவயவ ஸந்நிவேச விசேஷங்கள் எவ்வித மாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றதோ, அவைகள் எல்லாவற் றிற்கும் ராமனைத்தான் உதாஹரணமாகச் சொல்லவேண்டும்.

सत्यधर्मपरः श्रीमान् संग्रहानुग्रहे रतः ।
देशकालविभागज्ञः सर्वलोक प्रियंवदः ॥

ஸத்யதர்மபர: ஸ்ரீமான் ஸங்க்ரஹானுக்ரஹே ரத: ।
தேசகாலவிபாகக்ஞ: ஸர்வலோக ப்ரியம்வத: ॥

ஸத்யத்தையும், தர்மத்தையும் கைகொண்டவர். அக்கார ணத்தினால், ஸகலவிதமான ஸம்பத்துக்களாலும் அலங்கரிக்கப் பட்டவர். ப்ரஜைகளிடமிருந்து கப்பம் வாங்குவதிலும், கொடுக்க வேண்டிய ஸந்தர்ப்பத்தில் கொடுப்பதிலும் ஸமர்த்தர். தேச காலத்தை அறிந்து ஸர்வ ப்ராணிகளுக்கும் ப்ரியமாகவே பேசிக் கொண்டு ப்ராணிகளுக்கு நன்மையைச் செய்வதிலேயே மிகவும் ஈடுபட்டவர்

இவ்விதமே, அந்த ராமனுடைய தம்பியான லக்ஷ்மண ஸ்வாமியும், ஸமஸ்தமான விக்ரஹ குணங்களாலும், ஆத்ம குணங்க ளாலும் அலங்கரிப்பட்டவர். அந்த இருவர்களும், உன்னைப் பார்க்க வேண்டுமென்கிற உத்ஸாஹமுடையவர்களாய்க்

கொண்டு, பூமி முழுதும் தேடிக்கொண்டு யத்ருச்சையாக ரிச்யமுக பர்வதத்தினுடைய ஸமீபத்திற்கு வந்து சேர்ந்து எங்களை ஸந்தித்தார்கள்.

ரிச்யமுக பர்வதத்தில் வாலிக்குப் பயந்துகொண்டு வானர ராஜனான ஸுக்ரீவன் வஸித்து வருகிறான். நானும் என்னைப் போன்ற சிலரும் ஸுக்ரீவனுடைய நீதியை அனுஸரித்து ஸுக்ரீவனுக்குப் பரிசர்யை செய்துகொண்டு வாஸம் செய்கின்றோம். ராம லக்ஷ்மணர்களைப் பார்த்தவுடன் வாலிதான் ராஜபுத்ரர்களைப் போல் வேஷம் போட்டுக்கொண்டு தன்னை ஹிம்ஸிக்க வருகின்றானோ என்று ஸுக்ரீவன் பயந்து ரிச்யமுக பர்வதத்தைவிட்டு வெளியில் ஓட ஆரம்பித்தான்.

'மதங்க மஹர்ஷியினுடைய சாபத்தினால் வாலி இங்குவர ஸந்தர்ப்பமேயில்லை. யாரோ மஹா புருஷர்கள் வருகின்றார்கள் இந்த மஹான்களுடைய ஸங்கமத்தினால் நமக்கு ஏற்பட்ட துக்கமானது நிவ்ருத்தி அடையக்கூடிய காலமும் வரும்போல் தோன்றுகின்றது. ஆகையினால் இந்த மஹான்களுடைய ஸமீபம் நானே சென்று, அவர்களுடைய அபிப்ராயத்தை நன்றாய் பரீக்ஷித்து வருகின்றேன். நீ பயத்தை விட்டுவிடலாம்' என்று நான் ஸமாதானம் செய்தேன். பிறகு நான் ராம லக்ஷ்மணர்களுடைய ஸமீபத்திற்கு சென்றேன். அஞ்சலி பந்தத்துடன் ராம லக்ஷ்மணர்களுடைய எதிரில் நின்றுவந்தேன். அவர்கள் உன்னைத் தேடி வருகின்றதாகவும், ராவணனை வதம் செய்து உன்னைத் திரும்பி அடைய ஸுக்ரீவனை ஸஹாயமாக எதிர்பார்த்து வருகின்றவர்களாகவும் தெரிந்துகொண்டேன், இதை பிறகு 'ஸுக்ரீவனும் வாலியைக் கொன்று தான் கிஷ்கிந்தா ராஜ்யத்தை அடைகின்ற விஷயத்தில் தங்களைப்போன்ற மஹா புருஷர்களை ஸஹாயமாக எதிர்பார்க்கின்றான். ஆகையினால் பரஸ்பர அபேக்ஷை இருவர்களுக்கும் இருப்பதினால் தாங்கள் அவச்யம் ஸுக்ரீவனோடு ஸக்யம் செய்துகொண்டு பரஸ்பரம் உபகாரம் உபகாரக பாவத்தை அடைந்து பரம ஸந்தோஷத்துடன் விளங்கி வரலாம் என்று சொல்லிவிட்டு ராம லக்ஷ்மணர்களை என்னுடைய முதுகில் தூக்கிக்கொண்டு ஸுக்ரீவனுடைய ஸமீபத்திற்கு வந்துசேர்ந்தேன். பரஸ்பரம் ராமனும் ஸுக்ரீவனும் தன் தன் கதைகளைச் சொல்லிக்கொண்டார்கள்.

நாங்கள் அந்த பர்வதத்தின் சிகரத்தில் வெகு காலமாக வஸித்து வருகிறோம். ராவணன் உன்னை அபஹரித்துக்கொண்டு போகும் ஸமயத்தில் நீ சில ஆபரணங்களை ஒரு வஸ்த்ரத்தில் மூடிந்து இங்கு கீழே விழும்படி போட்டுவிட்டுப் போனது ஞாபகமிருக்கலாம். அதை நாங்கள் ஜாக்ரதை செய்து வைத்துக்கொண்டிருந்தோம். ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும், அக்னிஸ்கக்ஷிகமாக ஸ்நேஹமானவுடன், அந்த ஆபரணங்களை ராமனிடம் காண்பித்தோம். ராமனும் அவைகளைப் பார்த்தவுடன் உன்னை நினைத்துக்கொண்டு மிகவும் துக்கப்பட்டார். பிறகு லக்ஷ்மண ஸ்வாமியோடு ஆலோசித்து உன்னுடைய ஆபரணங்கள்தான் என்று தீர்மானித்து உன் கவலையாகவே ராமன் இருந்துவந்தார். உன்னைக் காணுதலால், ராமன் படுகின்ற துக்கத்தை வர்ணித்து முடியாது அதிசீக்ரத்தில் ராவணனை பந்துவர்க்கங்களோடு சேர்த்துக் கொன்று. ராமன் உன்னை அடைவார் என்பதில் எனக்கு ஸந்தேஹமேயில்லை ராவணனைக் கொன்று உன்னை துக்கத்தினின்றும் மீட்டுவைக்கின்ற விஷயத்தில் ஸுக்ரீவனும் ராமனுக்கு ஸஹாயம் செய்வான். வாலியைக் கொன்று கிஷ்கிந்தா ராஜ்யத்தை ஸுக்ரீவனுக்கு அளிப்பதில் ராமன் அக்னிஸாக்ஷிகமாக ப்ரதிக்ஞை செய்து வாலியைக் கொல்லுவதற்கு ராமனுக்குச் சக்தி இருக்கின்றதா என்ற விஷயத்ல் ஸுக்ரீவனுல் வெகுவிதமாப் பரீக்ஷிக்கப்பட்டு, ராமன வாலியைக் கொல்லும் விஷயத்தில் ஸாமர்த்யமுள்ளவர்தான் என்ற நம்பிக்கையும் ஸுக்ரிவன் அடையும்படியாகச் செய்தார்

பிறகு, ஸ்ரீராமனும் ஸுக்ரீவன் மூலமாக வாலியை யுத்தத்திற் கழைத்து வாலியை வதித்து ஸுக்ரீவனை கிஷ்கிந்தா ராஜியத்திற்கு அதிபதியாகவும் செய்தார் கொஞ்சகாலம் ஆனதும் வானர ஸேனை களைத் திரட்டி ஆங்காங்கு நான்கு திசைகளிலும் உன்னைத் தேடு வதற்காக அனுப்பினார்கள். தக்ஷிண திசையில் உன்னைத் தேடு வதற்கு வந்திருக்கும் வானரர்கள் மஹா பராக்ரமசாலிகள். வாலியினுடைய பிள்ளையான அங்கதன். ஜாம்பவான், நளன், நீலன், சரபன், மைந்தன், த்விதன் முதலான மஹா பராக்ரமசாலிகளால் அலங்கரிக்கப்பட்ட கோடிக்கணக்கான வானரர்கள். உன்னைத் தேடிக்கொண்டு வருகின்றார்கள். அதில் நானொருவன். எனக்கு ஹநுமான் எனப் பெயர். அனேக இடங்களில் தேடி உன்னுடைய இருப்பிடத்தைக் கண்டுபிடிக்க முடியாமலும், ராஜனுடைய

ஆக்ஞையின் காலம் அதிக்ரமித்து விட்டபடியினாலும், இனிமேல் நாம் திரும்பி ஸுக்ரீவனுடைய ஸமீபம் போவது உசிதமில்லையென்று தீர்மானித்து தெற்கு ஸமுத்ரக் கரையில் மஹேந்த்ர பர்வதத்தினருகில் ப்ராயோபவேசனம் செய்து ப்ராண த்யாகம் செய்வதாகத் தீர்மானித்து விட்டோம். அந்த ஸந்தர்ப்பத்தில் ராமனுடைய கார்யத்தில் ஜடாயு ப்ராண த்யாகம் செய்த விஷயத்தை நாங்கள் பேசிக்கொண்டிருக்கும் பொழுது, அந்த வார்த்தையானது ஜடாயுஸ்ஸினுடைய ஸஹோதரனான ஸம்பாதியின் காதில் விழவே, அவனுடைய ஸமாகமத்தினால் இந்த லங்காநகரத்தில் அசோக வனத்தில் உன்னுடைய இருப்பிடத்தைத் தெரிந்துகொண்டோம். ஸமுத்ரத்தைத் தாண்டுவதில் எவ்விதமான உபாயமென்று யோசித்து ஜாம்பவானுடைய ப்ரேரணையினால் நான் அதில் பரம உத்ஸாஹத்தை அடைந்து ஸமுத்ரத்தைத் தாண்டி இரவில் லங்காநகரத்தில் ப்ரவேசம் செய்தேன். லங்கையில் ஓரிடமும் பாக்கியில்லாமல் நான் உன்னைத் தேடியும் கண்டுபிடிக்க முடியாமல் மிகவும் கஷ்டப்பட்டேன். பிறகு, ஸம்பாதியினுடைய வார்த்தையை ஸ்மரித்துக்கொண்டு இந்த அசோகவனத்தில் நான் உன்னைக் கண்டேன், ராமகார்யத்தில் துரந்தரன், ராமதூதன் என்று என்னை நீ அறிய வேண்டும்.

कुशली तव काकुत्स्थः सर्वशस्त्रभृतां वरः ।
गुरोराराधने युक्तः लक्ष्मणश्च सुलक्षणः ॥

குசலீ தவ காகுத்ஸ்த: ஸர்வசஸ்த்ரப்ருதாம் வர: ।
குரோராராதநே யுக்த: லக்ஷ்மணச்ச ஸுலக்ஷண ॥

வில்லாளிகளுக்குள் முந்தினவனும், உன் பர்த்தாவாயுமுள்ள ஸ்ரீராமன் பரம ஸௌக்யத்தோடு விளங்கி வருகின்றார். லக்ஷ்மண ஸ்வாமியும் ராமருக்கு வேண்டிய பரிசர்யை செய்துகொண்டு உன்னுடைய விரஹத்தினால் ராமனுக்கு அடிக்கடி துக்கம் ஏற்படாமலிருக்கும்படி ஸமாதானம் செய்துகொண்டு ராமனுடைய அருகில் இருந்துவருகிறார். நானொருவன் ஸுக்ரீவனுடைய வார்த்தையை சிரஸால் வஹித்துக்கொண்டு உன்னைத் தெற்கு திசை முழுவதும் தேடி, ஸமுத்ரத்தைத் தாண்டி, இரவில் லங்கையில் நுழைந்து, அசோக வனத்தில் உன்னைக் கஷ்டப்பட்டுப் பார்த்தேன்,

என்னுடைய ஸமுத்ர தரண ப்ரயாஸமானது உன்னை நான் பார்த்ததினால் ஸபலமாக ஆகிவிட்டது கோடிக்கணக்கான வானர ஸேனைகளுக்குள் நானொருவன்தான் ராவணனால் அபஹரிக்கப்பட்ட உன்னைக் கண்டுபிடித்தேன் என்ற யசஸ்ஸையும், பூர்வ புண்ய புஞ்சத்தினால் அடையப்போகின்றேன். மஹா வீரனான பகவானும் அதி சீக்ரத்தில் உன்னை அடைவார். உன்னுடைய நிமித்தமாக லங்கா நகரமே சூன்யமாகிவிடப் போகிறது.

மால்யவான் என்ற மலை மலைகளுக்குள் உயர்ந்த மலையாகும். அதிலிருந்து கோகர்ணமென்ற பர்வதமானது தொடர்ந்து வருகிறது. அனேக தேவரிஷிகள் அங்கு தவம் செய்துகொண்டிருக்கும் வழக்கமுண்டு. அந்த மலையோ, மேற்கு ஸமுத்ரத்தின் அருகில் இருந்து வருகின்றது. அந்தப் புண்யமான ஆச்ரமத்தை சம்பாஸதனன் என்ற ஒரு அஸுரன் தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும் அந்தப் புண்ய தீர்த்தம் உபயோகமாகாலிருக்கும்படி உபத்ரவத்தைச் செய்து வந்தான் ருக்ஷரஜா: என்ற பெயருள்ள ஒரு வானர ராஜன் தேவ ரிஷிகளுடைய ப்ரார்த்தனைக்கிணங்கி அந்த சம்பஸாதனன் என்ற அஸுரனைக் கொன்று அந்தப் புண்யமான ஆச்ரமத்தை தேவரிஷிகளுடைய தவத்திற்கு யோக்யமாகச் செய்தான். தீர்த்தத்தையும் உபத்ரவமில்லாததாகச் செய்தான் அதனால் ருக்ஷரஜா: என்ற வானரத்திற்குப் பரிபூர்ணமாக அனுக்ரஹத்தை அளித்தார்கள். அவரைத்தான் என்னுடைய தகப்பனார் என்று சொல்வார்கள். அந்த ருக்ஷரஜஸ் என்பவருடைய களத்ரமாகிய அஞ்ஜனா தேவியினிடம் நான் பிறந்தவனாகையினால் ஆஞ்ஜநேயனென்று என்னைச் சொல்வார்கள்.

என்னுடைய கர்மாவினால் நான் உலகத்தில் ப்ரஸித்தி அடைந்தவன். உனக்கு என்னிடத்தில் த்ருடமான நம்பிக்கை வருவதற்காக நான் இவ்வளவு தூரம் சொல்லவேண்டியதாயிற்று. உன் பர்த்தாவான ராமனுடைய கல்யாண குணங்களையும் நான் எடுத்துரைத்தேன். லக்ஷ்மணனுடைய குணாதிசயங்களையும் சொன்னேன். வானரங்களுக்கும் ராமனுக்கும் ஏற்பட்ட ஸங்கமத்தின் காரணத்தையும் சொன்னேன். என்னுடைய பெருமையையும் கொஞ்சம் எடுத்துரைத்தேன். இதிலிருந்தாவது நீ என்னை ராமதூதன் என்று நம்புவாயென்று எண்ணுகிறேன். ஹே பரதேவதே! என்னை நீ வேறுவிதமாக நினைக்கக்கூடாது.

மிகவும் சீக்ரத்தில் ராமன் உன்னை இந்த இடத்தைவிட்டு தன்னிடத்தில் அழைத்துக் கொள்வார்'' என்று வெகுப்ரகாரமா ஆஞ்ஜனேய ஸ்வாமி தன்னிடத்தில் நம்பிக்கை வரும்படி பேசினர்.

ஸீதையும் ஆஞ்ஜனேயர் சொன்ன வார்த்தையிலிருந்துமே ''ராம தூதன் தான்' என்று நம்பி, பரம ஸந்தோஷத்தை அடைந்ததோடு கூட, ராமனை விட்டுப் பிரிந்த காரணத்தினுல் ராமனுடைய வ்ருத்தாந்தத்தை, தான் கேட்டதிலிருந்து கண்ணீர் ஜலத்தைப் பெருஹவிட்டுக்கொண்டு கொஞ்ச நேரம் மிகவும் கஷ்டப்பட்டாள். தேவியினுடைய முகம் சற்று நேரத்திற்கப்பால் மலர்ந்து அழகாக சோபித்தது. ராகுவினுல் விடப்பட்ட சந்த்ரனைப்போல் விளங்கியது. ஹனுமானைப் முன்போல் வித்யாஸமாக எண்ணவில்லை.

இப்படித் தன்னுடைய விஷயத்தில் ஸீதை ஸந்தோஷமாக ஆனவுடன் ஆஞ்ஜனேய ஸ்வாமி ''ஹே தேவி! நீ ஸமாதானத்தை அடையவேண்டும். கொஞ்சமேனும் மனதில் வருத்தம் கூடாது உன்னுடைய தூதனென்றே என்னை நீ நினைத்து தைர்யத்தை அடைய வேண்டும் மஹர்ஷிகளுடைய ப்ரார்த்தனைகளுக்கு இணங்கி, ருக்ஷரஜஸ் என்ற வானரச்ச்ரேஷ்டன் சம்பஸாதனன் என்ற ஓர் அஸுரனைக் கொன்ருன் என்ற கதையைச் சொன்னேனே! அந்த மஹா பராக்ரமசாலியான ருக்ஷராஜாவினுடைய களத்ரமாகிய அஞ்ஜநாதேவியின் மூலமாக நான் உண்டானவன். வாயுவிற்கு ஸமானமான பராக்ரமத்தோடு கூடினவன் பிறந்தவுடனே ப்ரும்மா மூலமாக அனேகவிதமான வரபலத்தையும் நான் அடைந்தவன். என்னுடைய சக்தியைப் பற்றி நான் உனக்கு அதிகம் சொல்ல வேண்டாம். இப்பொழுது ராவணனைக் கொன்று லங்காநகரத்தை பஸ்மமாக்கி விடவேண்டுமென்ருலும் செய்துவிடுகிறேன். நீ தைர்யத்தை அடையவேண்டும் என்பதே என்னுடைய ப்ரார்த்தனை யாகும்'' என்று அஞ்சலி பந்தத்துடன் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் மிகுந்த வணக்கத்துடன் தெரிவித்துக்கொண்டார்.

रामनाम्नि परेधाम्नि कृतस्नास्नाय समन्वयः ।
कार्यतात्पर्यबाधेन साधित शुद्धबुद्धये ॥

ஸ்ரீமத் ராமாயணம் ஸுந்தர காண்டம் முதல் பாகம் ஸம்பூர்ணம்.

---

PRINTED AT BHARATHI PRESS, PAMMAL, MADRAS - 600 075.

ॐ



ஸ்ரீமத்

# வால்மீகி ராமாயணம்

---

## ஸுந்தர காண்டம்

(இரண்டாம் பாகம்)

श्रीरामं सर्ववेदान्तवेद्यं सीतापतिं प्रभुम् ।
शरणागतसन्त्राणमनिशं प्रणमाम्यहम् ॥

ஸ்ரீராமம் ஸர்வவேதாந்தவேத்யம் ஸீதாபதிம் ப்ரபும்
சரணாகதசந்த்ராணமநிசம் ப்ரணமாம்யஹம்

भूय एव महातेजा हनुमान्मारुतात्मजः ।
अब्रवीत् प्रश्रितं वाक्यं सीताप्रत्ययकारणात् ॥
वानरोऽहं महाभागे दूतो रामस्य धीमतः ।
रामनामाङ्कितं चेदं पश्य देव्यङ्गुलीयकम् ॥
प्रत्ययार्थं तवानीतं तेन दत्तं महात्मना ।
समाश्वसिहि भद्रन्ते क्षीणदुःखफला ह्यसि ॥

பூய ஏவ மஹாதேஜா ஹநுமாந் மாருதாத்மஜ: ।
அப்ரவீத் ப்ரச்ரிதம் வாக்யம் ஸீதாப்ரத்யயகாரணாத் ॥
வாநரோஹம் மஹாபாகே தூதோ ராமஸ்ய தீமத: ।
ராமநாமாங்கிதம் சேதம் பச்ய தேவ்யங்குலீயகம் ॥
ப்ரத்யயார்த்தம் தவாநீதம் தேநதத்தம் மஹாத்மநா ॥
ஸமாச்வஸிஹி பத்ரந்தே க்ஷீணதுக்க பலாஹ்யஸி ।

ஸ்ரீ ராகவனுடைய வ்ருத்தாந்தத்தை, அதிலும் ராகவனுடைய ஆத்ம குணம், விக்ரஹ குணம் முதலியவைகளை விசேஷமாக மஹா ப்ராக்ஞனை ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் ஸீதா தேவிக்கெதிரில் எடுத்துரைத்து, தான் ராம தூதன்தான் என்ற நம்பிக்கையையும் பரதேவதையான ஸீதாதேவிக்கு உண்டு பண்ணிவிட்டு, தாரக ப்ரம்மமாகிய ஸ்ரீ ராமனுல், ஸீதாதேவியி னிடம் கொடுக்கும்படி கொடுக்கப்பட்ட முத்ர மோதிரத்தை தேவியினிடம் அர்ப்பணம் செய்துவிட்டு, தான் ராமதூதன்தான் என்பதில் தேவிக்கு த்ருட விச்வாஸத்தை உண்டுபண்ணினுர்.

'‚ஹே பரதேவதே! நான் ஜாதியில் வானரமானுலும், ஸர்வக்ஞனை ராமனுடைய தூதனுகும்படியான புண்ய விசேஷத்தை அநேக கோடி ஜன்மங்களில் செய்து, இந்த ஜன்மாவில் நான் ராம தூதனுக இருந்துவருகிறேன். என்னிடம் கொஞ்சமேனும் பரதேவதையான தாங்கள் விபரீத பாவத்தை அடையாமலிருக்க வேண்டுமென்றும், ராமதூதன்தான் என்று என்னை நம்ப வேண்டுமென்றும் மிகுந்த வணக்கத்துடன் நான் ப்ரார்த்தித்துக் கேட்டுக்கொள்கிறேன். நான் ராம தூதன்தான். ராமனுல் அனுப்பப்பட்டுத்தான் தங்கள் ஸந்நிதிக்கு வந்திருக்கிறேன் என்பதை தாங்கள் நம்பவேண்டுமென்பதற்காக ஸ்ரீராமனே தன் திருநாமாக்ஷரங்களால் அலங்கரிக்கப்பட்ட (அங்குலீயகம்) முத்ர மோதிரத்தைத் தங்களிடம் கொடுக்கும்படி என்னிடம் கொடுத்தனுப்பியிருக்கிறுர். இதைப் பாருங்கள். மனதை ஸமாதானம் செய்துகொள்ளவேண்டும். அதிசீக்ர காலத்தில் ஸமஸ்தமான துக்கங்களும் நிவர்த்தியாகி பரமானந்தாவாப்தியை ராமன் மூலம் அடையலாம்'' என்று சொல்லிக்கொண்டு, ராமதூதனும், மஹா பாகவதோத்தமனும், மஹா தேஜஸ்வியாயுமுள்ள ஆஞ்ஜனேய ஸ்வாமி தன் கையில் வைத்துக்கொண்டிருந்த மோதிரத்தை பிராட்டிக்குக் காட்டினுர்.

உடன், ஜகதீச்வரியும் ஒரு மனிதன் தன் தேசத்தை விட்டு வேறு தேசத்திற்குச் சென்று அங்கு கஷ்டப்படும் காலத்தில் தன் தேசத்திலிருந்து அங்கு வந்த யாராவது பந்து அவன் கண்ணில் தென்பட்டானேயானல், அந்த பந்துவை பரம ஸந்தோஷத்துடன் அவன் எப்படி வரவேற்பானே, அது போலவே ஸீதாதேவியும் ராமனை விட்டு பிரிந்து விதேசமாகிய லங்கா நகரத்தில் கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கும் ஸமயத்தில் ஸ்ரீ ராமனுடைய திரு நாமாக்ஷரங்களால் அலங்கரிக்கப்பட்ட முத்ர மோதிரத்தை மஹா வித்வானுன ஆஞ்ஜனேயஸ்வாமியின் கையில் பார்த்தவுடன் தானகவே பரம ஸந்தோஷத்துடன் அந்த மோதிரத்தை க்ரஹித்துக் கொண்டு தேவி ஸந்தோஷித்தாள். அதாவது :

गृहीत्वा प्रेक्षमाणा सा भर्तुः करविभूषणम् ।
भर्तारमिव सम्प्राप्ता जानकी मुदिताभवत् ।।

க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணு ஸா பர்த்து: கரவிபூஷணம் ।
பர்த்தாரமிவ ஸம்ப்ராப்தா ஜாநகீ முதிதாபவத் ।।

தான் ஸ்வயமாகவே ஆஞ்ஜனேயஸ்வாமியின் கையிலிருந்தும் க்ரஹித்துவிட்டு, அந்த முத்ர மோதிரத்தையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்த மோதிரத்தில் வைத்த த்ருஷ்டியைத் திருப்ப முடியாமல் ச்ரமப்பட்டாள்.

மோதிரத்தைப் பார்ப்பதற்கு முன் ஆஞ்ஜனேயஸ்வாமியை 'ராவணனே' என்று சங்கையை அடைந்து கஷ்டப்பட்ட ஸீதை மோதிரத்தைப் பார்த்த மாத்ரத்தில் அந்த சங்கையை விட்டு, ராம தூதன்தான் என்ற மிகுந்த ஸந்தோஷத்துடன் விளங்கிவந்தாள்.

தாரக ப்ரம்மமாயும், ஸர்வ லோகத்தையும் பரிக்கிறவனுயும், தனக்கு விசேஷமான பர்த்தவாயுமுள்ள ஸ்ரீ ராமனுடைய கர கமலத்தால் தன்னை பாணிக்ரஹணம் செய்துகொள்ளும் காலத்தில் தொடப்பட்ட ஆபரணமானதினுல் அந்த மோதிரத்தைப் பார்க்கும் பொழுது, ஸீதைக்கு ஸ்ரீ ராமனை நேரில் பார்த்தால் எவ்வித ஸந்தோஷம் ஏற்படுமோ, அந்த ஸந்தோஷம் ஏற்பட்டது.

அயோத்யா நகரத்தில் அமானுஷமான போகங்களை அனுபவித்துக் கொண்டிருக்கும்பொழுது, ப்ரணய தாரையில், ப்ரணய கோபம் ஒருவருக்கொருவர் ஏற்பட்டபொழுது, ராமனும் ஸீதையும் ஒருவருக்கொருவர் பார்ப்பது, பேசுவது என்பதுகூட இல்லாமல்

வெகு காலம் இருந்துவந்தார்கள். ஸீதைக்கும் ராமனுடன் பாஷணம் செய்யவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. அது போலவே ராமனுக்கும் ஸீதையுடன் பேசவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. ஆகிலும் அவர்களுள் தான்தான் மேல் என்ற அஹங்காரத்தால், மௌனமாக இருக்கும் பொழுது, ஸ்ரீ ராமனே, தன்னுடைய கரத்தில் விளங்கிவரும் இந்த மோதிரத்தை, தான் உட்கார்ந்துவந்த ஹம்ஸதூளிகா மஞ்சத்திலிருந்தும் பூமியில் விழும்படி நழுவச் செய்து, பூமியில் அவ்விதமே ராமனால் புத்தி பூர்வகமாக விழும்படி செய்யப்பட்டது,

இதைப் பார்த்தவுடன், ஸீதையோ தன் பாணிக்ரஹண காலத்தில் தன் பிதாவான ஜனக மஹாராஜனால் வரனுக்கு அலங் காரமாகக் கொடுக்கப்பட்ட மோதிரமானதினால், அதில் அதிக அபிமானத்தை அடைந்து ''நாதா! அங்குலீயம் கீழே விழுந்து விட்டது'' என்று தானாகவே பேச ஆரம்பித்தாள். உடன் ராமனுக்கும் ஸந்தோஷம் ஏற்பட்டு, ப்ரணய கோபத்திற்கு ஸமாப்தி வந்து, பிறகு ஒருவருக்கொருவர் ஆலிங்கனாதிகளைச் செய்துகொண்டு ஸுகத்தை அனுபவித்தார்கள்.

இந்த அபிப்ராயத்தை தேவி மனதில் வைத்துக்கொண்டு மோதிரத்தைப் பார்த்து, ''ஹே அங்குலீயகமே! முன்னொரு காலத்தில், ஒரு ஸமயம் ராமனுக்கும் எனக்கும் ப்ரணய கோபம் ஏற்பட்ட ஸமயத்தில் எங்கள் இருவர்களுக்கும் கோபத்தை சமனம் செய்து ஸமாதானம் செய்து வைத்த பரம பந்துவல்லவா நீ! இப்பொழுதோ, அவ்விதம் எங்கள் இருவர்களையும் சேர்த்து வைக்காமல், நீ உதாஸீனமாக இருப்பதின் காரணம் என்ன வென்று எனக்குத் தெரியவில்லை'' என்ற எண்ணத்துடன் அந்த அங்குலீயகத்தை தேவி அடிக்கடி பார்த்து மகிழ்ந்தாள்.

அங்குலீயகத்தைப் பார்த்த மாத்ரத்தில், அதிலிருந்தும் தன்னை ரமிக்கச் செய்யும் நாதனுடைய கரத்தை ஸ்மரித்துக்கொண்டாள். கரத்தினுடைய ஸ்ம்ருதியினால் பாஹுவை ஸ்மரித்துக் கொண்டாள். பாஹுவினுடைய ஸ்மரணத்தால் நாதனுடைய அப்ராக்ருதமான மங்கள விக்ரஹம் முழுமையையும் நேரில் பார்ப்பது போலவே ஸ்மரித்துக்கொண்டாள். இவ்விதம் பாவனையி னுடைய உத்வேகத்தால் தன் பர்த்தாவான ஸ்ரீ ராமனே எதிரில் நிற்பதுபோல் தேவிக்குப் புலப்பட்டு, அந்த ராமனை ஆலிங்கனாதி களும் செய்து கொண்டு பரமானந்தத்தை அனுபவித்தாள்.

स्वाध्यायात् इष्टदेवता संप्रयोगः (ஸ்வாத்யாயாத் இஷ்ட தேவதா ஸம்ப்ர யோக:) என்ற பாதஞ்சல ஸூத்ரத்தை அனுஸரித்து, அந்தந்த தேவதையின் மந்த்ரங்களின் மூலம் தேவதைகளின் ஸ்வரூபத்தை த்யானம் செய்து ஜபித்தாலே, அந்தந்த தேவதைகள் ப்ரத்யக்ஷமாக புலப்பட்டு ஸம்பாஷணாதிகளுக்குக் கூட ஸுலபமாகிறார்கள் என்று இருக்க, தேவியோ எப்பொழுதுமே ஸ்ரீ ராமனுடைய ஸ்மரணம் செய்துகொண்டிருக்கும்பொழுது அதிலும் தத்காலத்தில் ராமனுடைய அங்குலீயகத்தைப் பார்த்ததும் ஸ்ம்ருதியானது த்ருடமாகி, ஸ்ரீ ராமனை எதிரில் பார்த்து ஸந்தோஷிக்கக்கூடிய ஸௌலப்யத்தை ஸ்ம்ருதி ஏன் உண்டு பண்ணாது? ஜகதீச்வரியான ஸீதாதேவியானவள் அவ்விதமே அனுபவித்தாள். இந்த ரஹஸ்யமான விஷயத்தை வால்மீகி மஹர்ஷியானவர் எவ்விதம் அறிந்தார் என்று சங்கிக்க ந்யாயமில்லை.

रहस्यं च प्रकाशं च यद्वृत्तं तस्य धीमता (ரஹஸ்யம் ச ப்ரகாசம் ச யத்வ்ருத்தம் தஸ்ய தீமதா) என்று ப்ரம்மாவினுடைய அனுக்ரஹத்தால் ஸ்ரீ ராமனுடைய ஸகல வ்ருத்தாந்தங்களையும் வால்மீகி மஹர்ஷிக்கு அறியக்கூடிய சக்தி இருப்பதினால் இந்த ரஹஸ்யத்தையும் அறிந்தார் என்று ஸமாதானம் செய்துகொள்ள வேண்டும்.

மேலும், வால்மீகி மஹர்ஷியானவர் ராமாயணம் என்ற ப்ரபந்தத்தை எழுத ஆரம்பித்த காலத்திலேயே, काव्यं रामायणं कृत्स्नं सीतायाश्चरितं महत् (காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாச்சரிதம் மஹத்) என்ற ச்லோகத்தில், ஸீதையினுடைய சரித்ரம் என்றே பெயர் வைத்து, இந்த ப்ரபந்தத்தை நிர்மாணம் செய்தார் என்று முன்பு சொல்லப்பட்டது. ஸ்ரீமத் ராமாயணத்தில், ப்ரதானமாக ப்ரதிபாதிக்கப்படும் தேவதை ஸீதாதேவிதான். ஸீதாதேவியினிடத்தில், வால்மீகி மஹர்ஷிக்கு லோக மாதா என்ற பெருமை ஏற்பட்டிருக்கிறது. லோக மாதாவாக இருக்கும் ஸீதாதேவியானவள், வால்மீகி மஹர்ஷிக்கும் தாயாராகத் தானே ஆகவேண்டும். தாயினுடைய ரஹஸ்யங்களை, சிசுவினுடைய ஸ்தானத்திலுள்ள வால்மீகி மஹர்ஷியானவர், தாய் தந்தையர்களின் அனுக்ரஹ விசேஷத்தால் அறிந்து, ப்ரபந்தத்தில் ப்ரகாசப்படுத்தினார் என்பது ந்யாயமே.

ஸீதா தேவியோ, ஜனக வம்சத்தில் பிறந்தவள் என்பதை ப்ரகாசப்படுத்த गृहीत्वा प्रेक्षमाणा सा (க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா) என்ற ச்லோகத்தில், जानकी मुदिता भवत् (ஜாநகீ முதிதா பவத்) என்று சொல்லப்பட்டிருக்கிறது. நிஜ ஸ்வரூபமான

ஆனந்தத்தை அனுபவிக்கும் ப்ரம்ம நிஷ்டர்களாகவே ஜனக மஹா ராஜாவின் வம்சத்தில் பிறந்தவர்களைச் சொல்லவேண்டும். தர்ம அதர்மங்களின் கார்யங்களாகிய ஸுக, துக்கங்களால் க்லேசத்தை அனுபவிக்கிற ராஜக்களே அந்த வம்சத்தில் கிடையாது. ஸகல அரசர்களும் ஸ்வரூபானந்த த்ருப்தர்களாக இருந்து வருபவர்கள் என்பதைத் தீர்மானிக்கவேண்டும்.

இவ்வித மஹிமையுள்ள குலத்தில் அவதரித்த தேவியைத்தான் ஜானகி என்று சொல்லுகிறோம். இந்த பதத்தாலேயே நிஜானந்த பரிபூர்ணையாகவே எப்பொழுதும் இருக்கவேண்டிய நிலைமையுடன் கூடியவள் என்பது வெளியாகிறது. இதை அனுஸரித்துத்தான் வால்மீகி மஹர்ஷியும், ''யாதொரு காரணத்தால் ஜானகி ஜனக வம்சத்தில் அவதரித்தவளோ, அக்காரணத்தால் मुदिता भवत् (முதிதாபவத்) நிஜானந்த பூர்ணையாக ஆனாள்'' என்று சொன்னார்.

இவ்விதம் ஸ்ரீ ராமனுடைய அங்குலீயகத்தை ஆஞ்ஜனேய ஸ்வாமி மூலமாக க்ரஹித்து தர்சனம் செய்த மாத்ரத்திலேயே, நிகில துக்க நிவர்த்தி பூர்வக பரமானந்த அவாப்தி ஏற்படுமே யானால், ராவண வதத்திக்குப் பிறகு, ஸ்ரீ ராமனுடன் சேர்ந்து கொண்டு அயோத்யா ராஜ்யத்தில் ராஜ்யஸ்ரீயை அபிஷேகம் செய்து கொண்டு, ஸீதாதேவி பட்டமஹிஷியாக தர்பாரில் விளங்கிவரும் பொழுது எவ்விதமான ஆனந்த அவாப்தியை ஸீதா தேவி அடைவாளோ, அதை என்னால் அறிய முடியவில்லை என்றே மஹர்ஷியானவர், அந்த வர்ணனையிலிருந்து ஒழிவு அடைந்து விட்டார்.

இவ்விதம் ஸ்ரீமத் ராமாயணத்தில், ஸுந்தா காண்டத்தில் அங்குலீயக ப்ரதானம் என்ற விசேஷமான 'இடத்தில் गृहीत्वा प्रेक्षमाणा सा (க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா) என்ற ச்லோகத் திற்கு வாச்ய மர்யாதையை அனுஸரித்து ஏற்பட்ட தாத்பர்யத்தை அறியவும்.

ஸ்ரீமத் ராமாயணமானது உத்தம காவ்யமானதினால் वाच्यादिशायि व्यङ्ग्यं यत्र तदुत्तमं काव्यं (வாச்யாதிசாயி வ்யங்க்யம் யத்ர ததுத்தமம் காவ்யம்) என்ற ந்யாயத்தை அனுஸரித்து வ்யங்க்யார்த் தத்திற்கு ப்ராதான்யம் கொடுக்கவேண்டிய காரணத்தால், வ்யங்க்ய மர்யாதையை அனுஸரித்து க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா என்ற ச்லோகத்தின் பொருளை அடியிற்கண்டபடி அறியவும்.

भर्तुः (பர்த்து:) என்ற ஆரும் வேற்றுமையானது இரண்டாம் வேற்றுமையின் அர்த்தத்தைப் போதிப்பதில் ஏற்பட்டது. இதைத் தான் வித்வான்கள் கர்மணி ஷஷ்டி என்று சொல்லுவார்கள். பர்த்து: என்ற பதத்தால் भर्तारं (பர்த்தாரம்) என்ற அர்த்தத்தை க்ரஹித்துக் கொள்ளவேண்டும். உபாஸனு ப்ரகரணத்தில் மஹா மந்த்ரங்களை ஜபிக்கும் உபாஸகர்கள் மந்த்ரம், ததவதை, குரு ஜபிக்கும் தான், பலம், போதிக்கும் சாஸ்த்ரம், இந்த ஆறுவித தத் வங்களையும் ஒன்ருக பாவித்துக்கொண்டு மந்த்ர ஜபம் செய்ய வேண்டும் என்று ஸ்ரீ தேவி பாகவதம் முதலிய க்ரந்தங்களில் நிரு பிக்கப்பட்டிருக்கிறது. இதைத்தான் ஷட்வித ஏக்யம் என்பார்கள். ப்ரக்ருதத்தில், இதை அனுஸரித்து ஸர்வ லோகத்தையும் பரிக்கிற வனுயும், விசேஷமாக ஸீதை என்ற ஜீவனுக்குப் பர்த்தாவாயு முள்ள மஹா விஷ்ணுவிற்கும், மஹாவிஷ்ணுவின் திவ்ய ஸ்வ ரூபத்தை போதிக்கும் ओं नमो नारायणाय (ஓம் நமோ நாராய ணுய) என்ற அஷ்டாக்ஷரீ மஹாமந்த்ரததிற்கும் ஐக்யத்தை ஒப்புக் கொள்ள வேண்டியது அவச்யமாகும்.

ஆகையால் பர்த்து: என்ற பதத்திற்கு பர்த்தாவை (ஸர்வ லோகத்தையும் பரிக்கும் மஹாவிஷ்ணுவை) அதாவது மஹா விஷ்ணுவின் ஸ்வரூபபூதமாகிய அஷ்டாக்ஷரீ மஹா மந்த்ர விசேஷததை என்று அர்த்தத்தை க்ரஹித்துக் கொள்ளவேண்டும்.

இந்த மந்த்ர விசேஷத்திற்கு கரவிபூஷணம் என்பது விசேஷணமாகும். க என்ற சப்தத்தால் ப்ரஜாபதி என்ற ப்ரம்மா வும், ரவி என்ற சப்தத்தால் லோகத்தை ப்ரகாசம் செய்து வைக்கும் ஸூர்யனும் ப்ரகாசிக்கின்ருர்கள். இதனுல் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கும் ப்ரம்மாவையும், லோகத்தை ப்ரகாசம் செய்து வைக்கும் ஸூர்யனையும் அவர்களுக்கு அபாரமான சக்தியைக் கொடுத்து அவ்விருவர்களையும் அலங்கரிக்கச் செய்யும் மஹா மந்த்ர விசேஷமே அஷ்டாக்ஷரீ மஹா மந்த்ரமாகும் என்வே கரவிபூஷ்ணம் என்ற பதத்தின் அர்த்தமாகும்.

करवि ब्रह्मादिभ्यौ भूषयतीति करविभूषणः तं करविभूषणं (கரவி ப்ரம்மாதித் யெள பூஷயதீதி கரவிபூஷண: தம் கரவிபூஷணம்) என்று அந்த பதத்தின் ஸமாஸத்தை வித்வான்கள் அறிந்து ஞொள்ள வேண்டும். காயத்ரீ மஹா மந்த்ரத்திற்கு விச்வாமித்ரர் எப்படி மந்த்ர த்ரஷ்டாவான ரிஷியோ, சிவ பஞ்சாக்ஷரீ மஹா மந்த்ரத்திற்கு எவ்விதம் வாமதேவர் மந்த்ர த்ரஷ்டாவான

மஹர்ஷியோ, அதுபோல் ஒவ்வொரு மஹா மந்த்ரத்திற்கும், மந்த்ர த்ரஷ்டாவான் ரிஷி ஏற்படவேண்டியது அவச்யமானதினால், அஷ்டாக்ஷரீ மஹா மந்த்ரத்திற்கு ப்ரம்மா, ஸூர்யன் இருவர் களையும் மந்த்ர த்ரஷ்டாவான ரிஷிகளாகச் சொல்லப்பட்டிருக் கிறது. இதை அனுஸரித்து க, ரவி, பூஷணம் என்ற விசேஷணம் ஏற்பட்டது. பார்த்து: என்ற பதத்திற்கோ இரண்டாவது வேற்றுமையின் அர்த்தத்தை க்ரஹித்துக்கொண்டால் மஹா விஷ்ணு ஸ்வரூபமான அஷ்டாக்ஷரீ என்ற மஹா மந்த்ரம் என்பது ப்ரகாசிக்கின்றது. கரவிபூஷணம் என்ற விசேஷணத்தால், ப்ரம்மா ஸூர்யன் இவர்களுக்கு அலங்காரபூதமான மஹா மந்த்ரம் என்ற ரஹஸ்யம் வெளியாகிறது.

இதனால் ப்ரம்மாவையோ, ஸூர்யனையோ, ரிஷியாகவுடைத் தான மஹாவிஷ்ணு ஸ்வரூபபூதமான அஷ்டாக்ஷரீ மஹாமந்த் ரத்தை ஸத்குரு ஸ்வரூபியான ஆஞ்ஜநேய ஸ்வாமியினிடமிருந்து, ஸீதை என்ற சப்தத்தால் சொல்லப்படும் அனாதி பகவத் பரதந்த்ர னை, சேதனமாயுள்ள ஜீவன் உபதேசம் பெற்றுக்கொண்டு, ப்ரபத் சரணையும் செய்து, மந்த்ர தேவதையான லோக பர்த்தாவான மஹாவிஷ்ணுவை ஸாக்ஷாத்கரித்துக்கொண்டு, இந்த அபரோக்ஷ ஸாக்ஷாத்காரத்தால், அபரோக்ஷமாயுள்ள ராவணன் என்ற அவிவேகி ப்ரமத்தையும் நிவர்த்தி செய்துகொண்டு, அந்த ஜீவன் பவபந்தத்திலிருந்தும் விமுக்தனாகி, ப்ரம்மபாவாபத்தி என்ற மோக்ஷ ஸாம்ராஜ்ய ராஜ்யத்தில், ஏகசக்ராதிபதியாக விளங்கி வரலாம் என்ற வ்யங்க்யார்த்தமானது गृहीत्वा प्रेक्षमाणा सा (க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா) என்ற ச்லோகத்தால் விளங்கி வருகிறது.

ஆஞ்ஜநேயஸ்வாமியை ஆசார்ய புருஷன் என்று ஸ்ரீமத் ராமாயணம் ஸுந்தர காண்டத்தில், 27-வது ஸர்க்கத்தில் पक्षी च शाखानि लय प्रविष्टः (பக்ஷீ ச சாகாநி லயம் ப்ரவிஷ்ட:) என்ற ச்லோகத்தின் வ்யாக்யானத்தில், வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தை அனுஸரித்த கோவிந்தராஜ வ்யாக்யானத்திலேயே கூறப்பட் டிருக்கிறது. இதே வ்யாக்யானத்தில் सुस्वागतां वाचमुदीरयानः (ஸுஸ்வாகதாம் வாச முதீரயாந:) என்ற வாக்யத்திற்கு அர்த்தம் செய்யும்பொழுது सुष्ठु संप्रदायाविच्छेदः यथा तथाचार्यपरंपरया स्वस्मै आगतां वाचं अष्टाक्षरादिमन्त्रराजरूपां निर्हेतुयैव पयया समुदीरयन (ஸுஷ்டு ஸம்ப்ரதாயாவிச்சேத: யதா ததாசார்ய பரம்பரையாஸ்வஸ்மை ஆகதாம் வாசம் அஷ்டாக்ஷராதி மந்த்ர ராஜ ரூபாம் நிர்ஹேதுக்யைவ தயயா ஸமுதீரயந்) என்ற வாக் யங்களால் ஆஞ்ஜநேயஸ்வாமி மூலம் ப்ராட்டிக்குக் கொடுக்கப்

பட்ட முத்ர மோதிரம் முத்ர மோதிரமல்ல — அஷ்டாக்ஷரீ மஹா மந்த்ரம் உபதேசிக்கப்பட்டது என்பதையும் வெளிப்படுத்தி யிருக்கிறார்.

மேற்கண்ட வ்யங்க்யார்த்தம் தான் உண்மையான அர்த்த மாகும்.

முன் சொன்னபடி ஆஞ்ஜனேய ஸ்வாமியினிடமிருந்து ஸ்ரீராகவனுடைய அங்குலீயகம் என்ற முத்ர மோதிரத்தை ஸீதா தேவி க்ரஹித்துக்கொண்ட காரணத்தாலோ, அல்லது ஸர்வ லோகத்திற்கும் பர்த்தாவான, பரம புருஷனான ஸ்ரீ ராமன் அந்த மஹாநுபாவனுடைய ஸம்ப்ராப்திக்கு மூலகாரணமான அஷ்டா க்ஷரீ முதலான மந்த்ர ரஹஸ்யத்தை ஆஞ்ஜனேய ஸ்வாமி என்ற பரம குருவினிடமிருந்தும் உபதேசம் பெற்றுக்கொண்டு மனனம் செய்த காரணத்தாலோ, ஸாக்ஷாத் ஸ்ரீ ராமனை ப்ரத்யக்ஷமாகப் பார்த்து ஆலிங்கனம் செய்துகொண்டது போல் ஸீதா தேவி யானவள் ஆனந்தத்தை அடைந்த பிறகு ஸீதா தேவியினுடைய முகமானது ராகுவினால் விடப்பட்ட சந்த்ரனைப்போல் விளங்கிற்று. பிறகு ஸீதை தன் பர்த்தாவான ராமனுடைய ஸந்தேச வார்த்தை யையும் ஹனுமான் மூலமாகக் கேட்டு ஆனந்தித்ததோடுகூட ஆஞ்ஜனேய ஸ்வாமியையும் மிகவும் ச்லாகித்துப் பேசினாள்.

विक्रान्तस्त्वं समर्थस्त्वं प्राज्ञस्त्वं वानरोत्तम।
येनेदं राक्षसपदं त्वयैकेन प्रधर्षितम् ॥

விக்ராந்தஸ்த்வம் ஸமர்த்தஸ்த்வம் ப்ராக்ஞஸ்த்வம் வாநரோத்தம।
யேநேதம் ராக்ஷஸபதம் த்வயைகேந ப்ரதர்ஷிதம் ॥

ஞானத்திலோ, சக்தியிலோ, பலத்திலோ, தங்களுக்கு ஸமானமான ப்ராணியை லோகத்தில் பார்ப்பது அரிதே. प्राज्ञः (ப்ராக்ஞ:) என்ற பதத்தால் ஞானமும், समर्थः (ஸமர்த்த:) என்ற பதத்தால் சக்தியும், विक्रान्तः (விக்ராந்த:) என்ற பதத்தால் பலமும் ஆஞ்ஜனேய ஸ்வாமியினிடம் கூடியிருந்து வருவதாக, ஸீதை ஸ்துதிக்கிறாள். இம்மூன்று விதமான மஹத்வமும் ஆஞ்ஜ னேயரிடம் இல்லாதபோனால், ஸமுத்ரத்தை அஸஹாயனாக ஹனுமான் தாண்டிவர ந்யாயமில்லை. தேவர்களுக்கும் இது ஸாத்யமில்லாத கார்யமே.

ஸகல சாஸ்த்ரங்களையும் கற்றுணர்ந்த ஞானமும் அபூத மான ஓர் கார்யத்தைச் செய்யும் விஷயத்தில் அந்தரங்க ஸாதன

மாகிறது. ஞானம் மாத்ரம் இருந்தால் போதாது. சக்தியும் (உத்ஸாஹமும்) ஸாதனமாக அபேக்ஷிக்கப்படுகிறது. அத்துடன் சரீர பலம், மனோ பலம், வாக் பலம் இவைகளும் தேவையானது. பலம், சக்தி, ஞானம் இம்மூன்றும் இல்லாவிடில் ஒரு கார்யத்தை யும் செய்ய முடியாது.

அந்யர்களால் செய்ய முடியாததான ஸமுத்ர தரணம் என்ற ப்ரக்ருத கார்யத்தைச் செய்த ஆஞ்ஜநேய ஸ்வாமியினிடம் இம் மூன்றும் அவச்யம் இருந்தே தீரவேண்டும் என்று தீர்மானித்து, அவ்விதமே ஸீதை ஹனுமாரை ஸ்துதிக்கிருள். அபாரமான கடலை ஓர் சிறிய கன்றின் கால் கொளம்பு அடியில் தங்கியிருக்கும் மழை ஜலம் போல் துச்சமாக நினைத்துத் தாண்டின உம்மை ப்ராக்ருத மான வானர ஜாதியில் சேர்ந்தவராக நான் எண்ணவே இல்லை. ராக்ஷஸ பூயிஷ்டமான இந்த லங்கா நகரத்திற்குள் ப்ரவேசித்து, ராவணனை நினைத்துக் கொஞ்சமேனும் பயத்தை அடையாமலும் ராக்ஷஸர்கள் மூலமாக என்ன ஏற்படுமோ என்ற நடுக்க மில்லாமலும், பரம தைர்யத்தை அவலம்பித்திருக்கும் தங்களை எந்த ப்ராணிதான் ப்ராக்ருத வானரம் என்று நினைக்கும்? தாங்கள் யாரோ மஹா புருஷன் என்பதில் ஸந்தேஹமில்லை. ஸ்ரீ ராமனே தங்களை அனுப்பி இருப்பதினுல் தாங்கள் மஹா புருஷனே. ராமன் தங்களைப் பரீக்ஷிக்காமல் அனுப்பி இருக்க மாட்டார். அதிலும், என்னுடைய ஸமீபத்திற்கு ஸாமான்யமான புருஷனை அனுப்ப மாட்டார். ஆகையால் தங்களை ஒரு அப்ராக்ருத மான பரம புருஷன் என்றே நான் எண்ணுகிறேன். என்னுடன் தாங்கள் ஸம்பாஷணம் செய்வதற்கு யோக்யதை உள்ளவரே. தர்மத்தையே கைகொண்டு, அதிலும் விசேஷ தர்மமாகிய ஸத்யம் தவராமல் நடந்து வரும் ராமன், **न जीवेयं क्षणमपि विनातामसितेक्षणां** (ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணும்) என்றபடி என்னை விட்டுப் பிரிந்து ஒரு க்ஷண காலங்கூட ஜீவிக்க மாட்டேன் என்று சொன்னுலும், தற்காலத்தில் பத்து மாத காலம் என்னை விட்டுப் பிரிந்தும் ஜீவனுடன் இருந்து வருவது என்னுடைய பாக்யம்தான் என்று நினைத்து ஸந்தோஷிக்கின்றேன்.

மஹா தேஜஸ்வியான லக்ஷ்மணனும் க்ஷேமமாக இருப் பதைக் கேட்க என் மனம் மிகவும் ஆனந்த ஸாகரத்தில் மூழ்கிக் கொண்டிருக்கிறது. என்னை விட்டுப் பிரிந்த தசையை நினைத்து, ராமன் கோபாக்னியால் ஸமுத்ரத்தால் சூழப்பட்ட இந்த பூமி

யையே எரித்து விடுவாரே. தேவ தேவர்களையும் நிக்ரஹம் செய்வதில் ராமனோ, லக்ஷ்மணனோ இருவர்களும் ஸமர்த்தர்களல்லவா. அவ்விதமிருக்க என் விஷயத்தில் தற்காலத்தில் மௌனமாக இருப்பதின் காரணம் எனக்குத் தெரியவில்லை. என் தௌர்பாக்யம் தான் காரணமாகும். என் விஷயமான வ்யஸனத்தை ராமன் அடையாமலிருக்கிறாரா ? தாபம் இல்லாமலிருக்கிறாரா ? மேல் நடக்க வேண்டிய கார்யத்தில் உத்ஸாஹமுள்ளவராக இருக்கிறாரா ? அவச்யம் செய்து தீரவேண்டிய கார்யத்தில் வ்யாமோஹத்தை அடையாமலிருக்கிறாரா ? ஸுஹ்ருத்துக்களின் விஷயத்தில் ஸாம, தான ரூபமான இரண்டுவித உபாயத்தையும், சத்ருக்களின் விஷயத்தில் தான, பேத, தண்டம் என்ற மூன்றுவித உபாயத்தையும் அந்தந்தக் காலததில் அனுஷ்டித்து வருவதில் வ்யாமோஹத்தை அடையாமல் இருந்து வருகிறாரா ? இந்த ஸந்தர்ப்பத்தில் மித்ரமான புருஷர்களை ஸங்க்ரஹம் செய்து வருகிறாரா ? மித்ர ஜனங்களுக்குத் தான் ஏதாவது ஒரு உபகாரத்தைச் செய்து கொடுத்து அவர்கள் மூலம் தானும் ப்ரதி உபகாரத்தை அபேக்ஷித்து வருகிறாரா ? தெய்வ பலமும், பௌருஷ பலமும் இரண்டும் இருந்தால்தான் எக்காரியமும் நடைபெறும் என்று தீர்மானித்து இரண்டும் தன்னிடத்தில் இருந்து வரவேண்டும் என்ற ஸங்கல்பத்துடன், இவ்விரண்டையும் வ்ருத்தி செய்து வருகிறாரா ? நான் கொஞ்ச நாள் விட்டுப் பிரிந்ததால் என்னிடம் ராமனுக்கு ஸ்நேஹம் குறையாமல் இருக்கிறாரா ? இந்த துக்கத்திலிருந்தும் என்னை விமோசனம் செய்து வைக்க வேண்டும் என்ற உத்ஸாகத்துடன் ராமன் இருந்து வருகிறாரா? பரம ஸௌக்யத்துடனே வளர்ந்து வந்த ராமன் தற்காலத்தில் என் நிமித்தமாக இந்த துக்கத்தை அடைந்து கஷ்டப்படாமல் தைர்யமாக இருக்கிறாரா ? கௌஸல்யா தேவியினுடைய க்ஷேம வ்ருத்தாந்தமும், ஸுமித்ரையினுடைய க்ஷேம வ்ருத்தாந்தமும், பரதனுடைய க்ஷேம வ்ருத்தாந்தமும், அடிக்கடி ராம லக்ஷ்மணனுக்குத தெரியவருகிறதா? என் நிமித்தமாக ராவணனோடு ராமனுக்கு ஏற்படும் யுத்தத்தில் ராமனுக்கு ஸஹாயமாக பரதன் அக்ஷௌஹிணி ஸேனையை அனுப்பி உதவி செய்வாரா ? ஸுக்ரீவனும் வானர ஸேனைகளோடு ராமனுக்கு ஸஹாயம் செய்வாரா? ஸகல அஸ்த்ரவித்யையையும் அறிந்த லக்ஷ்மணஸ்வாமியும் ராக்ஷஸர்களை வதிப்பாரா ? அத்யுக்ரமான அஸ்த்ரங்களால் ஜ்வலிக்கும் ராமன் மூலமாக ஹதனாக பூமியில் விழுந்து

கிடக்கும் ராவணனை அதிசீக்ரத்தில் நான் பாக்கும் பாக்யம் ஏற்படுமா ?

कच्चिन तद्धेमसमानवर्णं
तस्याननं पद्मसमानगन्धि ।
मया विना शुष्यति शोकदीनं
जलक्षये पद्ममिवातपेन ॥

கச்சிந தத்தேம ஸமாநவர்ணம்
தஸ்யாநநம் பத்மஸமாநகந்தி ।
மயா விநா சுஷ்யதி சோகதீநம்
ஜலக்ஷயே பத்மமிவாதபேந ॥

ஸுவர்ணம் போல் ஜ்வலிக்கும் காரணத்தால் ஆசைபடத் தகுந்ததாயும், தாமரைப் புஷ்பம் போல் வாஸனையுடன் கூடியதாயும் உள்ள ராமனுடைய முகார விந்தமானது, ஜல ஸ்தானத்திலுள்ள நான் இல்லாத காரணத்தாலும், வெய்யிலின் ஸ்தானத்திலுள்ள என்னை விட்டுப் பிரிந்த சோகத்தாலும் வாடாமல் இருந்து வருகிருரா? தாம்பரை ஓடையில் ஜலமும் இல்லாமலாகி, தாகமும் அதிகமாக ஏற்பட்டாமல், தாமரைப் புஷ்பம் எப்படி வாடிவிடுமோ அதுபோல் ராமனுடைய முகமாகிய தாமரைப் புஷ்பம் வாடாமலிருக்கிறதா ?

धर्मापदेशात्त्यजतश्च राज्यं
मां चाप्यरण्यं नयदः पदातिम् ।
नासीद्व्यथा यस्य नभीर्नशोकः
कश्चित्स धैर्यं हृदये करोति ॥

தர்மாபதேசாத்யஜதச்ச ராஜ்யம்
மாம் சாப்யரண்யம் நயத: பதாதிம் ।
நாஸீத்வயதா யஸ்வ நபீர்நசோக :
கச்சித்ஸ தைர்யம் ஹ்ருதயே கரோதி ॥

தர்மத்தை உத்தேசித்து (தர்மம் என்ற வ்யாஜலத்தில்) இந்த்ராதி தேவர்கள் ஆசைபடத் தகுந்த அயோத்யா ராஜ்யத்தையே ராமன் த்யாகம் செய்தார். அக்காலத்திலும் ராமனுடைய மனதில் கொஞ்சமேனும் வருத்தம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ராக்ஷஸர்களாலும், க்ரூர ம்ருகங்களாலும் சூழப்பட்ட மிகவும் ககனமான தண்டகாரண்யத்தில் ஸஞ்சாரம் செய்யும் காலத்திலும் ராமனிடம்

பய லேசமும் காணப்படவில்லை. ஜனக ராஜாவின் புத்ரியான என்னைக் கால் நடையாக அரண்யத்தில் அழைத்துக்கொண்டு போகும் ஸமயத்திலும் ராமனுடைய மனதில் கொஞ்ச மேனும துக்கம் இருப்பதாகத் தெரியவில்லை. இவ்விதமான ராமன் இப்பொழுது என்னை விட்டுப் பிரிந்திருக்கும் காலத்திலும் தைர்யத்துடன் தான் இருந்து வருகிறாரா ? அல்லது தைர்யத்தை இழந்து கஷ்டப்படுகிறாரா ?

न चास्यमाता न पिता च नान्य :
स्नेहाद्विशिष्टोऽस्ति मया समो वा ।
तावत्त्वह दूत जिजीविषेयं
याव-प्रवृत्तिं शृणुयां प्रियस्य ।।

ந சாஸ்யமாதா ந பிதா ச நாந்ய :
ஸ்நேஹாத்விசிஷ்டோஸ்தி மாயா ஸமோ வா ।
தாவத்வஹம் தூத ஜிஜீவிஷேயம்
யாவத்ப்ரவ்ருத்திம் ச்ருணுயாம் ப்ரியஸ்ய ||

லோகத்தில் எந்த மனிதனுக்கும் தாய், தகப்பன் மற்ற பந்துக்கள் என்பது உண்டு. அதுபோல் பந்துக்களிடத்தில் தாங்கள் ஸ்நேஹத்தையும் பிரித்து அவர்களிடம் கொஞ்சம் கொஞ்சமாக வைத்துக் கொண்டாடுவது உண்டு. ராமனுக்கோ, லோகாநுபவத்தை ஒட்டி ஸ்நேஹத்தை மற்றவர்களிடம் பிரித்துப் பிரித்து வைத்து அனுபவிப்பதென்ற வழக்கமில்லை. மற்றவர் களிடம் வைக்கும் ஸ்நேஹத்தையும் ஒன்று சேர்த்து என்னிடத்தி லேயே முழு ப்ரியத்தையும் வைத்திருக்கிறார். அதனால் எனக்கு ஸமானமாகவோ, எனக்கு மேலாகவோ, மற்ற பந்துக்கள் ராமனுக்கு ஒருவருமில்லை.

இவ்விதம் ராமனுடைய ப்ரீதிக்கு பாத்ரமான நானே, அவ்வதமே என் ப்ரீதிக்கு பாத்ரமான ராமனுடைய வ்ருத்தாந் தத்தை எவ்வளவு வரை கேட்பேனே அவ்வளவு காலம் வரை யிலும்தான் நான் ஜீவிப்பதற்கே இச்சிப்பேன். இச்சை யானது என்னுடைய ஜீவனத்தை ப்ரதானமாக அவலம்பிப்பதனால் ராமனை விட்டு நான் பிரிந்த காரணத்தால் ஜீவனத்தை த்யாகம் செய்துவிட்டேனேயானால், ஸமுத்ரத்தைத் தாண்டிக்கொண்டு என்னை ராவணனிடமிருந்து மீட்டு வைக்க ராமன் லங்கைக்கு வந்த பிற்பாடு நான் இங்கில்லாமல் ஜீவித த்யாகம் செய்திருந்தால்

உடன் ராமனும் தன் ஜீவிதத்தை விட்டுவிடுவார். அவ்விதம் ராமனுக்குக் கஷ்டம் ஏற்படக்கூடாது என்று நினைத்துத்தான் ராமன் வரும் வரையிலும் நாம் ஜீவிக்கவேண்டும் என்ற எண்ணத் துடன் மரணத்தை அடையாமல் இருந்து வருகிறேன்.

தாப காலத்தில், மார்க்கத்தில் வெகு தூரம் நடந்து வந்த ஒரு மனிதன், தாபத்தால் தபிக்கப்பட்டு தாக சமனம் செய்துகொள்ள தண்ணீர் பந்தலைத் தேடி அதற்குள் சென்றும், அங்கு பாண்டமே உடைபட்டிருப்பதைப் பார்த்தால், அவனுடைய மனது எவ்விதம் கஷ்டம்படுமோ, அதுபோல் என்னுடைய விரஹமாகிய தாபத்தால் தபிக்கப்பட்ட ராமன் ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கைக்கும் வந்து நான் உயிர் இழந்ததை அறிந்தாரேயானுல் ராமனுடைய மனமானது அந்த ஸந்தாபத்தில் எவ்விதமான தாபத்தை அடையுமோ என்பதை ஆலோசித்துத்தான் உயிரை ரக்ஷித்து வருகிறேன். என் சரீரம் என்னுடையதல்ல ; ராமனுடையது. ஆகையால் பரதந்த்ரமானதினுல் என் சரீரமென்று இருந்தாலும் அந்த சரீரத்தை த்யாகம் செய்வதில் எனக்கு ஸ்வாதந்தர்யமே யில்லை என்று ராமனை விட்டுப் பிரிந்தும் ஸீதை இவ்வளவு காலம் தன் உயிரை காப்பாற்றிக்கொண்டு வருகிருளே என்று ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் நினைக்கக்கூடுமோ என்று எண்ணி, அதை நிவர்த்தி செய்வதற்காக, ஆஞ்ஜனேய ஸ்வாமியினிடம் तावत्वहं दूत जिजीविषेयं यावत्प्रवृत्तिं श्रृणुयां प्रियस्य (தாவத்வஹம் தூத ஜிஜீவிஷேயம் யாவத் ப்ரவ்ருத்திம் ச்ருணுயாம் ப்ரியஸ்ய) என்று ஸீதா ப்ராட்டி சொன்னுள். இவ்விதம் ஹநுமானிடம் தேவி சொல்லிவிட்டு ராம வ்ருத்தாந்தத்தையே ஹநுமான் மூல மாக மறுபடியும் கேட்கவேண்டும் என்ற ஆவலுடன் இருந்து வந்தாள். உடன் ஆஞ்ஜனேயரும் ஸீதைக்கு நமஸ்காரம் செய்து விட்டு அஞ்ஜலிபந்தம் செய்துகொண்டு ராம வ்ருத்தாந்தத்தையே ஸீதையினுடைய எதிரில் வர்ணித்தார்.

''ஹே பரதேவதே! ராமன் இவ்வளவு காலமாக நீ இந்த இடத்தில் இருந்து வருகிருய் என்பதை அறியவில்லை. அக் காரணத்தால்தான் உன்னை திரும்பி அழைத்துக்கொள்ளவில்லை. என் மூலமாக உன் வ்ருத்தாந்தத்தை அறிந்தவுடன் அநேக வானர ஸேனைகளுடன், ஸமுத்ரத்தை ஸ்தப்பமாகச் செய்து, லங்கா நகரம் வந்து ராக்ஷஸப் பூண்டை அழித்து உன்னையும் ஆச்வாஸம் செய் வார். அப்படி வரும் வழியில் தேவர்களோ, அஸுரர்களோ,

விக்நம் செய்தால் அவர்களையும் ராமன் வதித்து விடுவார். உன்னைப் பார்க்காத காரணத்தால் ராமன் அனுபவிக்கும் துக்கத்தை என்னுல் வர்ணிக்க முடியவில்லை. ராமனை விட்டுப் பிரிந்த நீ படும் துக்கத்தைக் காட்டிலும், உன்னை விட்டுப் பிரிந்த ராமன் படும் கஷ்டமோ வர்ணிக்க முடியாத நிலையில் இருந்து வருகிறது. மலைய பர்வதம், விந்த்ய பர்வதம், மஹா மேரு மந்த்ர பர்வதங் இவைகளின்மேல் ஆணையிட்டு ஸத்யமாகச் சொல்லுகிறேன்–ராமன் மிகவும் கஷ்டப்படுகிருர். அதிசீக்ரம் ராமனுடைய முகத்தை நீ பார்க்கலாம். வந்த்யமான ஆஹாரங்களையும் உட்கொள்வதில்லை. தன் சரீரத்தின்பேரில், கொசு, ஈ, புழு, ஸர்ப்பங்களோ, இவைகள் ஸஞ்சாரம் செய்தாலும் அவைகளைக் கூட கையால் தட்டாமல் உன்னையே நினைத்து ஸ்தப்தமாக இருந்துவருகிருர். ராமனுக்கு எப்பொழுதும் உன் த்யானம்தான். இரவில் தூக்கமேயில்லை. சற்று நேரம் நித்ரை செய்தாலும் ''ஹே ஸீதே'' என்று புலம்பிக்கொண்டு விழித்துக்கொண்டு விடுகிருர். •பலத்திலோ, புஷ்பத்திலோ ஒன்றிலும் ஆசை இல்லாதவராகவே இருந்துவருகிருர்.''

स देवि नित्यं परितप्यमान :
त्वामेव सीतेत्यभिभाषमाण : ।
धृतव्रतो राजसुतो महात्मा
तवै लाभाय कृतप्रयत्नः ॥

ஸ தேவி நித்யம் பரிதப்யமாந :
த்வாமேவ ஸீதேத்யபிபாஷமாண: ।
த்ருத்வ்ரதோ ராஜஸுதோ மஹாத்மா
தவைவ லாபாய க்ருதப்ரயத்ந ॥

''ஹே தேவி, உன்னை நினைத்து நினைத்து தினந்தோறும் ராமன் தபித்து வருகிருர். ''ஸீதே, ஸீதே'' என்றும் புலம்புகிருர். உன்னை அடைய வேண்டிய விஷயத்தில் யத்னமும் செய்து வருகிருர். அவர் உன் விஷயத்தில் உதாஸீனமாக இருக்கிருரோ என்ற எண்ணமே உனக்கு வேண்டாம். மிகவும் சீக்ரத்தில் ராமனுடன் சேர்ந்து ஸுகமாக நீ வாழலாம்'' என்று ஆஞ்ஜனேய ஸ்வாமி ராமனுடைய வ்ருத்தாந்தத்தை வர்ணிக்க, ஸீதாதேவியும் அதைக் கேட்டு ராமனைப் போலவே தானும் ஸமானமான சோகத்தை அடைந்தவளாகக்கொண்டு ஸீதை விளங்கிவந்தாள்.

ஆஞ்ஜனேயரைப் பார்த்து, ஸீதாதேவியானவள் "ஹநுமந்

अमृतं विषसंसृष्टं त्वया वानर भाषितम् ।
यच्च नान्यमना रामो यच्च शोकपरायण: ॥

அம்ருதம் விஷஸம்ஸ்ப்ருஷ்டம் த்வயா வானர பாஷிதம் ।
யச்ச நாந்யமநா ராமோ யச்ச சோகபராயண: ॥

தங்கள் வார்த்தைகள் அம்ருதம்போல் எனக்கு த்ருப்தியை அளிக்கின்றன. அதிலும், ராமனுக்கு என் நினைவைத் தவிர வேறு நினைவே இல்லை என்று தாங்கள் சொல்வதைக் கேட்க அம்ருதபானம் செய்தாற்போலவே நான் ஸந்தோஷத்தை அடைகிறேன். ஆகிலும் அந்த அம்ருதமானது விஷங் கலக்கப்பட்டிருந்தால் எப்படி இருக்குமோ அப்படி இருந்து வருகிறது. என்னை விட்டுப் பிரிந்தால் ராமன் படுகிற துக்கத்தை வர்ணித்து முடியாது என்று தாங்கள் சொன்னது எனக்கு விஷத்திற்கு ஸமானமாகத் தோன்றுகிறது. என் நினைவாகவே ராமன் இருக்கிறா என்பது அம்ருதமாகிறது. துக்கத்தை அனுபவிக்கிறார் என்பது விஷமாகிறது. அதனால் விஷங் கலந்த அம்ருதத்தை சாப்பிடுவதுபோல் தங்கள் வார்த்தைகள் என் மனதிற்குப் புலப்படுகிறது.

விஸ்தாரமான ஐச்வர்யத்திலும், பரிஹாரம் செய்ய முடியாத துக்கத்திலும் மனிதனை ஸ்தாபிப்பதில் தெய்வமே முக்ய காரணமாகும். தெய்வத்திற்கு யாரும் உட்பட்டே ஆகவேண்டும். லக்ஷ்மணனையோ, என்னையோ, ராமனையோ கவனித்தாலே போதும். நாங்களே தத்காலத்தில் வ்யஸனத்தில் மூழ்கிக்கொண்டு இருக்கிறோமல்லவா. ஆகையால் தெய்வத்தை யாராலும் வெல்ல முடியாது. இந்த துக்கத்தை எப்பொழுதுதான் ராமன் அனுபவிக்காமல் இருப்பாரோ? அக்காலமும் வருமா? ராக்ஷஸர்களைக் கொன்று ராவணனையும் நசிக்கச் செய்து, லங்கா நகரத்தையும் நிர்மூலமாகச் செய்து ராமன் என்னைப் பார்க்கும்படியான காலம் எப்பொழுது ஏற்படுமோ? ஹனுமந்! ராமனிடம் இனி கொஞ்சமேனும் விளம்பம் செய்யக் கூடாதென்று இக்கார்யத்தில் ச்ரத்தை எடுத்துக்கொள்ளச் சொல்லும். மூர்க்கனான ராவணன் எனக்கு 12 மாத காலம்தான் அவதி விதித்திருக்கிறான். அதில் 10 மாதம் ஆகிவிட்டது. பாக்கி இரண்டு மாதமே இருந்து வருகிறது. இதற்குள் ராவணனைக்கொன்று ராமன் என்னை

அடையவேண்டும். விபீஷண ஸ்வாமியோ என்னைத் திருப்பி ராமனிடம் அர்ப்பணம் செய்யும்படி எவ்வளவோ கேட்டுக்கொண்டார். இது ராவணனுக்கு ருசிக்கவில்லை. யுத்தத்தில் ராவணனை வசப்படுத்திக்கொள்ள ம்ருத்யுவும் ஸந்நிஹிதனாகவே இருந்து வருகின்றான். விபீஷண ஸ்வாமியினுடைய ஜ்யேஷ்ட புத்ரியான அனலை என்ற ராக்ஷஸ ஸ்த்ரீயும், தன் தாயான த்ரிஜடை கண்ட ஸ்வப்ன வ்ருத்தாந்தத்தை என்னிடம் சொல்லி என்னை ஸமாதானப்படுத்தினாள். ''ஸீதே, நீ கொஞ்சமேனும் ஸம்சயத்தை அடையவேண்டாம். அதிசிக்ரத்தில் ராமன் உன்னை அடைவார்'' என்று சொல்லி என்னை ஸமாதானப்படுத்தினாள். என்னுடைய அந்தராத்மாவும் அவ்விதமே நம்பிக்கை உள்ளதாக இருந்து வருகிறது. இதற்கு அனுகூலமாக,

उत्साहः पौरुषं सत्वमानृशंस्यं कृतज्ञता ।
विक्रमश्च प्रभावश्च सन्ति वानर राघवे ॥

உத்ஸாஹ: பௌருஷம் ஸத்வமாந்ருசம்ஸ்யம் க்ருதக்ஞதா ।
விக்ரமஸ்ச ப்ரபாவஸ்ச ஸந்தி வானர ராகவே ॥

லோகாந்தரமான கார்யங்களில் மேலான யத்ன விசேஷம் என்ற உத்ஸாஹமும், அவ்விதமே அந்தக் கார்யத்தைச் செய்து காட்டுகிறது என்ற பௌருஷமும், மனோ பலம் என்ற ஸத்வமும், க்ரௌர்யம் இல்லாமலிருத்தல் என்ற ஆந்ரு சம்ஸ்யமும், ஒருவன் செய்த உபகாரத்தை மறக்காமலிருத்தல் என்ற க்ருதக்ஞதையும், சௌர்யம் என்ற விக்ரமமும், சக்தி என்ற ப்ரபாவமும் ராமனிடம் இருந்து வருகிறது. இவ்விதம் அனலையினுடைய ஸமாதான வார்த்தைகள் என் அந்தராத்மாவின் சுத்தி, ராகவனிடமுள்ள மேலான குணங்கள் இவைகளைக் கவனிக்கும்பொழுது எனக்கு நல்ல காலம் வரும் என்றே நான் நம்புகிறேன். ஜன ஸ்தானத்தில் 14000 ராக்ஷஸர்களை தன் ப்ராதாவான லக்ஷ்மணனின் உதவி கூட இல்லாமல் எந்த என் பராதாவான ராமன் ஒரு முஹூர்த்தத்தில் வதம் செய்தாரோ, அப்பேர்ப்பட்ட என் நாதனுக்கு எதிரில் யார் தான் நிற்கமுடியும்? யார் தான் பயப்படமாட்டார்கள்? அந்தப் புருஷ ச்ரேஷ்டனை ஜயிக்க யாராலும் முடியாது. ராமனுடைய ப்ரபாவம் எனக்குத்தான் தெரியும். இந்த்ரனுடைய ப்ரபாவம் இந்த்ராணிக்குத்தானே தெரியும். பாணங்களுடைய ஸமூஹத்தை கிரணங்களாக உடைத்தான, மிகவும் சூரனான

ராமன் என்ற ஸூர்யன் சத்ருக்களாகிய ராக்ஷஸர்கள் என்ற ஜலத்தை சோஷிக்கச் செய்ய எவ்வளவு காலம் ஆகும்? அதி சீக்ரத்தில் சோஷிக்கச் செய்துவிடுவார் என்று ப்ரலாபித்துக் கொண்டு, ராமனை நினைத்து நினைத்து துக்க ஸாகரத்தில் மூழ்கிக் கொண்டு, கண்ணீர் ஜலத்தையும் நதி ப்ரவாஹம்போல் பெருக விட்டுக்கொண்டு தவிக்கும் ஸீதையைப் பார்த்து ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் ஸமாதான வார்த்தைகளைச் சொல்லுகிறார்.

"ஹே தேவி, என்னுடைய வார்த்தைகளைக் கேட்ட உத்தர க்ஷணத்தில் ராமன் வானர ஸேனைகளுடன் கூட அதிசீக்ரத்தில் லங்கா நகரம் வந்து சேருவார். உனக்கு பரம ஸௌபாக்யம் ஏற்படும். கொஞ்சமேனும் நீ வருத்தப்படவேண்டாம். நான் போய் சொல்லி ராமன் இங்கு வருகின்ற வரையிலும் உன்னால் இந்த துக்கத்தை ஸஹிக்க முடியாமல் இருந்தால், என் முதுகில் நீ ஏறிக்கொள். இம்பொழுதே ராமனிடம் உன்னைக்கொண்டுபோய் சேர்த்து விடுகிறேன். முதுகில் உன்னைத் தரித்துக்கொண்டு ஸமுத்ரத்தைத் தாண்டிப்போகும்படியான சக்தியும் எனக்கு உண்டு. ராவணன் உள்பட லங்கா நகரத்தைக் கூட வேருடன் பிடுங்கி கையில் தரித்துக்கொண்டு ராமனுடைய ஸமீபம் செல்ல எனக்கு சக்தி உண்டு. கிஷ்கிந்தா நகரத்தின் ஸமீபம் உள்ள ப்ரஸ்ரவணம் என்ற மலையில் வஸிக்கும் ராமனுடைய ஸமீபத்தில் உன்னை இப்பொழுதே கொண்டுபோய்ச் சேர்த்து விடுகிறேன். ஸத் புருஷர்களால் இந்த்ரனை உத்தேசித்து ஹோமம் செய்யப்பட்ட புரோடாசாதிகளை அக்னி பகவான் இந்த்ரனிடம் எவ்வளவு சீக்கிரத்தில் சேர்ப்பிப்பாரோ, அவ்வளவு சீக்கிரம் நான் உன்னை ராமனிடம் அர்ப்பணம் செய்து விடுகிறேன், லக்ஷ்மணனுடன்கூட ராமனை இந்த நிமிஷமே நீ பார்க்கலாம். அஸுரர்களைக் கொல்லுவதில் மஹாவிஷ்ணுவானவர் நிச்சயம் செய்வதுபோல், ராவணனைக் கொல்வதில் ராமன் நிச்சயம் செய்திருப்பதையும் நேரில் பார்த்து நீ அனுபவிக்கலாம். உன்னை எப்பொழுது பார்ப்போம் என்று ராமன் தபித்து வருகிறார். ரோகிணியானவள் சந்த்ரனுடன் சேருவதுபோல் உன்னை நான் ராமனுடன் சேர்த்து வைக்கிறேன். ஆகையால் கொஞ்சமேனும் கலக்கத்தை அடையாமல் என் முதுகில் ஏறிக்கொள். அபாரமான ஜ்யோதிஸ்ஸுடன் கூடின சந்த்ரனோடும், ஸூர்யனோடும் பேசிக்கொள்ளும்படியான எவ்வளவு உயரம் ஆகாசத்தில் செல்ல

வேண்டுமோ, அவ்வளவு தூரம் நான் சென்று ராக்ஷஸர்களுடைய கண்ணில் தென்படாமல் ராமனிடம் உன்னைக் கொண்டுபோய்ச் சேர்த்து விடுகிறேன். என்னுடைய வேகத்தை இங்குள்ள ராக்ஷஸர்கள் அனுஸரிக்க முடியவே முடியாது. நான் ஸமுத்ரத்தைத் தாண்டி எவ்வளவு வேகமாக இங்கு வந்தேனோ, அவ்வளவு வேகமாகவே இங்கிருந்து ராமன் சமீபம் செல்வேன். கொஞ்சமேனும் நீ பயத்தை அடையவேண்டாம்'' என்று ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் தேவியை ஸமாதானப் படுத்தினார்.

ஸீதா தேவியோ, ஆஞ்ஜனேய ஸ்வாமியின் வார்த்தையைக் கேட்டதும் ஸந்தோஷத்தை அடைந்து பரம ஆச்சர்யத்தையும் அடைந்து ஹநுமானைப் பார்த்து, ''ஹநுமந்; என்னைத் தூக்கிக் கொண்டு வெகு தூரம் எப்படி நீர் போவீர்? இதனாலேயே உம்முடைய ஜாதி ஸ்பாவத்தை வெளிப்படுத்துகிறீர். ராமனுடைய ஸமீபத்திற்கு அத்யல்ப சரீரத்துடன் கூடிய நீர் என்னைத் தூக்கி கொண்டு போக முடியுமா?'' என்று ஸீதா தேவி சொன்னாள்.

இதைக் கேட்ட ஆஞ்சநேய ஸ்வாமியானவர் சற்று நேரம் மனக்கலக்கத்தை அடைந்து மௌனமாக இருந்தார். நம்மைஅல்ப மனிதன் என்று சொல்லும் வார்த்தையைக் கேட்டு புதிதான அவமானமானது இந்த ஜன்மாவில் இப்பொழுது நமக்கு ஏற்பட்டது. நம்முடைய பலமும், ப்ரபாவமும் ஸீதைக்குத் தெரியவில்லை. நம்மைக் கேவலம் ஓர் வானரமாகவே ஸீதை நினைத்திருக்கிறாள். ஆகையால் நம்முடைய ப்ரபாவத்தை ஸீதையும் அறியும்படி செய்யவேண்டும் என்று நினைத்து தன் விச்வ ரூபத்தை ஸீதா தேவிக்கு தர்சனம் கொடுக்க ஆரம்பித்தார். சிம்சுபா விருக்ஷத்தினுடைய அடியில் உள்ள ஒரு சிறு கிளையில் ஸூக்ஷ்மமான ரூபத்துடன் இவ்வளவுகாலம் இருந்துகொண்டு ஸீதையுடன் பேசிவந்தார். முன்பு சிம்சுபா வ்ருக்ஷத்தினுடைய உயர்ந்த கிளையினின்றும் கீழ்க் கிளைக்கு இறங்கி வந்தார் என்று சொல்லப்பட்டது. இப்பொழுதோ அடிப் பாகத்திலுள்ள சிறிய கிளையிலிருந்தும் பூமியில் இறங்கி வ்ருத்தி அடைய ஆரம்பித்தார். மஹா மேரு பர்வதமும், மந்தர பர்வதமும் எவ்வளவு பெரியதாக காந்தியுடன் பாஸிக்குமோ, அவ்வளவு பெரிதான உருவத்துடன் ஸீதா ப்ராட்டிக்கு எதிரில் ஹநுமான் ஜ்வலித்து வந்தார். அக்னிதான் ஜ்வலிக்கிறதோ என்று தோன்றும்படி ஆஞ்ஜனேய ஸ்வாமி பாஸித்து வந்தார். ஓர் பெரிய மலைபோல் சரீரமும்,

சிவந்த மூக்கும் வஜ்ராயுதம் போல் தத்திப் பல்லும், நகமும், ஆஞ்ஜனேய ஸ்வாமியின் சரீரத்தில் பார்ப்பவர்களுக்கு பயங்கர மாக விளங்கிற்று.

விச்வரூபத்தை தரித்துக்கொண்டிருக்கும் காலத்தில் ஸ்வர்க்க லோகமே ஆஞ்ஜனேயரின் சிரஸ்ஸாகவும், ஸூர்யன் சந்த்ரன் இருவர்களும் நேத்ரங்களாகவும், வாயு பகவானே ப்ராணனுகவும், எங்கும் நிறைந்த ஆகாசம் இடுப்பாகவும், ஸமுத்ரங்கள் எல்லாம் மூத்ர ஜலமாகவும், பூலோகமே பாதங்களாகவும் மிகவும் பெரிதான உருவமாகக் காணப்பட்டது. ஸீதை இதைப் பார்த்து பயந்தாள். ஆஞ்ஜனேயர் இந்த உருவத்துடன் ஸீதையைப் பார்த்துச் சொல்லுவதாவது :—

''ஹே தேவி! காடுகள், மலைகள், பெரிய பெரிய வீடுகள் கோபுரங்கள் இவைகளுடன் சேர்த்து ராவணன் உள்பட லங்கா நகரத்தையே வேருடன் பிடுங்கி ராமனுடைய ஸமீபத்தில் கொண்டுபோய்ச் சேர்க்க சக்தி உண்டு. என்னை ஓர் ஸாமாந்ய வானரமாக நினைக்காதே. ஏதோ சாகாம்ருகம் என்றும் உபேக்ஷிக் காதே. ராமனை விட்டுப் பிரிந்த உனக்கும் துக்கமில்லாமலும், உன்னை விட்டு பிரிந்த ராமனுக்கும் துக்கமில்லாமலும் இருவர் களையும் ஒன்ருகச் சேர்த்து வைக்கும் விஷயத்தில் நான் சக்தி உள்ளவன் என்பதைத் தீர்மானம் செய்து கொள்'' என்று வணக்கமாகச் சொன்னுர்.

இதைக் கேட்ட சீதை ஹநுமாரைப் பார்த்து, ''ஹே ஹநுமந்! உம்முடைய பலமும், மனேதைர்யமும் எனக்குத் தெரியும்—நான் அறிந்தவள்தான். நீர் வாயு வேகமாகச் செல் வீர்; அக்னியைப் போல் உம்முடைய தேஜஸ் எதிரிகளைக் கிட்ட அண்ட முடியாமல் செய்யும் என்பதும் எனக்குத் தெரியும். நீர் ஸாதாரண ப்ராணியாக இருந்திரேயானுல், கடலைத் தாண்டி லங்கா நகரம் வரமுடியுமா? திருப்பிச் செல்லவும் உமக்குச் சக்தி உண்டு. என்னையும் முதுகில் தரித்துக்கொண்டு போய் ராமனிடம் அர்ப்பணம் செய்துவிடுவீர். ஆகிலும், ராமனுடைய எண்ணத்தை யும் கொஞ்சம் ஆலோசிக்கவேண்டும். தங்களுடன் கூட நான் வருவதென்பது உசிதமல்ல. வாயு வேகமாகச் செல்லும் தங்கள் வேகத்தை என்னுல் ஸஹிக்கவும் முடியாது. வாயு வேகமாக என்னைத் தூக்கிக்கொண்டு தாங்கள் போகும்பொழுது மேன் மேலும் ஆகாசத்தில் உயர்ந்த பாகத்தில் செல்லும் காலத்தில்

தங்களுடைய முதுகிலிருந்தும் நான் பயத்தால் கீழே விழுந்து விடுவேன். திமிங்கிலம், முதலேகள் முதலியவைகளால் சூழப் பட்ட ஸமுத்ரத்தில் நான் விழுந்துவிட்டால், பரவசமாகி ஜல ஜந்துக்களுக்கு ஆஹாரமாகிவிடுவேன். அதனுல் தங்களுடன் கூடவர எனக்குப் பயம் ஏற்படுகிறது.

தவிர, என்னே நீர் தூக்கிக்கொண்டுபோனுல், ராவணனுல் ஏவப்பட்டு, ராக்ஷஸர்களும் எப்படியாவது உம்மை அனுஸரித்தே வருவார்கள். அநேகவித ஆயுதபாணிகளாக ராக்ஷஸர்கள் உம்மை விரட்டிக்கொண்டு வரும்பொழுது, நீர் உம்முடைய உயிரைக் காப்பாற்றிக்கொள்வீரா? என்னே ரக்ஷிப்பீரா? உம் மிடமோ ஒரு ஆயுதமுமில்லே. ராக்ஷஸர்கள் உம்மை ஜயித்து விட்டால், உடன் என்னே அபஹரித்துக்கொண்போய் ராவண னுடைய ஸமீபத்தில் விட்டு என்னேக் கொன்றுவிடுவார்கள். எனக்கும் பெரிய ஆபத்து ஏற்படும்; ஸமுத்ரத்தைத் தாண்டிவந்த உம்முடைய யத்னமும் வீணுகிவிடும். ஸகலமான ராக்ஷஸர்களே; கொல்லும்படியான சக்தி உமக்கிருந்தாலும், என்னே ராமனிடம் சேர்ப்பதில் ஸமார்த்யம் இருந்தாலும், ராமனுக்கு யசஸ் இல்லாம லாகிவிடும். ராமனுடைய தர்ம பத்னியான ஸீதையை ராவணன் அபஹரித்துக் கொண்டுபோய் லங்கா நகரத்தில் வைத்திருந்தான். ஸீதையை ஹ மான் தூக்கி வந்து ராமனிடம் சேர்பித்தார். ஹநுமான் இல்லாவிடில், ராவணனுல் அபஹரிக்கப்பட்ட ஸீதை யை அடைய ராமனுக்கு சக்தி ஏது என்ற லோகாபாவாதத்தை உம்மால் தடுக்க முடியுமா? இந்த அபவாதம் ராமனுடைய யசஸ்ஸை அல்லவா குறைவுபடுத்தும். ஆகையால் ராமனே லங்கா நகரம் வந்து ராவணனேக் கொன்று என்னே அடைவது தான் ராமனுக்கு அழகாகுமல்லவா !

தவிரவும், தங்களுடைய முதுகில் ஏறிக்கொண்டு ராமனுடைய ஸமீபம் செல்ல லேண்டும் என்ற ஸங்கல்பத்தை நான் செய்வதும் என்னுடைய பாதிவ்ரத்ய தர்மத்திற்கு அது அழகாகுமா? நானே नत्वेव राघवादन्य पदापि पुरुषं स्पृशे । (நத்வேவ ராகவாதந்யம் பதாபி புருஷம் ஸ்ப்ருசே) என்று ராமனேத் தவிர மற்ற புருஷனே மாலால் கூட தாட்டுப் பார்க்க மாட்டேன் என்று நான் செய் திருக்கும் ப்ரதிக்ஞையை தாங்கள் அறியவில்லேயா? இந்த ப்ரதிக் ஞைக்கு விரோதமாக தங்களுடைய ப்ருஷ்டபாகத்தில் எப்படி

நான் ஏறிக்கொண்டு வரமுடியும்? ஆகையால் ராமனே லங்கா நகரம் வந்து ராவணனைக் கொன்று என்னை இந்த துக்கத்திலிருந்து மீட்டு வைப்பதுதான் ராமனுக்கு யச்ஸ்ஸைக் கொடுக்கும். ஆனால் ராவணன் 'உன்னை எப்படி அபஹரித்து வந்தான். அப்பொழுது அவனுடைய சரீரத்தில் உன் சரீரம் ஸம்பந்தப்படாமலா இருந்தது? அது நீ செய்த ப்ரதிக்ஞைக்கு பங்கத்தை உண்டு பண்ணுதா? ஏதோ உன் துக்கத்தைப் பார்த்து அதை நிவர்த்தி செய்ய எப்படியாவது சீக்கிரத்தில் ராமனுடைய ஸமீபத்தில் உன்னைச் சேர்த்துவிட வேண்டும் என்று எண்ணி என் ப்ருஷ்டத்தில் (முதுகில்) ஏறிக்கொள் என்று நான் சொன்னதற்கு இவ்வளவு தூரம் நீ பதில் சொல்லுகிறாயே? ராவணனுடைய அங்கத்தில் ஸ்பர்சம் ஏற்பட்டது மாத்ரம் தேவலையா?'' என்று நீர் கேட்கக்கூடும். அதற்கு நான் பதில் சொல்வதைக் கவனிக்கவும் :—

**यदहं गात्रसंस्पर्शं रावणस्य बलाद्गता ।**
**अनीशा किं करिष्यामि विनाथा विवशा सती ॥**

யதஹம் காத்ரஸம்ஸ்பர்சம் ராவணஸ்ய பலாத்கதா ।
அநீசா கிம் கரிஷ்யாமி விநாதா விவசா ஸதீ ॥

மாரீசன் ''ஹா ஸீதே! லக்ஷ்மணா!'' என்று சொல்லிக் கொண்டு மறித்தான். அவனுடைய ஸ்வரமானது ராமனுடைய ஸ்வரம்போல் இருந்ததினால் ராமனாகிய என்னுடைய பர்த்தாவிற்குத்தான் ஏதாவது ஆபத்து ஏற்பட்டுவிட்டதோ என்று நான் பயந்து பர்த்தாவினுடைய ஸ்தானத்தைத் தேட லக்ஷ்மணனையும் அனுப்பிவிட்டேன். இக்காரணத்தைக் கொண்டுதான் இந்த அநர்த்தம் எனக்கு வந்து சேர்ந்தது.

லோகத்திலேயே ஒவ்வொரு கார்யமும் காம க்ருதமாயும், விதி க்ருதமாயும் ஏற்படக்கூடும். இதற்கு உதாஹரணமாக **न हिंस्यात् सर्वभूतानि** (ந ஹிம்ஸ்யாத் ஸர்வ பூதாநி) என்ற சாஸ்த்ரமானது ப்ராணி ஹிம்ஸையைத் தடுக்கிறது. **अग्नीषमीय पशुमालमेत** (அக்னீஷோமீயம் பசுமாலபேத) என்ற மற்றொரு சாஸ்த்ரமோ அக்னியை உத்தேசித்தும் ஈச்வரனை உத்தேசித்தும் பசு ஹிம்ஸையை அநுக்ஞை செய்கிறது.

இவ்விதம் ஒரு சாஸ்த்ரம் ஹிம்ஸையைக் கூடாதென்றும், மற்றொரு சாஸ்த்ரம் ஹிம்ஸையை அநுக்ஞை செய்வதும் பரஸ்பரம் விரோதமுள்ளதல்லவா? இந்த இடத்தில் காமக்ருதம் என்றும், விதிக்ருதம் என்றும் பிரித்துக்கொண்டு விரோத பரிஹாரம் செய்யவேண்டும். காமக்ருதம் என்றால் தன் ராகத்தால் ஒரு ப்ராணியையும் ஹிம்ஸிக்கக் கூடாதென்பதுதான். சாஸ்த்ரமானது ஹிம்ஸையை அநுக்ஞை செய்ததால் அதை மீறி நடக்க மனிதனுக்கு சக்தி இல்லாததால் வைதமான ஹிம்ஸையை அனுஷ்டித்தே தீரவேண்டும். அதனால் யாதொரு தோஷ சங்கையுமில்லை. அதுபோல் ப்ரக்ருதத்திலும் ராமனை விட்டுப் பிரிந்திருக்கும் நான், ராமனை விட்டுப் பிரிந்த காரணத்தாலும், ராமனுக்கே ஏதாவது அனர்த்தம் வந்து விட்டதோ என்று பயந்து லக்ஷ்மணனையும் ஆச்ரமத்தை விட்டுப் போகச் சொன்ன காரணத்திலிருந்தும் **विवशा** (விவசா) ஓர் பெரிய ப்ரமை பிடித்தவளாகி, இன்னது செய்வது என்பது தோன்றாமல் ப்ராந்தையாக இருந்த ஸந்தர்ப்பத்தில் ஸ்வாதந்தரியம் இல்லாமல் போனதினால் ராவணனுடைய அங்க ஸம்ஸ்பர்சம் ஏற்பட்டாலும் அது என்னுடைய காம க்ருதமாக இல்லாததால் என் ப்ரதிக்ஞைக்கு விரோதத்தை உண்டு பண்ணாது. எனக்கு தோஷத்தையும் கொடுக்காது. ஸாமான்ய, விசேஷ சாஸ்த்ரத்தை அறிந்த தங்களுக்கு நான் அதிகம் சொல்லவேண்டியதே இல்லை.

ராமனுடைய ஸமீபம் செல்ல உம்முடைய ப்ருஷ்ட பாகத்தில் நான் ஏறிக்கொண்டால் அந்ய புருஷர்களுடைய ஸ்பர்சம் காம க்ருதமாகிவிடுமல்லவா? ராவணனுங்க ஸ்பர்சம் காம க்ருதமாகுமா? சேஷ்டையற்று ப்ராந்தையாக இருந்துவந்த காலத்தில் என்னை ராவணன் பலாத்காரமாக அபஹரித்துச் சென்றது என்னுடைய காமத்தால் என்று சொல்ல முடியுமா? அந்த ஸந்தர்ப்பத்தில் நான் என்னதான் செய்ய முடியும்? காம க்ருதமான அந்ய புருஷ அங்க ஸ்பர்சம்தான் தோஷமாகுமன்னியில், நிச்சேஷ்டையாக இருக்கும் ஒரு ஸ்த்ரீயை பலாத்காரமாக அந்ய புருஷன் தன் கையால் தொடுவது தோஷாவஹமாகாது.

ஜ்வராதி ரோகத்தாலோ, அல்லது வேறு எக்காரணத்தாலோ, ஒரு ஸ்த்ரீ நிஸ்ஸம்க்ஞையாக இருக்கும் காலத்தில் அவளது ரோகத்தைத் தெரிந்துகொள்ள சிகித்ஸா சாஸ்த்ரத்தை அறிந்த ஒரு அந்ய புருஷன் அவளைத் தொட்டு நாடி பார்த்ததற்காக,

அவளுடைய பாதிவ்ரத்யத்திற்கு பங்கம் ஏற்படுமா? அவளே தன் நினைவு தனக்கு வந்த பிறகு அந்ய புருஷன் தன்னைத் தொட ஸம்மதிப்பாளா? ஆகையால் காம க்ருதம், விதி க்ருதம் என்ற விபாகத்தை அறிந்து பார்த்தால் என்னிடம் தோஷ சங்கைக்கே இடமில்லை.

மேலும், ஒரு சரீரத்தில் உள்ள ஜீவாத்மா ஸ்வயமாக ஒரு வித குண தோஷத்துடனும் கூடினவனல்ல. லிங்க சரீரம் என்று சொல்லப்படும் மனதை உபாதியாக உடைத்தானவனே ஜீவாத்மா வாக ஆகுவான். இந்த லோகத்தில் செய்த புண்ய பாப கர்மாக் களின் பலத்தை அனுபவிப்பதற்கு லோகாந்தரம் செல்வதும் லிங்க சரீரம் என்ற மனதுதான். குடத்தை எடுத்துச் செல்லும் காலத்தில் குடத்தால் பரிச்சின்னமான ஆகாசமும் போவது போல் லிங்க சரீரம் என்ற மனது செல்லும் இடத்திற்கு அதை உபாதி யாக உடைத்தான ஜீவனும் செல்லுகிறான். இதை அனுஸரித்துப் பார்த்தால் மாரீசனுடைய மரணத்திற்குப் பிறகு, ராமனுக்கே அநர்த்தம் வந்துவிட்டதோ என்ற சங்கையினால் என் மனமானது ராமனிடத்திலேயே போய்விட்டது. அந்த மனதை உபாதியாக உடைத்வான என் ஜீவனும் ராமனிடத்திலேயே சென்ற காரணத் தால், நிர்ஜீவமாக என் சரீரம் மாத்ரம் ஆச்ரமத்தில் இருந்ததன்றி யில், ஸஜீவகமாக இல்லை. அப்பொழுது ராவணன் பலாத்காரமாக அந்த சரீரத்தை அபஹரித்தது **नत्वेव राघवादन्य पदापि पुरुषं स्पृशे** (நத்வேவ ராகவாதந்யம் பதாபி புருஷம் ஸ்ப்ருசே) என்ற என் ப்ரதிக்ஞைக்கு பங்கத்தைச் செய்யுமா? தற்காலத்திலோ மனதும் ஜீவனும் இந்த சரீரத்தில் இருந்து வருகிறபடியால் ஸஜீவமாக இருக்கும்பொழுது உம்முடைய சரீரத்தில் எப்படி ஸம்பந்தப்பட முடியும்? அப்படியானால் ப்ரதிக்ஞைக்கு விரோதம் ஏற்படுமல்லவா இந்த அபிப்ராயத்தைத்தான் ஸீதா தேவி **विवशा, विनाथा, अनीशा, बलाद्गता** (விவசா, விநாதா, அநீசா, பலாத்கதா) என்ற பதங்களால் தெரிவிக்கின்றாள்.

அத்துடன், ராவணன் ஸீதையை அபஹரித்துப் போனது ஸாக்ஷாத்தாக இல்லையென்று ஆரண்ய காண்டத்தில் தெரிவிக்கப் பட்டிருக்கிறது.

**छायाग्राहित्वमप्यस्ति सर्वविद्याविशारदे** (சாயாக்ராஹித்வமப் யஸ்தி ஸர்வ வித்யா விசாரதே) என்று பரமேச்வரன் பார்வதிக்கு ஸ்ரீராமனுடைய ரஹஸ்யத்தை உபதேசிக்கும் ஸமயத்தில் சொல்லி

யிருக்கும் ச்லோகத்தை கவனித்தாலோ, ராவணன் சாயாக்ராஹி யானதால் ஸீதாதேவியினுடைய கேசச் சாயையையும், ஜானுச் சாயையையும் பலாத்காரமாக அபஹரித்தான் என்று வெளி யாகிறபடியால் அந்த சாயா பரமாக விநாதா, விவசா, அநீசா, பலாத்கதா என்ற பதங்களை அந்வயித்துக்கொண்டால் ஒரு விதத் திலும் முன் செய்த தன் ப்ரதிக்ஞைக்கு விரோதமில்லை என்பதை யும், ஆஞ்ஜனேய ஸ்வாமியினிடம் ஸீதாப்ராட்டி தெரிவித்துக் கொண்டாள்.

தவிர, மஹா புருஷனான ராமனுடைய பராக்ரமத்தை நான் கேட்டுமிருக்கிறேன், நேரில் பார்த்துமிருக்கிறேன். தேவ, கந்தர்வ ராக்ஷஸர்கள் ராமனுடன் யுத்தத்திற்கு எதிரில் நிற்க முடியாது. மஹாபலிஷ்டனான ராமன் அழகான கோதண்டத்தைக் கையில் தரித்துக்கொண்டு லக்ஷ்மணனுடன் சேர்ந்து நிற்கும்பொழுது ப்ரளய காலாக்னிபோல் ஜ்வலித்து வருவதைப் பார்த்தால் யார் தான் எதிரில் நிற்க முடியும்? ப்ரளய காலத்தில் பாஸிக்கும் ஸூர்யனுக்கு ஸமானமான பாணஜ்வாலையை யார்தான் வஹித்து எதிரில் நிற்கமுடியும்? ஆகையால், ஹனுமந்! சீக்ரமாக லக்ஷ்மண னோடும், வானர ஸேனைகளுடனும், ராமனை இங்கு அழைத்து வந்து ராவணனையும் ஸம்ஹாரம் செய்யும்படி செய்து, ராமனை விட்டுப் பிரிந்து வெகு காலமாகக் கஷ்டப்படும் என்னை ராம னுடன் சேர்த்து வைத்து ஸந்தோஷப்படும்படி செய்வதே உம்முடைய கடமையாகும். அவ்விதம் நீர் செய்தால் எனக்கு பரம உபகாரம் செய்தவராகுவீர்'' என்று தேவி தெரிவித்துக் கொண்டாள்.

இவ்விதம் ஸீதையினுடைய வார்த்தைகளைக் கேட்ட ஆஞ்ஜனேய ஸ்வாமியோ பரம ஸந்தோஷத்தை அடைந்து பதில் சொன்னதாவது :—

युक्तरूपं त्वया देवि भाषितं शुभदर्शने ।
सदृश स्त्रीस्वभावस्य साध्वीनां विनयस्य च ॥
स्त्रीत्व न तु समर्थं हि सागरं व्यतिवर्तितुम् ।
मामधिष्ठाय विस्तीर्णं शतयोजनमायतम् ॥

யுக்தரூபம் த்வயா தேவி பாஷிதம் சுபதர்சநே ।
ஸத்ருசம் ஸ்த்ரீஸ்வபாவஸ்ய ஸாத்வீநாம் விநயஸ்ய ச ॥
ஸ்த்ரீத்வம் ந து ஸமர்த்தம் ஹி ஸாகரம் வ்யதிவர்த்திதும் ।
மாமதிஷ்டாய விஸ்தீர்ணம் சதயோஜநமாயதம் ॥

''ஹே தேவி! நீ சொல்லும் வார்த்தைகள் எல்லாம் உன்னுடைய பாதிவ்ரத்ய ஸ்பாவத்திற்கு மிகவும் அழகானதே. ஸ்த்ரீகளுக்கே பயந்த ஸ்வபாவமானது லோகத்தில் ப்ரஸித்தமானது. இதை அனுஸரித்தும் உள்னுடைய பாதிவ்ரத்யத்தின் விநயத்தை அனுஸரித்தும், என்னை ஆச்ரயித்தும் நான் போகும் வேகத்தில் நடு மார்க்கத்தில் கீழே விழுந்து விடுவாயோ என்று நீ பயப்படுவது மிகவும் பொருத்தமாகவே இருக்கிறது. நான் எவ்வளவு தைரியத்தை ஊட்டினாலும் உனக்கு அவ்விஷயத்தில் பயம் தெளியாமலே இருப்பது உன் ஸ்வபாவத்திற்கு பொருத்தமானதே. இந்த அம்சத்தில் நீ சொல்வது ந்யாயமானாலும் நான் அதை ஒப்புக்கொள்ளவில்லை. நான் ஒருவன் உன்னைத் தூக்கிக் கொண்டு செல்லும் காலத்தில் ஒரு விதமான பயத்திற்கும் அவகாசமே ஏற்படாதென்பது திண்ணம். என்னுடைய ஸத்வம், பலம், பராக்ரமம், தேஜஸ் இவைகளை நீ அறிந்தும் நீ பயப்படுவது ஸ்த்ரீ ஜாதியானதால்தான். இக்காரணம் ஸரியல்ல. இரண்டாவது காரணம் நீ சொன்னதோ, அதாவது ராமனைத் தவிர மற்ற புருஷனுடைய சரீரத்தை நான் காலால்கூடத் தொடமாட்டேன் என்றதோ யாராலும் சிரஸால் வணங்கி ஒப்புக்கொள்ளத் தகுந்ததே.

**एतत्ते देवि सदृशं पत्न्यास्तस्य महात्मन: ।**
**का ह्यन्या त्वामृते ब्रूयाद्वचनमीदृशम् ॥**

ஏதத்தே தேவி ஸத்ருசம் பத்ந்யாஸ்தஸ்ய மஹாத்மந: ।
கா ஹ்யந்யா த்வாம்ருதே தேவி ப்ரூயாத் வசநமீத்ருசம் ॥

மஹானுபாவனான ஸ்ரீ ராமனுடைய தர்ம பத்னியாக இருப்பதனால்தான் உன் வாக்கிலிருந்தும் அந்ய புருஷனுடைய ஸம்ஸ்பர்சமானது பதிவ்ரதா ஸ்த்ரீகளுக்கு தர்மமாகாது என்பதைச் சொல்லுகிறாய். இந்த ஆபத்காலத்தில் உன்னைத் தவிர மற்ற எந்த ஸ்த்ரீகளும் இவ்வித வார்த்தையைச் சொல்ல மாட்டார்கள். லோகத்தில் மஹா பதிவ்ரதா சிரோமணி யார் என்று ப்ரச்னம் வரும்பொழுது உன்னைத்தான் அதற்கு உதாரஹரணமாகக் காட்டவேண்டும். இந்த வ்ருத்தாந்தங்கள் ஒன்றுகூட விடாமல் ராமனிடம் போய் சொல்லுகிறேன். அநேக காரணங்களைக்கொண்டும், ராமனுக்கு உன்னுடைய நிமித்தமாக ஏற்பட்ட துக்கத்தை சீக்கிரம் நிவர்த்தி செய்யவேண்டியதின்

பொருட்டும் என்னுடைய மனதிலுள்ள ஸ்நேஹ பாசத்தால் எப்படியாவது உங்கள் இருவரையும் சேர்த்து வைத்துவிட வேண்டும் என்ற தீர்மானத்தை வைத்துக்கொண்டு, என் முதுகில் நான் உன்னை ஏறிக்கொள் என்று சொன்னதைத் தவிர வேறு தாத்பர்யத்துடன் நான் சொல்லவில்லை என்பதையும் நீ அறிய வேண்டும். ரகு வம்சத்திற்குப் பரம கீர்த்தியைக் கொடுப்பதற்காகவே அவதரித்த ராமனோடு உன்னை அதிசீக்ரத்தில் சேர்த்து வைக்க வேண்டுமென்ற எண்ணத்தைத் தவிர என்மனதில் வேறு ஒன்றுமே புலப்படவில்லை. இதுவும் எனக்கு முத்ராதான பூர்வகமான பரமோபதேசத்தைச் செய்த என்னுடைய ஆசார்யனை ஸ்ரீராமனிடத்திலுள்ள பக்தி விசேஷத்தாலும், அந்த ப்ரபுவினுடைய அனுக்ரஹ பலத்தாலும் உன்னைத் தூக்கிக்கொண்டு நடுவில் யாதொரு வித விபத்துமில்லாமல் பகவானுடைய ஸமீபத்தில் சேர்த்துவிடலாமென்றே என் மனதில் ஏற்பட்ட தைர்யத்திற்குக் காரணமாகுமன்னியில், என்னுடைய ஸாமர்த்யத்தால் ஆகக் கூடியது என்று நான் நினைக்கவே இல்லை. ராமானுக்ரஹத்தை அடைந்தவர்களுக்கு ஸாத்யமாகாத கார்யம் ஒன்றுமே இல்லை. எல்லாம் அவனுடைய அருளை ஸஹாயமாக வைத்துக்கொண்டு தான் தைர்யமாக உன் எதிரில் பேசுகிறேன். அப்படியே உனக்கு என்னுடன் வர இச்சை இல்லாதுபோனால், அது ந்யாயம். உன் ஸ்வபாவத்திற்கும் அழகே. நானும் அதை வற்புறுத்த வில்லை. நான் உன்னிடம் வந்து, உன்னையும் நேரில் பார்த்தேன் என்பதற்கும், உன் நாதனால் கொடுக்கப்பட்ட அங்குலீயத்தை உன்னிடம் அர்ப்பணம் செய்து விட்டேன். ஸம்பாஷணாதிகளும் செய்தேன் என்பதற்கும், ராமன் என்னை நம்பும்படி ஏதாவது அடையாளம் இருந்தால் அதை என்னிடம் கொடுத்து அனுக்ரஹிக்க ப்ரார்த்திக்கிறேன்.

இவ்விதம் ஆஞ்ஜனேயரால் சொல்லப்பட்டதைக் கேட்ட ஸீதா ப்ராட்டி கண்ணீர் ஜலத்தை ப்ரவாஹிக்கச் செய்து கொண்டு, தளர்ந்த வார்த்தைகளோடு ஆஞ்ஜநேயரைப் பார்த்து ஓர் அபூர்வமான அடையாளத்தைத் தெரிவித்தாள்.

"ஹே ஹநுமந்! மந்தாகினி என்று கங்கையினுடைய ஒரு பிரிவு ப்ரவாஹித்து வருவதை ஸர்வலோகங்களும் அறிந்ததே. அதனுடைய தீரத்தில் சித்ரகூட பர்வதம் என்று ஒரு மலை இருந்து வருகிறது. அந்த மலையிலோ, தபஸ்விகளான அநேக

மஹர்ஷிகளின் ஆச்ரம மண்டலங்களும் விளங்கிவருகின்றன. மிகவும் ச்ரேஷ்டமான கனி வர்க்கங்களும் அங்கு அகப்படும் அபூர்வ புஷ்ப விசேஷங்களாலும், லதாக்ரஹங்களினாலும் அலங்கரிக்கப்பட்டு 'பூலோக வைகுண்டமோ' என்று தோன்றும்படி விளங்கி வருகிறது. அந்த மலையில்தான் நான் ராமனுடனும் லக்ஷ்மணனுடனும், பகவானான ராமன் பித்ருவாக்ய பரிபாலனம் என்ற தர்மத்தை அனுஷ்டிப்பதற்காக வாஸம் செய்யும் காலத்தில் கொஞ்ச நாள் வஸித்தேன். அப்பொழுது லக்ஷ்மணஸ்வாமியானவர், என்னை மாதா என்றும், ராமனைப் பிதா என்றுமே பாவித்துக்கொண்டு பரம பக்தியுடன் ஸகலவிதமான பரிசர்யைகளையும எங்களுக்குச் செய்துவந்தார். நாங்கள் க்ஷத்ரியர்களானதால் மாம்ஸங்களைப் புஜிப்ப ண்டு. ஒரு தினத்தில் லக்ஷ்மணன் அரண்யத்தில் வேட்டையாடி, விஹிதமான ம்ருகங்களை கொன்று அந்த பரிசுத்தமான மாம்ஸங்களை எங்களுக்கு ஆஹாரமாகக் கொண்டுவந்து அர்ப்பணம் செய்தார். அதில் நாங்கள் பக்ஷித்த மிகுதியை வெய்யிலில் உலர்த்திவிட்டு நான் காவலாக உட்கார்ந்து வந்தேன். ராமனும் அங்கிருந்தார். என்னுடைய சரீரத்திற்குக் கொஞ்சம் ஆச்வாஸம் ஏற்பட்டு, ராமனுடைய மடியில் நான் உட்கார்ந்திருந்தேன். அப்படியிருக்கும்பொழுது அந்த மாம்ஸத்தை ஒரு காக்கையானது ஸ்வீகரிக்க யத்னம் செய்தது. நான் எவ்விதம் விரட்டியும் அது போகாமல், ஆங்காங்கு மறைந்து கொண்டு மறுபடியும் மாம்ஸத்தைக் கொத்த ஆரம்பித்தது. நான் கோபத்துடன் எழுந்து, அந்த காக்கையை விரட்டப்போகும் ஸமயத்தில் என்னுடைய மேல் வஸ்த்ரம் கொஞ்சம் வேகமாக ஓடிய காரணத்தால் நழுவிவிட்டது. இந்த ஸமயம் ராமனும் என்னைப் பார்த்து பரிஹஸித்தார். எனக்கு லஜ்ஜையாக இருந்தது. அந்த காக்கையும் பரமகோபத்துடன் என் மேல்வஸ்த்ரம் நழுவிய ஸந்தர்ப்பத்தில் என்னை விரட்டிக் கொத்த வந்தது. நான் மறுபடியும் ராமனுடைய மடியில் உட்கார்ந்து கொண்டு ச்ரமத்துடன் ஆயாஸமுள்ளவளானேன். ராமன் என்னை ஸாந்த்வ வாதம் செய்து ஸமாதானப்படுத்தினர். பிறகு ராமனுடைய மடியிலேயே நித்ரையினல் பரவசமாகி தூங்கிவிட்டேன். மறுபடியும் விழித்துக் கொண்டவுடன் என் மடியில் ராமன் சற்று நேரம் தூங்கினர். என் மடியில் ராமன் படுத்துக்கொண்டு நித்ரையினல் பரவசத்தாகி இருக்கும் பொழுது, நான் விழித்து உட்கார்ந்திருந்தேன். என் மடியில் ராமன் நித்திரை செய்ததினல், நான்

எழுந்திருந்து காக்கையை விரட்ட ஸந்தர்ப்பம் ஏற்படவில்லை. இந்த ஸந்தர்ப்பத்தில், அந்த காக்கையானது என் ஸ்தனத்தைக் கொத்தி ரத்தத்தை ஸ்ரவிக்கும்படிச் செய்துவிட்டது. ராமனுடைய முகத்திலும் ரத்த பிந்து விழுந்தது. இதனால், தூங்குகிறவனை எழுப்பக் கூடாதென்ற சாஸ்த்ரத்தை நான் அறிந்தவளாயிருந்தும், என்னுடைய கஷ்டத்தை ஸஹிக்க முடியாமல் மெதுவாக ராமனை எழுப்பினேன். உடனே பகவானான ஸ்ரீராமன் விழித்துக் கொண்டு எழுந்திருந்து என் ஸ்தனத்திலுள்ள வ்யதையைப் பார்த்து பரம கோபத்தை அடைந்தார்.

'ஹே ஸீதே! யார் வந்து உன்னுடைய ஸ்தனத்தை இவ்விதம் ரத்தம் வரும்படி நிர்ப்பந்தித்தான். உனக்குக் கெடுதலைச் செய்கிறவன் இனிமேல் ஜீவிக்க முடியுமா? ஐந்து விதமான தலைகளுடன் கூடின க்ருஷ்ண ஸர்ப்பத்துடன் விளையாடுகிறவன் எப்படி ஜீவிக்க முடியாதோ, அதுபோல்தான் ப்ரக்ருதத்திலும் ஆகப்போகிறது' என்று மிகவும் கோபாவேசத்துடன் சொல்லிக் கொண்டு ராமன், என்னையும் ஸமாதானம் செய்துகொண்டிருக்கும் பொழுது, மறுபடியும் அதே காக்கை எனக்கு அபிமுகமாக பூமியில் வந்து உட்கார்ந்துகொண்டு மறுபடியும் முன்போலவே சேஷ்டை செய்ய ஆரம்பித்தது. ராமனும், அந்தக் காக்கையைக் கவனித்துப் பார்த்து அடக்க முடியாத கோபத்தை அடைந்தார். அந்தக் காக்கையை ஒழித்துவிடுவதென்றே திர்மானம் செய்தார். தான் உட்கார்ந்து ஜபம் செய்யும் தன்னுடைய தர்பாஸனத்திலிருந்தும், ஒரு தர்பையைக் கையினல் உருவி ப்ரம்மாஸ்த்ர மந்த்ரத்தை அபிமந்த்ரணம் செய்து அந்த ப்ரம்மாஸ்த்ர தேவதையையும் அந்த தர்பையில் ஸாந்நித்யத்தை அடையும்படிச் செய்து, அந்த காக்கையைக் கொன்று வரும்படி ஆக்ஞாபித்து ப்ரம்மாஸ்த்ர ப்ரயோகத்தைக் காக்கைக்கு அபிமுகமாகச் செய்தார்.

அந்த அஸ்த்ரமோ, தன்னுடைய ஆஸனத்திலுள்ள ஒரு தர்பையானலும், மந்த்ரிதமான காரணத்தால் தேவதா ஸாந்நித்யத்தை அடைந்து அந்தக் காக்கைக்கு அபிமுகமாகச் சென்று ஜ்வலித்தது. காக்கையோ ஆகாசத்தில் பறந்து போக ஆரம்பித்தது. அந்த அஸ்த்ரமும் காக்கையை விரட்டிக்கொண்டு ஆகாசத்தில் சென்றது. காக்கையானது மிகவும் பயந்து, தன்னை ரக்ஷிப்பதற்கு எந்த மஹானுபாவன் எங்கிருக்கிறான் என்பதைத்

தேடி அவன் காலில் போய் விழவேண்டுமென்ற எண்ணத்துடன் எல்லா லோகங்களிலும் சென்று, ரக்ஷகனைத் தேடி வந்தது. இந்த ப்ரம்மாஸ்த்ரமும் காககையை விடாமல், விரட்டிக்கொண்டு சென்றது !

**स पित्रा च परित्यक्तः सुरैश्च समहर्षिभिः ।**

**त्रींल्लोकान्सपरिक्रम्य तमेव शरणं गतः ॥**

ஸ பித்ரா ச பரித்யக்த: ஸுரைச்ச ஸமஹர்ஷிபி: ।

த்ரீந்லோகாந் ஸப் பரிக்ரம்ய தமேவ சரணம் கத : ॥

என்றபடி, அந்த காக்கை சுற்றாத இடமே இல்லாமலாகிவிட்டது. பகவானைத் தவிர, ப்ராணிகளுக்கு பந்து யாருமில்லை. பந்து என்று யாரைச் சொல்லுகிறோமோ, அவர்கள் உண்மையில் ஆபத் காலத்தில் உபயோகப்படமாட்டார்கள். பகவான் தான், எவ்வித மான ஆபத் காலத்திலிருந்தும், ப்ராணிகளை ரக்ஷிக்கிற விஷயத்தில் உண்மையான பந்துவாகுவார் என்ற விஷயத்தை இச் ச்லோகத் தால் மஹர்ஷியானவர் வெளிப்படுத்துகிறார்.

இந்த ச்லோகத்திலுள்ள **सः** (ஸ:) என்ற பதத்தால் காகா ஸுரனைக் க்ரஹித்துக்கொள்ளவேண்டும். ஸீதா தேவியானவள் மஹா விஷ்ணுவான ஸ்ரீராமனுடைய புருஷாகார பூதமான சக்தி என்றே சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது ராமனுடைய பௌருஷமே ஸீதையாக விளங்கிவருகிறது என் பதே அதன் ஸித்தாந்தமாகும்.

அந்த தேவியினிடத்தில் அபராதத்தைச் செய்து, அந்தக் காக்கையானது எப்படி பிழைக்க முடியும்? அந்த அபராதத் தையும் செய்து நாளாகவில்லை. ஸமீபகாலத்தில் செய்த அபராத மாகத்தானாகும். அதனால் அதை யாரும் மறக்க முடியாது.

இந்தக் காக்கையோ, ஜயந்தன் என்ற பெயரால் விளங்கி வரும் இந்த்ரனுடைய புத்ரனாகுவான். இந்த்ரன் காமரூபி என்ற அஹங்காரத்தால் கௌதமரைப்போல் ரூபத்தை எடுத்துக் கொண்டு பதிவ்ரதா சிரோமணியான அஹல்யா தேவியினிடம் சேஷ்டையைச் செய்ததுபோல், தான் தகப்பனின் பிள்ளைதான் என்பதைப் ப்ரகாசப்படுத்த ஜயந்தனும் காமரூபியானதால் காக்கையினுடைய ரூபத்தைத் தரித்துக்கொண்டு பதிவ்ரதா

சிரோமணியாயும், லோகத்திற்கே மாதாவாயுமான தேவியினிடத்திலேயே விஷமம் செய்ய ஆரம்பித்தான்.

அந்த ஜயந்தன் இந்த ப்ரம்மாஸ்த்ரத்தால் தனக்கு விபத்து ஏற்பட்டு விடுமே என்ற பயத்தால்,ப்ரம்மாஸ்த்ரத்தால் விரட்டப் பட்டு, தானும் வெகு வேகமாக ஓடி ஸ்வர்க்க லோகம் சென்று தன் பிதாவாகிற இந்த்ரனிடம் போய் 'அப்பா! ஸீதையினிடம் அபராதம் செய்துவிட்டேன். அதை அறிந்த ராமன் ப்ரம்மாஸ்த்ரம் ப்ரயோகம்செய்து என்னை எரிக்க ஆரம்பித்து விட்டார். அதோ என்னை விரட்டிக்கொண்டு ப்ரம்மாஸ்த்ரம் ஓடி வருகிறது. நீதான் என்னை ரக்ஷிக்கவேண்டும்' என்று தகப்பன் காலில் போய் விழுந்தான். இந்த்ரனோ, தான் மூன்று லோகத்திற்கும் அதிபதியாக இருந்தாலும், புருஷாகாரபூதையான ஸீதா தேவியினிடம் செய்த அபராதம், ராமாபராதமாகி, ராம வத்யனான தன் பிள்ளையையும் ரக்ஷிக்க முடியாதவனாக ஆகிவிட்டான். அதனால், தன் பிள்ளையை வெளியில் விரட்டி, ஸ்வர்க்க த்வாரத்தை கெட்டியாக அடைத்துவிட்டு, தான் ப்ரம்மாஸ்த்ரத்திற்கு ஆளாகாமல் இருக்கவேண்டுமே என்று பயந்துகொண்டு உள்ளே ஒளிந்துகொண்டுவிட்டான். ஜயந்தன் என்ற பிள்ளையை மட்டும் இந்த்ரன் வெளியில் விரட்டவில்லை. அவனுடைய ஸம்ஸாரம், பிள்ளை, அவனைச் சேர்ந்த மற்ற பந்துக்கள், அவனுடைய யோக்ய பதார்த்தம் எல்லாவற்றோடுகூட வாசலில் எடுத்து எரிந்து, ஸ்வர்க்க லோகத்தினுடைய எல்லையிலேயே நிற்றக் கூடாதென்று இந்த்ரன் விரட்டிவிட்டான். இதைத்தான் **परित्यक्तः** (பரித்யக்த:) என்ற பதமானது, **परितः त्यक्तः परित्यक्तः** (பரித: த்யக்த: பரித்யக்த:) என்ற ஸமாஸத்தால் வெளிப்படுத்திக் காட்டுகிறது.

ராமனுக்கு வத்யனாக ஆனவனை யாராலும் ரக்ஷிக்க முடியாது என்பதை, பின்பு ஆஞ்ஜநேயஸ்வாமியானவர், ராவணனுடன் பேசிக்கொண்ட ஸந்தர்ப்பத்தில், **इन्द्रो महेन्द्रस्सुरनायको वा** (இந்த்ரோ மஹேந்த்ரஸ்ஸுரநாயகோ வா) என்ற ச்லோகத்தால் வெளிப்படுத்திப் பேசுகிறார்.

ஒருவனுக்கு ஒரு புத்ரன் துஷ்டனாக ஆனால், அவனை அந்த பிதாதானவன் த்யாகம் செய்தாவது குலத்தை ரக்ஷிக்கவேண்டும் என்றுதான் சாஸ்த்ரத்தின் ஸித்தாந்தமாகும்.

त्यजेदेकं कुलस्यार्थे ग्रामस्यार्थे कुलं त्यजेत् । (த்யஜேதேகம் குலஸ்யார்த்தே க்ராமஸ்யார்த்தே குலம் த்யஜேத்) என்ற ந்யாயத்தை அனுஸரித்து, தன்னுடைய குலத்தை ஸம்ரக்ஷிக்க வேண்டிய விஷயத்தில், புத்ரனுக இருந்தாலும், அவன் மூர்க்கனுக இருந்தால், பகவானுடைய ஆச்ஞா ரூபமான ச்ருதி, ஸ்ம்ருதிகளுக்குக் கட்டுப்படாமலும், பகவானிடத்தில் பக்தியில்லாமலும் பாகவதர்களுக்கு அபசாரம் செய்துகொண்டு, தன்னிஷ்டப்படி நடக்கிறவனுனுல், அவனைக் குடும்பத்தை விட்டு ஒதுக்கிவிட்டால் தான் வம்ச பித்ருக்கள் த்ருப்தி அடைவார்கள் என்ற ஞானத்தை இந்த்ரன் அடைந்தவனுனதால், ஏதோ கோபத்தால் ஜயந்தனை த்யாகம் செய்து விட்டானே என்று நினைக்கக் கூடாது, புத்தி பூர்வமாகவே ஜயந்தனை த்யாகம் செய்தான். இதை परित्यक्तः (பரித்யக்த:) என்ற பதத்திலுள்ள परि (பரி) என்ற உபஸர்க்கமானது வெளிப்படுத்துகிறது.

स पित्रा च परित्यक्तः (ஸ பித்ரா ச பரித்யக்த:) என்ற வாக்கியத்தில் ச-காரமும், ஜயந்தனுடைய தாயாரான இந்த்ராணியைச் சேர்த்துக் காட்டுகிறது.

இந்த்ரனுகிய தகப்பன் தன்னைக் கைவிட்ட பிற்பாடு இந்த ஜயந்தன், தன் தாயாரான இந்த்ராணியிடம் சென்று, 'அம்மா நீதான் என்னை ரக்ஷிக்கவேண்டும். உன்னை தவிர வேறு கதி எனக்கில்லை' என்று விழுந்தான்.

அவன் தாயாரும், 'அப்பா! நான் என்ன செய்ய முடியும் सीता नारी जनस्यास्य योगक्षेमं विधास्यति (ஸீதா நாரீ ஜநஸ்யாஸ்ய யோ க்ஷேமம் விதாஸ்யதி) என்ற ந்யாயத்தை அனுஸரித்து, ஸகல விதமான பதிவ்ரதா ஸ்த்ரீகளுக்கும் தலைவியாக இருந்து கொண்டு, ஸகலவிதமான யோகக்ஷேமத்தைச் செய்வதற்காக கங்கணம் கட்டிக்கொண்டிருக்கும் லோகமாதாவான பரதேவதையினிடம் அபராதத்தைச் செய்த மஹா பாபி! உன்னை யாரால் காப்பாற்ற முடியும்!' என்று அவளும், தன் புத்ரனுனுலும் ஜயந்தனை த்யாகம் செய்துவிட்டாள்.

பிதாவைக் காட்டிலும், மாதாவிற்குப் புத்ரனிடம் வாத்ஸல்யம் அதிகமானதால், பிதாவினிடம் போய் சரணமடைவதற்கு முன்பே இந்த ஜயந்தன் தன் மாதாவினிடத்தில்தான் போய் சரண

மடைந்ததாகத் தெரிகிறது. மாதாவினுல் ரக்ஷிக்க முடியாது என்று பஹிஷ்கரிக்கப்பட்ட பிற்பாடுதான் பிதாவினிடம் வந் திருக்கிறுன். பிதாவான இந்த்ரன் தள்ளினதிலிருந்துமே, முன்பே மாதாவால் தள்ளப்பட்டவன் என்பது ஸித்தமாகிறது. இந்த தாத்பர்யத்தைத்தான் ச-காரமானது ஸூசிப்பிக்கிறது.

பிறகு, காக்கை வேஷத்துடன் ஜயந்தன், 'தாய் தந்தைகள் நம்மைக் கைவிட்டு விட்டார்கள். நாம் இனி என்ன செய்வது? மற்ற நமது ஸ்வஜாதியிலுள்ள பந்துக்களிடமாவது சரணமடை வோம். தேவர்களாவது ரக்ஷிக்க மாட்டார்களா?'' என்ற ஆசையுடன் தேவர்களிடம் போய், ஒவ்வொருவரிடமும் காலில் விழுந்தான்.

தேவர்களோ, कस्य विम्भयति देवाश्च जातरोषस्य सम्युगे (கஸ்ய பிம்பயதி தேவாச்ச ஜாதரோஷஸ்ய ஸம்யுகே) யுத்தத்தில் ராகவ னுக்குக் கொஞ்சம் கோபாவேசம் ஏற்பட்டது என்ருல் ஸகல தேவர்களும் நடுங்குவார்கள். அவ்விதம் ராமனுடைய விஷயத்தில் நடுக்கமுள்ள தேவர்களா ராமாபராதம் செய்தவனே ரக்ஷிக்கப் போகிருர்கள்! ஆகையால், தேவர்களும், எங்களுடைய ஸமீபம் நில்லாதே. ஓடு! ஓடு!' என்று விரட்டிவிட்டார்கள்.

மறுபடியும் இந்த ஜயந்தன் 'நாம், தேவனுக நம் உருவம் இருக்கும்பொழுது ஸஜாதீயாளான பந்துக்களாக இந்த தேவர் கள் ஆனுர்கள். இப்பொழுது நாம் காக்காயாக இருக்கிறோம். நாம் விஜாதீயனுகிவிட்டோம். ஆகையால், இவர்கள் நம்மை ரக்ஷிக் காமல் பஹிஷ்கரிக்கிருர்கள்' என்று நினைத்து, இந்த ஜாதியில் ஸஜாதீயர்களாகவுள்ள பக்ஷிகளைப்போய் சரணமடைந்து ஆத்மாவை ரக்ஷித்துக்கொள்ள, பக்ஷிக் கூட்டங்களிடம் ஓடினுன். அந்த பக்ஷிகளும் தாறுமாருக இவனைக் கொத்தி, த்வம்ஸம் செய்து 'ஓடிவிடு' என்று விரட்டிவிட்டன, पक्षिणोऽपि प्रयाचन्ते सर्वातभूतानुकम्पिनं (பக்ஷிணேபி ப்ரசாயந்தே ஸர்வாபூதாநுகம்பிநம்) என்ற ரீதியாக ஸர்வ ப்ராணிகளிடத்திலும் மனிதன், பக்ஷிகள் என்ற வேற்றுமை இல்லாமலே கருணையைச் செலுத்தும் பகவா னுக்கு அபராதத்தைச் செய்த இந்தக் காககையையா ரக்ஷிக்கும்? அதிலும், பக்ஷிகளுக்குள், ராஜாவான கருடனே வாஹனமாக உடைத்தான ஸர்வேச்வரனுக்கு அபராதத்தைச் செய்த இந்தக்

காகாஸுரனை ரக்ஷிப்பதில் ஸித்தர்களாவார்களா? ஆகையால் அந்தப் பக்ஷிகளாலேயும், இந்தக்காகாஸுரன் விரட்டப்பட்டு ஐடி விட்டான். ப்ரம்மாஸ்த்ரமும் இவனை விரட்டிக்கொண்டு போகிறது.

समहर्षिभिः (ஸமஹர்ஷிபி:) என்று சொல்லியதிலிருந்து, மாதா பிதாக்கள், மற்ற தேவர்கள், பக்ஷிகள் முதலியவைகள் தன்னை ரக்ஷிக்காமற்போனாலும், आनशंस्यं परो धर्मः (ஆந்ருசம் ஸயம் பரோ தர்ம:) என்ற சாஸ்த்ரத்தை ப்ரதானமாக நம்புகிற மஹர்ஷிகள் சரணாகதி செய்தவனை கைவிடமாட்டார்கள்; ரக்ஷித்தே தீருவார்கள் என்பதை நம்பி, இந்த ஜயந்தன் என்ற காகாஸுரன் மஹர்ஷிகளுடைய ஆச்ரமங்களில் சென்று, ஒவ்வொரு ரிஷியையும் சரணாகதி செய்து, தன்னை ராமனுடைய ப்ரம்மாஸ்த்ரத்திலிருந்து ரக்ஷிக்க வேண்டுமென்று ப்ரார்த்தித்ததாகத் தெரியவருகிறது. மஹர்ஷிகளோ, 'ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம: என்ற சாஸ்த்ரத்தை நாங்கள் ப்ரதானமாக அவலம்பித்தவர்களே. ஆகிலும் அந்த சாஸ்ரத்திற்கு விஷயம் வ்யவஸ்தை செய்யப்படவேண்டும். புருஷாகார ரூபமான லோகமாதாவான ஸிதையினிடம் அபராதத்தைச் செய்து அதன் மூலம் ராமாபாரதியாக ஆன இந்த ஜயந்தன் மேற்சொன்ன சாஸ்த்ரத்திற்கு விஷயமாக ஆகமாட்டான். ராமாபாரதத்தைச் செய்தவன் மஹாமூர்க்கனானதினால் சரணாகதி சாஸ்த்ரமும் அவனிடத்தில் வ்யர்த்தமாகத்தானாகும். ராமனை தவிர வேறு மற்ற யாருக்கு அபராதத்தைச் செய்தாலும் அவன் சரணாகதி செய்தால் அவனை ரக்ஷிக்கலாம் என்றுதான் அந்த சாஸ்த்ரத்திற்கு அர்த்தத்தை ஸங்கோசம் செய்யவேண்டுமென்னியில், ராமனுக்கே அபராதம் செய்த மஹாபாபியை அந்த சாஸ்த்ரத்திற்கு விஷயமாகச் செய்யக்கூடாது. ராமாபாரதியை நம் கோஷ்டியில் அங்கிகாரம் செய்துகொண்டால் அவனுடைய ஸம்ஸர்க்கத்தால் நாமும் நசித்துவிடுவோம். ஆகையால் இவனை நாம் சேர்த்துக்கொள்ளாமல் பஹிஷ்கரிக்கவே வேண்டும். அவ்விதம் பஹிஷ்கரிக்கப்பட்டு விட்டானேயானால் வேறு கதியில்லாமல் ராமனையே போய் சரணமடைவான். தன்னையே சரணமடைந்து விட்டால் ராமனும் கருணையுடன் இவனை ரக்ஷிப்பார். இவன் ஜீவிக்க வேறு வழி ஒன்றுமே கிடையாது. இது தான் ஸரியான உபாயம்.

தவிரவும், यो विष्णुं सततं द्वेष्टि तं विद्यादन्त्यरेतसं (யோ விஷ்ணும் ஸததம் த்வேஷ்டி தம் வித்யாதந்த்யரே தஸம்) என்ற ஸ்ம்ருதியானது விஷ்ணுவிற்கு த்வேஷியாக உள்ளவனை சண்டாளன் என்று சொல்லியிருப்பதினாலும் चण्डालः पक्षिणां काकः (சண்டாள: பக்ஷிணாம் காக:) என்ற ஸ்ம்ருதியினாலும், பக்ஷி ஜாதியில் காக்கையைச் சண்டாளன் என்று சொல்லியிருப்பதினாலும், மஹாவிஷ்ணுவான ராமனை த்வேஷித்துக்கொண்ட இந்த ஜயந்தன் என்ற சண்டாளன் நமது ஆச்ரமத்திற்குள் நுழையக் கூடாது என்று பரம கோபத்துடன் அவாச்யமான வார்த்தைகளை பேசி, ஒரு ரிஷியும் தன்னுடைய ஆச்ரமத்திற்குள் நுழைய இடங் கொடுக்காமல் ஜயந்தனை பஹிஷ்கரித்து விட்டார்கள்.

இவ்விதம் தாயாராலும், தகப்பனாராலும், தான் தேவனாக இருந்தபோது ஸஜாதியர்களாகவுள்ள தேவர்களாலும், தற்பொழுது பக்ஷியாக இருக்கும்பொழுது ஸஜாதியர்களான பக்ஷிகளாலும், மஹர்ஷிகளாலும் பஹிஷ்கரிக்கப்பட்டு, வேறு கதியில்லாமல், ஒவ்வொரு க்ராமங்களிலும் சென்று, ஒவ்வொரு வீடாக நுழைந்து அதிலும் ஒன்பது தடவைக்குக் குறையாமல் ஒவ்வொரு வீடாக நுழைந்து, மூன்று லோகங்களிலுமுள்ள ஒரு க்ராமம் கூடத் தவறாமல் சென்று கஷ்டப்பட்டான். அப்பொழுதும் ப்ரம்மாஸ்த்ரம் அவனை விடவில்லை.

**नष्टगजः घटं अन्वेषते** (நஷ்டகஜ: கடம் அந்வேஷதே) என்ற ஒரு ந்யாயம் லோக ப்ரஸித்தமானது. அதாவது, ஒருவன் ஒரு யானையை வைத்துக்கொண்டு ஜீவித்து வந்தான். யானையோ ஒரு ஸமயம் மதம் ஏற்பட்டுத் தன் கட்டை அறுத்துக்கொண்டு எங்கோ அரண்யத்திற்குச் சென்றுவிட்டது. யானைக்காரனுக்கு யானை இல்லாததால் ஜீவனத்திற்குக் கஷ்டமேற்பட்டு, ஆங்காங்கு ஆலயங்களிலும், ப்ராகாரங்களிலும், நதிகளிலும் தடாகங்களிலும் தேடி யானையைக் கண்டுபிடிக்க முடியாமலாகி, யானை நின்றுகொண்டு தன்னிஷ்டம்போல் ஸஞ்சரிக்கும் விசாலமான இடத்தில் கூட யானையைக் காணவில்லையே என்ற ஒரு ப்ரமத்தால் பித்துப் பிடித்தவன் போல் அலைந்துகொண்டு தன் வீட்டிலுள்ள ஒரு குடத்திற்குள் ஒளிந்துகொண்டிருக்குமோ என்ற முட்டாள்

தனத்தால் குடத்திற்குள் யானையைத் தேடினான் என்று சொல்வதுண்டு. ஜயந்தன் செய்த கார்யமும் இதற்கு ஒத்ததாக இருந்தது.

தான் ராமாபராதம் செய்த காரணத்தால் ப்ரம்மாஸ்த்ரம் அவனை எரித்தது. இந்த ஆபத்திலிருந்தும் அவனை மீட்டு வைக்க த்ரிலோகாதிபதியோ, தேவர்களோ, ரிஷிகளோ இவர்கள் கூட அவர்களுக்கு சக்தியில்லாமல் அவனை விரட்டிய பிறகு, ஒரு குக்ராமவாஸியான ஓர் அல்ப மனிதனா நம்மை ரக்ஷிக்கப் போகிறவன் என்ற மூளையில்லாமல் ஒவ்வொரு வீடாக நுழைந்தது மேற்சொன்ன ந்யாயத்திற்குத்தான் ஒத்ததாகிறது. இவ்விதம் மூன்று லோகங்களிலும் சுற்றியும் அந்தந்த வீட்டிலுள்ளவர்கள் இவனுக்கு ஜலம்கூட கொடுக்கவில்லை. இவன் ராமாபராதம் செய்த பாபி என்பதைத் தெரிந்துகொண்டு தங்கள் வீடுகளில் நுழையும் போதே தடியால் அடித்து விரட்டினார்கள். சில வீடுகளில் வாசற் கதவு திறந்து இருக்கும்பொழுது வீட்டுக்காரர்களுக்குத் தெரியாதபடி கதவின் சந்துகளில் ஒளிந்திருப்பான். எப்படியாவது வீட்டுக்காரர்களுக்கு இன்று இல்லாவிட்டாலும் கொஞ்ச காலம் கழித்தாவது கருணை ஏற்படாதா என்ற எண்ணத்துடன் பயந்து ஒளிந்து வந்தான். இவ்விதம் எவ்வளவு நாள்தான் தன்னை ரக்ஷித்துக் கொள்ளமுடியும்? வீட்டுக்காரர்களும் இதையும் தெரிந்துகொண்டு அடிக்கடி கதவு மூலைகளில் காகாஸுரன் ஒளிந்திருக்கிறானோ என்று பார்ப்பதுண்டு. ஒரு நாள், காகாஸுரனை கதவு மூலையில் பார்த்துவிட்டார்கள். மஹா கோபத்தை அடைந்து, வீட்டுக்காரர்கள் எல்லோரும் சேர்ந்துகொண்டு, தடியாலும், கற்களாலும் அடித்து ககாஸுரனை உபத்ரவம் செய்தார்கள். உடனே தான் பிழைப்பது துர்லபம் என்று நினைத்து வெளியில் ஓடிவந்துவிட்டான். மறுபடி ஜயந்தன், रक्षकत्वेन प्राप्तपेक्षया हिंस कत्वेन स्थितस्य मुखमेव शीतल (ரக்ஷகத்வேந ப்ராப்தாபேக்ஷயா ஹிம்ஸ கத்வேந ஸ்திதஸ்ய முகமேவ சீதலம்) என்ற ந்யாயமானது இந்த்ரனுடைய பிள்ளையானதால் அவன் மனதில் உதித்தது. அதாவது :

ஒருவனுக்கு மற்றொருவன் அபராதத்தைச் செய்துவிட்டால் அதிலிருந்து தான் விமுக்தனாவதற்கு, தான் யாருக்குச் சத்ருவாக

ஆனுனே, அவனுக்கு எதிரில் போவதாவது என்ற அஹங்காரத்துடன் வேறு வழியில் போகுபவனிடம் சென்று அவனை சரணுகதி செய்து தன்னை ரக்ஷிக்கவேண்டும் என்று ப்ரார்த்திப்பதுண்டு அவர்களோ, இவனை சத்ருவினிடமிருந்து ரக்ஷிப்பதுபோல் நடித்து அநேக ப்ரகாரமாக இவனைக் கேள்விகள் கேட்பார்கள். தன் வீட்டிற்கு வேண்டிய வேலைகளையும் செய்ய ஏவுவார்கள். இது மிகவும் கஷ்டமானது. அப்படி அவனிடம் கைகட்டி ஸேவிப்பதைக் காட்டிலும், யாருக்கு நாம் அபராதத்தைச் செய்தோமோ அவனையே சரணுகதி செய்வது மேலானது என்பது மேற்சொன்ன ந்யாயத்தின் தாத்பர்யமாகும்.

இதை அனுஸரித்தே காகாஸுரனுடைய மனதிலும், 'நாமோ ராமாபராதம் செய்துவிட்டோம்; இதிலிருந்து நாம் விமுக்தனுவதற்கு மற்றொருவனை சரணுகதி செல்வதில் என்ன ப்ரயோஜனம்? மற்றவர்களை சரணுகதி செய்தும் யாதொரு பயனும் ஏற்படவில்லை இனிமேல் ராமனுடைய பாதத்திலேயே சரண்புகுந்து கதறவேண்டும். இதுவே கடைசி உபாயமாகும்' என்று தீர்மானித்து கடைசியில் ராமனையே சரணமடைந்தான்.

ராமன் பரம கருணுமூர்த்தியானதால்,:

**कथंचित् उपकारेण कृतेनैकेन तुष्यति ।**
**नस्मरत्यपकाराणां शतमप्यात्मवत्तया ॥**

கதம்சித் உபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி ।
ந ஸ்மரத்யபகாராணும் சதமப்யாத்மவத்தயா ॥

என்று சொல்லியிருக்கும் ப்ரகாரம், தனக்கு யாராவது ஒருவன் தன்னிடம் பக்தியைச் செலுத்துபவன் போல் யத்ருச்சையாக நடித்துக்கொண்டு தன்னுடைய நாம கீர்த்தனத்தைச் செய்வதோ, தன்னை ஸ்மரிப்பதோ, அதன் மூலம் உபசரிப்பவனுக இருந்தால் அவனை ரக்ஷிப்பதே தன் கடமை என்ற அபூர்வமான ஸ்வபாவமுள்ளவனுக ராமனைக் கொள்ளவேண்டும். பிறகு அவனிடம் எவ்வித அபராதம் இருந்தாலும் அவைகளைப் பாராட்டமாட்டார் இந்த ஸ்வபாவமுள்ளவரானதால் தான் தன்னுடைய தர்ம பத்னியான ஸீதையை அபஹரித்துச் சென்ற ராவணனுடைய விஷயத்தில் கூட **यदि वा रावणस्वयं** (யதி வா ராவணஸ்வயம்) என்று தன்

காதில் கேட்கும்படி ''ஸ்ரீராமா! நீதான் எனக்கு ரக்ஷகன்'' என்ற வார்த்தையை சொன்னவன் ராவணனுகவே இருந்தாலும் தன் கோஷ்டியில் அவனை ப்ரவேசிக்கச் செய்ய, ஸுக்ரீவன் மூலம் ஸ்ரீராமன் அழைத்துவர ஆக்ஞாபித்தார். இது யுத்த காண்டத்தில் விபீஷண சரணுகதி கட்டத்தில் ப்ரஸித்தமானது.

मित्रभावेन संप्राप्तं नत्यजेयं कथंचन ।
दोषोयद्यपि तस्यस्यात् सतामेतदगर्हितम् ॥

மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதம்சந
தோஷோ யத்யபி தஸ்யஸ்யாத் ஸதாமேதத‌கர்ஹிதம்

என்றும், 'என்னை பக்தியுடன் சரணமடையாத போனுலும் வெளிக்கு கபடமாக சரணமடைந்தவன்போல் நடித்தால் போதும் அவனிடத்தில் அவனை தன் கோஷ்டியில் சேர்த்துக்கொள்ளாமல் இருப்பதற்கு அந்யர்கள் எவ்வளவு தோஷத்தை நிரூபித்துக் காட்டினுலும், அவர்கள் நிரூபித்துக் காட்டியதற்கு மேலான தோஷங்கள் அவனிடம் இருந்தாலும், அந்த தோஷங்களை கவனித்து என் கோஷ்டியில் சேர்த்துக்கொள்ளாமல் அவனை த்யாகம் செய்யமாட்டேன். ஸர்வ சக்திமானுன எனக்கும் சரணுகதனை த்யாகம் செய்வதில் சக்தியே இல்லை. இவ்விஷயமானது ஸகல ஸஜ்ஜனங்களுடைய கோஷ்டியில் ச்லாகிக்கத் தக்கதாகவே ஆகும்' என்று சொன்ன கருணுமூர்த்தியல்லவா ஸ்ரீராமன் இந்த பகவானிடத்திலேயே ஜயந்தன் என்ற காகாஸுரன் சரண் புகுந்தான். இதிலும் சரணுகதி சாஸ்த்ரத்தை அறிந்து அவன் போகவில்லை. எல்லாராலும் கைவிடப்பட்ட நமக்கு ராமன்தான் இனி வாஸஸ்தானம் என்ற எண்ணத்துடன் வந்தான். ராகவனுடைய அப்ராக்ருத மங்கள விக்ரஹத்தை ஸஜ்ஜனங்களுக்கு வாஸஸ்தானமாகிய நிவாஸ வ்ருக்ஷமாகவும், ஸ்ரீமத் ராமாயணத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது.

निवासवृक्षः साधूनां अपान्नानां परागतिः ।
आर्तानां संश्रयश्चैव यशसश्चैकभाजनम् ।

நிவாஸவ்ருக்ஷ: ஸாதூநாம் ஆபந்நாநாம் பராகதி :
ஆர்த்தாநாம் ஸம்ச்ரயச்சைவ யசஸச்சைக பாஜநம்

என்று கிஷ்கிந்தா காண்டத்தில், தாரை, ஸ்ரீ ராமனை நிவாஸ வ்ருக்ஷம் என்று வர்ணித்திருக்கிறாள்.

वासुदेवतरुच्छाया नातिशीता नघर्मदा ।
नरकाङ्गार शमनी सा किमर्थं न सेव्यते ॥

வாஸுதேவதருச்சாயா நாதிசீதா நகர்மதா ।
நரகாங்கார சமநீ ஸா கிமர்த்தம் ந ஸேவ்யதே ॥

என்ற மற்றொரு சாஸ்த்ரமும், ஸர்வ ஜகத்திற்கும் வாஸஸ்தான மாயும், ஸ்வயம் ஜ்யோதி ஸ்வரூபமாயும் விளங்கி வரும் ஸ்ரீராமன் என்ற பெயருடனே, க்ருஷ்ணன் என்ற பெயருடனே விளங்கி வரும் பகவானே நிவாஸ வ்ருக்ஷமானதால், அதனுடைய சாயை யில் வஸிப்பவர்களுக்கு சீதோஷ்ண நிலையானது ஸமமாகவே இருந்து வருவதுடன்கூட நரகம் என்ற பாபத்தையும் நிவர்த்தி செய்து வைத்து ஆச்ரயித்தவர்களுக்குப் பரம ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியது. இவ்விதமிருக்கும்பொழுது பகவானாகிய நிவாஸ வ்ருக்ஷத்தின் சாயையை எக்காரணத்தால் ப்ராணிகள் ஆச்ரயிக்காமலிருக்கிறார்களோ என்று மேற்சொன்ன சாஸ்த்ரம் வருந்துகிறது.

இதை அனுஸரித்துத்தான் ஜயந்தனும் ராமனாகிய நிவாஸ வ்ருக்ஷத்தினுடைய நிழலை ஆச்ரயித்தவனாகிவிட்டான். மற்ற இடங்களில் சென்று தன்னை ரக்ஷித்துக்கொள்ள முடியாமல், ராமன்தான் தனக்கு கதி என்று அவன் மனதில் உதித்ததினா லேயே, முன்பு உள்ள அவன் ஸ்வபாவத்திற்கு, இப்பொழுதுள்ள ஸ்வபாவம் வேறாக மாறிவிட்டதால் ஸஜ்ஜனமாகவே ஆகி விட்டான். இதனால் साधूनां निवासवृक्षः (ஸாதூநாம் நிவாஸவ்ருக்ஷ:) என்று சொல்லும் சாஸ்த்ரத்திற்கும் விரோதமில்லை.

இவ்விதம் அந்த ஜயந்தன் என்ற காகாஸுரன் ராமனை வந்து சரணாகதி அடைந்தவுடன் பகவானும்,

स तं निपतितं भूमौ शरण्यः शरणागतम् ।
वधार्हमपि काकुत्स्थः कृपया पर्यपालयत् ॥

ஸ தம் நிபதிதம் பூமௌ சரண்ய: சரணாகதம் ।
வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத் ॥

என்றபடி, ராமனே தன்னிடத்தில் வந்தவனை ஸகலவிதமான ஆபத்துக்களிலிருந்தும் ரக்ஷிக்கிறது என்ற ஸ்வபாவமுள்ளவரான தால், அந்த காகாஸுரன் தனக்கு ப்ரதிகூலம் செய்தாலும் இப்பொழுது பூமியில் வந்து விழுந்து சரணமடைந்துவிட்டான். இந்த்ரனுடைய பிள்ளையாக இருக்கும் காரணத்தால் தேவஜாதியில் சேர்ந்தவன் என்பதைக்கொண்டு, பூஸ்பர்சம் ஏற்பட ந்யாயமில்லாதபோனாலும், பூமியில் வந்து விழுந்த காரணத்தால் அவன் ஸாதுவாக ஆகிவிட்டான் என்பதை அறிந்து அநந்யகதிகன் என்று அவனை அறிந்து, கொல்லக்கூடிய அபராதத்தை அவன் செய்தவனாக இருந்தாலும்கூட பரம காருணிகனானதால், ராமன் அவனை ரக்ஷிக்கவே ரக்ஷித்தார்.

ஆகிலும், அந்த ஜயந்தனைப் பார்த்து பகவான் சொன்னதாவது :

''ப்ரம்மாஸ்த்ரமோ, இதுவரையிலும் மோகமாக, அதாவது தன் கார்யத்தைச் செய்யாமல் திரும்பி வந்ததில்லை. அதற்கு ஏதாவது ஒரு ஆஹாரம் கொடுக்கத்தான் வேண்டும். உன்னை ஸம்ஹாரம் செய்வதற்காக நான் ப்ரயோகம் செய்த அஸ்த்ரத்திற்கு ஏதாவது உன்னுடைய ப்ரதானமான அவயவத்தையாவது நீ அதற்கு ஆஹாரமாகக் கொடுத்துத்தான் ஆகவேண்டும் என்று சொன்னார்.

ஜயந்தனும், ''ஸ்வாமின்! நான் மஹா பாபிதான். வேறு கதியில்லாததால் தங்களையே நான் எப்பொழுது சரணமடைந்து விட்டேனே, ஆகையால் என்னைத் தாங்கள் ரக்ஷித்துத்தான் ஆக வேண்டும்; தாங்களோ சரணாகத ஸம்ரக்ஷகன்.

**सर्वेन्द्रियाणां नयनं प्रधानं** (ஸர்வேந்த்ரியாணாம் நயனம் ப்ரதானம்) என்ற வாக்யப்படி, நேத்ரம் (கண்) ப்ரதானமானதாலும், அதிலும் வலது கண் மிகவும் முக்யமானதால், அந்த முக்யமான அவயவத்தை தங்களுடைய ப்ரம்மாஸ்த்ரத்திற்கு அர்ப்பணம் செய்ய நான் ஸித்தமாக இருந்துவருகிறேன். இதுமுதல் ஒரு கண்ணுடன் நான் ஜீவித்துவருகிறேன். ஏகாக்ஷி என்ற பெயரும் எனக்கு விளங்கிவரட்டும்'' என்று சொல்லி ராமன் காலில் விழுந்து யாசித்தான்.

கருணாமூர்த்தியான ராமனும், ப்ரம்மாஸ்த்ரத்தை உபஸம்ஹாரம் செய்துகொண்டு, அதனால் ஜயந்தனுடைய

வலது கண்ணை அபஹரித்துக்கொண்டுவிட்டார். அவனுடைய ஸம்ஹாரத்திற்காகவே ப்ரம்மாஸ்த்ர ப்ரயோகம் என்ற கர்மா வானது ஆரம்பிக்கப்பட்டாலும் அவ்விதம் நடைபெறுமல் போன திலிருந்து ப்ராணிகள் அறிந்துகொள்ள வேண்டிய விஷயமோ, ப்ரபலமான ஒரு கர்மாவை நாம் ஆரம்பித்தாலும், அதற்கும் ப்ரபலமான ப்ராரப்த கர்மாவினுல் ஆரம்பித்த கர்மாவிற்கு ஸமாப்தி ஏற்படாமலாகிவிடலாம். ராமனுலேயே ஜயந்தனின் ஸம்ஹாரம் என்ற கர்மாவானது ஆரம்பிக்கப்பட்டும், எல்லாவற் றிற்கும் ப்ரபலமான ராமனுடைய கருணையினுல் அது ஸமாப்தி அடையாமல் நின்றுவிட்டதை உதாஹரணமான ாந்துகொள்ளவும்

இதனுல் அபாரமான கருணநிதியே ராமன் என்பதை அறிந்துகொள்ளலாம்.

இந்தக் காகாஸுரனும் ப்ரம்மாஸ்த்ரத்திற்கு தன் வலது கண்ணைக் கொடுத்துவிட்டு, தன் ப்ராணன் பிழைத்தால் போதும் என்ற எண்ணத்துடன் மறுபடியும், ராமனுடைய காலில் விழுந்து நமஸ்காரம் செய்துவிட்டு, ராமனுடைய ஸந்நதியிலேயே ராம னுடைய தகப்பனுரான தசரதருக்கும் நமஸ்காரத்தைச் செய்து விட்டு, ராமனுடைய அனுக்ஞையைப் பெற்றுக்கொண்டு ஸ்வர்க்க லோகம் சென்றுன். தன்னுடைய லோகமாகிய ஸ்வர்க்கத்தில், தசரதர் வாஸம் செய்துகொண்டு வருகிறபடியால் தன் புத்ரனுன ராமனுக்கு அபராதம் செய்த ஜயந்தன் மறுபடியும் ஸ்வர்க்க லோகத்திற்கு வருகிருனே என்று, அவர் தேவர்களுடைய ஸமாஜத்தில் ப்ரசுரம் செய்து, அங்கிருந்தும் தன்னைத் தள்ளி விடுவாரோ என்ற எண்ணத்தால் பயந்து, ராமனிடம் "நாதா! நான் தங்களுக்குச் செய்த அபராதத்தினின்றும் விமுக்தனுகி விட்டேன். முன்போல் தங்கள் பிதா என்னை நினைத்து, ஸ்வர்க்க வாஸத்தை எனக்குக் கொடுக்காமல் இருக்கும்படி அருள் செய்ய வேண்டும். தங்கள் பிதா என்னை யோக்யனுகவே ஸ்வீகரித்துக் கொள்ளவேண்டும்" என்று ப்ரார்த்தித்துக்கொண்டு தசரதருக் காக ஒரு நமஸ்காரத்தைச் செய்து, ராமனுல் அநுக்ரஹ பூர்வக மாக விடுதலை செய்யப்பட்டு, ஸ்வர்க்க லோகம் சென்றுன்.

"இந்த வ்ருத்தாந்தத்தை ராமனிடம் நான் சொன்னதாகத் தாங்கள் சொன்னீர்களேயானுல், தாங்கள் என்னிடம் வந்து என்னைப் பார்த்துவிட்டு, ஸமாதானம் செய்து திரும்பிப்போன

விஷயத்தை ராமன் நம்புவார். இந்த ரஹஸ்யமானது எனக்கும் ராமனுக்கும் மட்டுமே தெரிந்ததானதால் தாங்கள் போய் சொல்லும்பொழுது, என்னுடன் தாங்கள் சல்லாபம் செய்ததை நம்புவார்'' என்று ஆஞ்ஜனேய ஸ்வாமியினிடம் ஸீதா தேவி சொன்னாள். அத்துடன் ராமனிடம் நீர் முக்யமாகச் சொல்ல வேண்டியதோ ?

मत्कृते काकमात्रे तु ब्रह्मास्त्रं समुदीरितम् ।
कस्माद्योमां हरः त्वत्तः क्षमसे त्वं महीपते ॥
स कुरुष्व महोत्साहः कृपां मयि नरोत्तम ।
त्वया नाथवतो नाथ ह्यनाथा इव दृश्यते ॥
आनृशंस्यं परोधर्मः त्वत्त एव मया श्रुतः ।
जानामि त्वां महावीर्यं महोत्साहं महाबलम् ॥
अपारपारं अक्षोभ्यं गाम्भीर्यात्सागरोपमम् ।
भर्तारं ससमुद्रायाः धरण्यां वासवोपमम् ॥
एवं अस्त्रविदां श्रेष्ठः सत्यवान्बलवानपि ।
किमर्थं अस्त्रं रक्षस्सु न योजयसि राघव ॥

மத்க்ருதே காகமாத்ரேது ப்ரம்மாஸ்த்ரம் ஸமுதீரிதம் !
கஸ்மாத்யோமாம் ஹர: த்வத்த: க்ஷமஸே த்வம் மஹீபதே
ஸ குருஷ்வ மஹோத்ஸாஹ: க்ருபாம் மயி நரோத்தம ।
த்வயா நாதவதோ நாத ஹ்யநாதா இவ த்ருச்யதே ॥
ஆந்ருசம்ஸ்யம் பரோதர்ம: த்வத்த ஏவ மயா ச்ருத: ।
ஜாநாமி த்வாம் மஹாவீர்யம் மஹோத்ஸாஹம் மஹாபலம் ॥
அபாரபாரம் அக்ஷோப்யம் காம்பீர்யாத்ஸாகரோபமம் ।
பர்த்தாரம் ஸஸமுத்ராயா: தரண்யாம் வாஸவோபமம்
ஏவம் அஸ்த்ரவிதாம் ச்ரேஷ்ட: ஸ்த்யவாப் பலவாநபி
கிமர்த்தம் அஸ்த்ரம் ரக்ஷஸ்ஸு ந யோஜயஸி ராகவ

ராமா! என்னுடைய விஷயத்தில் கேவலம் ஒரு காகாஸுரனைக் கூடக் கொல்ல ப்ரம்மாஸ்த்ர ப்ரயோகஞ் செய்தாயே, உன்னுடைய ஸமீபத்தை விட்டு என்னைப் பிரித்து, அபஹரித்துக் கொண்டுபோன ராவணனிடத்தில் நீ பொறுமையாக இருப்பதின் காரணமென்ன? அல்லது, என்னை ரக்ஷிக்க வேண்டுமென்ற

க்ருபைதான் உனக்கில்லையா? ‘அந்யர்கள் துக்கத்தை அனுபவிப்பதைப் பார்த்து நான் ஸஹிக்கமாட்டேன்’ என்று சொன்ன நீ என்னுடைய விஷயத்தில் மஹோத்ஸாஹத்தோடு கூட க்ருபையைச் செய்து என்னுடைய துக்கத்தையும் நிவ்ருத்தி செய்து வைத்து, ‘பரதுக்கத்தை ஸஹிக்கமாட்டேன்’ என்று சொன்ன உன் ஸித்தாந்தத்தையும் ப்ரகாசப்படுத்த வேண்டாமா! நீ நரச்ரேஷ்டனல்லவா? நான் இவ்விதம் துக்கித்துக்கொண்டிருக்கும் காலத்தில் உன்னை எப்படி நரோத்தமன் என்று சொல்ல முடியும்? என்னை ஜீவிக்கச் செய்து, உன்னுடைய நரோத்தமத்வம் என்ற ஸித்தாந்தத்தை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்து வெளியில் அதை ப்ரகாசிக்கச் செய்யவேண்டும். நீ உயர்ந்த ஒரு புருஷன் எனக்கு நாதனாக இருக்கும்பொழுது, அனாதையான ஸ்த்ரீபோல நான் தபித்து வருவது உனக்கு அழகாகுமா? ஒரு ஸந்தர்ப்பத்தில் நானும் நீயும் சேர்ந்திருக்கும்பொழுது, உனக்கு அபிமதமான தர்மம் எது என்று நான் கேட்க, ‘மற்றொருவன் துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருப்பதைப் பார்க்க நான் ஸஹிக்க மாட்டேன், அதுதான் மேலான தர்மம். அதுதான் எனக்கு அபிமதமான தர்மமும். என் ஸ்வபாவமும் அதுதான் என்பதை எனக்கு நீ ரஹஸ்யமாகச் சொல்லி யிருக்கிறாயல்லவா? மற்றவர்கள் மூலமாக நான் இதைத் தெரிந்துகொண்டதும் இல்லை. நீ நேரிலே சொல்லி நான் தெரிந்துகொண்டேன். நீ சொல்லி நான் கேட்கதோடு நிற்கிறதன்னியில் அநுஷ்டானத்தில் காணோம்! அதன் காரணமென்ன’’ என்று நான் கேட்டதாக ராமனிடத்தில் நீ ரஹஸ்யமாகச் சொல்லவேண்டும்.

இவ்விதம் ஸீதை கேட்டதோ, ராமன் அதற்கு பதில் சொன்னதோ எவ்விதமான அபிப்ராயத்துடன் இருக்கும் என்பதை ஆலோசித்தாலோ ஸீதையும், ராமனும் ஸமாச்லேஷம் (ஆலிங்கனம்) செய்து கொண்டிருக்கும் ஸமயத்தில் இந்தக் கேள்வியும் பதிலும் ஏற்பட்டதால் ‘ஒரு நிமிஷம்கூட உன்னை விட்டு நான் பிரியமாட்டேன். நீ துக்கப்படுவதைப் பார்த்து நான் ஸஹிக்கவும் மாட்டேன்’ என்ற ராமனுடைய அபிப்ராயத்தைத் தெரிந்து கொள்ளத்தான் ஸீதாதேவி ராமனிடம் ப்ரச்னம் செய்ததாகத் தெரிந்துகொள்ளவேண்டும். இவ்விதம் ஸீதையானவள் ப்ரச்னம் செய்ததோ, ராமன் தன்னை ஆலிங்கனம் செய்துகொண்ட

காலத்தில்தான். மற்ற ஸந்தர்ப்பத்தில் இதை ப்ரச்னம் செய்தால் இதற்கு பதில் வராது என்றும் ஸீதையின் எண்ணமுண்டு.

ஒரு நதியைத் தாண்டி அக்கரை செல்லும் ப்ராணிகளுக்கு ஓடத்தில் ஏற்றி அக்கரை செல்லும் நாவிகர்கள், ஜனங்கள் ஓடத்தில் ஏறுவதற்கு முன்பு, அவர்களிடமிருந்து பணத்தைக் கேட்கும் வழக்கமில்லை. ஜனங்கள் ஒரு ஸமயம் அதிகமான கட்டணம் என்று நினைத்து ஏருமல் போய்விடுவார்களோ என்று எண்ணம் ஏறின பிற்பாடுதான் கட்டணம் கொடுப்பது வழக்கம். கேட்பதும் வழக்கம். அதுபோல், தன்னிடம் ஸம்பந்தப்படாத காலத்தில் ராமனிடம் 'உனக்கு எந்த தர்மத்தில் அபிமதம்' என்று கேட்டால் பதில் வராது என்று நினைத்து தன்னிடம் ஸம்பந்தப் பட்ட ஸமயத்தில் ப்ரச்னம்செய்து தெரிந்துகொண்டாள். இது தான் ப்ரச்னம செய்த ஸீதையினுடைய தாத்பர்யமும், பதில் சொன்ன தாத்பர்யமும், இவ்விதம் தற்காலத்தில் மட்டும் என்னுடைய துக்கத்தைப் பார்த்து ஸஹித்து எப்படியிருக்கிருர் என்பதை மாத்திரம் நான் ரஹஸ்யமாகக் கேட்டதாகச் சொல்ல வேண்டும்.

அதிரஹஸ்யமான அஸ்த்ரங்களை அறிந்தவர்களுக்குச் ச்ரேஷ்ட புருஷனுயும் ஸத்யம் தவருமல் நடக்கும் ஸ்வபாவமுள்ள வராயும், பலிஷ்டனுயும் ராமன் இருந்தும் ராவணன் முதலில் ராக்ஷஸர்களிடம் திவ்யமான அஸ்த்ரங்களை ப்ரயோகம் செய்து என்னை ப்ரக்ருதமான துக்கத்திலிருந்தும் விமோசனம் செய்து வைக்காமல் இருப்பதின் காரணம் யாது? என்று நான் கேட்ட தாகத் தெரிவிக்கவும். நரகாளோ, கந்தர்வாளோ, அஸுராளோ, மருத்துக்களோ, இவர்கள் ராமனுக்கெதிரில் நின்றுகொண்டு யுத்தத்தில் ஜயிக்க மூடியுமா? ராமனுக்கு என்னிடத்தில் கொஞ்ச மேனும் ப்ரீதி இருந்தால் ராக்ஷஸர்களை ஏன் த்வம்ஸம் செய்ய வில்லை? லக்ஷ்மணஸ்வாமிதான் ராமனிடம் உத்திரவு பெற்றுக் கொண்டு என்னை இந்த துக்கத்திலிருந்தும் விடுதலை செய்து வைக்காமல் உபேக்ஷை செய்வதின் காரணமென்ன? ராமனே லக்ஷ்மணனே இவ்விருவர்களும் அக்னியும், வாயுவும் சேர்ந்தால் எவ்வளவு பராக்ரமமுள்ளவர்களாவார்களோ அதற்கும் மேலான பராக்ரம முள்ளவர்களல்லவா: தேவர்கள்கூட ராமன், லக்ஷ்மணன் இவர்களின் எதிரில் நிற்க முடியாதே! அவ்விதமிக்கும் பொழுது என்னை அவர்கள் உபேக்ஷித்திருப்பது என்னுடைய

தௌர்பாக்யம் தான்! இவைகள் ஒன்றையும் விடாமல் ராகவனிடம் தெரிவித்து என்னை இந்த துக்கத்திலிருந்தும் விமோசனம் செய்துவைக்க வேண்டும்'' என்று ஸீதை மிகவும் வருத்தத்துடன் ஆஞ்ஜனேய ஸ்வாமியினிடம் தெரிவித்தாள்.

ஆஞ்ஜனேயஸ்வாமி ஸீதையின் துக்கத்தைப் பார்த்து,

**अथाब्रवीन्महातेजा हनुमान्मारुतात्मजः ।**
**त्वच्छोकविमुखो रामो देवि सत्येन ते शपे ॥**

அதாப்ரவீந் மஹாதேஜா ஹநூமாந் மாருதாத்மஜ: ।
த்வச்சோகவிமுகோ ராமோ தேவி ஸத்யேந தே சபே ॥

என்பதினால், ''அம்மணி! ராமன் உன்னுடைய விரஹத்தால் மிகவும் துக்கஸாகரத்தில் மூழ்கிக்கொண்டு வேறு விஷயாந்த்ரத்தில் கொஞ்சமேனும் ப்ரவ்ருத்தி இல்லாமல் எப்பொழுதும் உன் நினைவாகவே, கனவில்கூட உன்னையே கூப்பிட்டுக்கொண்டு கதறிக்கொண்டு வருகிறார். இவ்விதம் ராமனே துக்கத்தை அனுபவித்துக்கொண்டு வரும்போது அதைப் பார்த்து லக்ஷ்மண ஸ்வாமிக்கும் அடிக்கடி ஸஹிக்க முடியாததான துக்கம் ஏற்பட்டுக் கொண்டு வருகிறது. உன் விஷயத்தில் அவர்கள் இருவர்களும் உபேக்ஷையாக இருப்பார்களோ என்ற சங்கை கொஞ்சமேனும் வேண்டாம். அவர்கள் அனுபவிக்கும் துக்கத்தை என்னால் வர்ணிக்க முடியாது. மிகவும் சீக்ரத்தில் துக்கத்தின் முடிவை அடைந்து, நீ மிகவும் ஸந்தோஷத்துட னிருக்கப்போகிறாய். உன்னை எப்போது பார்க்கப்போகிறோமென்ற ஆவலுள்ள ராம லக்ஷ்மணர்கள் தன் கோபத்தால் இந்த லங்கா நகரத்தையே பஸ்மமாகச் செய்துவிடப்போகிறார்கள். அதிசீக்ரத்தில் ராவணனைக் கொன்றுவிட்டு உன்னை ஸ்ரீராமன் அயோத்திக்குக் கொண்டு சேர்க்கப்போகிறார். ராகவனிடத்தில் தெரியப்படுத்திக்கொள்ள வேண்டிய வேறு வ்ருத்தாந்தம் எது இருந்தாலும் அவதச் சொல்லவேண்டும் ராமனோ, லக்ஷ்மணனோ, வானராதிபதியான ஸுக்ரீவனோ, மற்ற வானரங்களோ, தங்களை இப்பேர்ப்பட்ட துக்கத்திலிருந்து விடுதலை செய்து வைக்கிற விஷயத்தில் பரம உத்ஸாஹத்துடன் கூடியவர்களாயிருக்கிறார்கள். தாங்கள் கொஞ்சமேனும் கவலையை அடையவேண்டாம்'' என்று ஆஞ்ஜனேய ஸ்வாமி ஸீதாதேவியை ஆச்வாஸப்படுத்தி வரும்போது, ஸீதாதேவியானவள் கொஞ்சம் ஸமாதானத்தை அடைந்து

ஆஞ்ஜனேய ஸ்வாமியினிடம் முக்யமாகத் தெரிவித்துக்கொள்ள வேண்டிய விஷயத்தைச் சொல்கிறுள்.

कौसल्य लोकभतारं सुषुवे यं मनस्विनी ।
तं ममार्थे सुखं पृच्छ शिरसा चाभिवादय ॥

கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ ।
தம் மமார்த்தே ஸுகம் ப்ருச்ச சிரஸா சாபிவாதய ॥

என்பதினுல் ஸீதாதேவி ஸ்ரீராகவனிடம் தெரிவிக்கும்படி சொல்வதாவது :

"ஹே ஆஞ்ஜனேயரே ! லோகத்தில் ஸ்த்ரீகள் இஹலோகத்திலும், பரலோகத்திலும் தன்னை ரக்ஷிப்பதற்காகத்தான் புத்ரர்களை அடைகிறுர்கள். என் மாமியாரான கௌஸல்யாதேவியோ, விசாலமான குணத்தோடு கூடிக்கொண்டிருக்கும் காரணத்தால், ஸர்வ லோகத்தையும் ரக்ஷிக்கக்கூடிய ஸாமர்த்யமுள்ள புத்ரன் தனக்கு வேண்டுமென்று ஸங்கல்பம் செய்துகொண்டு வ்ரதானுஷ்டானங்களைச் செய்துவந்தாள். அஷ்டாக்ஷரீமஹாமந்த்ரத்தை வெகு காலம் ஜபித்து மஹாவிஷ்ணுவை உபாஸனம் செய்த தபோமஹிமையினுல் ஸாக்ஷாத் மஹாவிஷ்ணுவையே தன்னுடையபுத்ரனுகப் பெற்று ஸர்வ லோகத்தையும் ரக்ஷித்துவருகிறுள். லோகக்ஷேமத்திற்காக என்னுடைய மாமியாரான கௌஸல்யாதேவி இப்பேர்ப்பட்ட புத்ரனைப் பெற்றுள். ப்ராக்ருதமான ஸ்த்ரீகளைப் போல் தன்னுடைய க்ஷேமத்திற்கு மாத்ரம் இந்த புத்ரன் விஷயத்தில் ச்ரமப்படவில்லை. அவ்விதம் ஸங்கல்பம் செய்த கௌசல்யா தேவியினுடைய மனேரதமானது நிஷ்பலமாவது ந்யாயமில்லை. ஹே ராமா! லோகத்றை ரஹிப்பதற்காகவல்லவா உன்னை உன் தாயார் பெற்றிருக்கிறுள். அந்த லோகம் என்ற பதத்தில் நானும் ஒருவள் சேர்ந்தவளல்லவா? என்னை இந்த துக்கத்திலிருந்தும் நீ விடுவித்து வைக்காமல் உதாஸீனமாக இருக்கும் காரணமென்ன ? நீ இவ்விதம் அலக்ஷ்யமாக இருந்தல் உன்னை உன்தாயார்பெற்ற ப்ரயாஸம் வீணுகவல்லவா ஆகிவிடும்? என்னை ரக்ஷிக்கவேண்டியது என்பதை நான் ப்ரார்த்திக்க வேண்டியதில்லை. ராமா, அந்தக் கவலை உன்னைத்தான் சார்ந்தது. அனுல், நான் அவஸரப்படுவதோ, விளம்பத்தை பொறுமையுடன் ஸஹிக்க சக்தியில்லாததால்தான். நீ க்ஷேமமாயிருந்தால், என்றும் எனக்கு துக்கத்திலிருந்தும் கட்டாயம் விமோசனம் உண்டு. அதை த்ருடமாக நம்

பினவள் தான். நீ ஜீவதசையோடு இருக்க வேண்டுமென்பது தான் என்னுடைய ப்ரார்த்தனையன்றியில், என் உயிர்கூட எனக்குப் பெரிதல்ல உன்னை நான் பர்த்தாவாக அடைந்த பாக்யத்தால் நீ உள்ளவரையிலும் எனக்கு எப்போதும் ஸௌக்யம் உண்டு. நீ ஸுகமாக இருந்தால் போதும் என்று நான் மிகவும் ஆவலாகக் கேட்டதாக மறக்காமல் ராமனிடம் தெளிவாகச்சொல்லவேண்டும் ப்ராணிகள் ராமனை அண்டி ராமன் மூலமாக ஒருபுருஷார்த்தத்தை அடையவேண்டுமென்று எண்ணுவதுபோல், நானும் ராமன் மூலமாக ஒரு புருஷார்த்தத்தை அபேக்ஷித்தால் லோகம் எப்படி ராமனை நமஸ்கரித்து ப்ரார்த்திக்குமோ அதுபோல் நானும் நமஸ்காரம் செய்து ப்ரார்த்தனை செய்யவேண்டும்.

ஆகையால், शिरसा (சிரஸா) அதாவது மிகவும் தலைவணங்கி ராமனை நமஸ்கரித்து ப்ரார்த்தித்துக்கொண்டதாகச்சொல்வதோடு கூட என்னுடைய நமஸ்காரம் என்று தாங்களே ஒரு நமஸ்காரம் செய்யவேண்டும். நமஸ்காரம் செய்துகொண்டு ப்ரக்ருத துக்கத்திலிருந்து என்னை விடுவித்து வைக்கவேண்டும் என்று நான் ப்ரார்த்தித்துக்கொண்டதாக என்னுடைய ஸ்தானத்தில் நீரே ஒரு நமஸ்காரம் செய்து ப்ரார்த்திக்க வேண்டும்'' என்று ஸீதாபராட்டி ஆஞ்ஜனேயரிடத்தில் தெரிவித்துக்கொண்டாள்.

ஒரு நாயகியானவள் தன் நாயகனுக்கு நமஸ்காரம் செய்வது சாஸ்த்ர ஸம்மதமாகுமா? அப்படி நகஸ்கரித்தாலும் ஸுவாஸினிகள் நமஸ்காரம் செய்தால் தீர்க்க ஸுமங்கலீ பவ என்றுதானே ஆசீர்வாதம் செய்யவேண்டும். பர்த்தாவவன் தன் பத்னிக்கு, அவள் நமஸ்காரம் செய்யும்போது, தீர்க்க ஸுமங்கலீ பவ என்று ஆசீர்வாதம் செய்தானேயானால், தன்னுடைய ஆயுளை வ்ருத்தி செய்துகொள்ளத் தானே தன்னை ஆசீர்வதித்துக்கொண்டான் என்றுதானே ஆகும். அது சாஸ்த்ர ஸம்மதமாகுமா? அந்த வழக்கம் லோகத்தில் இல்லை. அப்படியிருக்கும்போது ஸீதாதேவி மட்டும் இவ்விதம் தன் பர்த்தாவுக்கு நமஸ்கரிக்கலாமா என்ற சங்கை ஏற்படக்கூடும். அதற்கு ஸமாதானமாக அடியிற்கண்ட விஷயத்தை அறிந்துகொள்ளவும்.

அதாவது कर्मणैव हि संसिद्धिं आस्थिता जनकादयः (கர்மணைவ ஹி ஸம்ஸித்திம் ஆஸ்திதா ஜநகாதய:) என்ற ஸ்ம்ருதி வசனப்படி, ஆசாரத்தை ப்ரதானமாக அவலம்பித்த மஹா சீலனான ஜனக

மஹாராஜனுடைய புத்ரீ என்று ப்ரஸித்தி அடைந்த ஸீதா தேவியே இவ்விதம் பர்த்தாவிற்கு நமஸ்காரம்செய்திருக்கும்போது இதைக்காட்டிலும் வேறு ப்ரமாணாந்த்ரத்தை எதற்காக அந்வேஷணம் செய்யவேண்டும்? ஸ்த்ரீகள் தன் பர்த்தாவிற்கு நமஸ்காரம் செய்யவேண்டும் என்பதற்கு ப்ரக்ருதத்திலுள்ள ஸீதாதேவியின் நமஸ்காரமே மேலான ப்ரமாணமாகும். ஆகையால் ஸகல ஸ்த்ரீகளும் தன் தன் பர்த்தாவிற்கு நமஸ்காரம் செய்யவேண்டியது அவச்யம்தான். 'தீர்க்க ஸுமங்கலீ பவ' என்று பர்த்தா தன் பத்னிக்கு ஆசீர்வாதம் செய்யலாமா என்றால், அவ்விதம் வேண்டாம். ஸுசீலா பவ, ஸதாசார ஸம்பந்நா பவ, பத்ரு பக்திமதீ பவ என்று ஆசீர்வதிக்கக் கூடாதா? பர்த்தாவைக் காட்டிலும் ஸ்த்ரீகளுக்கு மேலான தெய்வம் ஏது?

दु : शीलः कामवृत्तो वा धनैर्वा परिवर्जित :
स्त्रीणां आर्यस्वभावानां दैवतं परमं पतिः ॥

து:சில: காமவ்ருத்தோவா தனைர்வா பரிவர்ஜித:
ஸ்த்ரீணாம் ஆர்யஸ்வபாவாநாம் தைவதம் பரமம் பதி:

என்ற மநு வசனத்தினால், ஸ்த்ரீகளுக்கு பர்த்தா தெய்வமாக இருக்கும்போது, ஸ்த்ரீகளுடைய நமஸ்காரத்திற்கு பர்த்தாவானவன் அர்ஹமாகாகவிருப்பானா? ஆகையால் பர்த்தாவிற்கு ஸ்த்ரீகள் நமஸ்காரம் செய்யலாம். அது விஷயத்தில் ராமாயணமே மூலப்ரமாணமாகும்.

ஆனால், ஸ்த்ரீகள் பர்த்தாவிற்கு நமஸ்காரம் செய்யவேண்டும் என்பதற்கு ப்ரக்ருதமான ஸந்தர்ப்பம் ப்ரமாணமாக ஆகாது தான். ப்ரணய கோபத்தால் ஸீதாதேவி ராமனை இவ்விதம் பேசினாள் என்று ஏன் சொல்லக் கூடாது? தன்னிடத்தில் அபிமானமுள்ள ராமன் இவ்வளவு காலமாகத் தன்னை உபேக்ஷித்து வந்த கோபாவேசத்தால் நமஸ்கார வசனம் ஏற்பட்டது என்பது தான் மேற்சொன்னதின் தாத்பர்யம் என்றாலோ, அவ்விதம் அர்த்தத்தை க்ரஹித்துக் கொள்ளக் கூடாது. ஹநுமானுடைய திவ்யமான வார்த்தைகளால் ப்ரணய கோபத்திற்கு சாந்தி ஏற்பட்டுவிட்டது. ஆகையால் கோபாவேசத்தில் சொன்ன வார்த்தையல்ல. தர்மமாகவேதான் சொன்ன வார்த்யையாகும்.

ஆனுல் ममार्थे (மமார்த்தே) என்ற பதத்திற்கு 'என்னுடைய கார்யம் நிறைவேறுவதற்காக ஆஞ்ஜனேயரே நீர் நமஸ்காரம் செய்ய வேண்டும்' என்று ஸீதாதேவி கேட்டுக்கொண்டாள் என்ருல், பத்னீ பர்த்தாவுக்கு நமஸ்காரம் செய்தாள் என்ற நிபந்தனே ஏற்படாது. அப்படியானுல் மேற்சொன்ன பூர்வபக்ஷ ஸித்தாந்தத்துக்கு அவகாசம் ஏற்படாமல் போய்விடும். இவ்விதம் ஸமாதானம் சொல்வது ஸரியாக ஆகாதா? என்று யோஜிப்பதும் ஸரியல்ல.

மமார்த்தே என்பதற்கு 'என் கார்யம் ஸித்திப்பதற்கு' என்று மாத்ரம் அர்த்தமல்ல. 'என் கார்யம் ஸித்திப்பத்ற்கு என் நமஸ்காரத்தை நீங்கள் ரொம்ப தெளிவாகச் சொல்லவேண்டும்' என்பது தான் உசிதமான தாத்பர்யமாக ஆகும். ஆகையால் பத்னிகளும் தன் பர்த்தாவிற்கு நமஸ்காரம் செய்யலாம் மன்பதற்கு ஸீதாதேவியின் ஆசாரமே முக்ய ப்ரமாணமாக ஆகிறதினுல் லோகத்திலும் ஸ்த்ரீகள் தங்கள் பர்த்தாவிற்கு தினந்தோறும் நமஸ்காரம் செய்து வரவேண்டும் என்பதுதான் ப்ரக்ருதத்திலுள்ள ஸித்த ாந்தமாகும் என்பதை அறியவும்.

அத்துடன், ''ஸுமித்ரா தேவியானவள் எந்த லக்ஷ்மணனே புத்ரனுக அடைந்தாளோ, அந்த லக்ஷ்மணஸ்வாமி ராஜ்ய ஸுகத்தைக்கூட விட்டுவிட்டு,ஜ்யேஷ்ட ப்ராதா பித்ருஸம: என்ற சாஸ்த்ரத்திற்கு கௌரவத்தைக் கொடுத்து ஸ்ரீராகவனேயே அனுஸரித்து அரண்யத்திற்கு வந்தார். ராமனேப் பிதாவைப் போலவும், என்னே மாதாவைப் போலவும் பாவித்துப் பூஜித்து வந்த அந்த மஹானுபாவனுக்கு என்னே ராவணன் அபஹரித்து வந்த விஷயம் தெரியாதென்றுதான் நினேக்கிறேன். தெரிந்திருந்தால் இவ்வளவு காலம் என்னே அந்த லக்ஷ்மணன் உபேக்ஷித்திருக்கமாட்டான். அநேக ஞானவ்ருத்தாள், தபோவ்ருத்தாள் இவர்களே உபாஸித்து வந்தவன்.கைங்கர்ய ஸாம்ராஜ்யஸ்ரீ ஸம்பந்நன்.எந்த கார்யத்தையும் செய்து முடிப்பதில் சக்தியுள்ளவன். அதிகமான வார்த்தைகளேயே ராமனுடைய ஸன்னிதியிலோ, அல்லது என் ஸன்னதியிலோ பேசவே மாட்டான். என்னிடத்திலோ பரமபக்தி உண்டு. அந்த லக்ஷ்மணனேயும் நான் குசலப்ரச்னம் செய்ததாக நீர் சொல்ல வேண்டும். ஸுக்ரீவனிடத்திலும் ப்ரக்ருத கார்யமானது அவரால்தான் பூர்த்தியாக வேண்டுமென்று நான் ப்ரார்த்தித்

துக் கொண்டதாகச் சொல்லவேண்டும். ராமனிடத்தில் மாத்ரம் திரும்ப திரும்ப இந்த வார்த்தையை மட்டும் சொல்லவேண்டும். 'ஹே ராமா, சரவணனுல் எனக்குஏற்படுத்தப்பட்டஎன் ஜீவதசை யின் காலத்திற்கு அவதி இன்னும் ஒரு மாதம்தான் இருக்கிறது' அதற்குள் என்னை இந்த துக்கஸாகாரத்திலிருந்து என்னைவிடுவித்து வைத்தால் உண்டு. தவறினுல் என் உயிரே போய்விடும். ஆகைளால் உன்னை வஞ்சித்து என்னை அபஹரித்துக்கொண்டுவந்த மஹா பாபியாய ராவணனை சீக்ரத்தில் நீ வதம் செய்து என்னை ரக்ஷிக்கவேண்டும்' என்று சொல்லவும்.

ப்ரம்ம புராணத்தில், தேவேந்த்ரன் வ்ருத்ராஸுரனைக் கொன்ற பிறகு, ப்ரம்மஹத்தி தோஷத்தால் இந்த்ரன் தூஷிக்கப் பட்ட காரணத்தைக்கொண்டு. ஐந்த்ரமானஸ்ரீயானவள் இந்த்ரனை விட்டு விலகினுள். அந்த ஸந்தர்ப்பத்தில் மஹாவிஷ்ணுவே தேவாளோடு கூட தேவேந்த்ரனுக்கு அச்வமேத யாகத்தைச் செய்து வைத்து அவனை பரிசுத்தனுகவும் செய்து, தேவேந்த்ர ஸ்ரீயை ஆஹவானம் செய்து இந்த்ரனிடம் போய்ச் சேரும்படி ஆக்ஞாபித்தார். அப்போது ஒரு அசரீர வாக் உண்டாயிற்று.

ஜன்னலுடைய சித்ரத்தில் (த்வாரத்தில்) ஐந்த்ரமான ஸ்ரீ விளங்கி வருகருள் என்பது காதில் பட்டதும் விஷ்ணுவும் தேவர்களும் அந்த ஸ்தலம் சென்று ஐந்த்ர ஸ்ரீயை அழைத்தார் கள். இவர்களைப் பார்த்தவுடன் அந்த ஸ்ரீயோ வெகுவேகமாய் ஓடி பாதாளலோகம் போய் ப்ரவேசித்துவிட்டாள். அவள் அவ் விதம் சென்று ஒளிந்துகொண்டிருக்கிற ஸ்தலத்தைக் கண்டு பிடிக்க முடியாமல் தேவர்கள் திரும்பி வந்துவிட்டார்கள். மறு படியும் அசரீர வாக் உண்டாயிற்று. உங்களுடைய ஸமூஹத்தில் யார் ஸர்வலக்ஷண ஸம்பந்நனே அந்த மஹா புருஷன் பாதாள லோகம் சென்றுல், அவனுடைய த்ருஸ்டிக்கு கோசரமாக (விஷய மாக) புரந்த்ர ஸ்ரீ (ஐந்திர) ஆகிவிடுவாள்' என்பதே அந்த அசரிர வாக்கினுடைய அர்த்தமாகும், உடன் தேவர்களெல்லோரும் ஸ்ரீ மஹா விஷ்ணுவை ப்ரார்த்நித்நார்கள். 'நீ தான் ஸாவலக்ஷண ஸம்பந்நன்' என்று ஸ்தோத்ரம் செய்தார்கள் மஹாவிஷ்ணுவும் அவ்விதமே அவர்களுடை ப்ரார்த்தனைக் கீடுபட்டு பாதாளலோகம் சென்று புரந்தர ஸ்ரீயைக் கண்டு பிடித்து அழைத்து வந்து அவளை இந்த்ரனிடம் ஒப்புவித்தார் ஆக்யாயிகையானது ப்ரஸித்தமாக

இருந்து வருகிறது அதுபோல் என்னையும் ரக்ஷிக்க வேண்டும் என்று ராமனிடத்தில் ஞாபகபடுத்த வேண்டும்.

மஹாபாரதத்திலோ உதத்யர் என்ற மஹர்ஷியினுடைய பார்யையானவள் யமுனா நதியில் ஸ்நானம் செய்து கொண்டிருக்கும்போது வருணன் அந்த ஸ்திரீயை அபஹரித்துக்கொண்டு பாதாளலோகம் சென்று விட்டான். உதத்ய ரிஷியோ நாரத மஹர்ஷி மூலமாக வருணனை ஸமாதானம் செய்து தன்பார்யையை மீட்டுவர யத்னம் செய்தார், அது முடியாமல் போனதிலிருந்தும் உதத்யரும் மிகுந்த கோபமடைந்து வருணனுடைய ஸ்தானமாகிய பாதாள லோகத்திலுள்ள ஒரு பெரிய ஏரியை கோபத்தால் சோஷிக்கச் செய்து தன் பார்யையை அடைந்தார் என்ற கதையானது சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் எவ்விதத்திலும் புரந்தரஸ்ரீக்கோ உதத்யருடைய பார்யைக்கோ பாதாளலோகத்தில் ஏற்பட்ட துக்கத்திலிருந்து விமோசனம் ஏற்பட்டது போல் எனக்கும் லங்கா நகரத்திலிருந்தும் விமோசனம் சீக்ரம் ஏற்பட வேண்டுமென்று நான் எதிர்பார்க்கிறதாக ராமனிடம் சொல்ல வேண்டும்'' என்று சொல்லிவிட்டு தனது வஸ்த்ரத்தில் முடிந்து வைத்திருந்த, சிரஸ்ஸில் அலங்கரித்துக்கொள்ள வேண்டிய சூடாமணியை, ஆஞ்ஜனேயஸ்வாமி தன்னிடம் நேரில்வந்து பேசிப் போனதற்கு ஸ்ரீராகவன் நம்புவதற்கு அடையாளமாகஆஞ்ஜனேய ஸ்வாமியினிடம் கொடுத்தாள். ''இந்த சூடாமணியை ராமனிடம் கொண்டுபோய்க் கொடுத்தால் நீர் என்னை வந்து பார்த்துப் பேசின விஷயங்களை ஸ்ரீராமனும் பூர்ணமாக நம்பி உம்மிடத்தில் ரொம்பவும் விச்வாஸமுள்ளவராக இருப்பார்'' என்றும் சொன்னாள்,

ஆஞ்ஜனேயஸ்வாமியும், ப்ராட்டியினால் கொடுக்கப்பட்ட அந்த சூடாமணியை க்ரஹித்துக்கொண்டு இதுவும் ஒரு அங்குலீயகம் தானோ ! என்ற ப்ராந்தியினால் தன்விரலில் போட்டுக் கொண்டார். அந்த விரலில் போட்டுக்கொள்ள ஸாத்யமாகவில்லை பிறகு அதைத் தன் வஸ்த்ரத்தில் முடிந்துகொண்டு ஜாக்ரதையாக வைத்துக்கொண்டார்,

मणिवरमुपगृह्य तं महार्हं जनकनृपात्मजया धृतं प्रभावात् ।
गिरिरिव पवनावधूतमुक्तः सुखितमनाः प्रतिसंक्रमं प्रपेदे ॥

மணிவரம் உபக்ருஹ்ய தம் மஹார்ஹம்
ஜநகந்ருபாத்மஜயா த்ருதம் ப்ரவாவாத் ।
கிரிரிவ பவநாவதூதமுக்த:
ஸுகிதமநா: ப்ரதிஸங்க்ரமம் ப்ரபேதே ॥

என்பதினால், ஸீதாதேவியினால் கொடுக்கப்பட்ட சூடாமணியை ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் க்ரஹித்துக்கொண்டு பரம ஸந்தோஷத்தையும் அடைந்து, முன்பு ஸீதையைக் காணாத காரணத்தால் புயல்காற்றில் அகப்பட்டுக்கொண்ட மனிதனைப்போல் நடுக்கத்தை அடைந்த ஆஞ்ஜனேயஸ்வாமியானவர், புயல்காற்று நின்றவுடன் அந்த மனிதன் பயத்திலிருந்து விடுபட்டதுபோல், ஸீதையைப் பார்த்த மாத்ரத்தில் பரமானந்தத்தை யடைந்த ஆஞ்ஜனேய ஸ்வாமிானவர் மிகவும் உத்ஸாஹத்துடன் திரும்பி ராமனிடம் வந்து இந்த சுபமான வ்ருத்தாந்தத்தைச் சொல்ல வேண்டும் என்ற விஷயத்தில் உத்ஸாஹமுள்ளவராக ஆனார்.

இவ்விதம் ஸீதாதேவியானவள் ஆஞ்ஜனேய ஸ்வாமியினிடம் சூடாமணியைக் கொடுத்துவிட்டு சொல்கிறாள்: ''இந்த சூடாமணியை ஸ்ரீராமனிடம் கொண்டுபோய் கொடுத்து, உடனே அவர் இதைப் பார்த்தவுடன் தன் தாயாரான கௌஸல்யாதேவி, தகப்பனாரான தசரத சக்ரவர்த்தி, நான், இந்த மூன்று பேர்களுடைய ஸ்மரணம்தான் ஏற்படும். விவாஹகாலத்தில் தசரத சக்ரவர்த்தி கௌஸல்யாதேவி இருவர்களும் ஸீதாதேவிக்கு இந்த சூடாமணி ரத்னத்தை பாரிதோஷிகமாக (வெகுமதி) கொடுத்ததினால் இந்த மூன்று பேர்களுடைய ஸ்மரணமும் இந்த மணியைப் பார்த்த மாத்ரத்தில் ஸ்ரீராமனுக்கு ஏற்படுவது ந்யாயம்தான் இந்த ப்ரக்ருத கார்யத்தில் உத்ஸாஹத்துடன் செய்யவேண்டிய ஸகல ப்ரயத்னமும் தங்களைச் சேர்ந்ததே'' என்று சொல்லிவிட்டு ஆஞ்ஜனேயஸ்வாமிக்கு உத்திரவு கொடுத்தனுப்பினாள். ஆஞ்ஜனேயஸ்வாமியும் ப்ராட்டிக்கு ப்ரதக்ஷிண நமஸ்காராதிகளை செய்துவிட்டு ப்ரஸ்தானம் ஆனார். புறப்பட்டுப் போக ஸித்தமாக இருந்த ஆஞ்ஜனேயரைப் பார்த்து மறுபடியும் ஸீதாதேவி கண்ணீரைப் பெருகவிட்டுக்கொண்டு சொன்னதாவது:

''ராமனிடத்திலும், லக்ஷ்மணனிடத்திலும், ஸுக்ரீவனிடத்திலும் மற்ற வானராகளிடமும் நான் குசலப்ரச்னம் செய்ததாகச் சொல்லவேண்டும் மஹாபரகுவான ஸ்ரீ ராகவன் இந்த துக்க

ஸாகரத்திலிருந்தும் என்னை விடுவித்து வைப்பதில் எப்படி யத்னம் செய்வாரோ அவ்விதம் நீரும் அதற்கு ப்ரேரேபணையாக இருந்து கொண்டு சீக்ரத்தில் அந்த யத்னத்தை முடிவு பெறும்படி செய்ய வேண்டும். என் விஷயத்தில் தாங்கள் வாக் ஸஹாயம் செய்ய வேண்டும். வாக் ஸஹாயத்தினால் ஏற்படும் புண்யாதிசயமானது ரொம்பவும் மேலானது. தாங்கள் போய்ச் சேர்ந்ததும் தங்களுடைய வாக்கைக் கேட்ட மாத்திரத்திலேயே ஸ்ரீ ராகவனுடைய பௌருஷமானது வ்ருத்தியடைந்துவிடும். தன்னுடைய பரக்ரா மத்தை ராவணனிடத்தில் ப்ரகாசிக்கச் செய்ய யத்னம் செய்து விடுவார்'' என்று சொன்னாள். அதைக் கேட்ட ஆஞ்ஜனேய ஸ்வாமி சிரஸால் அஞ்சலிபந்தனம் செய்து கொண்டு ''ஹே தாயே, மிகவும் சீக்ரத்தில் ஸ்ரீராமன் உங்கு வந்து சேருவார். சத்ருக்களையும் கொன்றுவிட்டு உன்னுடைய துக்கத்தையும் போக்கடிப்பார். மனிதர்களுக்குள்ளேயோ, தேவர்களுக்குள்ளேயோ அஸுரர்களுக்குள்ளேயோ ராமனுக்கு எதிரில் நிற்க சக்தியுள்ளவர்கள் ஒருவருமில்லை. ஸூர்யனானாலும் யமனானாலும் அவர்களோடு கூடவும் உன் விஷயத்தில் எதிர்த்து யுத்தம் செய்ய ராமன் சக்தியுள்ளவனாக ஆகுவார். ஸமுத்ரத்தால் சூழப்பட்ட ஸகல பூமண்டலத்தையும் சயஸீக்கவும் சக்தியுள்ளவர். தாங்களோ மஹா பதிவ்ரதா சிரோமணி. உங்களுடைய நிமுத்தம் ராமனுக்கு எங்கும் ஜயமே ஏற்படும்'' என்று சொல்லிக்கொண்டு ப்ராட்டிக்கு வெகு விதமாக சமாதானம் செய்தார். அந்த ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய வார்த்தைகளைக் கேட்ட ஸீதாதேவியானவள் அவரை ரொம்பவும் வெகுமதித்தாள். ''ஆஞ்ஜனேயரே, தங்களுக்குஇஷ்டமிருந்தால் இன்னும் ஒரு தினங்கூட இந்த அசோகவனத்தில் ராக்ஷஸர்களுக்குத் தெரியாமல் மறைந்து இருந்துவிட்டுப்போனால் எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருக்கும். இனிமேல் உம்மைப் பார்க்காமல் போய்விட்டால் திரும்பி நீர் ஸ்ரீ ராமனுடன் வருகிற வரையிலும் என் ஜீவனே இருக்குமோ, போய்விடுமொ என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. வானரஸேனைகளோ, ராம, லக்ஷ்மணர்களோ இந்த பெரிய ஸமுத்ரத்தை எவ்விதம் தாண்டி வரப் போகிறார்கள். ஸமுத்ரத்தை தாண்டுகிற சக்தியோ, தாங்கள், கருடபகவான், வாயுபகவான் என்ற இந்த மூன்று பேர்களுக்குத் தான் என்று நான் நினைக்கிறேன். ராமனே நேரில் ஸமுத்ரத்தை தாண்டிக்கொண்டு லங்கா நகரம் வந்து, பாணங்களால் ராக்ஷஸர்களையும் நசிக்க செய்து என்னைத் திருப்பி அழைத்துக்கொண்டா

என்பது ஏற்பட்டால்தான் ஸ்ரீ ராமனுக்கு யசஸ் ஏற்படும். அவ்விதம் ராமனே இவ்விடம் சீக்ரம் வரும்படியான விஷயத்தில் தாங்கள்தான் யத்னம் செய்யவேண்டும்'' என்று ஸீதையானவள் தெரிவித்துக்கொண்டாள்.

இதைக் கேட்ட ஆஞ்ஜனேயஸ்வாமியோ, 'ஹே தேவியே, கோடிக்கணக்கான வானர ஸேனைக்கு அதிபதியான ஸுக்ரீவன் இந்த துக்க ஸாகரத்திலிருந்தும் தங்களை மீட்டு வைக்கிற விஷயத்தில் மிகவும் உத்ஸாஹத்துடன் கூடினவராக இருந்து வருகிறார். ஸமுத்ரத்தினுடைய அலைபோல் திரள்திரளாக வானர சேனைகள் சீக்ரம் வந்து சேருவார்கள். அதை தாங்கள் பார்க்கலாம். அந்த வானர ஸேனைகள் பெரிய யுத்தங்களிலும்கூட ஜெயத்தைத்தான் அடைந்திருக்கிறார்கள். வானர ஸேனைகளோ, ஸுக்ரீவனோ, ராம லக்ஷ்மணர்களோ எப்படி சமுத்ரத்தைத் தாண்டிக்கொண்டு வருவார்களென்று கொஞ்சமேனும் சங்கையையே அடைய வேண்டாம். நானே ஸமுத்ரத்தைத் தாண்டிக்கொண்டு வர வில்லையா? என்னைக் காட்டிலும் எவ்வளவோ பராக்ரமத்திலோ, சௌர்யத்திலோ, பலத்திலோ, மேலானவர்களே மற்றுள்ள வானரர்கள்! ராமலக்ஷ்மணர்களோ, நிகரற்ற பராக்ரமசாலிகள்.

मद्विशिष्टाश्च तुल्याश्च सन्ति तत्र वनौकसः ।
मत्तः प्रत्यवरः कश्चित् नास्ति सुग्रीवसन्निधौ ॥
अहं तावदिह प्राप्तः किं पुनस्ते महाबलाः ।
न हि प्रकृष्टाः प्रेष्यन्ते प्रेष्यन्ते हीतरे जनाः ॥

மத்விசிஷ்டாச்ச துல்யாச்ச ஸந்தி தத்ர வநௌகஸ: ।
மத்த: ப்ரத்யவர: கச்சித் நாஸ்தி ஸுக்ரீவ ஸந்நிதௌ ॥
அஹம் தாவதிஹ ப்ராப்த: கிம் புநஸ்தே மஹாபலா: ।
ந ஹி ப்ரக்ருஷ்டா: ப்ரேஷ்யந்தே ஹீ தரே ஜநா: ॥

ஸுக்ரீவனுடைய ஸந்நிதியில் எனக்கு ஸமானமான பராக்ரம சாலிகளோ, எனக்கு மேலான வீரர்களோதான் இருக்கிறார்கள். எனக்கு குறைந்த பலத்துடன் கூடினவன் ஒருவரும் இல்லை. நானே சமுத்ரத்தைத் தாண்டிவருவேனேயானால் அவர்கள் தாண்டி வருவதைப்பற்றி என்ன சொல்லவேண்டும். உத்கருஷ்டமான புருஷர்கள் தேசாந்தரம் சென்று ஒரு கார்யத்தை முடித்து வருகிற விஷயத்தில் பொதுவாக அனுப்பப்படமாட்டார்கள். அப க்ருஷ்டமான புருஷர்களைத்தான் அனுப்புவது வழக்கம். ஆகை

யால் மற்றவர்கள் எவ்விதம் இந்த ஸமுத்ரத்தைத் தாண்டி வருவார்கள் என்று நீங்கள் கொஞ்சமேனும் துக்கத்தை அடைய வேண்டாம்'' இந்த சந்தர்ப்பத்தில் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் தன்னை ரொம்பவும் பலத்தில் கீழானவனுகச் சொல்லிக்கொள்கிருரே அது ஸத்யமாகுமா என்பதை விசாரிக்கவேண்டும்.

ஸ்ரீராமனே ஆஞ்ஜனேயருடைய பெருமையைப் பற்றி ரொம்பவும் மேன்மையாக முன்பு வர்ணித்திருக்கிருர். அவ்விதமிருக்கும்போது ப்ரக்ருதத்தில் ஆஞ்ஜனேயஸ்வாமி சொல்லிக் கொள்வது எப்படி ஸமஞ்சஸவாக ஆகும்? என்ருலோ, பலத்தில் ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் மேலானவராக ஆனுலும் வேகத்தில் நீலன் முதலானவர்கள் ரொம்பவும் ப்ரஸித்தமானவர்கள். அதை மனதில் வைத்துக்கொண்டுதான் ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் தன்னையும் ரொம்பவும் கீழானவனுகச் சொல்லிக்கொண்டார் என்று ஸமாதானம் சொல்லலாம். ஸர்வ விஷயத்திலும் ஆஞ்ஜனேயர் ரொம்பவும் மேலானவர் என்பதிலும் ஆஞ்ஜனேயஸ்வாமியினுடைய வார்த்தையை ஸத்யமாகத்தான் ஒப்புக்கொள்ள வேண்டும்.

उद्वाहकाले रतिसंप्रयोगे प्राणात्यये सर्वधनापहारे ।
विप्रस्यार्थेऽप्यनृतं वदेयुः पञ्चानृतान्याहुः अपातकानि ।

உத்வாஹகாலே ரதிஸம்ப்ரயோகே
ப்ராணுத்யயே ஸர்வதநாபஹாரே ।
விப்ரஸ்யார்த்தேப்யந்ருதம் வதேயு:
பஞ்சாந்ருதாந்யாஹு: அபாதகாநி ॥

என்ற தர்மசாஸ்த்ர வசனப்படி கல்யாண விஷயம் க்ரீடாகாலம், ப்ராணுபஹாரகாலம், ஸர்வ ஸ்வத்தும் நசிக்கிறகாலம் ஒரு ப்ராம்மணனுடைய ஜீவிகையினுடைய நிமித்தம் இந்த ஐந்து விஷயத்தில் சொல்கிற வார்த்தைகள் அந்ருதமானுலும் அதை அந்ருதமாக பாவிக்கக்கூடாது; பாபத்தையும் கொடுக்காது. ஸத்யவசனத்திற்கு ஸமானமாகவே ஆகும என்று தெரிகிறபடியால், ஸீதையினுடைய ப்ராணத்யாக பர்யந்தமான துக்கத்தைநிவர்த்தி செய்து வைக்கவேண்டியதான எண்ணத்துடன் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் 'நான் ரொம்ப பலத்திலும் குறைந்தவன், நானே ஸமுத்ரத்தைத் தாண்டி வந்திருக்கும்போது எனக்கு எவ்வளவோ மேலான பராக்ரமத்துடன் கூடினவர்கள் இந்த ஸமுத்ரத்தை

தாண்டி வருவார்களா என்று கேட்கவேண்டுமா? கட்டாயம் வந்து விடுவார்கள். ராக்ஷஸர்களைக் கொன்று உன்னை துக்கத்தி லிருந்தும் விமுக்தையாகச் செய்ய ஸ்ரீராமன் ஸித்தமாக இருந்து வருகிறார். நீங்கள் கொஞ்சமேனும் கவலையை அடையவேண்டாம். காலத்தை மட்டும் எதிர்பார்த்து வரவேண்டும்' என்று சொல்லி ஸீதையை உஜ்ஜீவிக்கச் செய்தவரானதினால் அந்த ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய வசனம் எவ்விதம் பொய்யாக ஆகும். ஆகை யால் ஆஞ்ஜனேயஸ்வாமியினுடைய வசனம் ஸத்யம்தான்.

அத்துடன், मत्तः प्रत्यवरः कश्चित नास्ति सुग्रीव सन्निधौ (மத்த: ப்ரத்யவர: கச்சித் நாஸ்தி ஸுக்ரீவ ஸந்நிதௌ) என்ற வாக்யத்தி லுள்ள மத்த: என்ற பதத்தை தஸில் ப்ரத்யாந்த அவ்யயமாக வைத்து पञ्चम्यां तसिः (பஞ்சம்யாம் தஸி:) என்ற ரீதியை அனுஸரித்து என்னைக்காட்டிலும் என்ற அர்த்தமானது சொல்லப் பட்டது. அந்த பதத்தை ஸுபந்தமான சப்தமாக, அதாவது அகாராந்த சப்தமாகவே வைத்துவிடலாம் மத்ய பானம் செய்து புத்தி ஸ்வாதீனமில்லாமல் ராஜ கார்யத்திலும் ப்ரமாதத்தை அடைந்தான் என்பதே அதன் தாத்பர்யமாகும்.

''இவ்விதமான மனிதனே ரொம்பவும் கீழானவன். ஒரு கார்யத்தையும் செய்ய சக்தியற்றவனாகுவான். ராஜாக்களும் அவனைப்போலொத்தவனை தன்னுடைய ப்ருத்யகோடிகளில் சேர்க்கமாட்டார்கள். இது செய்யத் தகுந்தது. இது செய்யத் தகாதது என்ற விவேக சூன்யமான மனிதனை வைத்துக்கொண்டு என்ன கார்யம்தான் நடைபெறும். அதுபோலொத்த ப்ராணி ஒருவனும் ஸுக்ரீவனுடைய ஸந்நிதியில் ஸேனையில் சேர்ந்தவன் இல்லவே இல்லை. எல்லா ஸேனைவீரர்களும் மஹாபுத்திமான்கள். பராக்ரபசாலிகள். ஆகாசமார்க்கத்திலும் கமனம் செய்ய சக்தி யுள்ளவர்களே. அவ்விதமிருக்கும்போது இந்த ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கா நகரம் வந்து சேருவது என்பது ஒரு பெரிய கார்ய மாகுமா? ஆகையால் ஒரு விதத்திலும் தாங்கள் தூக்கத்திற்கு அவகாசம் கொடுக்கவே வேண்டாம். ஸகல கார்யங்களும் சுபமாகவே அதிசீக்ரத்தில் நடைபெறும். ஸகல வானரஸேனை களுடன் ஸுக்ரீவனும் ஸ்ரீராம லக்ஷ்மணனும் ஸமுத்ரத்தைத் தாண்டிக்கொண்டு லங்கா நகரத்திற்கு வந்துவிட்டதாகவே நினைத் துக் கொள்ளலாம்'' என்று ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய வார்த்தைக்கு தாத்பர்யத்தை வர்ணிக்கும் பக்ஷத்தில் ஆஞ்ஜனேய

ஸ்வாமியும் பொய் சொன்னரோ என்ற சங்கைக்கு எப்படி அவகாசம் ஏற்படும். ஆகையால் ஒரு தோஷத்திற்கும் அவகாசமே இல்லை என்பது ஸித்தமாகிறது.

இவ்விதம் ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய வார்த்தையைக் கேட்டு ஸீதாதேவியானவள் பரம ஸந்தோஷத்துடன் ஆஞ்ஜனேயரைப் பார்த்து சொல்கிருள்,

त्वां दृष्ट्वा प्रियवक्तारं संप्रहृष्यामि वानर।
अर्धसंजातसस्येव वृष्टिं प्राप्य वसुंधरा ॥

த்வாம் த்ருஷ்ட்வா ப்ரியவக்தாரம் ஸம்ப்ரஹ்ருஷ்யாமி வாநர।
அர்த்தஸஞ்ஜாதஸஸ்யேவ வ்ருஷ்டிம் ப்ராப்ய வஸுந்தரா ॥

''எனக்கு மிகவும் ப்ரியமான ஸ்ரீராமனுடைய வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிற உம்மை நான் பார்த்த மாத்ரத்திலேயே பரம ஸந்தோஷத்தை அடைகிறேன். நான் அடையும் ஸந்தோஷம் எதுபோல் என்றுலோ, ஒரு பூமியில் இட்ட பயிரானது பாதி வயது (கதிர் வாங்க) அடைந்த பிற்பாடு, ஜலம் இல்லாமலபோய்க் காய்ந்து போய்விடுமோ என்று நினைக்கும் ஸந்தர்ப்பத்தில் தெய்வ வசத்தால் மழை ஏற்பட்டு அதனல் ஸம்பந்தமானபூர்த்தியடைந்த கதிரோடு கூடின பூமியானவள் எவவிதம் ஸந்தோஷிப்பாளோ அதுபோல்தான் நானும் அவ்வளவு ஸந்தோஷத்தை ப்ரியவக்தாவான உம்மை பார்த்த மாத்ரத்திலேயே அடைகிறேன். நீர் வருவதற்கு முன்பு மன்னுடைய ஜீவிதத்திற்கே நாசம் வந்து விடுமோ என்று அதைர்யமடைந்து ம்ருதப்ராயையாகவே நான் இருந்து வந்தேன். உம்முடைய தர்சனமோ தெய்வ வசத்தால் எனக்குக் கிடைத்தது இப்போதோ என்னுடைய ஜீவிதம் ஸித்தமாக ஆகிவிட்டது. உம்முடைய தர்சனத்தால் நான் அடைகிற ஆனந்தத்தை வர்ணிக்கமுடியாது. புருஷச்ரேஷ்டனை ராமனை சோகத்தால் கார்ச்யத்தை யடைந்த என்னுடைய அவயவங்களால்தொட்டு ஆலிங்கனம் செய்து கொள்ளும்படியான பாக்யம் எனக்கு சிக்ரம் ஏற்படும்படி தாங்கள் தான் கருணை செய்ய வேண்டும், காகாஸுரனிடத்திலிருந்தும் என்னை ரக்ஷித்த காரணத்தால், ஸ்ரீராமனுக்கு என்னிடத்திலிருக்கும் ப்ரேமையையும் அளவிட முடியாது. சித்ரகூட பர்வதத்தில் வாஸம் செய்கிற காலத்தில் ஒரு தினம் நாங்கள் இருவர்களும் வேடிக்கையாக ஸஞ்சாரம் செய்துவிட்டு லதாகுஸுமங்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு ஸ்தலத்தில் கல்பாறையின் மேல் உட்

கார்ந்துகொண்டு உல்லாஸமாக இருந்துவந்தோம். நாங்களிருவர்களும் பரஸ்பரம் ஆலிங்கனுதிகளைச் செய்துகொண்டுவந்த காரணத்தால் என் கண்ட பார்ச்வத்திலுள்ள திலகம் அழிந்துவிட்டது. உடனே ராமன், கண்டபார்ச்வமானது திலக சூன்யமானதைப் பார்க்க மனது வராமல் மனச்சிலை என்ற ஒரு பாஷாண விசேஷத்தை கையினுல் உறைத்து என்னுடைய கண்ட பார்ச்வத்தில் திலக அலங்காரம் ஸ்ரீராமனே செய்தார். அதிலிருந்துமே ஸ்ரீ ராமனுக்கு என்னிடமுள்ளப்ரேமையை அளவு கடந்த ப்ரேமை என்று சொல்லவேண்டுமல்லவா? இதையும் நினைத்துக் கொள்ளும்படி நான் கேட்டுக் கொண்டதாக ஸ்ரீராமனிடம் சொல்லவேண்டும்

இவ்விதம் ப்ரேமையுள்ள ராகவன், ராவணனுல் அபஹரிக்கப்பட்ட என்னை ஏன் இவ்விதம் உபேக்ஷிக்கிறுர் என்பதற்கு மட்டும் இன்னதென்று காரணம் தெரியவில்லை. உம்மிடத்தில் நான் கொடுத்த சூடாமணியோ க்ஷீர ஸமுத்கத்திலுண்டானது. நான் அதை ரொம்பவும் பக்தியுடன் ரக்ஷித்து வந்தேன். என் கையில் அது இருக்கிறவரையிலும் ராக்ஷஸர்களுடைய பயம் அதிகமில்லாமலிருந்தது. அந்த சூடாமணியையோ 'ஹே ராமா, உன்னிடம் கொண்டுவந்து சேர்க்கும்படி ஆஞ்ஜனேய ஸ்வாமியிடம் கொடுத்திருக்கிறேன். அந்த சூடாமணியைப் பார்க்கும்போதெல்லாம் ராமா உன்னைப் பார்ப்பதாகவே பாவித்து ஸந்தோஷமடைந்து வந்தேன். அதைவிட்டுப் பிரிந்தால் மிகவும் துக்கமடைவேன். ஜீவித தசைக்கே ஸப்சயம் வந்துவிடுமோ என்னமோ! ஆகையால் சீக்ரத்தில் என்னை ரக்ஷிக்க வேண்டும்' என்ற விஷயங்களை விஸ்தாரமாக ஸ்ரீராமனிடம் சொல்லி என்னைக் காப்பாற்ற உதவி செய்யவேண்டும்'' என்று சொல்லிக்கொண்டே ஸீதாதேவியானவள் கண்ணீர் ஜலத்தைப் பெருகவிட்டாள். இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஆஞ்ஜனேயஸ்வாமியோ ''ஹே தேவி, ராமன் உன்னுடைய நினைவாகவே நான் எப்பொழுதும் இருந்து வருகிறுர். உன்னை நினைத்து நினைத்து ராமன் கதறுகிறுர். ஏதோ பாக்யவசத்தால் தான் உன்னை நான் கண்டுபிடித்தேன். அனேக கோடிக்கணக்கான வானரர்கள் உன்னைத் தேடிக்கொண்டு ஆங்காங்கு திக்குகளிலெல்லாம் சென்று காணுமல் திரும்பி வந்ததுபோல் எனக்கும் அந்த தௌர்பாக்யமில்லாமல், உன்னை தர்சனம் செய்யும்படி

யான பாக்யம் எனக்கு ஏற்பட்டுவிட்டது. இனிமலே நீங்கள் எதற்காக துக்கப்பட வேண்டும். அதிசிக்ரத்தில் பூண்டோடு ராவணன் அழியப்போகிறுன். லங்கா நகரமும் பஸ்மமாக ஆகி விடும். துக்கநிவர்த்தியும் தங்களுக்கு ஸித்திக்கும். இன்னும் ஏதாவது ஸ்ரீராமன் தங்களிடம் நான் வந்து போன விஷயத்தை நம்ப அடையாளமிருந்தால் அதையும் எனக்குச் சொல்ல வேண்டு மென்று கேட்டார்''. ஸீதாதேவியோ. 'ராமன் உம்மை எவ்விதம் நம்புவாரோ அதற்கு வேண்டிய அடையாளமோ அது அவ்வளவும் நான் கொடுத்துவிட்டேன். இந்த சூடாமணி ஒன்றே போது' மானது. காகாஸுரனுடைய வ்ருத்தாந்தம், சூடாமணிப்ரதானம் என்னுடைய கண்ட பார்ச்வத்தில் ராமன் செய்த திலகதாரணம் இந்த மூன்று அடையாளத்தைக் காட்டிலும் மேலான வேறு அடையாளம் சொல்லும்படி என்ன இருக்கிறது! நாயிக நாயக வ்ருத்தாந்தத்தை மற்றவர்களால் அறியவே முடியாது. நான் உமக்குக் கொடுத்த மூன்று அடையாளங்களும் நாயிகா நாயக வ்ருத்தாந்தத்தில் சேர்ந்ததல்லவா! இந்த ரஹஸ்யமான வ்ருத் தாந்தத்தைச் சொல்லியும் ஸ்ரீராமன் நம்பாமலிருப்பாரா? கட்டா யம் நம்பத்தான் நம்புவார்'' என்று சொல்லி ஆஞ்ஜனேய ஸ்வாமியை ப்ராட்டியானவள் ஸ்ரீராமனிடம் சொல்லும்படி உத்திரவளித்தாள்.

நாயகி, நாயகனுடைய பரஸ்பர ப்ரேமாதிசயத்தை ப்ரகாசப் படுத்தக்கூடியதே இந்த மூன்று விதமான அடையாளங்களாகும். நாயகனுக்கு நாயகியினிடம் உள்ள ப்ரேமையை காகாஸுர னுடைய வ்ருத்தாந்தத்தாலும், நாயகியான ஸீதாதேவிக்கு நாயக னுன ஸ்ரீ ராமனிடத்தில் இருக்கும் ப்ரேமையை ஸீதா தேவியான வள் கொடுத்த சூடாமணியும், நாயகனுன ராமனுக்கும் நாயகி யான ஸீதைக்குமுள்ள பரஸ்பர ப்ரேமையானது அகண்டமாக ஆகி ஒரே ரூபமாக விளங்கி வரும் ப்ரேமாதிசயத்தை திலகதாரண மும் வெளிப்படுத்துகிறது. ஸீதையினிடத்தில் ராமனுக்கு ப்ரேமாதிசயம் இருந்ததினுல்தான் ஒரு காக்கையினுடைய விஷயத் தில் ப்ரம்மாஸ்த்ர ப்ரயோகம் செய்தார். நாயகியான ஸீதைக்கு ராமனிடம் ப்ரேமாதிசயம் இருப்பதினுல்தான் தனது சிரஸில் அணியவேண்டிய சூடாமணியை ஸ்ரீ ராமனிடம் அடையாளமாக கொடுக்கும்படி சொல்லி ஆஞ்ஜனேய ஸ்வாமியினிடம் கொடுத் தாள். கண்ட பார்ச்வத்தில் திலகதாரணம் என்பதினுல், ஸீதை, ராமன் என்ற பேத புத்தியை மறைத்து பரஸ்பர ஆலிங்கனுதி

களால் ஐக்ய பாவனையை ப்ரகாசப்படுத்துகிற காரணத்தால் அகண்டமான ப்ரேமையை வெளிப்படுத்துகிறது என்று ப்ராட்டி மூலமாக ஆஞ்ஜனேயரிடம் தெரியப்படுத்தப்பட்ட மூன்று வித மான அடையாளங்களுக்கும் உள்ள வைலக்ஷண்யத்தை புத்தி மான்கள் ஊஹித்து அறிந்துகொள்ளவேண்டும்.

அத்துடன், ஸீதா தேவியானவள் த்வம் பதார்த்தம் என்ற ஜீவதத்வம் என்றும், ராமன் தத் பதார்த்தமாகிற ப்ரம்ம தத்வம் என்றும், ராமனும் ஸீதையும் ஆலிங்கனாதிகளைச் செய்துகொண்டு வரும் ஸந்தர்ப்பத்தில் திலகதாரணம் செய்யும்போது பாஸிக்கும் தத்வம் வாக்யார்த்தமாகிற அகண்ட சைதன்யம் என்றும் புத்தி மான்களான மனிதர்கள் காந்தா ஸம்ஹிதையான இந்த ஸ்ரீமத் ராமாயணத்தில் விளங்கிய மர்யாதையை அனுஸரித்து அறிந்து கொள்ள வேண்டியதவச்யமாகும்.

இவ்விதம் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் ஸீதாப்ராட்டிக்குத் தலைவணங்கி ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்துவிட்டுத் திரும்பி ராம னிடம் போவதற்காக மஹாவேகத்துடனும், உத்ஸாஹத்துடனும் கூடினவராக ஆனார். அப்போதும் ஸீதா தேவியானவள், "ஹே ஹநுமந்! ஸிம்மத்துக்கு ஸமானமான பராக்ரமத்தோடு கூடிய ராம லக்ஷ்மணர்களையும், மந்த்ரி வர்க்கங்களோடு கூடிய ஸுக்ரீவ னையும், மற்ற வானரங்களையும் குசல ப்ரச்னம் செய்ததாகச் சொல்லவேண்டும். இந்த துக்க ஸமுத்ரத்திலிருந்தும் எவ்வளவு சீக்ரம்என்னை ராமன் கரையேற்றி வைப்பாரோ அவ்வளவு சீக்ரதிர த்தில் ராமனை நீர் துறை செய்து ஸமாதானப் படுத்தவேண்டும்.

इमं च तीव्रं मम शोकवेगं
रक्षोभिरेभिः परिभर्त्सनं च ।
ब्रूयास्तु रामस्य गतः समीपं
शिवश्च तेऽध्वास्तु हरिप्रवीर ॥

இமம் ச தீவ்ரம் மம சோகவேகம்
ரக்ஷோபிரேபி: பரிபர்த்ஸநம் ச ।
ப்ரூயாஸ்து ராமஸ்ய கத: ஸமீபம்
சிவச்ச தேத்வாஸ்து ஹரிப்ரவீர ॥

ஹே, ஹரிச்ரேஷ்டனான ஹநுமானே! மார்க்கத்தில் உமக்கு ஸர்வ மங்களமும் உண்டாகவேண்டும். ராமனுடைய ஸமீபம் சென்றவுடன் ராக்ஷஸர்கள் எனக்குச் செய்யும் ஹிம்ஸையையும்

எனனுடைய துக்கவேகத்தையும் விவரமாக ராமனிடம் சொல்ல வேண்டும்'' என்று சொல்லி ஆஞ்ஜனேயசுவாமியை அனுப்பினுள்.

स राजपुत्र्या प्रतिवेदितार्थः
कपिः कृतार्थः परिहृष्टचेताः ।
अल्पावशेषं प्रसमीक्ष्य कार्यं
दिशं ह्युदीचीं मनसा जगाम ॥

ஸராஜபுத்ர்யா ப்ரதிவேதிதார்த்த :
கபி: க்ருதார்த்த: பரிஹ்ருஷ்ட சேதா : ।
அல்பாவசேஷம் ப்ரஸமீக்ஷ்ய கார்யம்
திசம் ஹ்யுதீசம் மநஸா ஜகாம ॥

ஆஞ்ஜனேய ஸ்வாமியும் ராஜபுத்ரியான ஸீதாதேவி மூலமாக ஸகல வ்ருத்தாந்தத்தையும் அறிந்து, ஸீதா தேவியினுடைய ஸந்தர்சனத்தினுலேயே தன் ஜன்மா சபலமாக ஆகிவிட்டதென்று நினைத்து, பரம ஸந்தோஷ ஸாகரத்தில் மூழ்கிக்கொண்டு, லங்கா நகரத்தில் இனி தான் செய்யவேண்டிய கார்யம் இன்னும் கொஞ்சம் இருந்து வருகிறது என்ற யோசனையோடு உத்தராபி முகமாக ப்ரஸ்தானமாகி மனதினுல் ராகவனையும் ஸ்மரித்துக் கொண்டார்.

ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் தான் ப்ராட்டியினிடம் சொன்ன வார்த்தைகள் மிகவும் ப்ரசஸ்தமானதால் இதைக் கேட்ட ஸீதா ப்ராட்டியினுல் மிகவும 'உயர்ந்தபுத்திமான்' என்று ஹநுமான் ச்லாஹிக்கப்பட்டு ப்ராட்டியினிடமும் விடை பெற்றுக் கொண்டு அசோக வனத்தை விட்டுத் தான் கொஞ்ச தூரத்திற் கப்பால் வந்ததும் தன் விரிவான மனதால் ஓர் யோஜனை செய் தார். அதாவது :

''நாம் இங்கு வந்ததோ ஸீதையின் ஸந்தர்சனம் என்ற முக்யமான கார்யத்தை உத்தேசித்தே ஏற்பட்டது. இதுவோ ஸபலமாகிவிட்டது. லங்கேச்வரனுன ராவணனுடைய வாஸ ஸ்தானத்தையும் பார்த்து, அவனுடைய ஸ்வபாவம் எவ்வித மிருக்கிறது என்று அறிந்துகொள்ளுவதும் பூர்வ கார்யத்திற்கு விரோதமில்லாமலிருப்பதால் முக்யமானதாகவே ஆகும். ஆகை யால் ராக்ஷஸ ராஜனுன ராவணனுடைய ஸந்தர்சனம் நமக்கு எப்படி ஏற்படுமோ அவ்வித உபாயத்தை உடன்தேட வேண்டும்.

न साम रक्षस्सु गुणाय कल्पते
न दानमर्थोपचितुषु युज्यते ।
न भेदसाध्या बलदर्पिता जनाः
पराक्रमस्त्वेव ममेह रोचते ॥

ந ஸாம ரக்ஷஸ்ஸு குணய கல்பதே
ந தாநமர்த்தோபசிதேஷு யுஜ்யதே ||
ந பேதஸாத்யா பலதர்ப்பிதா ஜநா:
பராக்ரமஸ்த்வேவ மமேஹ ரோசதே ||||

ராவணனுடைய ஆந்தரமான அபிப்ராயத்தை நாம் அறிந்து கொண்டே ஸ்ரீராமனுடைய ஸந்நிதிக்குத் திரும்பவேண்டும். அவ்விதம் அபிப்ராயத்தை அறிந்துகொள்வதிலோ ஸாம, தான, பேத, தண்டம் என்ற நான்கு உபாயங்களுள் எந்த உபாயத்தை அனுஷ்டிக்கவேண்டும் என்று யோஜித்தாலோ, க்ரூரமான ஸ்வபாவமுள்ள ராக்ஷஸர்களுடன் ஸாம என்ற உபாயமானது பயன்படாது. மூர்க்கஜனங்களிடம் நாம் தாழ்மையுடன் ஸாத்வீகமான வார்த்தைகளைச் சொல்லி அவர்களுக்கு ஹிதோபதேசம் செய்தால் அவர்கள் பரிஹஸிப்பார்களல்லவா! அவ்விதமேதானம் என்ற உபாயத்திற்கும் ப்ரக்ருதத்தில் அவகாசமில்லை. பொருளைக் கொடுத்து மனிதனுடைய புத்தியை மாற்றுவதல்லவா தானம் என்ற உபாயத்தின் பொருளாகும். இதுவும் பொருளை அபேக்ஷிக்கும் தரித்ரனிடம்தான் பலிக்குமன்னயில் குபேரனுக்கு ஸமானமான தனிகர்களிடம் உபயோகப்படாது. ராவணனே மிகவும் ஸம்ருத்தமான ஸ்ரீயுடன் கூடினவன். எட்டு திக்குகளுக்கும் அதிபதியான இந்திரன் முதலான தேவர்களே ராவணனிடத்தில் ஸேவகர்களாக இருந்து வரும்பொழுது அவனல் அனுபவிக்கப் படாமல் எந்த பொருள் லோகத்தில் உள்ளது? ராவணனுடைய ஸுஹ்ருத்துக்களை ஆச்ரயித்து அவர்கள் மூலமாக, ராவணனுடைய தீர்மானத்தை மாற்ற ஏற்பாடு செய்யலாமோ என்ருலும் இதுவும் உபயோகப்படாது. மஹாபலிஷ்டனுனதால் ஒரு விதத்திலும் தனக்கு விபத்து ஏற்படும் என்பதை நினைக்கவே மாட்டேன். ஸீதாபஹாரத்தால் ஏற்படும் விபத்தைச் சொல்லியல்லவா அவன் புத்தியை பேதிக்கவேண்டும்? அதனல் தனக்கு விபத்து ஏற்படும் என்பதை எதிர்பார்த்தாலல்லவா இதைச் சொல்லி புத்தியை மாற்ற ப்ரயத்னம் செய்யலாம். அஸத் ஜனங்கள் தான செய்யும்

அதர்மத்தால் பின்பு துக்கம் ஏற்படும் என்பதை நினைக்கவே மாட்டார்கள். ஆகையால் பேதம் என்ற மூன்றுவது உபாயமும் ராவணனிடம் பலிக்காது. தண்ட உபாயத்தைத்தான் மூர்க்க ஜனங்களிடம் அனுஷ்டிக்க வேண்டும். ஆனல் தண்டோபாயம் ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்வதால்தான் ஸித்திக்கவேண்டும். அதனுல் ராக்ஷஸர்களோடு நாம் யுத்தம் செய்யவேண்டும். யுத்தத்திலோ,

**अनित्यो विजयो यस्मात् दृश्यते युद्ध्यमानयोः**
**पराजयश्च संग्रामे तस्मात् युद्धं विसर्जयेत् ।**

அநித்யோ விஜயோ யஸ்மாத் த்ருச்யதே யுத்யமாநயோ :
பராஜயச்ச ஸங்க்ராமே தஸ்மாத் யுத்தம் விஸர்ஜயேத்

என்ற நீதி சாஸ்த்ரத்தைக் கவனித்தாலோ, ராஜாக்களுள் கலகம் ஏற்படக்கூடிய ஸந்தர்ப்பத்திலும், ஜயபராஜய வ்யவஸ்தையை நிச்சயம் செய்யமுடியாது. பலவானும் துர்பலனுக ஆகிவிடலாம்; துர்பலனும் பலவானுகிவிடலாம். இது தேசம், காலம், பூர்வ கர்மா இவைகளை அனுசரித்து ஏற்பட்டது. ஆகையால் புத்தி மான்களாக இருந்தால் ஒருவருக்கொருவர் கலகம் ஜாஸ்தியாகா மல் ஸமாதான முறையிலேயே சத்ருக்களோடும் அனுஸரித்துப் போகும் அரசனே நீடித்தகாலம் அரசாளுவான் என்று தெரி கின்றபடியால் நாம் இந்த லங்கா நகரத்தில் ராக்ஷஸர்களுடன் யுத்தத்தை ஆரம்பித்தால் நாம் ஒருவனுக இருந்து வருகிறோம். ராக்ஷஸர்கள் அநேகம் பேர்கள் இருக்கிறார்கள். இவ்விதம் இருக் கும்பொழுது நாம் ஜெயிப்போம்என்று எப்படி நம்பமுடியும்? என்று கலகத்தை ஆரம்பிக்காமல் போய்விடலாமோ என்று யோஜித்தா லும், **आभगम्यतु वैदेहीं निलयं रावणस्य च** (அபிகம்யது வைதேஹீம் ராவணனுடைய வாஸஸ்தானம், இவைகளை மாத்ரம் அறிந்து போவது முக்யமானதாலும், யுத்த மன்னியில் ராவணனுடைய வாஸஸ்தானத்தையும் ஸ்வபாவத்தையும் அறிவது கஷ்டமாக இருப்பதாலும் **सर्वं बलवतः पथ्यं** (ஸர்வம் பலவத: பத்யம்) பலவா னுக்கு எக்கார்யமும் நன்மையையே செய்யும் என்ற மற்றொரு நீதி சாஸ்த்ரத்தை அனுசரித்து ஸகல சூரர்களுடைய பராக்ரமத் தையும் அதிக்ரமித்து மேலிருக்கும் சூரனுன நமக்கு எந்த யுத்தத்

திலும் ஜயமே ஏற்படு மன்னியில் அபஜயத்திற்கு ப்ரஸக்தியே கிடையாது. ஆகையால், ராக்ஷஸர்களை யுத்தத்திற்கு அழைத்தாலும் நாம்தான் ஜயிப்போம். நமது பராக்ரமத்தை ப்ரகாசம் செய்யவேண்டிய காலமே இது. மேலும், எந்த தூதன் ராஜனால் ஒரு கார்யத்தில் ஏவப்பட்டானேயானால் ராஜன் ஏவிய கார்யத்தையும் முடித்துவிட்டு அக்கார்யத்திற்கு விரோதமன்னியில் மற்ற அனேக கார்யங்களையும் செய்து முடிக்கிறானோ அவன்தான் புத்திமான் என்றும், எந்தக் கார்யத்தையும் செய்து முடிப்பதில் ஸமர்த்தன் என்றும் லோக ப்ரஸித்தமானது. ஓர் சிறிய கார்யத்திற்கும் அனேக உபாயங்களை அனுஷ்டிக்க வேண்டியிருக்கிறது. பெரியதான கார்யத்திற்க் அனேக உபாயங்களைச் செய்து தான் ஆகவேண்டும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? ஆகையால் இந்த லங்கா நகரத்திலேயே சத்ருக்களுடைய பலா பலத்தையும் தீர்மானத்தையும் தெரிந்துகொண்டு சுக்ரீவனுடைய ஸந்நிதிக்குச் சென்றால், ஸீதா தர்சனம்,ராவணனுடைய ஸ்வபாவ பரிக்ஞானம்,முதலான ராஜாக்ஞையை புஷ்களமாகச் செய்தவனாக ஆகுவேன். இல்லாவிடில் ஸீதையை மாத்ரம் பார்த்தேன் என்று சொல்லிய பிறது ராவணனுடை பலா பலம் எவ்விதம் என்று ராமன் கேட்டால் நாம் மௌனமா வல்லவா இருக்கும்படி நேரிடும்? இதற்காக மறுபடியும் வருவது ஸாத்தியமாகுமா? இப்படித் திரும்பவுப் வரும் தூதன் உத்தம தூதனாகுவானா? ஆகையால் மிகவும் லேசாக ராக்ஷஸர்களுடன் நமக்கு யுத்தம் ஏற்படும் வழியைத் தேடவேண்டும். யுத்தம் ஏற்பட்டால் ராவணனும்தன்னுடைய பலத்தையும் நம்பலத்தையும்வகுத்தறிய முடிபும். ஆகையால் ராவணனையும் நேரில் பார்த்து அவனுடைய மனதிலுள்ள அப்பிராயத்தையும் அறிந்துவிட்டு, ராவணனுடன் யுத்தம் ஏற்பட்டால் இவன் பலவானா, துர்பலவானா என்பதையும் அறிந்து ராமனுடைய ஸமீபம் செல்லவேண்டுமன்னியில் அவஸரப் படக் கூடாது'' என்று தீர்மானித்து, ராக்ஷஸ ராஜனான ராவணனுடைய மனதிற்கும், கண்களுக்கும் பரம ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியதாயும், அநேக அபூர்வ வ்ருக்ஷங்களாலும் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டுவரும் இந்த அசோகவனம் என்ற உத்யான வனத்தைக் காட்டுத் தீ காட்டை எரிப்பதுபோல் அழித்துவிட வேண்டும்.

இது அழிந்தால் ராவணனுக்கு ஸஹிக்கமுடியாத கோபம் ஏற்பட்டுவிடும். பிறகு ரச, கஜ, துரக, பதாதிகள் என்ற நான்கு விதமான அங்கங்களுடன் பெரிய ஸேனையை யுத்தத்திற்குஅனுப்பி விடுவான். ஸேனைகளும் சூலாயுதம், பட்டஸாயுதம், காலாயம் முதலான ஆயுதங்களுடன் வந்து நம்மைக் கைப்பற்றிக் கொள்ளவோ, கொல்லவோ யத்னம் செய்வார்கள். நமக்கும் ராக்ஷஸர்களுக்கும் பெரிய போர் ஏற்பட்டுவிடும். நானே' ப்ரபலமான ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்வதில் மிகுந்த உத்ஸாஹமுள்ளவள். ராக்ஷஸ பலத்தை அனுயாஸமாகக் கொன்று ஜயத்தை அடைந்துவிடுவேன். ஆகையால் அசோகவனத்தின் நாசம்தான் ராஜ தர்சனத்திகு முக்யமான உபாயமாகும்'' என்று தீர்மானித்து ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் தன் காலின் வேகத்தாலேயே ஒவ்வொரு வ்ருக்ஷங்களையும் வேருடன் முறிந்து கீழே விழும்படிச் செய்தார். அந்தப்புர ஜனங்கள் க்ரீடை செய்வதற்கு உசிதமான அசோகவனத்தை ஒரு முஹூர்த்தத்தில் அழித்து விட்டார்.

அநேக பக்ஷிகள், வ்ருக்ஷங்கள், க்ரித்ரிம பர்வதங்கள், நதிகள் இவைகள் எல்லாம் சின்னபின்னமாகிவிட்டது. லதா க்ரஹங்களும் அழிந்துபோய் பார்ப்பவர்களுக்கு மிகுந்த துக்கத்தைக் கொடுக்கக் கூடியதாக ஆகிவிட்டது.

सा विह्वलाशोकलताप्रताना
वनस्थली शोकलताप्रताना ।
जाता दशास्यप्रमदावनस्य
कपेर्बलद्धि प्रमदावनस्य ॥

ஸா விஹ்வலா சோகலநாம்ரதாநா
வநஸ்தலீ சோகலதாப்ரதாநா ||
ஜாதா தசரஸ்ய ப்ரமதாவநஸ்ய
கபேர்பலத்தி ப்ரமதாவநஸ்ய ||

இந்த அசோகவனத்திலுள்ள வன ஸ்தலத்தையோ, வனஸ்தலீ என்ற ஸ்த்ரீ லிங்க சப்தத்தால் மஹர்ஷியான வால்மீகி வர்ணிக்கின்றார்.

ஆஞ்ஜனேயஸ்வாமியால் அழிக்கப்படுவதற்கு முன்பு அந்த வன ஸ்தலமானது அசோக லதா ப்ரதானமாக இருந்தது. अशोकं अशोच्यं लताप्रदनं यस्या सा (அசோகம், அசோச்யம், லதாபரதானம், யஸ்யா ஸா) என்ற ஸமாஸத்தால், பார்க்கும் ஜனங்களுக்கு ஸகல துக்கங்களேயும் போக்கக்கூடிய அநேகவிதமான லதைகளால் விஸ்தரிக்கப்பட்டதாக இருந்தது.

அத்துடன், दशास्य प्रमदावनस्य वनस्थली (தசாஸ்ய ப்ரமதாவநஸ்ய வநஸ்தலீ) என்ற அந்வயத்தால் ராவணனுடைய ஸ்த்ரீகளான மண்டோதரி முதலியவர்களுக்கு போக ரஸத்தைப் பெருகச் செய்து, தானுகவே போக ·ச்ரோதத்தை அனுபவிக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் ராவணனே ஆலிங்கனுதிகள் முதலானவைகளேச் செய்யும் புத்தியை அந்த ஸ்த்ரீகளுக்குக் கொடுத்து வந்தது. அத்துடன்,ராவணனுடைய அந்தப்புரஸ்த்ரீகள் வஸிக்கும் வாஸஸ்தானமாகவும் இருந்து வந்தது. அவ்வித மஹிமை உள்ள வநஸ்தலீயானது ஆஞ்ஜனேய ஸ்வாமியின் பலத்தால் சின்னுபின்னமாகி பார்த்தமாத்ரத்தில் பார்ப்பவர்களுக்கு மஹத்தான துக்கத்தை கொடுக்கக்கூடிய கொடிகளால் விஸ்தரிக்கப்பட்டதாகிவிட்டது.

अशोकलताप्रताना दशास्य प्रमदावनस्य। प्रमदावनस्य वनस्थली कपेर्बलात्। विह्वला शोकलता प्रताना जाता। (அசோகலதா ப்ரதாநா தசாஸ்ய ப்ரமதா வநஸ்ய. ப்ரமதாவநஸ்ய வநஸ்தலீ கபேர்பலாத் விஹ்வலா சோகலதா ப்ரதாதா ஜாதா)

ராவணனுடைய அந்தப்புர ஸ்த்ரீகளுக்கு பார்த்தமாத்ரத்தில் காம வ்ருத்தியை உண்டுபண்ணிய இந்த அசோவன ப்ரதேசம், ஆஞ்ஜனேயருடைய பலத்தால் அதே ராவணனுடைய அந்தப்புர ஸ்த்ரீகளுக்கு பார்த்த மாத்ரத்தால் கண்ணீர் ஜலத்தைப் பெருஹ விட்டுக்கொண்டு துக்கத்தைக் கொடுப்பதாக ஆகிவிட்டது. இந்த ச்லோகத்திற்கு மற்ளெரு அர்த்தத்தை அறியவும்.

शोकलता प्रताना (சோகலதா ப்ரதாநா) என்ற பதத்திலுள்ள लता (லதா) என்பதற்கு பதிலாக रता (ரதா) என்று க்ரஹித்துக் கொள்ளவேண்டும். र (ர)விற்கும் ल (ல)விற்கும் பேதமில்லை. शोकरताः अप्रतानाः (சோகரதா: அப்ரதாநா:) என்றும் பதச்சேதம் செய்து கொள்ளவேண்டும். अप्रतानाः (அப்ரதாநா:) என்பதற்கு अप्सुतानाः अप्रतानाः (அப்ஸுப்ரதாநா: அப்ரதாநா:) ஜலத்தில் முளேத்து மலர்ந்திருக்கும் நீலோத்பலம் அல்லது தாமரைப் புஷ்பம் என்று அதன் பொருளாகும்.

இதனால் ராவணனுடைய அந்தப்புர ஸ்த்ரீகள் க்ரீடிக்கும் வனஸ்தலியானது மலர்ந்த தாமரைப்புஷ்பங்கள், நீலோத்பல புஷ்பங்கள் முதலான குஸுமங்களால் அலங்கரிக்கப்பட்டுவந்து, துக்க நிவர்த்திபூர்வகமான பரமானந்த அவாப்திக்கு ஸாதானமாக விளங்கிவந்ததும் ஹனுமானுடைய பலத்தால் அந்த புஷ்பங்கள் எல்லாம் வாடிப்போனதனால், வ்ருக்ஷங்களும் முறிந்து கீழே விழுந்துவிட்டதனால், கொடிகளும் வாடிவிட்டதால், பார்ப்பவர்களுக்கு, அதிலும் ராவணனுடைய அந்தப்புர ஸ்த்ரீகளுக்குப் பரம துக்கத்தையே கொடுக்கக்கூடியதாக ஆகிவிட்டது. **दशास्य प्रमदावनस्य वनस्थली कपेर्बलात् ओकलताप्रताना जाता प्रमदावनस्य वनस्थली अशोकलता प्रताना जाता ।** (தசாஸ்ய ப்ரமதாவநஸ்ய வநஸ்தலீ கபேர்பலாத் சோகலதா ப்ரதாநா ஜாதா ப்ரமதாவநஸ்ய வநஸ்தலீ அசோகலதாப்ரதாநா ஜாதா)என்று அந்வயித்துக் கொண்டு தாத்பர்யத்தைக் கவனித்தால், **प्रमदावनस्य** (ப்ரமதாவநஸ்ய) என்பதால் ஸீதாதேவியையும், **दशास्य प्रमदावनस्य** (தசாஸ்ய ப்ரமதாவநஸ்ய) என்பதால் ராக்ஷஸ ஸ்த்ரீகளையும் க்ரஹித்துக்கொள்ளும் பக்ஷத்தில், ஆஞ்ஜனேயஸ்வாமியினுடைய பராக்ரமத்தில் அசோகவனமானது ஸீதைக்கு ஸந்தோஷத்தையும் ராக்ஷஸ ஸ்த்ரீகளுக்கு துக்கத்தையும் கொடுத்தது என்ற அர்த்தம் ப்ரகாசிக்கின்றது. இதனால் அசோகவனம் முழுமையும் ஆஞ்ஜனேயரால் அழிக்கப்பட்டாலும், ஸீதை வாஸம் செய்துவந்த இடம் மாத்ரம் ரக்ஷிக்கப்பட்டதாகவே இருந்துவந்தது என்ற அர்த்தமும் வெளியாகிறது.

இவ்விதம் ஆஞ்ஜனேயர் ராவணன் என்ற ராக்ஷஸ ராஜனுக்கு அசோகவனத்தை அழித்ததுமூலமாக பரிஹரிக்கத்தகாத அப்ரியத்தைச் செய்துவிட்டு, பிறகு ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்ய வேண்டுமென்ற ஆவலுடன், தான் ஒருவனாக இருந்தாலும், மஹா பலிஷ்டர்களான அநேக ராக்ஷஸர்களையும் துச்சமாகவே நினைத்து, ஜயஸ்ரீயுடன் விளங்கிக்கொண்டு, கோபுர த்வாரத்தில் ஏறிக் கொண்டு அட்டஹாஸம் செய்துவந்தார்.

அசோகவனத்தை அழித்தகாலத்தில் வனத்தில் வஸித்துவந்த பக்ஷிகளின் கோரமான சப்தத்தாலும், வ்ருக்ஷங்கள் முறிந்து கீழே விழும் சப்தங்களாலும், லங்கையில் வஸிக்கும் ஸகல ஜனங்களும் மிகவும பயந்தார்கள். என்ன ஆபத்து ஏற்படுமோ என்ற கவலை உள்ளவர்களாயும் ஆனார்கள். அந்த வனத்திலுள்ள ம்ருகங்கள், பக்ஷிகள் இவைகள் எல்லாம் பயத்தால் நடுக்கத்தை அடைந்து நாலா பக்கங்களிலும் பயந்து ஓடின. ராக்ஷஸ ஸ்த்ரீகளும் அழிந்து

போன அசோகவனத்தைப் பார்த்து, மஹா பராக்ரமசாலியான ஆஞ்ஜனேயரையும் பார்த்து மிகவும் கவலையை அடைந்தார்கள். ராக்ஷஸ ஸ்த்ரீகள் பார்க்கும்பொழுது ஆஞ்ஜனேயஸ்வாமி பயங்கர மான ப்ரம்மாண்ட உருவத்துடன் விளங்கிவந்தார். ராக்ஷஸ ஸ்த்ரீகளோ, இதுபோலுள்ள க்ரூரமான ரூபத்தை இதற்கு முன்பு பார்க்காதவர்களானதால், பார்த்ததும் நடுங்கினார்கள். ஸீதா ப்ராட்டியினிடமும், ராக்ஷஸ ஸ்த்ரீகள், 'இந்த வானரம்தானே உன்னுடன் பேசிக் கொண்டிருந்தது, இது யார்? எங்கிருந்து வந்தது? இங்கு வந்ததின் காரணமென்ன? ராக்ஷஸர்களால் நிரம்பிய இந்த லங்கா நகரத்திற்குள் எவ்விதமோ நுழைந்து உன்னுடனும் வெகுகாலம் பேசிக்கொண்டிருந்ததே ! நீங்கள் இருவர்களும் என்ன பேசிக்கொண்டிருந்தீர்கள் ? இதன் உண்மையைச் சொன்னால் உனக்கு ஸௌக்யம் ஏற்படும். மறைத்துப் பேசினால் கஷ்டம்தான் என்பதை அறியவும்' என்று ராக்ஷஸ ஸ்த்ரீகள் ஸீதையை நிர்ப்பந்தம் செய்து கேட்டார்கள். ஸீதையோ,

रक्षसां भीमरूपाणां विज्ञाने मम का गतिः ।
यूयमेवाभिजानीत योऽयं यद्वा करिष्यति ।।
अहिरेव ह्ययेः पादान् विजानाति न संशयः ।
अहमप्यस्य भीतास्मि नैनं जानामि कोन्वयम् ।।

ரக்ஷஸாம் பீமரூபாணாம் விக்ஞானே மம கா கதி: ।
யூயமேவாபிஜாநீத யோயம் யத்வா கரிஷ்யதி ॥
அஹிரேவ ஹயயே: பாதாந் விஜாநாதி ந ஸம்சய: ।
அஹமப்யஸ்ய பீதாஸ்மி நைநம் ஜாநாமி கோந்வயம் ॥

என்று ஸீதாதேவி, ராக்ஷஸ ஸ்த்ரீகளுக்கு பதில் அளித்தாள்.

''ராக்ஷஸிகளே! ராக்ஷஸர்களோ, பயங்கரமான உருவத்தை உடையவர்கள். அவர்களுடைய உண்மையை அறியும் விஷயத்தில் எனக்கு சக்தியே கிடையாது. இந்த வானரமானது ஜாதியிலேயே வானரமா அல்லது ராக்ஷஸன்தான் இந்த உருவத்துடன் வந் திருக்கிறானா என்பதையும், எங்கிருந்து, எக்கார்யத்தை உத்தேசித்து வந்திருக்கிறான் என்பதைம் நீங்கள்தான் அறிந்துகொள்ள முடியும். நானும் இந்த ரூபத்தைப் பார்த்து நடுங்கிக்கொண்டு தான் இருக்கிறேன். எனக்கு யார் என்பதே தெரியாது'' என்றாள்.

ஸீதையோடு, ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் வெகு காலம் ஸல்லாபம் செய்துகொண்டு ஸீதையினுடைய துக்கத்தைநிவர்த்தி செய்து வைத்து எவ்வளவோ கார்யங்களை செய்திருக்கும்பொழுது ஸீதாதேவியானவள் எனக்கு யாதொன்றும் தெரியாதென்று சொல்லுகிருளே! இந்த ஸ்ரீமத் ராமாயணம் என்ற ப்ரபந்த விசேஷமோ, ஸத்யம் என்ற விசேஷ தர்மத்தை நிலைநாட்ட ஏற்பட்டது. ஸீதா தேவியோ, இந்த ப்ரபந்ததத்தில் ப்ரதானமான கதாநாயகியாகுவாள். தேவியே இவ்விதம் ஸத்யத்திற்குத் தவறி நடந்தால் ப்ரபந்தத்தின் கௌரவமே போவிடுமல்லவா.

धर्मोहि परमो लोके सत्ये धर्मः प्रतिष्ठितः। (தர்மோஹி பரமோலோகே ஸத்யே தர்ம: ப்ரதிஷ்டித:) என்றுஸ்ரீராமபிரானும் ஸத்யத்தினுடைய விசேஷத்தை மிகவும் மேலானதாக வர்ணித் திருக்கிருர். ஸத்யம் என்ற விசேஷ தர்மத்தைப் பரிபாலனம் செய்யவல்லவா, தண்டகாரண்யத்தில் பகவான் வாஸம் செய்தார் இவ்விதமிருக்க ஸீதாதேவியும் ஸதாசார ப்ரதானமான ஜனக குலத்தில் அவதரித்து ஸத்ய ஸந்தனுன ராமனுடைய தர்ம பத்னியாகவும் இருந்து கொண்டு,ஸத்யம் என்ற விசேஷதர்மத்தை ப்ரகாசம் செய்ய ஏற்பட்ட இந்த ப்ரபந்தத்தில் கதாநாயகியாகவும் இருக்கும்பொழுது ஸத்ய விரோதமாக நடந்துகொள்ளாமா என்வதைக் கொஞ்சம் யோசிக்க வேண்டும். இதற்கு ஸமாதான மாக சிலர்கள்'' இவ்விதம் ஸீதை பொய்யைச் சொல்லாதபோனுல் தன் உயிருக்கே ராக்ஷஸிகள் மூலமாக ஹானி ஏற்படும் என்று நினைத்துத் தன் உயிரைத் தான் ரக்ஷித்துக்கொள்வதற்கு, ஸத்யத் திற்கு விரோதமாயும் நடந்துகொள்ளலாம் என்று நடந்து கொண்டாள்.''

उद्वाहकाले रतिसंप्रयोगे प्राणात्यये सर्वधनापहारे ।
विप्रस्यार्थेप्यनृतं वदेयुः पञ्चानृतान्याहुः अपातकानि ॥

உத்வாஹகாலே ரதிஸம்ப்ரயோகே
ப்ராணுத்யயே ஸர்வதநாபஹாரே ।
விப்ரஸ்யார்த்தேப்ய ந்ருதம் வதேயு:
பஞ்சாந்ருதாந்யாஹு: அபாதகாநி ॥

என்ற ஸ்ம்ருதியும், ஆபத் காலத்திலும், மற்ற சில ஸந்தர்ப்பங் களிலும், அந்ருத வசனம் தோஷத்தைக் கொடுப்பதாக ஆகாது என்று சொல்லுகிறது.

அதாவது. ஸ்த்ரீ புமான்களுடைய உத்வாஹ காலம், ரதி காலம், உயிருக்கு ஹானி ஏற்படும் காலம், ஸகல வித ஸொத்தும் போய்விடுமோ என்று ஏற்படும் காலம், ஸத் ப்ராம்மணனை ரக்ஷிக்கும் விஷயம் இந்த ஸந்தர்ப்பங்களில் ஸத்யம் தவறி நடந்தாலும், கார்யம் ஸித்திக்கும் பக்ஷத்தில் அந்ருதவாதியாக ஆக மாட்டான் என்றே மேற்கண்ட ஸ்ம்ருதியின் தாத்பர்யமாகும்.

இதை அறிந்த ஸீதாதேவியானவள் ராக்ஷஸ ஸ்த்ரீகளிடம் ஸ்ரீ ராமனுல் அனுப்பப்பட்ட தூதன் என்று ஆஞ்ஜனேயரைப் பற்றிச் சொன்னுல் உடன் ராக்ஷஸ ஸ்த்ரீகள் தன்னைக் கொன்று விடுவார்கள். எவ்வளவோ மூல கார்யங்களுக்கு ஹானி ஏற்பட்டு விடும். தன் உயிருக்கும் ஹானியே ஏற்படும். ஆகையால் இந்த ஸந்தர்ப்பத்தில் உண்மையைச் சொல்லக்கூடாது என்று சொன்னதினுல் ஸத்யம் என்ற விசேஷதர்மத்தை ப்ரகாசம்செய்ய ஏற்பட்ட ராமாயண ப்ரபந்தத்தின் கௌரவம் போய்விடாது என்று தன் மனதையும் ஸமாதானம் செய்துகொண்டு. அந்யர்களையும் ஸமாதானப் படுத்துகிறுள். இதனுல் ஆபத் காலத்தில் பொய் சொல்லலாம் என்பது அவர்களின் ஸித்தாந்தமாகும். சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட தர்மங்களுக்கு காலத்தை அனுஸரித்து மாறுதல் செய்யலாம் என்று சொல்லுபவர்களாகத்தான் அவர்கள் ஆகுவார்கள். அது முன்னேர்களுடைய ஆசாரத்திற்கு விருத்தமானது ஸத்யம் என்ற விசேஷ தர்மத்திற்கு எக்காரணத்தைக்கொண்டும் மாறுதல் ஏற்படக்கூடாது என்பதையே ப்ரக்ருதத்தில் விசாரித்துத் தீர்மானிக்கவேண்டும்,

ஸீதாதேவியானவள் பொய் சொன்னுள் என்று சொல்ல வித்வான்களுடைய மனதிற்கு ஸஹன சக்தி ஏற்படாது. தேவி பொய்யும் சொல்லமாட்டாள். தன்னிடம் ஆஞ்ஜனேய ஸ்வாமியோ, உத்தரவு பெற்றுக்கொண்டு ராமனுடைய ஸமீபம் போவதாகச் சொல்லிவிட்டு பரஸ்தானம் செய்துவிட்டார். தன்னுடன் பேசிக்கொண்டிருந்த ஸந்தர்ப்பத்திலும் எந்த ரூபத்துடன் விளங்கி வந்தாரோ, அந்த ரூபத்துடன்தான் அசோக வனத்தை அழிக்கும் காலத்தில் இருந்து வந்தாரா? பயங்கரமான ரூபத்துடனல்லவா ராக்ஷஸ ஸ்த்ரீகளுக்குக் காணப்பட்டார்! காம ரூபிகளுக்கு நினைத்த மாத்ரத்தில் பலவித ரூபங்களை எடுத்துக்கொள்ள சக்தி இருக்கும்பொழுது, எந்த ரூபத்தை எடுத்துக்கொண்டு தன்

னுடன் ஸல்லாபம் செய்தாரோ, அந்த ரூபத்துடனேயே அசோக வனத்தை அழிக்கும் காலத்திலும் இருந்தாரேயானுல், அப்பொழுது ஸீதை 'எனக்குத் தெரியாது' என்று சொன்னது பொய் என்று சொல்லலாம். அல்லது ஆஞ்ஜனேயஸ்வாமிதான் ராக்ஷஸர்களுடன் யுத்தம் ஏற்படக் காரணமாக அசோகவனத்தை அழிக்கப் போகிறேன் என்று ஸீதையினிடத்தில் சொன்னுரா? அதனுல் ஸீதைக்கு ராக்ஷஸ ஸ்த்ரீகள் பார்த்து பயந்த உருவத்தின் உண்மை யானது எவ்விதம் தெரிய ந்யாயமுண்டு?

ஒரு மனிதன், தான் ஸதா காலமும் அனுபவித்துவந்த ஸ்த்ரீ, புத்ராதிகள், கர்ம நிமித்தமாக வேறு சரீராந்தரத்தை அடைந் திருக்கும் காலத்தில் அவர்களைப் பார்த்துத் தான் யார் என்று அறியவில்லை என்று சொன்னதற்காக அவன் பொய் சொன்ன வனுக ஆகிவிடுவானு? இதுபோலவே தன்னுல் அனுபவிக்கப்பட்டு வந்த ஒரு பதார்த்த விசேஷத்தை அவன் இல்லாத காலத்தில் அதை ஒளித்துவைத்து அங்கு என்ன இருக்கிறது என்று கேட்கப் பட்டபோது, 'எனக்குத் தெரியாது' என்று சொன்னதினுல், அந்த மனிதன ஸத்யம் தவறி நடந்தவனுகுவானு? ஸீதையினுடைய எதிரில் ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் எந்த உருவத்துடன் பாஷித்து வந்தாரோ அந்த உருவத்துடன் அசோகவனத்தை அழிக்கும் பொழுது விளங்கி வரவில்லை. அது மறைந்துவிட்டது. இது புதிதான வேறு உருவமாகும். இந்த உருவத்தை ஸீதை முன்பு பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை.

அர்ஜுனனும், பகவானுன ஸ்ரீ க்ருஷ்ணனும் பழகியதுபோல் லோகத்தில் யாரும் ஒருவருக்கொருவர் பழகினதில்லை. பகவானுன ஸ்ரீ க்ருஷ்ணனைப் பற்றி அர்ஜுனனுக்குத் தெரியாதது ஏதாவது உண்டா? அந்த அர்ஜுனனே கீதையில் 11-வது அத்யாயத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் விச்வரூபத்தைத் தரித்துக்கொண்டிருந்த காலத்தில், **आख्याहि मे को उग्र** (ஆக்யாஹி மே கோ உக்ர) "நீ யார்?" என்று கேட்டானே; ஆகையால் அவன் தன் ஞானத்தை மறைத்தா பேசினுன்? அதனுல் அர்ஜுனன் பொய் சொன்னவனுகுவானு? எந்த ஸௌம்யமான உருவத்துடன் அர்ஜுனன் பழகினுனே, அந்த ரூபத்துடனே பகவான் பாஷிக்கும்பொழுது, 'நீ யார்?' என்று அர்ஜுனன் கேட்டால், அவனை மித்யாவாதி என்று சொல்லலாம். அந்த ரூபத்துடன் பகவான் பாஷிக்கவில்லை. பயங்கரமான உருவத் துடன் பாஷித்ததால், 'நீ யார்? எதற்காக வந்தாய்?' என்று அர்ஜுனன் கேட்பதோ, பகவானும் அதற்கு அனுஸரித்தே, 'நான்

தான் க்ருஷ்ணன்' என்று சொல்லாமல்' कालोऽस्मि लोकक्षयकृत् प्रवृद्धः (காலோஸ்மி லோககக்ஷயக்ருத் ப்ரவ்ருத்த:) என்று சொல்லு வதோ, இவைகள் ஸத்யம் என்ற விசேஷ தர்மத்தை நழுவச் செய்யுமா ?

எந்த வஸ்துவை யார் எப்படிப் பார்த்து அனுபவித்தவர் களோ, அப்படியே அந்த வஸ்துவைப்பார்த்து எனக்குத் தெரியாது என்று சொன்னால் மாத்ரம்தான் அந்ருத வசனத்திற்கு அவகாசம் ஏற்படுமன்னியில், தான் பார்த்து அனுபவிக்காத வஸ்துவைப் பார்த்து, அதைப் பற்றிக் கேட்கும்பொழுது, எனக்குத் தெரியாது என்று சொன்னதற்காக ஸத்யம் தவறாது. தெரியாததைத் தெரியாது என்று சொன்னால்தான் ஸத்யமாகும். தெரிந்ததைச் தெரியாது என்பதும், தெரியாததைத் தெரியும் என்பதும் அந்ருத வசனமாகவேயாகும்.

ஆனால், ஸீதைக்கு எதிரிலும் ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் விச்வரூபத்தைத் தரித்திருந்தாரே, அதே விச்வரூபம்தானே அசோகவனத்தை அழிக்கும்பொழுதும் இருந்துவந்தது. ஆகையால் ஸீதையால் பார்க்கப்பட்ட ரூபம்தான் இது. தெரியாதென்று எப்படிச் சொல்லாம் என்றும் சங்கிக்க ந்யாயமில்லை. விச்வரூபம் என்பது ஒன்றல்ல. அநேகவிதங்கள் உண்டு. ஸீதைக்கு எதிரில் எந்த ரூபத்துடன் (எவ்விதமான விச்வரூபத்துடன்) ஆஞ்ஜனேய ஸ்வாமி விளங்கிவந்தாரோ, அந்த விச்வரூபத்துடனேயே அசோக வனத்தை அழித்தகாலத்திலும் விளங்கிவந்நார் என்பதை எப்படி ஒப்புக்கொள்ள முடியும் ?

सर्वतो बलवती ह्यन्यतानुपपत्तिः (ஸர்வதோ பலவதீ ஹ்யந்யதாநுபபத்தி:)என்று அர்த்தாபத்தி ப்ரமாணத்தை மிகவும் ப்ரபலமாக சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருக்கிறது. பரம தார்மி கனான ஜனக மஹாராஜனுடைய க்ரஹத்தில் வஸித்துவந்த ஸீதாதேவிக்கு ஆவாஸ சுத்தியோ, பூமியினின்றும் அயோநிஜை யாக உண்டான காரணத்தால் ஜன்ம சுத்தியோ, இவைகளைக் கவனித்தால் ஸீதாதேவியினிடம் அந்ருத வசனத்திற்கு ப்ரஸக்தியே இல்லையென்று தான் ஒப்புக் கொள்ளவேண்டும். அதாவது தேவியை ஸத்யஸந்தை என்றே ஸித்தாந்தம் செய்ய வேண்டும்.

இவ்விதம் ரேவியினிடத்தில் உள்ள ஸத்ய வசனம் என்ற மஹிமையை யாரும் மறக்க முடியாது. அக்னியினுடைய ஒளஷ்ண்யத்தை மாற்ற முடியாததுபோலும், ஸூர்யனுடைய ப்ரகாசத்தை மாற்ற முடியாததுபோலும், தேவியினிடத்திலுள்ள

ஸத்ய வசன ஸ்வபாவத்தையும் மாற்ற முடியாது. அசோக வனத்தை அழித்த காலத்தில் ஆஞ்ஜனேயருடைய ரூபமானது ஸீதையினுல் முன்பு பார்க்கப்பட்டதாக ஆகும் பக்ஷத்தில் ஸீதையினுடைய ஸத்ய வசன ஸ்வபாவம் போய்விடும். ஸத்ய வசன ஸ்வபாவத்தையோ மாற்ற முடியாது என்று சொன்னேம். அது தேவியினிடத்தில் உபபன்னமாக ஆகவேண்டுமானுல் அசோக வனத்தை அழிக்கும் காலத்தில் ஆஞ்ஜனேயருடைய ரூபமானது முன்பு ஸீதையால் பார்க்கப்படாதது என்பதையே ஸ்தாபிக்கின்றது.

अन्यथा (அந்யதா) அசோகவனத்தை அழிக்கும்பொழுது ஆஞ்ஜனேயருடைய ரூபமானது ஸீதையால் அத்ருஷ்டம் என்று சொல்லாத பக்ஷத்தில், (முன்பும் ஸீதையால் த்ருஷ்டம் என்று சொல்லும் பக்ஷத்தில்) ஸீதையினிடத்தில் உபபன்னமாகாததான ஸத்ய வசன ஸ்வபாவமானது. அசோகவனத்தில் ஆஞ்ஜனேயருடைய ரூபத்தில் ஸீதாதேவியினுடைய தர்சனத்திற்கு முன்பு அது யோக்யமாகவில்லை என்பதை அது கல்பிக்கின்றது. இதைத் தான் அந்யாதானுபபத்தி என்று வித்வான்கள் சொல்லுவார்கள். அர்த்தாபத்தி என்றும் இதை வ்யவஹரிப்பார்கள். ஒரு யோகி போஜனம் செய்வதில்லை என்ற ப்ரஸித்தியை அடைந்திருக்கிருன். ஆகிலும், நாளுக்கு நாள் அவன் சரீரத்தில் பீனத்வம் காணப்படுகிறது. போஜனம் செய்யாதபோனுல் ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிற பீனத்வத்(பெருமன்)திற்கு உபபத்தியில்லாமல் போகிறது என்பதிலிருந்தும் அந்த யோகியினிடத்தில் ரஹஸ்யமாக அவன் போஜனம் செய்கிருன் என்பதைத் தீர்மானிக்க வேண்டியதாக இருக்கிறது.

அதுபோல்தான் ப்ரக்ருதத்திலும் ஸீதா தேவியினிடத்தில் சாஸ்த்ர ப்ராமாண்யத்தைக்கொண்டும், தேவியின் பாதிவ்ரத்ய மஹிமையைக்கொண்டும், ப்ரஸித்தமாக விளங்கிவரும் ஸத்ய வசன ஸ்வபாவம் அசோகவனத்திலுள்ள ஆஞ்ஜனேயருடைய ரூபம் ஸீதைக்குத் தெரிந்தும், தெரியாது என்று சொன்னுளேயானுல் உபபன்னமாக ஆகாததால். அந்த ஸ்வபாவம் உபபன்னமாகிறதிலிருந்து அசோகவனத்தை அழிக்கும் ஸமயம் ஆஞ்ஜனேயருடைய உருவம் ஸீதையால் முன்பு த்ருஷ்டமில்லை என்பதைக் கல்பித்தே ஆகவேண்டும்.

இவ்விதம் சாஸ்த்ரங்களின் மார்க்கத்தை ஆலோசித்துப் பார்க்கும் பக்ஷத்தில் தேவியினிடத்தில், 'பொய் சொன்னுளோ' என்ற சங்கைக்கே இடமில்லை. ஆகையால் காம ரூபிகளான ராக்ஷஸர்கள் எந்த ஸமயத்தில் எந்த ரூபத்தை அடைகிறுர்கள் என்பதைப் பாம்பின் கால் பாம்புக்குத்தான் தெரியும் என்பது போல் உங்களுக்குத் தான் தெரியும். நான் அறிந்தவளல்ல'' என்று ராக்ஷஸ ஸ்த்ரீகளைப் பார்த்து ஸீதாதேவி சொன்னது ஸத்யம்தான் என்பது ஸித்தமாகிறது.

மேலும், தான் அசோகவனத்தை அழித்த ஆஞ்ஜனேயரை அறியவில்லை என்று ஸீதாதேவி சொன்னதற்கு, மற்ருெரு வித மாகவும் தாத்பர்யத்தை அறியலாம். ஆஞ்ஜனேயஸ்வாமியையோ, வ்யங்க்யார்த்த மர்யாதையை அனுஸரித்து ஆசார்யபுருஷன் என்று முன்பு வர்ணிக்கப்பட்டிருக்கிறது. பரிபூர்ணமான லக்ஷணத்துடன் கூடின ஆசார்யன் என்று **पक्षी च शाखानिलयः** (பக்ஷீ ச சாகாநிலய:) என்ற ச்லோகத்தின் வ்யாக்யானத்தில் வர்ணிக்கப்பட்டிருப்பதை வித்வான்கள் அறிந்திருக்கக் கூடும். ஆசார்ய புருஷனுடைய லக்ஷணங்களுக்குள் ஒன்றுகூட ஆஞ்ஜனேயஸ்வாமியினிடம் குறையவில்லை. அஷ்டாக்ஷரீ என்ற மந்த்ரராஜத்தை ஸீதை என்ற உத்தம ஜீவனுக்கு உபதேசம் செய்த மஹானுபாவன் என்ற தாத்பர்யத்தை யாரும் மறுக்க முடியாது. தத்வ உபதேஷ்டாக்களோ, யாருக்கும் யாதொருவித ஹிம்ஸையையும், எக்காரணத்தைக் கொண்டும், எந்த காரணத்தாலும் செய்யமாட்டார்கள். அஹிம்ஸா பரமோ தர்ம: என்ற சாஸ்த்ரத்தில் ஸித்தாந்தத்தையும் ஆந்ருசம்ஸ்யம் பரோதர்ம: என்ற ஸ்ரீராமனுடைய அபிமதத்தையும் அனுஸரித்தவர்களாகவே இருந்துகொண்டு ப்ராணிகளுடைய மனதிற்கு அத்ருப்திகரமான ஹிம்ஸையைச் செய்யமாட்டார்கள்.

வனத்தில் மரங்களை முறித்துக் கீழே தள்ளும் ஸ்வபாவமுள்ளவைகள் சாகா ம்ருகங்களேயாகும். தனக்குத் தத்வோபதேசம் செய்த ஸத்குருவை, ஸத்குருவாகப் பார்த்த ஸீதைக்கு, அசோக வனத்தில் மரங்களை முறித்துத் தள்ளும் சாகா ம்ருகத்தை யார் என்று ஸீதையினிடத்தில் கேட்டால் அந்த ஸீதைக்கு எவ்விதம் தெரியக்கூடும்? ஆகையால் வாக்யார்த்த மர்யாதையோ, வ்யங்க்யார்த்த மர்யாதையோ, இவைகளை அனுஸரித்துப் பார்த்தாலும்

எவ்விதத்திலும் ஸீதையினிடத்தில் அந்ருத வசன சங்கைக்கே இடமில்லை என்பதை ஒப்புக்கொண்டே தீரவேண்டும்.

ஸீதையினுடைய வார்த்தைகளைக் கேட்டதும், சில ராக்ஷஸ ஸ்த்ரீகள் ராவணனுடைய ஸமீபம் சென்று, ''ராஜனே! பயங்கரமான சரீரத்துடன் ஒரு வானரமானது ஸீதையுடன்கூட வெகு காலம் பேசிவிட்டு, பிறகு அசோகவனம் முழுமையும் அழித்துவிட்டது. ஸீதையினிடம், 'அந்த வானரம் யார்?' என்று நாங்கள் கேட்டதற்கு, 'எனக்கு யாதொன்றும் தெரியாது' என்று சொல்லிவிட்டாள். அந்த வானரம் ஸீதையுடன் வெகுகாலம் பேசிக்கொண்டிருந்தபடியால், அவள் தனக்கு இந்த வானரத்தைப் பற்றித் தெரியாது என்று சொன்னது நம்பத் தகுந்ததல்ல. பலவித நிர்ப்பந்தம் செய்து கேட்டும், உண்மையைத் தெரிவிக்க அவள் இச்சிக்கவில்லை. வானரத்தைப் பார்க்கும்பொழுது, ஜாதியில் வானரம் என்று தோன்றவில்லை. இந்த்ரனுடைய தூதனோ, குபேரனுடைய தூதனோ, அல்லது ராமனாலேயே ஸீதையைக் கண்டு பிடிப்பதற்காக அனுப்பப்பட்ட தூதனோ என்று நினைக்கக் கூடியதாக இருக்கிறது. பார்ப்பதற்கு பயங்கரமாயும் இருக்கிறது. அசோகவனம் முழுமையும் அழித்துவிட்டது. அந்த ஹனுமானால் அழிக்கப்படாததான தேசம் ஒன்றுமே அசோகவனத்தில் இல்லை ஆனால் ஸீதையாவவள் எந்த சிம்சுபா வ்ருக்ஷத்தினுடைய அடியில் வஸித்துவருகிறாளோ, அந்த மரம் மாத்ரம் முறிக்கப்படவில்லை. வானர ச்ரேஷ்டனுடைய அபிப்ராயம் என்ன என்றும் கண்டு பிடிக்க முடியவில்லை. ச்ரமத்தால்தான் அந்த வ்ருக்ஷத்தை முறிக்காமல் இருக்கிறாரோ, அல்லது ஸீதையை ரக்ஷிக்கவேண்டும் என்ற எண்ணத்தாலோ. பெரிய வனத்தை அழித்த ஹனுமானுக்கு சிம்சுபா வ்ருக்ஷத்தை மாத்ரம் அழிப்பதில் என்ன ச்ரமம் ஏற்படப் போகிறது? ஸீதையை ரக்ஷிக்கவேண்டும் என்ற அபிப்ராயத்தால் தான் அந்த மரத்தை முறிக்காமல் இருந்திருக்கவேண்டும். பயங்கர ரூபத்துடன் கூடின ஹனுமானை உடன் தண்டிக்கவேண்டும். ஸீதையும் அந்த வானரத்தின் வ்ருத்தாந்தங்களை நன்றாக அறிந்தவளே. தங்களால் அபஹரிக்கப்பட்டு வந்த ஸீதையோடு வானரம் பேசியதேதப்பல்லவா? அத்துடன் அசோகவனத்தையும் அழித்துவிட்டது. கொஞ்சமேனும் விளம்பம் செய்யாமல் அந்த வானரத்தை த்வம்ஸம் செய்துவிட-

வேண்டும்'' என்று ராக்ஷஸ ஸ்த்ரீகள் ராவணனிடம் தெரிவித்துக் கொண்டார்கள்.

இதைக் கேட்ட ராவணனுக்கு அடக்க முடியாத கோபம் ஏற்பட்டுவிட்டது. உடன்பல பராக்ரமத்தில் தனக்கு ஸமானமான 80,000 ராக்ஷஸர்களை அந்த வானரத்தைப் பிடித்து வரும்படி ஆக்ஞாபித்தான். அந்த ராக்ஷஸர்களும் வெகு விதமான ஆயுதங்களுடன் அசோக வனத்திற்கு ஸமீபத்தில் உள்ள கோபுரத்தின் மேல் பாகத்தில் உட்கார்ந்திருந்த வானரத்தைப் பிடிக்க யத்னம் செய்தார்கள். ஒவ்வொரு ராக்ஷஸர்களும் க்ரூரமான ஸ்வபாவத்துடன் கூடியவர்கள். பாணங்களாலும், கதைகளாலும், உலக்கைகளாலும், சூலாயுதங்களாலும் வானர ச்ரேஷ்டனை அடித்து ஹிம்ஸித்தார்கள். நாலா பக்கங்களிலும் வானரத்தைச் சூழ்ந்துகொண்டார்கள். ஹனுமானும் கொஞ்சமேனும் பயத்தை அடையாமல், பர்வதத்திற்கு ஸமானமான உருவத்துடன் பரமஉத்ஸாஹத்துடன் தன் வாலால் பூமியை ஓங்கி அடித்துக்காண்டு, தன் சப்தத்தால் லங்காநகரம் முழுமையும் ப்ரதி த்வனியுடன்கூடியதாகச் செய்தார் 'மஹா பராக்ரமசாலியான ராமன் ஸர்வோத்க்ருஷ்டனாக விளங்கி வருகிறார். மஹா பலிஷ்டனான லக்ஷ்மண ஸ்வாமியும் பரம உத்ஸாஹத்துடன் ராமனுடைய ஸமீபத்தில் இருந்து வருகிறார். வானராதிபதியான ஸுக்ரீவனும் ராகவனால் ரக்ஷிக்கப்பட்டு லங்கா நகரத்தை அழிப்பதில் தீவிர முயற்சியுடன் இருந்து வருகிறார். நான் ராமனுடைய தூதன். ஹனுமான் என்ற பெயருள்யவன். வாயு பகவானின் பிள்ளை. சத்ரு ஸைன்யங்களை ஒரே அடியால் லக்ஷக்கணக்கானாலும் வதம் செய்துவிடுவேன் இந்த லங்கைக்கு அதிபதியான ராவணனைப் போல் ஆயிரம் ராவணன் என்னுடன் யுத்தத்திற்கு வந்தாலும் என்னை ஜயிக்க முடியாது. லங்கா நகரத்தையே சபம்பலபக்கிவிட்டு, ஸீதாதேவியையும் ஸமாதானம் செய்து கார்யத்தை முடித்துக் கொண்டு, இந்த ராக்ஷஸர்களுக்கு எதிரிலேயே ராமனுடைய ஸமீபம் சென்று வ்ருத்தாந்தங்களைத் தெரிவிக்கப் போகிறேன்' என்று உயர்ந்த ஸ்வரத்துடன் உத்கோஷித்துக் கொண்டு திரும்பத் திரும்ப இந்த சப்தங்களைச் சொல்லிக் கொண்டும், ஸிம்ஹநாதம் செய்துகொண்டு மிகவும் தைர்யத்துடன் விளங்குவந்தார். அவரைப் பிடிக்கப்போன 80,000 ராக்ஷஸர்களோ, ஹனுமானைச் சுற்றிக்கொண்டு ஹிம்ஸைசெய்தார்கள். அதற்கு ஹனுமான் கொஞ்சமேனும் பயத்தை அடையாமல் கோபுரத்தில் ஸ்தம்பமாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் மிகவும் கடிவ

மான ஸ்தம்பத்தை கையில் பிடுங்கி வைத்துக் கொண்டு ஆகாசத்தில் கருட பகவான் போல் சுற்றி ஸஞ்சாரம் செய்து கொண்டு விளங்கியதைப் பார்த்தால், ஸர்ப்பத்தைப் பிடித்துக் கொண்டு கருடன் ஆகாசத்தில் ஸஞ்சரிப்பது போல் தோன்றிற்று. அந்த இரும்புத் தூணாலேயே 80,000 ராக்ஷஸர்களையும் கொன்று த்வம்ஸமாகச் செய்துவிட்டார். பிறகு முன் இருந்த கோபுர த்வாரத்திலேயே உட்கார்ந்து கொண்டு ராமனுடைய மஹிமையைப் பற்றி உத்கோஷித்துக்கொண்டே விளங்கி வந்தார்.

ராவணனும் ஒரு குரங்கினால் 80,000 ராக்ஷஸர்கள் அடிபட்டு மறித்ததைப் பார்த்து மிகுந்த ஆச்சர்யத்தை அடைந்து, கோபாவேசத்துடன் தன்னுடைய முதல் மந்த்ரியான ப்ரஹஸ்தனுடைய புத்ரனும், மஹா பராக்ரமசாலியுமான ஜம்புமாலி என்பவனை அநேக ராக்ஷஸ ஸேனைகளுடன், ஆஞ்ஜனேயரை த்வம்ஸம் செய்து வரும்படி கட்டளையிட்டான்.

ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் 80,000 ராக்ஷஸர்களைக் கொன்றுவிட்டு ஒரே சிந்தாக்ராந்தனாக இருந்து வந்தார். 'அசோக வனத்தை நாம் அழித்தோம். பௌத்தனுடைய ஆலயம்போல் உயர்ந்ததாயும் அழகாயும் நிர்மாணிக்கப்பட்டிருக்கும் இந்த கோபுரத்தை மட்டிலும் நாசம் செய்யாமலிருக்கும் காரணம் எனக்கே தெரியவில்லை. ஆகையால் இந்த சைத்ய ப்ரஸாதத்தையும் இந்த நிமிஷமே நாசம் செய்துவிடவேண்டும்' என்று ஆலோசித்துவிட்டு, உடன் மஹாமேரு பர்வதத்தின் ச்ருங்கம் போல் உயர்ந்ததாக உள்ள சைத்ய ப்ரஸாதத்தின் உச்சியில் ஏறிக்கொண்டு த்வம்ஸம் செய்துவிட்டார். ஜயலக்ஷ்மியுடனும் அலங்க்ருதனாகி, மலையைப்போல் பெரிய உருவத்துடனும், ஸூர்யனைப்போல் ப்ரகாசத்துடனும் பாஸித்து வந்தார். 'ராமன் ஸர்வோத்க்ருஷ்டனாக விளங்கி வருகிறார். லக்ஷ்மணனும் அவ்விதமே ஜ்வலிக்கிறார். ராகவனுடைய ஆளுகைக்குள் இருந்து வரும் ஸுக்ரீவன் என்ற வானராதிபதியும் ஸர்வோத்க்ருஷ்டமான பதவியில் இருந்து வருகிறான். கோசல தேசாதிபதியான ராமனுடைய தூதன் நான். ஹனுமான் என்று பெயருள்ளவன். வாயு பகவானுடைய பிள்ளையானதினால் எங்கும் வாயு வேகமாக ஸஞ்சரிக்கும் சக்தி உள்ளவன். ஆயிரக்கணக்கான ராவணன் வந்தாலும், எனக்கெதிரில் யுத்தத்தில் நிற்க முடியாது' என்று

கர்ஜித்துக்கொண்டு ராக்ஷஸர்களுக்கு மிகுந்த பயத்தை உண்டு பண்ணி வந்தார்.

சைத்ய ப்ரஸாதத்தை ரக்ஷித்து வந்த ராக்ஷஸர்களும் வெகு ப்ரகாரமான ஆயுதங்களுடன், ஆஞ்ஜனேயரை எதிர்த்து வந்தார்கள். ஹநுமானுக்கு இதைப் பார்த்து பெரிய கோபம் ஏற்பட்டுவிட்டது. இந்த சைத்ய ப்ரஸாதத்திலுள்ள ஒரு தூணையே பிடுங்கிக்கொண்டு அதைச் சுற்றி ராக்ஷஸர்களுடைய கூட்டத்தில் எறிந்தார். அந்தத் தூண் இரும்புத் தூணானதால் அதிலிருந்தும் நெருப்பு உண்டாகி ஆயிரக்கணக்கான ராக்ஷஸர்களை எரித்து விட்டது. இதைப் பரம ஸந்தோஷத்துடன் பார்த்துக்கொண்டு, என்னைப்போல் கணக்கிட முடியாததான வானர ச்ரேஷ்டர்கள் ஆங்காங்கு ராக்ஷஸ ராஜனான ராவணனைக் கண்டுபிடித்துத்வம்ஸம் செய்ய ஸஞ்சாரம் செய்கிறார்கள். ஒவ்வொரு வானரமும் பத்து மதம் பிடித்த யானையின் பலத்தோடு கூடியவர்கள். சிலர் நூறு யானை பலத்துடன் கூடியவர்கள். மற்றும் கிலர் ஆயிரம் யானை பலத்துடன் கூடியவர்கள். சிலரின் பலத்தை இவ்வளவுதான் என்று நிர்ணயிக்கவே முடியாது. கோடிக்கணக்கான வானர ஸேனைகளுடன் கூட ஸுக்ரீவன் அதிசீக்ரத்தில் வந்து லங்கையை ஆக்ரமிக்கப் போகிறார். கோசல தேசாதிபதியான ராகவனுடன் ராக்ஷஸ ராஜனான ராவணன் வைரத்தை ஸம்பாதித்துக் கொண்டதால் லங்கை, ராவணன், ராக்ஷஸர்கள் எல்லாம் அழித்துவிடப் போகிறார்களென்று சொல்லிக்கொண்டு பின்பும் ராக்ஷஸர்களுடன் யுத்தத்தை எதிர் பார்த்து வந்தார். ப்ரஹஸ்தனுடைய பிள்ளையான ஜம்புமாலி என்பவன் அநேக ராக்ஷஸர்களால் சூழப்பட்டு யுத்தரங்கத்திற்கு அடையாளமான வேஷங்களால் அலங்கரிக்கப்பட்டு ஹநுமானுக் கெதிரில் வந்து ஹநுமானைக் குறித்து சர வர்ஷமாக வர்ஷித்தான். ஆஞ்ஜனேயரும் ப்ரஸாதத்திலுள்ள இரும்புத் தண்டவாளத்தையே கையில் வைத்துக் கொண்டு வேகத்துடன் அதைச் சுற்றி ராக்ஷஸர்களுடைய கூட்டத்தில் எறிந்தார். ஜம்புமாலியும் அந்த பரிசம் என்ற இரும்பு தண்டவாளத்தின் வேகத்தை ஸஹிக்க முடியாமல், அதனால் அடிபட்டு சின்ன பின்னமாகிவிட்டான். தனுஸ், ரதம், சிரஸ், கைகள், கால்கள் இவை ஒன்றும் கண்டுபிடிக்க முடியாமலே, ஜம்புமாலி உள்பட ஸகல ராக்ஷஸர்களையும் ஹநுமான் நாசம் செய்து விட்டார்.

இந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்ட ராவணனும் மிகுந்த கோபத்தை அடைந்து பிறகு ஏழு மந்த்ரிகளின் பிள்ளைகளை அநேக

ராக்ஷஸ ஸேனைகளுடன், ஹனுமானை த்வம்ஸம் செய்ய அனுப்பினான். இவர்களையும் ஹனுமான் தன் பராக்ரமத்தால் சின்னா பின்னமாகச் செய்துவிட்டார்.

இந்த வ்ருத்தாந்தத்தையும் அறிந்த ராவணன் மஹா கோபத்தை அடைந்து, விரூபாக்ஷன், யூபாக்ஷன், துர்தரன், பாஸகர்ணன், ப்ரஹஸன் என்ற பெயர்களுடன்கூடின ஐந்து ஸேனா நாயகர்களைக் கோடிக்கணக்கான ராக்ஷஸ ஸேனைகளுடன் ஹனுமானைப் பிடித்துவர அனுப்பினான். இவர்கள் ஹனுமானுடைய ஸமீபம் வந்த உடனேயே, கோபுரத்தின் உச்சியில் உட்கார்ந்திருக்கும் ஹனுமானைப் பார்த்தே நடுங்கிவிட்டார்கள். ஒவ்வொரு ஸேனாநாயகனும் தங்களுடைய சக்தியை அனுஸரித்து, ஆயுதங்களால் ஆஞ்ஜனேயரை அடித்தாலும், ஹனுமான் கொஞ்சமேனும் சலிக்கவே இல்லை. ஸமீபத்திலுள்ள ஒரு மலையின் சிகரத்தைப் பிடுங்கிக்கொண்டு ராக்ஷஸ ஸேனைகளையும், ஸேனாநாயகர்களையும் அடித்து த்வம்ஸம் செய்து சூர்ணமாகச் செய்துவிட்டார்.

இதையும் அறிந்த ராவணன் ஸஹிக்கமுடியாத கோபத்துடன் 'இனி நாம் என்ன செய்வது' என்ற கவலையையும் அடைந்து, 'கேவலம் வானர ஜாதியில் சேர்ந்த வஸ்துவல்ல. நமக்கு விரோதியான மஹாவிஷ்ணுவே இந்த ரூபமாக வந்து நம்மை நாசம் செய்யப்போகிறார்' என்று நினைத்து, சோக ஸாகரத்தில் மூழ்கித் தவித்தான். ஆகிலும் தைர்யத்தை அவலம்பித்து அக்ஷய்ய குமாரன் என்ற தன் இரண்டாவது புத்ரனை, அவன் மிகவும் சூரனானதாலும், நல்ல யுவாவானதாலும், அநேக ராக்ஷஸர்களுடன் சேர்த்து ஆஞ்ஜனேயரிடம் சென்று, ''அவரைக் கொல்லுகிறதோ அல்லது பிடித்து என் ஸந்நிதிக்குக் கொண்டுவருகிறதோ, இந்த இரண்டில் ஒன்றை அவச்யம் செய்தே தீரவேண்டும். நீ அதில் ஸமர்த்தனே'' என்று ஆக்ஞாபித்து, மங்களாசீர்வாதமும் செய்து யுத்தத்திற்கு அனுப்பினான். அக்ஷய்ய குமாரனையும் ஹனுமார் லக்ஷ்யம் செய்யவில்லை. அக்ஷய்ய குமாரன் யுத்தத்தில் மிகவும் ஸமர்த்தனானதால் அக்ஷய்ய குமாரனும் ஹனுமானும் யுத்தம் செய்யும் ஆச்சர்யத்தைப் பார்க்க ஸகல தேவர்களும் ஆகாசத்தில் விமான ஆரூடர்களாக இருந்துகொண்டு, ஒவ்வொரு ஸந்தர்ப்பத்திலும் அவ்விருவர்களுடைய விசித்ரமான யுத்த கௌசலத்தைப் பார்த்து ஆச்சர்யப்பட்டு வந்தார்கள். ஹனுமானே அக்ஷய்ய குமாரனுடைய பராக்ரம விசேஷத்தைப் பார்த்து ஆச்சர்யத்தை அடைந்தார்.

अबालवद्बालदिवाकरप्रभः
करोत्ययं कर्म महन्महाबलः ।
न चास्य सर्वाहवकर्मशोभिनः
प्रपापणे मे मतिरत्र जायते ॥

அபாலவத்பாலதிவாகரப்ரப:
கரோத்யயம் கர்ம மஹந் மஹாபல;
ந சாஸ்ய ஸர்வாஹவ கர்மசோபிந:
ப்ரபாபணே மே மதிரத்ர ஜாயதே ||

'இந்தக் குமாரனைப் பார்த்தால் உதய கால ஸூர்யனுடைய ப்ரபைபோல் விளங்கி வருகிறான். அதாவது மிகவும் சிறு வயதுடன் கூடினவன். ஆகிலும் செய்யும் வேலையைப் பார்த்தால் வெகுகாலமாக யுத்தத்தில் பழகி அநேக சத்ருக்களை ஜயித்து பெரிய வீரன்போல் ஒவ்வொரு கார்யத்தையும் செய்து வருகிறான். மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிதாக இருந்து வருகிறது. तेजसां हि न वयस्समीक्ष्यते (தேஜஸாம் ஹி ந வயஸ்ஸமீக்ஷ்யதே) என்ற ந்யாயத்தை அனுஸரித்து சரீரத்திற்கல்லவா வயது ஏற்பட்டது யுத்தத்திற்கும் பராக்ரமத்திற்கும் உண்டா? என்ற சொல்லானது இந்த அக்ஷய்ய குமாரனிடம்தான் அன்வர்த்த மாகிறது. க்ஷத்ரியர்களுக்கு ஸ்வதர்மமான யுத்தம் என்ற ஒரு தர்மமானது லோகத்தில் ப்ரகாசத்தை அடையவேண்டுமானால், இவனைப்போலொத்த சூரன் வெகுகாலம் ஜீவித்து வரவேண்டும். அப்பொழுதுதான் யுத்தம் என்ற தர்மத்திற்கே கௌரவம் உண்டு. எவ்விதத்திலும் இவன் முதன்மையாகப் பாஸிப்பான் என்பதில் ஆக்ஷேபணையில்லை. இவ்வளவு புத்திமானாகவுள்ள அக்ஷய்ய குமாரனைக் கொல்லுவதில் என் மனமே ஸம்மதிக்காமலிருந்து வருகிறது. சூரர்களை நீடித்த காலம் காப்பாற்றுவதல்லவா லோகத்தினுடைய ஸ்திதிக்கு ஹேதுவாகும்' என்று ஆஞ்ஜனேயரே அக்ஷய்ய குமாரனுடைய பராக்ரமத்தைப் பார்த்து ப்ரசம்ஸை செய்துகொண்டு இவனை எப்படிக் கொல்வதென்று ஆலோசித்தார். 'சத்ருவானதால் கொல்லாமலும் விடக்கூடாது. சத்ருக்களை உபேக்ஷிக்கலாமா? நிமிஷத்திற்கு நிமிஷம் வ்ருத்தி அடைந்து கொண்டிருக்கும் அக்னியை உபேக்ஷிக்கக்கூடாது. இதுபோலவே சத்ருக்களையும் உபேக்ஷிப்பது ந்யாயமில்லை' என்று தீர்மானித்து, ஹனுமான் ஆகாச மார்க்கத்தில் அக்ஷய்ய குமாரனை எதிர்த்து யுத்தம் செய்யும் விஷயத்தில் தன் கையை ஓங்கி அக்ஷய்யகுமாரனை அடித்து த்வம்ஸம் செய்தார்.

எட்டு குதிரைகள் கட்டப்பட்ட அக்ஷய்ய குமாரனின் ரதமும் சின்னுபின்னமாகிவிட்டது. அக்ஷய்ய குமாரனும் பூமியில் விழுந்து மரித்துவிட்டான். ஆகாசத்தில் விமான ஆரூடர்களாக இருந்துவந்த தேவர்கள் பரமஸந்தோஷத்தை அடைந்துஹநுமான் மீது புஷ்பங்களால் வர்ஷித்தார்கள். ஹநுமானும் ஸகல ராக்ஷஸர் களோடு அக்ஷய்ய குமாரனைக் கொன்றுவிட்டு, முன்பிருந்த கோபுர த்வாரத்திலேயே மறுபடியும் உட்கார்ந்துகொண்டு, பரிசத்தை கையில் வைத்துச் சுற்றிக்கொண்டு, ராமன், லக்ஷ்மணன், ஸுக்ரீ வன் இவர்களை ப்ரசம்ஸை செய்துகொண்டு, இன்னும் ராக்ஷஸர் களுடைய ஆகமனத்தை யுத்தத்திற்கு எதிர்பார்த்து வந்தார்.

மஹா பராக்ரமசாலியான ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் அக்ஷய்ய குமாரனையும் கொன்றுவிட்ட வ்ருத்தாந்தத்தை ராக்ஷஸ ராஜனுன ராவணன் அறிந்து மிகவும் கோபத்தை அடைந்தான். சற்றுநேரம் துக்கஸாகரத்தில் மூழ்கிவிட்டுத் தன்னுடையமனதைத் தானுகவே ஸமாதானம் செய்துகொண்டு, பரம கோபத்துடன் இந்த்ரஜித்து என்ற தன்னுடைய குமாரனை அழைத்துச் சொல்கிருன் :

"நீ அஸ்த்ரங்களுடைய ரஹஸ்யத்தை அறிந்தவர்களுள் மிகவும் ச்ரேஷ்டமானவன். அநேக யுத்தங்களில் தேவாஸுரர்களை ஜயித்து க்யாதியை அடைந்தவன். ப்ரம்மாவினுடைய வர பலத் தால் மஹா பலிஷ்டர்களையும் ஜயிக்கக் கூடிய சக்தியுள்ளவன். ப்ரம்மாவே ஸந்தோஷத்துடன் உனக்கு ப்ரம்மாஸ்த்ரத்தைக் கொடுத்து, இந்த அஸ்த்ரத்தில் உனக்கு ஸமானமான வீரன் மற்ருெருவனும் இருக்கமாட்டானென்றும், இந்த அஸ்த்ரத்திற்குக் கட்டுப்படாதவன் ஒருவனும் இல்லையென்றும் அனுக்ரஹம் செய்து உன்னை மிகவும் ச்லாஹிததுப் பேசியிருக்கிருர். தேவர்க ளானுலும், அஸுரர்களானுலும், நீ அஸ்த்ர ப்ரயோகம் செய்து விட்டால்,அதைத்தடுத்துவிட்டு தான்ஜயிக்க சக்தியுள்ளவர்களாக ஆகமாட்டார்கள். மூன்று லோகத்திலும் யுத்தத்தில் உனக்கு ஸமானமான சூரன் என்று மற்ருெருவனையும் சொல்ல முடியாது. உன்னுடைய புஜ பலத்தாலேயே நீ ச்ரேஷ்டனுக இருந்து வருகிருய். தபோமஹிமையினுலும் ரக்ஷிக்கப்பட்டு வருகிருய். தேச காலங்களை அறிந்து, யுத்தத்தில் ஜயத்தையே அடையும் கூர்மையான புத்தியுடன் கூடியவன் நீதான். எந்த யுத்தத்திலும் உனக்கு ஸாமர்த்யமில்லை என்று சொல்லவே முடியாது.

விவேகத்துடன் முன்பாகவே மந்த்ராலோசனை செய்து யுத்தத்தில் கௌசலத்தை அடைக்கூடிய ஸாமர்த்யமும் உன்னிடத்தில்தான் இருக்கிறது. அஸ்த்ர பலத்திலோ, சரீர பலத்திலோ, தபஸ்ஸி னுடைய பலத்திலோ, நீ எனக்கு ஸமானமானவனே. அநேக ராக்ஷஸர்களும், ஜம்புமாலி என்ற ப்ரஹஸ்த புத்ரனும், ஏழு வித மான மந்த்ரி குமாரர்களும், ஐந்து ஸேனாநாயகர்களும், உன் தம்பி யும் மஹா பலிஷ்டனுமான அக்ஷய்ய குமாரனும், ஸகல ராக்ஷஸ பரிஜனங்களோடு கூட ஒரு வானரத்தினால் கொல்லப்பட்டு நாசம் அடைந்துவிட்டார்கள். அது விஷயமாக உன்னிடம் நான் அதிக மாகச் சொல்லவேண்டியதில்லை. உன்னுடைய பலம் அவர் களுக்கு இல்லையென்று எனக்குத் தெரிந்ததே. நீ போனால் நிச்சய மாக ஜயத்துடன்தான் வருவாய். உன்னுடைய புத்தியையும், சக்தியையும்,பலத்தையும், ஸ்ரீ ஆஞ்ஜனேயருடைய பராக்ரமத்தை யும் நன்றாய் மனதினால் ஆலோஜித்து, ஸார, அஸார, விவேகத் தால் உன் பலத்தை அனுஸரித்து, ஹனுமானோடு யுத்தம் செய்ய பரம உத்ஸாஹத்துடன் நீ யுத்தகளத்திற்குச் செல்வாய் என்று நம்பி உன்னை நான் அழைத்தேன். ஆகையால் இந்த விஷயங்களை நீ நன்றாய் ஆராய்ச்சி செய்து பார்த்து, யுத்தத்திற்குப் போக வேண்டும். ஹனுமான் என்ற பெயரோடு கூடின வானரத்தையும் லகுவாக நீ நினைத்துவிடக் கூடாது.

न वीर सेना गणशोच्यवन्ति
न वज्रमादाय विशालसारम् ।
न मारुतस्यास्य गतिप्रमाणं
न चाग्निकल्पः करणेन हन्तुम् ॥

ந வீரஸேநா கணசோச்யவந்தி
ந வஜ்ரமாதாய விசால ஸாரம் ।
ந மாருதஸ்யாஸ்ய கதிப்ரமாணம்
ந சாக்நிகல்ப: கரணேந ஹந்தும் ॥

"ஹே குமாரா! நீ யுத்தத்தில் மிகவும் சூரன்தான். ஆகிலும் ஹனுமானுடைய பலத்தையும் யோஜிக்கவேண்டும். ஹனுமானே **गणशोचि** (கணசோசி) என்று ப்ரஸித்தியடைந்தவர். அதாவது அவர் தன் கையினால் ஓங்கி ஒரு அறை அறைந்தால் அநேக ராக்ஷஸ ஸேனைகள் உடன் நாசமாகிவிடுமென்பதைக் கேள்விப்பட்டிருக்

கிறேன். ஒரே காலத்தில் அநேக ராக்ஷஸர்களை ஸம்ஹாரம் செய்யும் ஸ்வபாவமுள்ள ஹனுமானிடத்தில், ஸேனையினால் யாதொன்றும் நாம் ஜயித்துவிடுவோமோ என்ற ஆசையை அடைய முடியாது. ஆகையால் ஒரே காலத்தில், ஒரே பாணத்தால் அநேக ராக்ஷஸர்களைக் கொல்லுமபடியான சக்தியுள்ள ஆஞ்ஜனேயரிடம் ராக்ஷஸ ஸேனைகளுடைய ஸாமர்த்யம் பயனற்றதாக ஆகிவிடுமாதலால், ஸேனையுடன் சென்று அந்த ஆஞ்ஜனேயரை ஜயித்துவிடலாம் என்ற துராசையை தூரத்தில் விட்டுவிடு.

அத்துடன், இந்த்ரன் மூலமாக உனக்கு பாரிதோஷிகமாக (வெகுமதி)க் கொடுக்கப்பட்ட வஜ்ராயுதத்தாலேயும் ஹனுமானை உன்னால் ஜயிக்க முடியாது. அவருடைய விஷயத்தில் வஜ்ராயுதம் கூட அல்ப ஸாரமுள்ளதாக ஆகிவிடும். ப்ரக்ருதத்தில், வஜ்ராயுதமானது. இந்த்ரனால் பாரிதோஷிகமாகக் கொடுக்கப்பட்டதாக ஆனாலும், இந்த்ரனுடையது என்று சொல்லவே முடியாது. அந்த வஜ்ராயுதமானது இந்த்ரனுக்குத்தான் அஸாதாரணமாகும். அதே ஆயுதமானது மற்றவர்களிடம் காணப்பட்டால், அவர்களையும் இந்த்ரனாகவேதான் பாவிக்கவேண்டும். அந்த ஆயுதமும் ஒருவித ஆயுத விசேஷம்தான். ஆகிலும் அல்ப ஸாரமானதினால், அதன் உதவியைக்கொண்டு அவரை ஜயித்துவிடலாம் என்ற ஆசை உனக்கு வேண்டாம்.

அது மாத்ரமல்ல. அக்னி தத்வமாயுள்ள ஆயுத விசேஷங்களாலும், தன் கைகளாலும் முஷ்டியுத்தம் செய்து ஆஞ்ஜனேயரை ஜயிக்கக் கூடாதோ என்றும் நீ சங்கையை அடையவேண்டாம். அக்னிக்கும் அக்னியாக விளங்கிவரும் ஆஞ்ஜநேயருடைய ப்ரபாவத்தைக் கவனித்தால், அவரை முஷ்டி யுத்தம் செய்து க்ரஹிக்கலாமோ என்றும் நினைக்கக் கூடாது. தன் கைகளால் அவரைக் கட்டிப் பிடித்துவிடலாமென்று போனால் கைகள்தான் பஸ்மமாகப் போய்விடும். அவருடைய வேகமோ, வாயு வேகத்திற்கும் மேலானது. வாயுவினுடைய குமாரனாக ஆனாலும், இந்த ஆஞ்ஜநேயருடைய வேகமானது வாயுவிற்கும் இல்லை. ஆகையால் கட்டிப் பிடித்துவிடவும் முடியாது. எந்த பார்ச்வத்திலிருந்து, எப்படி அவர் வந்து என்ன செய்வார் என்பதை எவராலேயும் நிச்சயம் செய்ய முடியாது. ஓடிப் பிடிக்கவும் முடியாத. இவ்வளவு வைபவத்தோடு கூடினவரானதினால், எவ்விதத்திலும்

அவரை ஜயித்துவிடலாமோ என்ற ஆசையைஅடைவது பயனற்ற தாகத்தான் ஆகும்.

இவைகளையெல்லாம் நீ நன்ருக ஆலோஜித்துக்கொள்ள வேண்டும். பயத்தால் யுத்தத்திற்குப் போகாமலும் இருக்கக் கூடாது. ப்ரம்மாஸ்த்ர ப்ரயோகம் செய்வதில் உனக்கிருக்கும் வைபவத்தை விஜாரித்தாலோ,உனக்கு எதிரில் யுத்தத்தில் யாரும் நேரில் நிற்க முடியாதென்று நான் தீர்மானிக்கிறேன். ஆகையால் உன் உத்ஸாஹத்தையும், தைர்யத்தையும் பொறுத்துத்தான் இந்த யுத்தத்தில் நாம் ஜயிக்கவேண்டும்.

உன்னை நான் இந்த யுத்தத்திற்கு அனுப்புவதிலும் என் மன திற்கு திருப்தி ஏற்படவில்லை. ஆகிலும், ராஜதர்மத்தை அவலம் பித்து, ராஜன் பரிஜனங்களைத்தான் முன்பாக யுத்தத்திற்கு அனுப்பவேண்டும் என்ற பழைய வழக்கத்தை உத்தேசித்துத்தான் உன்னை இப்போது அனுப்புகிறேன். தன்னைச் சேர்ந்தவர்கள் உயிருடன் இருக்கும்போது, ப்ரதான புருஷனுன அரசன் யுத்தத் திற்கு முன் செல்வது நீதி சாஸ்த்ர விரோதமல்லவா! நீ வயதில் மிகவும் சிறியவனுக இருந்தாலும், அநேகவித அஸ்த்ர, சாஸ்த்ரங் களினுல் யுத்தத்தில் உனக்கிருக்கும் விசாலமான புத்தியையும் பார்த்து நான் ஆனந்திக்கும்படியான காலம் எனக்கு நேர்ந் திருக்கும்பொழுது, அதை அனுஸரித்துப் போவோமென்றே என் அபிப்ராயமாகும். யுத்தத்தில் ஜயபராஜ்யத்தை யாரால்தான் நிர்மானிக்க முடியும். ஜயமோ, பராஜயமோ யுத்தத்தில் இவை கள் அநியதமல்லவா. எவ்விதமானுலும் உன் விஷயத்தில் எனக்கு தைர்யம்தான்.

ஆகையால் யுத்தத்திற்குச் சென்று ஆஞ்ஜநேயருடன்கூட அபூர்வமான சைலியை அனுஸரித்து யுத்தம் செய்து ஜயத்துடன் நீ திரும்பி வருவாயாக. ஸ்மஸ்தமான அஸ்த்ரங்களையும் நீ ஸ்மரித்துக்கொள்ள வேண்டும்'' என்று இந்த்ரஜித்திற்கு ராக்ஷஸ ராஜனுன ராவணன் பரம உத்ஸாஹத்துடன் ஆசீர்வாதம் செய்து இந்த்ரஜித்தை யுத்தகளத்திற்கு அனுப்பினுன்.

இந்த்ரஜித்தும் தன் பிதாவான ராவணனுடைய வார்த்தை யைக் கேட்டு, தேவர்களுக்கு ஸமானமான பராக்ரமத்தோடு கூடினவனுதலால்,தன் மனதில் வ்யாகூலத்தை அடையாமல் பரம ஸந்தோஷத்துடன்,ப்ரதக்ஷிண நமஸ்காராதிகளால் தன்பிதாவான

ராவணனை ஸந்தோஷிக்கச் செய்துவிட்டு, அநேக ராக்ஷஸர்களோடு கூட ரத, கஜ, துரக பதாதி ஸேனு வர்க்கங்களோடு கூடவும், கார்க் காலங்களில் ஸமுத்ரம் உத்கோஷிக்கிறதுபோல் உத்கோஷம் செய்துகொண்டு, யுத்தகளத்திற்கு இந்த்ரஜித்து ஸந்நத்தனுக வந்து சேர்ந்தான்.

ஆஞ்ஜநேயஸ்வாமியும், இந்த்ரஜித்தும் ஒருவருக்கொருவர் பராக்ரமத்தில் சளைக்காமல் மிகவும் உத்ஸாஹத்துடன் யுத்தத்தைச் செய்துவந்த விசேஷத்தை யாரும் வர்ணிக்க முடியாது.

हनूमतो वेद न राक्षसोऽन्तरं
न मारुतिस्तस्य महात्मनोन्तरम् ।
परस्परं निर्विषहौ बभूवतुः
समेत्य तौ देवसमानविक्रमौ ॥

ஹநூமதோ வேத ந ராக்ஷஸோந்தரம்
ந மாருதிஸ்தஸ்ய மஹாத்மநோந்த்ரம் ।
பரஸ்பரம் நிர்விஷஹௌ பபூவ து:
ஸமேத்ய தௌ தேவஸமாநவிக்ரமௌ ॥

ஆஞ்ஜநேயஸ்வாமியும், இந்த்ரஜித்தும் யுத்தம் செய்கிற ஸந்தர்ப்பத்தில், இருவர்களும் தேவர்களுக்கு ஸமானமான பராக்ரமத்தோடு கூடினவர்களாக விசித்ரமான யுத்தத்தைச் செய்து வந்த ஆச்சர்யத்தை தேவர்களும் பார்த்து மிகவும் ஸந்தோஷிக்கக் கூடியதாக இருந்தது.

மஹாநுபாவனுன ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு இந்த்ரஜித்தை வதம் செய்ய இடம் ஏற்படாமலே, மஹா சூரனுன இந்த்ரஜித்தும் யுத்தம் செய்தான். இந்த்ரஜித்திற்கும் ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் தன்னைக் கொன்றுவிடும்படியாக ராக்ஷஸனுக்கு சித்ரம் ஏற்படாமலிருக்கும்படி பரம பராக்ரமத்துடன் யுத்தம் செய்தார். இருவர்களும் அமோகமான பாண ப்ரயோகம் செய்தாலுங்கூட ஒருவடைய பாண ப்ரயோகத்திற்கு மற்றொருவர் லக்ஷ்யமாகாமலே யுத்தம் செய்துவந்த ஆச்சர்யத்தை நினைத்தால் யுத்த வீரர்களும் அவச்யம் பயத்தை அடைவார்கள்.

இவ்விதம் இவ்விருவர்களுக்கும் யுத்தம் நடத்துவந்ததால், எப்போதுதான் அதற்கு முடிவு என்று யாராலும் கண்டுபிடிக்க

முடியவில்லை. மஹா புத்திமானுன இந்த்ரஜித்திற்கே, 'இந்த ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் நமக்கு வத்யனுக ஆகவே மாட்டார் என்று தோன்றிவிட்டது. நமக்கு மாத்ரம் இந்த ஹநுமான் அவத்யன் என்பது இல்லை. யாருக்குமே இவர் வத்யனுக ஆக மாட்டார். ஹநுமாரைக் கொல்லக்கூடிய பராக்ரமம் த்ரிபுராஸுரனை எரித்த பரமேச்வரனுக்கும் கூடக் கிடையாதுதான். அவத்யத்வம் என்பது இந்த ஹநுமானிடத்தில் இருந்துவரும் பொழுது, எந்த பாணத்தால், எவ்விதம் இவரை நான் கொல்ல முடியும்? யுத்தத்தால் யாதொருவிதமான ப்ரயோஜனமும் ஏற்பட ந்யாயமில்லை. வீண் ச்ரமம்தான் ஏற்படும். ப்ரம்மாவினுடைய வர பலத்தால் நான் ப்ரம்மாஸ்த்ர ப்ரயோகம் செய்து, யுத்தம் செய்வதில் முதன்மையானவனுக இருக்கிறேன். ப்ரம்மாஸ்த்ரத்திற்குக் கட்டுப்படாத வீரனே ஒருவனுமில்லை. ஆகையால் அந்த ப்ரம்மாஸ்த்ரத்தால், இந்த ஆஞ்ஜநேயரை நான் கட்டுப்படுத்தி என் பிதாவான ராக்ஷஸ ராஜனெதிரில் கொண்டுபோய் விடுவேன். பிறகு ராஜனுடைய இச்சானுஸாரமாக நடக்கவேண்டியது நடந்தே தீரும். அன்னியில் என்னுடைய பராக்ரமத்தால் மட்டும் இவரைக் கொன்றுவிடுவது என்பது ஸாத்யமே இல்லை' என்று தீர்மானம் செய்து இந்த்ரஜித்தானவன் ஆஞ்ஜநேயருக்கெதிரில் ப்ரம்மாஸ்த்ரத்தை அபிமந்த்ரணம் செய்து, ப்ரம்மாஸ்த்ரத்தை ப்ரயோகம் செய்தான்.

ப்ரம்மாஸ்த்ர ப்ரயோகம் தன்னை லக்ஷ்யமாக வைத்து இந்த்ரஜித்து செய்தவுடன் ஆஞ்ஜநேயஸ்வாமியும் அதற்குக் கட்டுப்பட்டு, நிச்சேஷ்டனுக கீழே விழுந்துவிட்டார்.

ततोऽथ बुद्ध्वा स तदास्त्रबन्धं
प्रभोः प्रभावात् विगततात्मवेगः ।
पितामहानुग्रहमात्मनश्च
विचिन्तयामास हरिप्रवीरः ॥

ததோத புத்வா ததாஸ்த்ரபந்தம்
ப்ரபோ: ப்ரபாவாத் விகதாத்மவேக: ।
பிதாமஹாநுக்ரஹமாத்மநச்ச
விசிந்தயாமாஸ ஹரிப்ரவீர: ॥

உடன் ஆஞ்ஜநேயஸ்வாமியானவர், 'ஸர்வலோகத்திற்கும் குருவான ப்ரம்மாவினுடைய வைபவத்தை அநுஸரிக்கும்போது

அதை இந்த்ரஜித்தும்யோஜித்துப் பார்த்தான். நானும் அப்பேர்ப் பட்ட ப்ரம்மாஸ்த்ரத்திற்குக் கட்டுப்பட்டுத்தான் ஆகவேண்டும் என்பதையும் நன்ருய் அறிந்து, அவன் அந்த ப்ரம்மாஸ்த்ரத்தை என்னிடம் ப்ரயோகம் செய்து, என்னை நிச்சேஷ்டனுகவும் செய்திருக்கிருன். இந்த அஸ்த்ர பந்தத்திலிருந்தும் விமோக்ஷத்தை அடைய எனக்கு சக்தியுண்டு. ஆகிலும், ப்ரம்மாவினுடைய மூலமாக எனக்கு ஏற்பட்டிருக்கும் அனுக்ரஹத்தைக் கவனித்தால் நானும் இதற்குக் கட்டுப்பட்டே ஆகுவதுதான் ந்யாயமாகும். ப்ரம்மாஸ்த்ரத்தால் நான் கட்டுப்பட்டேன் என்பதற்காக எனக்கு யாதொருவிதமான பயமும் ஏற்பட ந்யாயமில்லை. இந்த்ரன், ப்ரம்மா, வாயுபகவான் இவர்கள் என்னுடைய ஸமீபத்தி லிருந்து கொண்டு என்னை எப்போதும் ஸகலவித ஆபத்துக்களிலிருந்தும் ரக்ஷித்துவரும்போது, எனக்கு பய சங்கைக்கே அவகாசமில்லை. இப்போது நான் அஸ்த்ர பந்தத்தினுல் கட்டப்பட்டிருப்பதினுல் என்னை ராக்ஷஸர்கள் எல்லோரும் ராவணனுடைய ஸமீபத்திற்குக் கட்டி இழுத்துக்கொண்டு போனுலும் அப்போதும் எனக்கு பயமே இல்லை. ராவணனுடைய சௌர்ய வீர்யாதிகளைப் பார்க்க லாம். ராவணனேடு பேசுவதற்கு ஸந்தர்ப்பமும் வாய்க்கும். ராவணனுடைய ஸந்நிதியின் ஸமீபம் செல்வதினுல் குணம்தான் ஏற்படுமே தவிர தோஷத்திற்கு அவகாசமே யில்லை. ஆகையால் என்னை இவ்விதம் ராக்ஷஸர்கள் இழுத்துக்கொண்டு போனுலும் எனக்கு பரம ஸந்தோஷந்தான்.'

स निश्चितार्थः परवीरहन्ता
समीक्ष्यकारी विनिवृत्तचेष्टः ।
परैः प्रसह्याभिगतैः निगृह्य
ननाद तैस्तैः परि भर्त्स्यमानः ॥

ஸ நிச்சிதார்த்த: பரவீரஹந்தா
ஸமீக்ஷ்யகாரீ விநீவ்ருத்த சேஷ்ட: ।
பரை: ப்ரஸஹ்யாபிகதை: நிக்ருஹ்ய
நநாத தைஸ்தை: பரிபர்த்ஸ்யமாந: ॥

விசாரித்து ஒவ்வொரு கார்யமும் செய்வதற்கு ஸாமர்த்ய முள்ள மஹா புத்திமானுன ஹநுமான், தன்னைச் சுற்றி நாலா பக்கத்திலும் ராக்ஷஸர்கள் சூழ்ந்துகொண்டு தன்னை வெகு ப்ரகார மாகப் பிடித்து ஹிம்ஸை செய்தாலும், ஸிம்மநாதம் போலொத்த

நாதத்தை கோஷம் செய்துகொண்டு, அவர்களுடைய பீடையினுல் தான் ரொம்பவும் தொந்திரவை அடைந்தவர்போல் அபிநயம் செய்துகொண்டு நடித்துவந்தார். பிறகு நிச்சேஷ்டனுகவும் ஆகி விட்டார்.

இதைப் பார்த்த ராக்ஷஸர்கள் வெகு ஸந்தோஷத்தை அடைந் தார்கள். ப்ரம்மாஸ்த்ர பந்தம் போதாது என்று நினைத்து தோல்க ளாலும், கயிறுகளாலும், மரவுரிகளாலும், வஸ்த்ரங்களாலும் ஹநுமானை நாலா பக்கத்திலும் இழுத்துக் கட்டி பரதந்த்ரனுகச் செய்தார்கள்.

ஆஞ்ஜநேயஸ்வாமியும், ராக்ஷஸர்கள் எவ்வளவுதூரம் நம்மை வேடிக்கை செய்து பார்க்கவேண்டுமோ, அவ்வளவு தூரம் அவர் களும் ஸந்தோஷத்தை அடையட்டும் என்று நினைத்து, அவர்கள் செய்யும் ஒவ்வொரு உபத்ரவங்களையும் ஸஹித்துக்கொண்டு பார்த்துக்கொண்டு மௌனமாகவே இருந்தார்.

ப்ரம்மாஸ்த்ரத்தால் கட்டப்பட்ட ஆஞ்ஜநேயரை, ப்ராக்ருத மான ரஜ்ஜு முதலானவைகளால் கட்டின மாத்ரத்தாலேயே ப்ரம்மாஸ்த்ரம் விலகிவிட்டது. மஹான்கள் உத்கோஷம் செய்து கொண்டிருக்கும் ஸபையில், அல்பர்கள் லஜ்ஜையில்லாமல் தாங் களும் கோஷிக்கவேண்டுமென்று ஆரம்பித்தால், அப்போது மஹான்கள் தானுகவே உபரதியை அடைந்துவிடுவார்களல்லவா: அதுபோலவே, ப்ரக்ருதத்திலும் நேர்ந்தது. ப்ரம்மாஸ்த்ர பந்தத்தி னுடைய கௌரவம் எங்கே? மற்ற லௌகிக கயிறு, வஸ்த்ரம் முதலானவைகளால் கட்டப்பட்ட பந்தம் எங்கே? அத்துடன், ப்ரம்மாஸ்ரத்திற்குத் தான் கட்டுப்படவேண்டிய காலமும் ஆகி விட்டது. மூன்றே முக்கால் நாழிகை (1½ மணி நேரம்) தான் அந்த அஸ்த்ரத்திற்குத் தான் கட்டுப்பட வேண்டிய நியமமான தால், அதுவரை கட்டுப்பட்டிருந்தார்.

'சணல் கயிறு முதலியவைகளால் இந்த ஆஞ்ஜனேயரை ராக்ஷஸர்கள் கட்டினதிலிருந்து, ப்ரமமாஸ்த்ரத்திலிருந்து இவர் விமுக்தனுகிவிட்டார். ப்ரம்மாஸ்த்ர பந்தமானது மற்ற பாசக் கயிறு மூலமான பந்தத்தை அனுஸரித்து இராது. ப்ரம்மாஸ்த்ர பத்ததி என்ற ரஹஸ்யமானது மற்ற பாசக் கயிறுமூலம் பந்தத்தை அனுஸரித்து தானும் கூட ஒரே காலத்தில் இராது என்றதான ப்ரம்மாஸ்த்ர ஸ்வபாவத்தைராக்ஷஸர்கள் தெரிந்துகொள்ளாமலே

சணல்கயிறு புந்தாதிகளைச் செய்தார்கள். ப்ரம்மாஸ்த்ரமே இவரை விட்டு விலகிவிட்டபிற்பாடு, ப்ராக்ருதமான பாசக்கயிறு பந்தமா இவரைக் கட்டுப்படுத்தப் போகிறது! மறுபடியும் அதே ப்ரம் மாஸ்த்ர ப்ரயோகம் செய்யலாம் என்றாலோ, ப்ரம்மாஸ்ரத்தை ஒரே ஒரு தடவைதான் ப்ரயோகம் செய்யலாம். மறுபடியும் இரண்டாம் தடவை ப்ரயோகம் செய்தால் பலிக்காது. ராக்ஷஸர் கள் மிகவும் மூடத்தனமாகச் செய்துவிட்டார்கள்.'

ஆனல் ஆஞ்ஜநேயஸ்வாமியானவர், அப்போதுதான் அந்த அஸ்த்ர பந்தத்திலிருந்து விமுக்தனானலும், விமுக்தனாகாதவர் போல் நடித்துக் காட்டினர். ராவணனுடைய ஸமீபம் சென்று, அவனோடு நன்றாக ஸல்லாபம் செய்யவேண்டுமென்பதே ஆஞ்ஜ நேய ஸ்வாமியினுடைய முக்யமான அபிப்ராயமாகும்.

ராக்ஷஸர்கள் எல்லோரும் வெகு ப்ரகாரமாக ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பிடித்து, கை முஷ்டிகளாலும், தடிகளாலும், குண்டு கற்களாலும் அங்குமிங்கும் அடித்து ஹிம்ஸை செய்துகொண்டு ராவணனுடைய ஸமீபத்திற்கு இழுத்துச் சென்றார்கள்.

ஆஞ்ஜநேயஸ்வாமியோ, ப்ரம்மாஸ்த்ர பந்தத்திலிருந்தும் விமுக்தனாகிவிட்டார். மரவுரிகளால் கட்டுப்பட்டவர் போல் விளங்கிவருகிறார். இந்த அவஸ்தையில், ராக்ஷஸராஜனான ராவண னுக்கு எதிரில் இந்த்ரஜித்து அவரைக் கொண்டுவந்து நிறுத்தி, "இந்த வானரம்தான் அநேக ராக்ஷஸர்களை நாசம் செய்து, அட்டஹாஸம் செய்தது" என்று தெரிவித்துக் கொண்டான்.

ராக்ஷஸர்கள் கூட்டம் கூட்டமாகக் கூடிக்கொண்டு, "இது யார்? யாரைச் சேர்ந்தவன்? லங்கையில் இவனுக்கு என்ன கார்யம்? இந்த குரங்கிற்கு இவ்வித தைர்யத்தை உண்டுபண்ணின வன் யார்? கல்லாலும், தடிகளாலும் அடித்து இந்த குரங்கைக் கொன்றுவிட வேண்டும். அல்லது நெருப்பால் பொசுக்கி விடுவோம். சின்னபின்னமாகச் செய்து பக்ஷித்தாவது விடுவோம்" என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு வந்தார்கள்.

ஆஞ்ஜநேயஸ்வாமியோ, ராக்ஷஸர்களால் இழுக்கப்பட்டு மெள்ள மெள்ள மார்க்கங்களைக் கடந்து, மஹா பராக்ரமசாலிக ளான ராக்ஷஸர்களையும், ராவணனை எப்போதும் ரக்ஷித்துவரும் பாலகர்களையும், அநேகவிதமான ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட

பெரிய பெரிய ஸௌதங்களோடுகூடின ராவணனுடைய திரு மாளிகையும் பார்த்துக்கொண்டே ராவணனுடைய ஸமீபம் வந்து சேர்ந்தார்.

ராவணன், ராக்ஷஸர்களால் பிடித்து இழுக்கப்பட்டு வருகிற ஆஞ்ஜநேயஸ்வாமியைப் பார்த்தான். ஆஞ்ஜநேயரும் ஸூர்ய பகவானைப் போல் ப்ரகாசிக்கின்ற பரம தேஜஸ்வியான ராவணனைப் பார்த்தார்.

स रोषसंवर्तिततामृदृष्टिः
दशाननः तं कपिं अन्ववीक्ष्य ।
अथोपविष्टान् कुलशीलवृद्धान्
समादिशत्तं प्रति मन्त्रिमुख्यान् ॥

ஸ ரோஷஸம்வர்த்திததாம்ர த்ருஷ்டி:
தசாநந: தம் கபிம் அந்வவீக்ஷ்ய ।
அதோபவிஷ்டாந் குலசீலவ்ருத்தாந்
ஸமாதிசத்தம் ப்ரதி மந்த்ரிமுக்யாந் ॥

அதாவது, ராவணனும், கோபத்தால் சிவந்த கண்களோடு கூடினவனாக இருந்துகொண்டு ஆஞ்ஜநேயஸ்வாமியைக் கோபத்துடன் பார்த்து தன் ஸமீபத்திலுள்ள மந்த்ரீ, வர்யர்களைப் பார்த்து "இந்தக் குரங்கின் வரலாற்றை விஸ்தாரமாக விசாரியுங்கள்" என்று ஆக்ஞாபித்தான்.

यथाक्रमं तैः स कपिः निसृष्टः
कार्यार्थं अर्थस्य च मूलमादौ ।
निवेदयामास हरीश्वरस्य
दूतः सकाशादहमागतोऽस्मि ।

யதாக்ரமம் தை: ஸ கபி: நிஸ்ருஷ்ட:
கார்யாத்தம் அர்த்தஸ்ய ச மூலமாதௌ ।
நிவேதயாமாஸ ஹரீச்வரஸ்ய
தூத: ஸகாசாதஹமாகதோஸ்மி ॥

மந்த்ரி வர்யர்களால், 'யார் நீ?' என்று கேட்கப்பட்டு, 'நான் ஸுக்ரீவனுடைய தூதன். அவச்யகர்த்தவ்யமான தூத கார்யத்தைக் குறித்து இங்கு வந்திருக்கிறேன். நான் வந்த

கார்யத்தின் ப்ரயோஜனமும் மிகவும் உயர்ந்ததாகும். தூத க்ருத்யம் என்றும் அதை அறிந்துகொள்ளுங்கள். அதிலும் விசேஷமாக, வானர ராஜாவான ஸுக்ரீவ தூதன் என்பதை அறிந்துகொள்ளலாம்' என்று சொல்லிவிட்டு, ராவணனுடைய வைபவத்தையும், பராக்ரம விசேஷங்களையும் பார்த்து ஆஞ்ஜநேய ஸ்வாமிக்கு ஒரு பக்கத்தில் ஸந்தோஷமும், மற்றொரு பக்கத்தில் மஹத்தான கோபமும் ஏற்பட்டது.

நவரத்னங்களால் இழைக்கப்பட்ட ஸிம்மாஸனத்தினுடைய விசேஷங்களையும், அநேக ப்ரகாரமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, ஸிம்மாஸனத்தின்மீது செங்கோல் பிடித்து மஹாவைபவத்துடன் விளங்கிவரும் ராவணனைப்பார்த்ததிலிருந்து ஆஞ்ஜநேயஸ்வாமிக்கு மைமலே தானோ என்று புலப்பட்டது. தபோ மஹிமையோ, வர்ச்சஸ்ஸோ என்று ஆஞ்ஜநேயருக்கும் பெரிய ஆச்சர்யத்தைக் கொடுத்துவந்தது.

மந்த்ர தத்வத்தில் ஸமர்த்தாளான அநேக மந்த்ரிகள் ராவணனுக்கு இருப்பவர்களானாலும்கூட ஸிம்மாஸனத்தினுடைய நாலா பக்கத்திலும் நான்கு மந்த்ரிகள் மட்டும் விளங்கிவந்தார்கள். அவர்கள் ப்ரஹஸ்தன் முதலானவர்களே. அந்த நான்கு மந்த்ரிகளாலும் சூழப்பட்ட ராவணனைப் பார்க்கும்போது, நான்கு ஸமுத்ரங்ளளால் சூழப்பட்ட லோகரூபியான விராட்புருஷன் தானோ என்று ராவணனை நினைக்கும்படியாக இருந்தது. தேவர்களால் சூழப்பட்ட தேவேந்த்ரன் தானோ என்றும் நினைக்கலாம். மஹர்மேரு பர்வத்தினுடைய உச்கி சிகரங்களில் விளங்கிவரும் நீருண்ட மேகமோ என்றும் ராவணனைப் பார்க்கிறவர்களுக்குத் தோன்றக்கூடியதாக இருந்தது. ராக்ஷஸர்களால் வெகுப்ரகாரமாக ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் பீடிக்கப்பட்டாலும். அவைகளை லக்ஷ்யம் செய்யாமல், ராவணனுடைய மஹத்வத்தைப் பார்த்து பரமாச்சர்யத்தை அடைந்தார். ராவணனுடைய திவ்ய தேஜஸ்ஸால், மஹா புத்திமானும், தபஸ்வியாயுமுள்ள ஆஞ்ஜநேய ஸ்வாமியும் கூட வ்யாமோஹத்தை அடைந்து, மனதினால் சற்று நேரம் சிந்தித்தார்.

अहो रूपं अहो धैर्यं अहो सत्वं अहो द्युतिः ।
अहो राक्षसराजस्य सर्वलक्षणयुक्तता ॥
यद्यधर्मो न वलवान् स्यादयं राक्षसेश्वरः ।
स्यादयं सुरलोकस्य सशक्रस्यापि रक्षिता ॥

அஹோரூபம் அஹோதைர்யம் அஹோஸத்வம் அஹோத்யுதி: ।
அஹோ ராக்ஷஸராஜஸ்ய ஸர்வலக்ஷண யுக்ததா ॥
யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேச்வர: ।
ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸசக்ரஸ்யாபி ரக்ஷிதா ॥

என்றபடி, 'ராவணனுடைய ஜெளர்யவிசேஷம் என்ன, மனோபலம் எப்பேர்ப்பட்டது, காந்தியோ லோகத்தையே தன் வசமாக்கி வருகிறது. ஸாமுத்ரிகா சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட ஸகல லக்ஷணங்களும் ராவணனிடத்தில் குடியிருந்துவருகிறதே! பரதார இச்சை என்ற அதர்மம்மட்டும் இந்த ராவணனிடம் இல்லாமலிருந்தால், தேவேந்த்ரன் உள்பட ஸகல ஜகத்திற்கும் இவன் ரக்ஷகனாகவல்லவா இருக்கவேண்டும்! இவனுடைய க்ரூர கர்மாக்களால், லோகமே இவன் பெயரைச் சொன்ன மாத்ரத்தினாலேயே நடுங்குகிறதே! இவன் நினைத்தால் லோகத்தையே ஜல ப்ரளயமாகச் செய்துவிடலாம். இந்த ராவணனுடைய ப்ரபாவமோ, ஆதிசேஷனாலேகூட வர்ணிக்கத் தகுந்ததல்ல. மிகவும் பெரியவன், மஹா தேஜஸ்வீ. வம்சத்தினாலோ, தேசத்தினாலோ, வித்யையினாலோ, தபஸ்ஸினாலோ, தைர்யத்தினாலோ, பராக்ரமத்தினாலோ, இவனுக்கு நிகராக ஒருவனையுமே சொல்ல முடியாது. பரமாச்சர்யம்! பரமாச்சர்யம்!' என்று மனதில் ராவணனுடைய ப்ரபாவத்தைப் பார்த்துப் பார்த்து மிகவும் மகிழ்ந்துகொண்டு சிந்தித்து வந்தார்.

तमुद्वीक्ष्य महाबाहुः पिंगाक्षं पुरतःस्थितम् ।
कोपेन महताविष्टः रावणो लोकरावणः ॥

தமுத்வீக்ஷ்ய மஹாபாஹு: பிங்காக்ஷம் புரத: ஸ்திதம் ।
கோபேந மஹதாவிஷ்ட: ராவணோ லோகராவண: ॥

ராவணனுக்கு எதிரில் ஆஞ்ஜநேயஸ்வாமியானவர், ராவணனால் தனக்கு ஆஸனாதிகள் கொடுக்கப்பட்டு, தான் ஒரு மர்யாதையை அடையாதபோனாலும், தன்னுடைய (புச்சத்தை வாலையே வ்ருத்தி செய்துகொண்டு, அதைச் சுருட்டிச் சுருட்டி ஆஸனம்போல் நிர்மாணம் செய்துகொண்டு ராவணனுக்கெதிரில் உட்கார்ந்துகொண்டு, ராவணனைப் பார்த்துவந்தார்.

ராஜாக்கள் தன்னுடைய ஆஸனத்தைக் காட்டிலும் உயர்ந்த ஆஸனத்தில் உட்கார்ந்திருப்பவனை தான் (ஊர்த்வ முகமாக)

தலையை உயரத் தூக்கி பார்க்கிற வழக்கமில்லை. கீழ் முகமாகவே தான் (ஸேவகா) ப்ருத்யகோடிகளை ராஜாக்கள் பார்ப்பார்கள். அதற்கு விருத்தமாக ஹநுமானைப் பார்க்கும்படி நேர்ந்ததில் ராவணனுக்கு அபாரமான கோபம் ஏற்பட்டுவிட்டது. அதிலும் ராஜனுக்கு எதிரில் ஒருவரும் நின்று பேசுவதில்லை. பார்ச்வத்தில் தான் நிற்பார்கள். இந்த ஹநுமானோ, உயரமான ஆஸனத்திலும் எதிரிலும் உட்கார்ந்துகொண்டிருக்கிறார், அவ்விதமுள்ள ஹநு மானைப் பார்த்தவுடன் அப்பேர்ப்பட்ட அந்த ராவணனுக்கு ஏன் கோபம் வராது ?

रावयति इति रावणः लोकान् रावयति इति लोकरावणः (ராவயதி இதி ராவண:, லோகாந் ராவயதி இதி லோகராவண:) என்ற வ்யுத்பத்தியை அனுஸரித்து, தன்னுடைய பெயரைக் கேட்ட மாத்ரத்தாலேயே ஸகல ப்ராணிகளையும் கதறச்செய்கிற ஸ்வபாவ முள்ள ராக்ஷஸ ராஜனான ராவணனுக்கு, ப்ரக்ருதத்தில் ஹநுமா னுடைய சேஷ்டையைப்பார்க்க மிகவும் கோபம் ஏற்பட்டுவிட்டது

அபாரமான தேஜஸ்ஸால் சூழப்பட்டு, மஹா தேஜஸ்வியாக எதிரில் விளங்கிவரும் கபிச்ரேஷ்டனான ஹநுமானைப் பார்த்த மாத்ரத்திலேயே ராவணன் மனக் கவலையை அடைந்து தீர்க்கமாக சிந்தித்துக்கொண்டிருந்தான்!

किमेष भगवान्नन्दी भवेत्साक्षादिहागतः ।
येन शप्तोस्मि कैलासे मया सचलिते पुरा ।
सोयं वानरमूर्तिः किंस्विद्बाणोपि वा सुरः ॥

கிமேஷபகவாநந்தீ பவேத் ஸாக்ஷாதிஹாகத: ।
யேநசப்தோஸ்மி கைலாஸே மயா ஸஞ்சலிதே புரா ।
ஸோயம் வாநரமூர்த்திஸ்யாத் கிம்ஸ்வித்பாணோபி வா ஸுர: ||

ராவணன் முன்பு திக்விஜயம் செய்யும் காலத்தில், மஹா கைலாஸம் சென்று பரமேச்வரனோடு யுத்தம் செய்யவேண்டு மென்ற எண்ணத்துடன் கைலாஸத்திற்கு மேலேறிச் சென்றான். அவ்விதம் செல்கையில், கைலாஸ பர்வதத்தின த்வாரத்தில் நந்தி கேச்வரர் சிவ பக்தி பராயணராக இருந்துவந்தபடியால், ராக்ஷஸ ராஜனானராவணனை பரமேச்வரனுடைய அருகில் போகவொட்டா மல் தடுத்தார். அதிலிருந்தும் ராவணனுக்கும் நந்திகேச்வரருக்கும்

பெரிய போர் ஏற்பட்டது. ராவணன் தன்னுடைய கதாயுதத்தால் நந்திகேச்வரருடைய முகத்தில் அடித்தான். அதிலிருந்து நந்திகேச்வரருடைய முகமானது வாநர முகம்போல் ஆகிவிட்டது. வாநர முகத்திற்கும் நந்திகேச்வரருடைய முகத்திற்கும் அதிகமான தாரதம்யம் இராது. ''நந்திகேச்வரர் என்னைப்போல் நீண்டுள்ள முகமுடைய ஒரு மஹாபுருஷன் மூலமாக உன் பெருமை முற்றிலும் குறைந்துவிடும். லங்கைச்வர்யமே போய்விடும், நீயும் ஹதனுகவே ஆகிவிடுவாய்'' என்று சபித்தார்.

முன் காலத்தில் ஏற்பட்ட அந்த சாபமானது தற்காலத்தில் இந்த ஹநுமானை தர்சனம் செய்தவுடன் மனதில் உதயமாயிற்று அதை அனுஸரித்து, சிவ பக்த அக்ரேஸரனுன நந்திகேச்வரர் தான் இந்த ரூபமாக வந்திருக்கிருரோ என்று நினைத்து ராவணன் கஷ்டப் பட்டான்.

அத்துடன், ஜனக மஹாராஜனுடைய புத்ரியரன ஸீதையை, அவள் வீர்ய சுல்கையானதால்) சிவ தனுஸ்ஸை முறித்தவர்களுக்குத் தான் அவளைப் பரிணயம் செய்துகொடுப்பது என்ற ஜனக ராஜனுடைய ப்ரதிக்ஞையை அனுஸரித்து, ராவணனும் அவளைப் போலொத்த மற்ற பலசாலிகளான அரசர்களும், அதிலும் ப்ரசித்தமான பல பராக்ரமத்தோடு கூடின 1000 கைகளோடு கூடிய பாணஸுரனும் சிவதனுஸ்ஸை முறித்து ஸீதையைப் பரிணயம் செய்துகொள்ள ப்ரயாஸைப்பட்டார்கள். அது பயனற்றதாகி விட்டது. அதிலிருந்தும் எல்லா அரசர்களும் விமுகாளாகவே திரும்பிவிட்டார்கள். ராவணனுக்கு மட்டும் ஸீதையினிடத்தில் சாபல்யம் அதிகமாக இருந்ததினுல், பராக்ரமத்தால் வில்லை முறித்து ஸீதையை நாம் அடையமுடியாதபோனுலும், சௌர்ய விருத்தியை (திருட்டு) அவலம்பித்தாவது ஸீதையை க்ரஹித்துக் கொள்ளவேண்டியது என்ற ஸங்கல்பத்தைச் செய்தான்.

ராவணனுடைய இந்த ஆசயமானது பாணஸுரனுக்கு பரம்பரையாகக் காதில் எட்டியது, உடன் பாணஸுரன் ராவணனைப் பார்த்து, ''உன்னுடைய அபிப்ராயம் சாஸ்த்ர விருத்தமாயும், ஸாஹஸத்தை அனுஸரித்ததாயும் இருப்பதாகத் தெரிகிறது. அவ்விதம் நீ ஏதாவது நீதிக்கு விரோதமாக நடந்து கொண்டால் நான் உன்னை உபக்ஷித்து விடமாட்டேன். சிவ ப்ரஸாதத்தால் நான் காமரூபியானதினுல், எந்த ரூபத்தோடும் உன் எதிரில் வந்துவிடுவேன் என்பதை நீ அறிந்துகொள்ள

வேண்டும். வந்தால் உன்னை சிக்ஷித்தே தீருவேன்'' என்று முன்பு நன்றாக எச்சரித்துத் தெரிவித்திருக்கிறான்.

அந்த ஸந்தர்ப்பத்தில் நடந்த ஸங்கதிகளும் ராவணனுடைய மனதில் இப்போது உதித்தன. அதை அனுஸரித்தும், முன்பு பாணாஸுரன் தெரிவித்த ப்ரகாரம் வாநரமூர்த்தி யாக ஒருஸமயம் பாணாஸுரன்தான் வந்திருக்கிறானோ என்றும் யோஜித்தான்.

இவ்விதம், ஒன்று நந்திகேச்வரனாக இருக்கவேண்டும்; அல்லது பாணாஸுரனாக இருக்கவேண்டும் என்று சிந்தித்து, பயத்தால் மனக் கலக்கத்தையும் அடைந்து, சற்று நேரம் கழித்து மனஸ் ஸமா தானத்துடன், தன்னால் அடக்கமுடியாததான கோபாவேசத் துடனும், தத்காலத்திற்கு உசிதமான வார்த்தையை மந்த்ரி ச்ரேஷ்டனான ப்ரஹஸ்தனைப் பார்த்துச் சொல்கிறான்.

'' ப்ரஹஸ்தா, இந்த துராத்மாவை யார் என்று நீ கேட்டுத் தெரிந்துகொள். எந்த தேசத்திலிருந்து இந்த லங்கா நகரத்திற்கு வந்திருக்கிறான்? லங்கையில் இந்த குரங்கிற்கு என்ன ப்ரயோ ஜனம்? யாரால் ஏவப்பட்டு வந்தவன்? அசோகவனததை அழித்த தினால் இந்தக் குரங்கிற்கு என்ன லாபம் கிடைத்தது ராக்ஷஸர்க ளோடு யுத்தம் செய்து அவர்களெல்லோரையும் ஒன்றுவிடாமல் நாசம் செய்ததினால் என்ன லாபம் அடைந்தது என்ற வ்ருத்தாந் தங்களை விவரமாக விசாரித்து அறிந்துகொள்'' என்று ப்ரஹஸ்த னுக்குக் கட்டளையிட்டான்.'

அவ்விதமே ப்ரஹஸ்தன் ஹநுமானுனைய ஸமீபத்திற்கு வந்து, ''ஹே கபிச்ரேஷ்டா! நான் கேட்கும் விஷயங்களுக்கு உண்மையான பதிலைச் சொல்லவேண்டும். உண்மையைச் சொன் னால் உமக்கு ஒருவித ஆபத்துமில்லை. நீர் யார்? இந்த்ரனுடைய தூதனா? அல்லது குபேரனுடைய தூதனா? வருணனுடைய தூதனா? யமனுடைய தூதனா? விஷ்ணுவினால் அனுப்பப்பட்ட தூதனா? சார புருஷர்கள் ரூபாந்த்ரத்தை க்ரஹித்துக்கொண்டு அந்ய தேச அரசர்கள் சமீபம் வருவது வழக்கமாயிற்றே. அது போல் நீரும் வந்திருப்பதாக எங்களுடைய தீர்மானம். நீர் உண்மையில் வானரமல்ல. யாரோ ராஜதூதன்தான். சார புருஷ னாக இந்த வானர ரூபத்தைத் தரித்துக்கொண்டு இந்த லங்கா நகரத்திற்குள் ப்ரவேசித்திருக்கிறீர். லங்கா நகரத்தில் நீர் ப்ரவே சம் செய்தது முதல் இதுவரை நீர் செய்திருக்கும் ஒவ்வொரு

கார்யத்தையும் கவனித்தாலே நீர் குரங்கில்லை என்பதை ஸ்பஷ்டமாக ப்ரகாசப்படுத்துகிறது. உண்மையைச் சொன்னால் உமக்கு துக்கத்திலிருந்து விமோசனம் ஏற்படும். பொய் சொன்னால் உயிருக்கே ஹானி வரும். ஆகையால் கொஞ்சமேனும் ஒளிக்காமல் வ்ருந்தாந்தத்தை ஸரிவர தெரிவிக்கவேண்டும்'' என்று ப்ரஹஸ்தன் கேட்க, ஹநுமாரோ ப்ரஹஸ்தனை ஒரு துச்சமாக நினைத்து, இந்த அல்பனுக்கு நாம் நேரில் பதில் சொல்லவாவது என்ற எண்ணத்துடன், ராக்ஷஸ ராஜனான ராவணனைப் பார்த்தே பதில் சொல்கிறார்.

''ஹே ராஜனே ! நான் யம தூதனுமல்ல ; இந்த்ர தூதனுமல்ல; வருண தூதனுமல்ல; விஷ்ணுவினாலேயும் அனுப்பப்பட்டு நான் வரவில்லை. என் ஜாதியே குரங்கு ஜாதிதான். ராக்ஷஸ ராஜனான தங்களுடைய தர்சன நிமித்தமாக நான் இங்கு வந்திருக்கிறேன். குரங்கான எனக்கு இப்பேர்ப்பட்ட ஸந்நிதான தர்சனம் மிகவும் துர்லபம் என்று நினைத்து, அதற்கு உபாயமாகத் தங்களுடைய பூர்ண ப்ரேமைக்கு ஆஸ்பதமான அசோகவனத்தை அழித்தேன்.

உடன், ராக்ஷஸர்கள் என்னை வதம் செய்ய யுத்தத்திற்கு வந்தார்கள். என்னுடைய தேஹத்தை ரக்ஷித்துக்கொள்வதற்காக நான் அவர்களோடு யுத்தம் செய்து, அவர்களை நான் ஹதம் செய்யும்படி நேர்ந்தது. எவ்விதமான அஸ்த்ர பாசங்களாலும் என்னை ஒருவராலும் கட்டுப்படுத்த முடியாது. ப்ரம்மாவினுடைய வரப்ரஸாதம் எனக்கு உண்டு. ப்ரம்மாஸ்த்ரத்தினாலும் நான் பத்தனாக (கட்டப்பட்டவனாக) ஆக மாட்டேன். தங்களைத் தர்சனம் செய்யவேண்டுமென்ற இச்சையினால்தான் ப்ரம்மாஸ்த்ரத்திற்குக் கட்டுப்பட்டவன்போல் நடித்துக் காட்டினேன். முக்யமாக, நான் இங்கு வந்ததோ, ஒரு ராஜகார்யத்தை ஸாதித்துக்கொண்டு போவதற்காக உன் ஸமீபம் வந்தேன்.

दूतोऽहमिति विज्ञाय राघवस्यामितौजसः ।
श्रूयतां चापि वचनं मम पथ्यं इदं प्रभो ॥

தூதோஹமிதி விக்ஞாய ராகவஸ்யாமிதௌஜஸ! ।
ச்ரூயதாம் சாபி வசநம் மம பத்யம் இதம் ப்ரபோ ॥

என்றதினல், நிகரற்ற தேஜஸ்ஸோடுகூடின ஸ்ரீ ராகவனுடைய தூதன் நான் என்பதை நீ அறியவேண்டும். உனக்கு, இஹத்திலும், பரத்திலும் ஹிதமான சில வார்த்தைகளை, உன்னிடத்தில் நேரில் தெரிவிக்கவேண்டுமென்றே உன் ஸந்நிதிக்கு நான் வந்து சேர்ந்தேன். நான் சொல்வதைக் கேட்டு நீ அந்த ப்ரகாரம் அனுஷ்டித்தால், நீ ஸகலவிதமான ச்ரயேஸ்ஸையும் அடையலாம். அதாவது :

கிஷ்கிந்தைக்கு அதிபதியான வாலி என்ற வானர ராஜனை உனக்குத் தெரிந்திருக்கக்கூடும். அந்த வாலியினுடைய ஸஹோதரனை ஸுக்ரீவனுடைய முக்கியமான மந்த்ரியாக நான் இருந்து வந்தேன். ஸுக்ரீவனுக்கும் அயோத்தியாதிபதியான ராமனுக்கும் அக்னி ஸாக்ஷிகமாக ஸக்யம் ஏற்பட்டதிலிருந்து, தத்காலத்தில் ஸ்ரீ ராம தூதனுக இருந்து வருகிறேன். ஸுக்ரீவனுக்கும், ராமனுக்குமுள்ள ஸ்நேஹபாவத்தை வர்ணித்து முடியாது. ஸுக்ரீவனுடைய ஆக்ஞையை அனுஸரித்து நான் உன்னிடம் வந்தேன். ஸுக்ரீவன் உன்னைப் பார்த்துச் சொல்வதாகவே இப்போது நான் உன்னிடம் சொல்லப்போகும் வார்த்தைகளைப் பாவித்துக் கொள்ளவேண்டும்.

உன்னுடைய ப்ராத்ரு ஸ்தானத்திலுள்ள ஸுக்ரீவன் உன்னுடைய க்ஷேமவ்ருத்தாந்தத்தை முதலில் ப்ரச்னம் செய்கிறார். ஸுக்ரீவனுடைய வார்த்தைகளெல்லாம் தர்ம சாஸ்த்ரத்திற்கும், அர்த்த சாஸ்த்ரத்திற்கும் ஒத்ததாகவே இருந்துவருகிறது. அதைக் கேட்கும் உனக்கு இஹலோகத்திலும், பரலோகத்திலும் அப்யுதய ஸாதனமாக ஆகும். ஆகையால் நீ அவச்யம் கேட்கவேண்டும்.

உத்தர கோசல தேசத்தில் தசரதன் என்ற பெயருடன் ஒரு மஹாராஜன் விளங்கிவந்தார். அவர் சதுரங்க ஸேனைகளுடன் மிகவும் ஸார்வபௌம பதவியில் அமர்ந்தவர். ஸர்வ பிராணிகளுக்கும் பிதாவைப் போல் பந்து என்று சொல்லாம். தேவராஜனுக்கு ஸமானமான காந்தியோடு கூடியவர். அந்த மஹானுபாவனுக்கு மூத்த குமாரன் ஸ்ரீ ராமன் என்று லோகப்ரஸித்தமானது. பிதாவான தசரத சக்ரவர்த்திக்கு மிகவும் ப்ரீதியைச் செய்துவரும் அந்த ராமன், பித்ருவாக்ய பரிபாலனம் என்ற தர்மத்தை அனுஷ்டிக்க தண்டகாரண்யத்திற்குள் ப்ரவேசம் செய்தார். அந்த ராமனுடன் அவருடைய ப்ராதாவான லக்ஷ்மணனும் பின்

தொடர்ந்து வந்தார்; பார்யையான ஸீதையும் பின்தொடர்ந்து வந்தாள். பார்யையான சீதையோடும், ப்ரதாவான லக்ஷ்மணனோடும் தண்டகாரண்யத்தில் வாஸம் செய்துகொண்டு ஸ்ரீ ராமன் அநேக ஸம்வத்ஸங்களைக் கழித்தார், ஸ்ரீ ராமன் தர்ம மார்க்கத்திலிருந்து கொஞ்சமேனும் நழுவமாட்டார், அவருடைய பார்யையான பதிவ்ரதாசிரோமணிக்கோ ஸீதை என்ற நாமோதயம் ஏற்பட்டது. விதேஹ தேசத்துக்கு அதிபதியான ஜனகமகாராஜாவினுடைய பெண் அவள். மஹா பதிவ்ரதாசிரோமணியான அந்த ஸீதை, தண்டகாரண்யத்தில் ஸ்ரீ ராமனை விட்டுப் பிரியும்படி நேர்ந்துவிட்டது. அவளைத் தேடிக்கொண்டு, லக்ஷ்மணனுடன் ஸ்ரீ ராமன் அரண்யத்தில் வரும்போது, ரிச்யமுக பர்வதத்தில் வானராதிபதியான ஸுக்ரீவனை ஸந்தித்தார். ஸுக்ரீவனுக்கும் ஸ்ரீ ராமனுக்கும் அக்னி ஸாக்ஷிகமாக ஸ்நேஹம் ஏற்பட்டு விட்டது.

ப்ரபல பராக்ரமசாலியான வாலியைக் கொன்று, கிஷ்கிந்தையில் ஸுக்ரீவனுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்விப்பதாக ஸ்ரீ ராமன் ப்ரதிக்ஞை செய்தார். ஸுக்ரீவனும் ஸீதையைத்தேடி ஸ்ரீ ராமனுடன் சேர்த்துவைப்பதாக ப்ரதிக்ஞை செய்தார். ஸ்ரீ ராமன் தன்னுடைய ப்ரதிக்ஞையை ஸுக்ரீவனிடம் நிறைவேற்றி விட்டார். வாலியைக் கொன்று, கிஷ்கிந்தா ராஜ்யத்தில் ஸுக்ரீவன் மகுடாபிஷேகம் செய்யப்பட்டு, வானரர்களுக்கு ராஜாவாக விளங்கிவருகிறான். வாலியைப் பற்றியோ முன்பே தங்களுக்கு நன்றாகத் தெரிந்த விஷயம்தான். ப்ரஸித்தமான பராக்ரமத்தோடு கூடிய அந்த வாலியும், ஒரே பாணத்தால் ஸ்ரீ ராமனால் அடிக்கப் பட்டு மரணத்தை அடைந்தான். ஸுக்ரீவனும் சில மாதங்கள் ராஜ்ய ஸுகத்தை அனுபவித்துவிட்டு, ஸ்ரீ ராமகார்யத்தை முடித்துக்கொடுக்கவேண்டுமென்ற எண்ணத்துடன், ஆங்காங்கு நானா தேசங்களிலும் வாஸம் செய்துவந்த வானர ஸேனைகளை ஒன்று சேர்த்து, நாலா திக்குகளிலும் ஸீதாதேவியைத் தேடிப் பார்ப்பதற்காக, கோடிக் கணக்கான வானரர்களை அனுப்பியிருக்கிறான். தத்காலத்தில் வானரர்களால் சூழப்படாத தேசமே ஒன்றுமில்லை.

அவ்விதம் ஸீதையைத் தேடுவதற்காக லோகமுழுவதும் வ்யாபரித்த வானரர்களுக்குள், சிலர் கருடனுக்கு ஸமானமான வேகத்தோடு கூடினவர்கள்; சிலர் வாயுவேகமாகச் செல்கிற

வர்கள்; சிலருக்கு எங்கும் தடையில்லாமல் செல்லும் சக்தி யுண்டு. அப்படி நாலு திக்குகளிலும் ஸீதையைத் தேடுவதற்காக வானரர்கள் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பதுபோல் தக்ஷிண தேசத்திலும் மஹா ப்ரபலர்களான வானரர்கள் ஸீதையைத் தேடிக் கொண்டு வருகிறவர்களுக்குள் நானொருவன். ஹனுமான் என்று என்னுடைய பெயராகும். வாயு பகவானுடைய குமாரன். ஸீதையினுடைய நிமித்தமாக 100 யோஜனை தூரமுள்ள சமுத்திரத்தைத் தாண்டி வந்தேன். ஸீதா தர்சனம்தான் இந்த லங்கா நகரத்தில் நான் வந்ததினுடைய முக்யமான ப்ரயோஜனமாகும். இந்த லங்கா நகரத்தில் சுற்றிச் சுற்றி நான் ஸீதையைத் தேடாத இடமே பாக்கியில்லை, நேற்று இரவு பூராவும் அந்தப்புறத்தில் உன்னுடைய காவலில் ராக்ஷஸ ஸ்திரீகளால் பாதுகாக்கப்பட்டு வரும் ஸீதையைஅசோகவனத்தில் பார்த்துவிட்டேன். ஸீதையை யார் அபஹரித்துக்கொண்டு போனுளே என்ற விசாரத்தையும் விட்டுவிட்டேன். ஸீதாபஹாரம் செய்த ப்ரபு தாங்கள்தான் என்பதில் கொஞ்சமேனும் ஸந்தேஹமே இல்லை.

तद्भवान् दृष्टधर्मार्थः तपःकृतपरिग्रहः ।
परदारान् महाप्राज्ञ नोपरोद्धुं त्वमर्हसि ॥
न हि धर्मविरुद्धेषु बह्वपायेषु कर्मसु ।
मूलघातिषु सज्जन्ते बुद्धिमन्तो भवद्विधाः ॥

தத்பவாந் த்ருஷ்ட தர்மார்த்த : தப:க்ருத பரிக்ரஹ: ।
பரதாராந் மஹாப்ராக்ஞா நோபரோத்தும் த்வமர்ஹஸி ॥
ந ஹி தர்மவிருத்தேஷு பஹ்வபாயேஷு கர்மஸு ।
மூலகாதிஷு ஸஜ்ஜந்தே புத்திமந்தோ பவத்விதா: ॥

அதாவது, ஹே ராஜனே ! தர்ம ஸ்வரூபத்தையும், அர்த்த ஸ்வரூபத்தையும் சாஸ்த்ரமூலமாக அறிந்த மஹானுபாவனே தாங்கள். இந்த்ரிய நிக்ரஹம், மனே நிக்ரஹம் என்ற தபஸ்ஸானது, தன்னைப் பரிபாலிக்க தங்களையே ஸ்வீகாரம் செய்து கொண்டிருக்கிறது என்று தோன்றுகிறது. அதாவது தாங்கள் மஹா தபஸ்வீ என்று யாரும் தங்களைப் பார்த்த மாத்ரத்திலேயே நினைக்கக் கூடும்.

இவ்விதம் சாஸ்த்ரார்த்த ஞானமுள்ளவனும், மஹாதமஸ்வியாயும், மஹாப்ராக்ஞனுயுமுள்ள நீ,பரதார சௌர்ய விஷயத்தில்

புத்தியைப் பரிகொடுப்பது ந்யாயமாகுமா? ப்ரதாராபஹாரம் போல் தர்ம சாஸ்த்ரத்திற்கு விருத்தமான பாபம் வேறொன்றுமே இல்லை. சாஸ்த்ர விருத்தமானாலும், தத்காலத்தில் ஸுகத்தைக் கொடுக்கக்கூடியதானதினால், ஏன் செய்யக்கூடாது என்று மூர்க்கர்கள் நினைப்பார்கள். பர தாராபஹாரம் முதலான பாபங்கள் தத்காலத்தில் ஸுகத்தைக் கொடுப்பது என்பதும் ப்ராந்தி தான். தாத்காலிகமான அல்ப ஸுகத்திற்காக பல ஹானிகளைச் செய்யக்கூடாது. ஹானிகள் எது வந்தாலும் பரிஹாரம் செய்து கொண்டுவிடுவோம் என்றும் துணியக்கூடாது. மூல புருஷனையே அழித்துவிடும்.

**सर्वं हन्ति परांगना** (ஸர்வம் ஹிந்தி பாரங்கநா) என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து, தர்ம சாஸ்த்ர விருத்தமானது. வெகு துக்கங்கங்களைக் கொடுக்கக்கூடியது. குலத்தையே நாசம் செய்யக்கூடியது இவ்விதமாக வெகு ப்ரகாரமான அனர்த்தங்களை விளையச் செய்யும் பர தாராபஹரணம் முதலான பாபங்களில், புத்திமான்களான தங்களைப் போலொத்த உத்தம புருஷர்கள் ப்ரவ்ருத்திக்க மாட்டார்கள். ஆகையால் அது தங்களுக்கு அழகல்ல. தங்களுடைய ஞானத்திற்கும், அனுஷ்டானத்திற்கும், வம்ச கௌரவத்திற்கும் இந்த பாபம் எதற்காக ஏற்படவேண்டும்? ஆனால் 'என்ன பாபம் வந்தாலும் பரிஹரித்துக்கொள்ளக்கூடிய சக்தி எனக்கு உண்டு; என்ன பூச்சாண்டி காட்டுகிறீர்' என்று நீ கேட்கக் கூடாது. இந்த ஸீதாபஹாரம் என்ற பாபத்திலிருந்து மீண்டு வருவதற்கு ஒருவிதமான சக்தியும் உனக்கில்லை,

**कश्च लक्ष्मणमुक्तानां रामकोपानुवर्तिनाम् ।**
**शराणां अग्रतः स्थातुं शक्तो देवासुरेष्वपि ।।**
**न चापि त्रिषु लोकेषु राजन् विद्येत कश्चन**
**राघवस्य व्यलीकं यः कृत्वा सुखमवाप्नुयात्**

கச்ச லக்ஷ்மண முக்தாநாம் ராமகோபா நுவர்த்திநாம்।
சராணம் அக்ரதஸ்தாதும் சக்தோ தேவாஸுரேஷ்வபி॥
ந சாபி த்ரிஷு லோகேஷு ராஜந் வித்யேத கச்சந।
ராகவஸ்ய வ்யலீகம் ய: க்ருத்வா ஸுகமவாப்நுயாத்॥

ஸ்ரீ ராகவனுடைய கோபத்தை அனுஸரித்து லக்ஷ்மணஸ்வாமியினால் ப்ரயோகம் செய்யப்படுகிற பாணங்களுக்கு எதிரில்

தேவாஸுராளுக்குள் ஒருவரும் நிற்கக்கூட சக்தியுள்ளவனுகமாட்டான். மூன்று லோகத்திலும், ஸ்ரீ ராமனுக்கு அப்ரியத்தைச் செய்தவன் ஸுகத்தை அடையமாட்டான் என்பதுநிச்சயம்தான். ஆகையால் ப்ரக்ருதத்தில் நீ செய்த பாபத்திற்குப்பரிஹாரத்தைச் செய்துகொள்ள உனக்கு சக்தி உண்டு என்ற துணிவு உனக்கு வேண்டாம்.

तत्त्रिकालहितं वाक्यं धर्म्यं अर्थानुबन्धि च ।
मन्यस्व नरदेवाय जानकी प्रतिदीयताम् ॥

தத்ரிகாலஹிதம் வாக்யம் தர்ம்யம் அர்த்தாநுபந்தி ச ।
மந்யஸ்வ நரதேவாய ஜாநகீ ப்ரதிதியதாம் ||

ஆகையால், ஸுக்ரீவனுல் சொல்லப்பட்ட வார்த்தையோ உனக்கு த்ரிகாலங்களிலும் ஹிதத்தைச் செய்யக்கூடியது. அதாவது ஸுக்ரீவன் சொன்னபடி கேட்டால் பூத காலத்தில் நீ செய்த ஸீதாபஹாரம் என்ற பாபமும் போய்விடும். தத்காலத்திலுள்ள ஐச்வர்யத்திற்கும் குறைவு வராது. பாவியான காலத்திலும்சுபத்திற்கு ஹேதுவாகிறது. இவ்விதம் பூத காலம், வர்த்தமான காலம். பவிஷ்யத் காலம் என்ற மூன்று காலங்களிலும் நீ பரம க்ஷேமத்தை அடைவதற்கு ஸுக்ரீவனுடைய வார்த்தை காரணமாகிறபடியாலும், அத்துடன், ஸுக்ரீவனுடைய வார்த்தையானது தர்ம ஸ்வரூபமானதினுலும், அர்த்த சாஸ்த்ரத்திற்கு அநுசரணையாக இருப்பதினுலும், ஸுக்ரீவனுடைய வார்த்தைகளை நீ அவச்யம் வெகுமான புத்தியுடன் கேட்கவேண்டும். கேட்கும்பக்ஷத்தில் நீ பரம ச்ரேயஸ்ஸை அடையலாம். அவ்விதம் எண்ணி, நரச்ரேஷ்டனுன ஸ்ரீ ராகவனிடத்தில் ஸீதாதேவியை ப்ரத்யர்ப்பணம் (திரும்பச் சேர்ப்பது) செய்துவிடவேண்டும். ஸீதை என்னிடம் இருந்தாலல்லவா நீர் இந்த வார்த்தை சொல்லவேண்டும் என்று என்னை ஏமாற்றக்கூடாது. ஸீதையை அபஹாரம் செய்தவனுக்கல்லவா இந்த உபதேசம், எனக்கு என்ன ஸம்பந்தம் என்றும் நினைக்கவேண்டாம்.

दृष्टा हीयं मया देवी लब्धं यदिह दुर्लभम् ।
उत्तरं कर्म यच्छेष निमित्तं तत्र राघवः ॥

த்ருஷ்டா ஹீயம் மயா தேவீ லப்தம் யதிஹ துர்லபம்।
உத்தரம் கர்ம யச்சேக்ஷம் நிமித்தம் தத்ர ராகவ:||

நாலு திக்குகளிலும் தேடிக்கொண்டுவரும் மற்ற வானரர்களுக்கு துர்லபமான ஸீதா தர்சனம் எனக்கு இப்போது கிடைத்துவிட்டது. நீதான் ஸீதையை அபஹரித்துக்கொண்டு வந்திருக்கிறாய். ஸீதை உன் வசத்திலிருப்பதை நான் ப்ரத்யக்ஷமாகப் பார்த்துவிட்டேன். ஸீதையை மறுபடியும் ஸ்ரீ ராமனுடைய ஸமீபம் கொண்டுபோய்ச் சேர்ப்பதில். எனக்கு ராமாக்ஞை இல்லாததினால், ராமனால் செய்யவேண்டிய கார்யம் அது. ஸீதையைக் கண்டுவருவதில்தான் எனக்கு ஆக்ஞை. யஜமானால் ஆக்ஞாபிக்கப்பட்ட கார்யத்தைமட்டும் செய்வதுதான் தூதனுக்கு அழகாகும். நான் ஸீதையை அசோகவனத்தில் ப்ரத்யக்ஷமாகப் பார்த்துவிட்டேன், துக்கஸாகரத்தில் மூழ்கிக்கொண்டுவருகிறாள். ஸீதையை நீ க்ரஹித்துக்கொண்டு வந்தது, ஐந்து தலையோடு கூடின பெண் ஸர்ப்பத்தை அபஹரித்துக்கொண்டது போல்தான் ஆகும். இது உனக்கு ஜரித்துவிடக்கூடிய பாபமே இல்லை. விஷ ஸம்பந்தமான அன்னத்தை ஜரித்துவிடக் கூடிய சக்திஜாடராக்னிக்குக்கூட கிடையாது. அத்யுக்ரமான தபஸ்ஸைச் செய்து அதிலிருந்தும் அபூர்வமான தர்மத்தை ஸங்ரஹம் செய்து, அந்த தர்மத்தினுடைய பலத்தால் தன்ப்ராணன் தன்னுடையசரீரத்தில் நெடுநாள் ஜீவிக்கும்படியாகச் செய்துகொண்ட மஹித்வத்தை இப்பேர்ப்பட்ட ஸ்த்ரீ சாபல்யத்தால் அழித்துக்கொள்வது ந்யாயமாகாது. அத்யுக்ரமான தபஸ்ஸைச்செய்து அவத்யத்வம் என்பதையும் நீ வரமாகப் பெற்றிருக்கிறாய். அதனாலும் உனக்கு அஹங்காரம் வேண்டாம். நீ தேவாளுக்கும், அஸுராளுக்கும் அவத்யன்தான், ஸுக்ரீவன் தேவனுமல்ல, அஸுரனுமல்ல, ராக்ஷஸனுமல்ல, தானவனுமல்ல, பன்னகனுமல்ல. யக்ஷனுமல்ல, நீயாரிடத்திலிருந்து அவத்யத்வத்தை வரமாகப்பெற்றுக்கொண்டாயோ அந்த ஜாதியில் சேர்ந்தவனா ஸுக்ரீவன்? ஆகையால் இந்த அத்யுக்ரமான பாபத்தைச் செய்துவிட்டு, உன் ப்ராணனை எவ்விதம் ரக்ஷித்துக்கொள்ளப் போகிறாயோ? நான் சொல்வதில் உனக்குக் கொஞ்சமேனும் மனோவருத்தம் கூடாது. தத்வங்களை நன்றாக விமர்சனம் செய்து, ப்ராத்ரு ஸ்தானத்திலுள்ள ஸுக்ரீவனுடைய ஸந்தேச வசனத்தையும் கவனித்து, ஸ்ரீராமனுடையமஹத்வத்தையும் ஆலோஜித்து, பரிஹரிக்கத் தகாததான பாபத்தினுடைய ஔத்கட்யத்தையும் பரிசீலனை செய்து, கொஞ்சமேனும் விளம்பம் இல்லாமல் ஸீதாதேவியை ஸ்ரீ ராமனிடம் அர்ப்பணம் செய்துவிட்டு, உன்னுடைய உயிரைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும்,

न तु धर्मोपसंहारं अधर्मफलसंहितम् ।
तदेव फलमन्वेति धर्मश्चाधर्मनाशनः ॥

ந து தர்மோபஸம்ஹாரம் அதர்ம பலஸம்ஹிதம் ।
ததேவ பலமந்வேதி தர்மச்சா தர்மநாசன: ||

ராவணன் ஹனுமானைப் பார்த்து ஆக்ஷேபித்தாவது :

'அனுவச்யமான இந்த உபதேசங்களால் என்ன ப்ரயோஜனம்? நானோ பாபத்தைச் செய்துவிட்டேன். नाभुक्तं क्षीयते कर्म (நாபுக்தம் க்ஷீயதே கர்ம) என்ற ந்யாயத்தை அனுஸரித்து, அந்த கர்ம பலத்தை அனுபவித்தே தீரவேண்டும். ஆகையால் உன் உப தேசத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை' என்று ராவணன் உத் தண்டமாகச் சொல்லியதற்கு, ஆஞ்ஜநேயஸ்வாமியானவர் மேற் கண்ட ச்லோகத்தால் ஸமாதானம் சொல்கிறார்.

नतु धर्मोपसंहारं (நது தர்மோகஸ்ம்ஹாரம்) என்ற வாக்யத்தி லுள்ள तु (து) சப்தமானது ராவணனுடைய ஆசங்கையை நிவர்த்தி செய்ய ஏற்பட்டது, தர்மோபஸம்ஹாரம் என்ற பதத் திற்கு தர்ம பலமான ஸுகம் என்ற அர்த்தத்தை க்ரஹித்துக் கொள்ளவேண்டும்.

धर्मः उपसंह्रियते अनेन इति (தர்ம: உபஸம்ஹ்ரியதேஅநேந இதி) என்ற ஸமாஸத்தால், தான் செய்த தர்மத்திற்கு உபக்ஷயத் தைச் செய்கிற பலமானது சொல்லப்படுகிறது. பலத்தின் உபயோ கத்தால்தான் ஸாதனத்திற்கு உபக்ஷயம் ஏற்படும், தர்மத்தினு டைய பலன் ஸுகமானதால், ஸுகத்தை அனுபவிக்க அனுபவிக்க புண்ய கர்மாக்களுக்கு க்ஷயம் ஏற்படுகிறது என்பதும் வித்வான் களுடைய அனுபவ ஸித்தம். வித்வாண்களே விஷய ஸுகத்தை விரும்பமாட்டார்கள். இந்த ஸுகத்தை நாம் விரும்பினால் ஜன் மாந்தரத்தில் செய்த ஸுக்ருதங்களுக்கு நாசம் வந்துவிடுமே என் பதுதான் அவர்களுடைய அபிப்ராயமாகும்' ப்ராக்ருத ஜனங்கள் ஸுகத்தை விரும்புவார்கள். அதற்கும் இந்த ஸுகத்தை அனுப வித்துவிட்டால், புண்ய கர்மாவிற்கு க்ஷயம் ஏற்பட்டுவிடுமே என்பதை அறியாமலிருப்பதே காரணமாகும். எவ்விதத்திலும் பலானுபவத்தால் ஸாதனத்திற்கு க்ஷயமென்றே ஒப்புக்கொள்ள வேண்டும், ஸுகானுபவத்தால் தர்மத்திற்கு க்ஷயமும், துக்கானு பவத்தால் அதர்மத்திற்குக்ஷயமும் ஏற்படுகிறது. இந்தநுட்பத்தை

ப்ரகாசப்படுத்தத்தான் தர்ம பலமான ஸுகம் என்று சொல்ல வேண்டிய இடத்தில் தர்மத்திற்கு உபஸம்ஹாரம், அதாவது நாசம் எதனுலேயோ அது என்று பொதுவாகக் குறிப்பிட்டிருக்கிறுர். அதனுல் தர்மோபஸம்ஹாரம் என்ற பதமானது பெரிதாக இருப்பதால், அர்த்தமும் வளருமோ என்ற! சங்கை வேண்டாம். அந்த பதத்திற்கும் ஸுகம் என்றுதான் அர்த்தமாகும். அதனுல் தர்ம பலனுகிற ஸுகம் அதர்மத்தின் பலமாகிற துக்கத்தோடு சேர்ந்து ஒரு மனிதனிடத்தில் இராது, தர்ம பலமாகிய ஸுகத்தோடு மற்ருெரு தர்ம பலமாகிற ஸுகம்தான் சேருமன்னியில் அதர்ம பலனுகிற துக்கம் சேராது.

ஒரு மனிதன் ராஜ பதவியைத் தான் அடைவதற்குக் காரணமான புண்ய கர்மாக்களை ஜன்மாந்தரங்களில் செய்து, அந்த பெருமையினுல் இந்த ஜன்மாவில் தான் ஸார்வபௌம பதவியில் இருந்துகொண்டு. மானுஷானந்தத்தை அனுபவித்து வருகிருன். அத்துடன் அவன் சிறந்த வித்வானுயும் இருந்துவருகிருன். இதற்கு உதாஹரணமாக, விக்ரமாதித்தன், போஜ மஹாராஜாமுதலானவர்களைப் பார்த்துக்கொள்ளலாம்.

சென்ற ஜன்மாக்களில் செய்த புண்ய கர்மாவினுடைய பலமாகிய ராஜ்ய ஸுகமானது: அதுபோலவே சென்ற ஜன்மாக்களில் செய்த புண்ய கர்மாவினுடைய பலமாகிற வித்யா ஸுகத்துடன் சேர்ந்து இருந்துவருகிறதன்னியில், புண்ய பலமானது பாப பலத்தோடு சேர்ந்திராது.

ஆனுல், ஸீதாபஹாரம் முதலான அதர்மம், துக்கம் என்ற பலத்தை, ராவணனிடத்தில் இந்தநிமிஷமோ, அடுத்த நிமிஷமோ கொடுக்க ஸித்தமாக இருக்கும்போது ராவணன் துக்கத்தை அனுபவித்துத்தான் ஆகவேண்டும்.

ஹநுமான் சொல்லியபடி मन्यस्व नरदेवाय जानकी प्रतिदीयतां (மந்யஸ்வ நரதேவாய ஜாநகீ ப்ரதிதீயதாம்) என்ற வாக்யப்படிஸ்ரீ ராமனை சரணுகதி அடைந்து, ஸீதாதேவியைத்திருப்பிக்கொடுத்து விடுவது என்ற தர்மத்தால் ஏற்படும் புண்ய பலமான ஸுகம் அதற்குமுன் செய்யப்பட்ட ஸீதாபஹாரமென்ற அதர்மத்தில் பலமான துக்கத்தோடு கூடினதாகத்தானே ஆகவேண்டும் அவ்விதமிருக்கும்போது ஸுகம் ஸுகத்தோடுதான் சேரும்

துக்கத்துடன் சேராது என்ற சங்கையை நிவர்த்தி செய்யத்தான் **धर्मश्च अधर्मनाशनः** (தர்மச்ச அதர்மநாசந:) என்ற வாக்யம் ஏற்பட்டது. இந்த வாக்யத்திலுள்ள ச காரமானது மேற்கண்ட சங்கையை நிவர்த்தி செய்வதற்காகவே ஏற்பட்டது. ''ராவணா! தர்ம பலனான ஸுகம், அதர்ம பலனான துக்கத்தோடு சேர்ந்து விடும் என்ற எண்ணமே உனக்கு வேண்டாம். நான் உபதேசித்த படி, ஸீதா ப்ரதான பூர்வகமாக நீ செய்யும் ராம விஷயக சரணாகதி ரூபமான தர்மம், அதற்கு முன்பாக உன்னால் செய்யப்பட்ட ஸீதாபஹார ரூபமான அதர்மத்தை நாசம் செய்துவிடும். அதர்மத்திற்கு தர்மமானது விரோதியாகும்: தர்மமானது விழித்துக் கொண்டிருக்கும் காலத்தில், அதர்ம வார்த்தையே ஏற்படாது.''

**धर्मेण पापं अपनुपति** (தர்மேண பாபம் அபநுததி) என்ற சாஸ்த்ரமே அதில் ப்ரமாணமாகும். ச்ருதியினால், தர்மமானது அதர்மத்தை நசிக்கச் செய்யும் லன்பது தெளிவாகிறது. தர்மம் தான் அதர்மத்தை நாசம் செய்யும் என்ல நியமமென்ன? அதர்மம் தர்மத்தை நாசம் செய்துவிடக்கூடதா? என்ற சங்கையும் வேண்டாம் என்பதை ப்ரகாசப்படுத்தவும் **धर्मश्च अधर्मनाशनः** (தர்மச்ச அதர்ம நாசந:) என்ற வாக்யம் ஏற்பட்டது. இந்த பர்யாயத்தில் **च** (ச) என்ற பதமானது **एव** (ஏவ) என்ற அர்த்தத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. தர்மம்தான் அதர்மத்தை நசிக்கச் செய்யுமே யன்னியில், அதர்மம் தர்மத்தை நசிக்கச் செய்யாது என்பதே அதனால் வெளியாகிறது. **धर्मेण मापं अपनुदति** (தர்மேண பாபம் அபநுததி) என்ற ச்ருதியானது. அதர்மத்தை தர்மம் நசிக்கச் செய்கிறது என்பதில் ப்ரமாணமாகுவது போல், அதர்மமானது தர்மத்தை நசிக்கச் செய்யும் என்பதில் ப்ரமாண வாக்யமே ஒன்றுமில்லை,

ஆகையால், ''ஸீதா ப்ரதானபூர்வக ராம விஷயக சரணாகதி ரூபமான பரம தர்மமானது' ஸீதாபஹார ரூபமான உன்னுடைய அதர்மத்தை நசிக்கச் செய்துவிடுமானதினால், உடன் அப்பேர்ப் பட்ட தர்மத்தை நீ அனுஷ்டானம் செய்து பரம ஸௌக்யத்தை அடையலாம் என்பதை உனக்குத் தெரிவிக்கத்தான் உன்னுடைய ஸமீபத்திற்கு நான் நேரிரில் வந்து சேர்ந்தேன்'' என்று ஆஞ்ஜனேய ஸ்வாதுயானவர் ஹிதோபதேசம் செய்தார்.

அதைக் கேட்ட பிற்பாடும் ராவணன் சங்கித்தாவது :

''ஹே ஹனுமந்! தர்மமானது அதர்மத்தை நாசம் செய்து விடுமானல், ஸீதாபஹாரத்திற்கு முன் நான் செய்திருக்கும் புண்ய கர்மாக்களினுல் ஸித்தித்திருக்கும் தர்மங்கள் இவ்வளவென்று கணக்கிட முடியாது, அந்த தர்மங்கள் ஸீதாபஹாரம் என்ற அதர்மத்திற்கு வெகு காலத்திற்கு முன்னுல் செய்து முடிந்ததால் மிகவும் ப்ரரூடமாகிவிட்டது. அந்த தர்ம ஸமூஹமோ அதற்கு எவ்வளவோ காலத்திற்குப் பிறகு ஸம்பவித்த ஸீதாபஹார ரூப மான அதர்மத்தை நாசம் செய்துவிடுமல்லவா? அப்படியிருக்கும் போது, ஸீதாப்ரதான பூர்வக ராமவிஷயக சரணுகதி ரூபமான தர்மத்தைப் புதிதாக இப்போது நான் எதற்காக அனுஷ்டிக்க வேண்டும்'' என்று ராவணன் மிகவும் சங்கிக்க, அதற்கும் ஆஞ்ஜ னேய ஸ்வாமியானவர் பதில் சொல்கிருர்.

**प्राप्तं धर्मफलं तावत् भवता नात्र संशयः** (ப்ராப்தம் தர்மபலம் தாவத் பவதா நாத்ர ஸம்சய:) என்று சொன்னுர்.

''ராஜனே! தாங்கள் ஜனித்த காலத்திலிருந்து செய்துவந்த புண்ய கர்மாக்களை ஆயிரம் தலைபடைத்த ஆதிசேஷனும் வர்ணிக்க முடியாது. கோடிக்கணக்கான தபஸ்ஸைச் செய்திருக்கிறீர்கள். தங்களைப் போல் இந்த்ரிய நிக்ரஹம் செய்தவர்கள் உண்டா? அத் யுக்ரமான தபஸ்ஸைச் செய்தவர்கள்தான் உண்டா? ஸாங்கமாக ஸமஸ்தான வேதத்தையும் அத்யயனம் செய்து, பூர்வோத்தர காண்டங்களுடைய அர்த்தத்தையும் குருமுகமாக நன்ருக அறிந்து வேதத்தில் கூறிய அக்னிஹோத்ரம் முதலான ச்ரௌதகர்மாக்களை ச்ரத்தா பக்தி புரஸ்ஸரமாக அனுஷ்டித்த மஹானுபாவன் இவ்வுல கில் தாங்கள் ஒருவனே என்பதிலும் ஸந்தேஹமில்லை. அந்த புண்யங்களை நினைத்தால், இந்த ஸீதாபஹாரம் என்ற பாபத்தை ஒரு பாபம் என்லே சொல்ல ந்யாயமில்லைதான். இந்த புண்ய கர்மாக்களெல்லாம் இப்போது வர்த்தமான காலத்தில் இருந்தால் நானும் உதாஸீனமாகப் போய்விடுவேன். அந்த புண்ய கர்மாக் களுக்குள் லேசலேசங்கூட இப்போது தங்களுக்கு மிச்சமில்லாமல் செலவாகிவிட்டது. சூரனுன தாங்கள், யுத்தத்தில் ஸ்ரீ ராம லக்ஷ்மணனை ஜயித்து ஸீதையை அபஹாரம் செய்துகொண்டு வந்திருந்தால், முன்பு செய்த புண்ய கர்மாக்கள் அழியாமல் இருக்கின்றன என்று நம்பலாம்.

शूरस्य अशौर्य प्रवृत्या सर्वं धर्मफलं क्षीणं भवति (சூரஸ்ய அசௌர்ய ப்ரவ்ருத்யா ஸர்வம் தர்மபலம் க்ஷீணம் பவதி) என்ற ஸ்ம்ருதியை அனுஸரித்து, சௌர்ய (திருட்டு) வ்ருத்தியை அவலம்பித்து ஸீதா தேவியைத் தாங்கள் அபஹரித்ததினுல் தாங்கள் செய்த ஸகல புண்யமும் அழிந்துவிட்டது. ஸீதாபஹாரம் என்ற பாபத்திலிருந்து தங்களை ரக்ஷித்துக்கொள்ள புண்ய விசேஷமே தங்களிடம் இல்லை. அதில் கொஞ்சமேனும் ஸந்தேஹம் வேண்டாம். இந்த ப்ரக்ருத பாபத்திலிருந்தும் தாங்கள் ஜீவித்திருக்கவேண்டுமானுல், புதிதாக ஒரு புண்ய கர்மாவை அனுஷ்டிக்கத்தான் வேண்டும். அவ்விதம் அனுஷ்டிக்கப்போகும் புண்ய கர்மாவும் ஸீதாபஹாரம் என்ற பாபத்தின் பலமாகிய மரண துக்கத்தைத் தங்களிடம் அண்டாமல் செய்யக்கூடிய புண்ய விசேஷமாக இருக்க வேண்டும். அந்த புண்ய விசேஷமோ, நான் உபதேசித்தபடி ஸீதா ப்ரதானபூர்வக ராம விஷயக சரணுகதி ரூபமான தர்மானுஷ்டானம்தான் ஆகும். வேறு எந்த புண்ய கர்மாவும் உன்னை இந்த ஆபத்திலிருந்தும் ரக்ஷிக்காது. ஆகையால் உடன் ஸ்ரீ ராமனிடம் ஸீதாதேவியை ஒப்புவித்து சரணுகதி அடைந்தே தீர வேண்டும்'' என்று உபதேசித்தார்.

இதைக் கேட்ட ராவணன், மறுபடியும் ''ஹே ஆஞ்ஜனேயரே! பாபத்தைச் செய்தவனுக்கு உடனே அந்தப் பலனைக் கொடுத்துவிடுகிறதா? தேச, கால, நிமித்தத்தை அபேக்ஷித்துத் தானே காலாந்த்ரத்தில் பலனைக் கொடுக்கவேண்டும். அந்த பல காலம் என் ஸமீபம் வரும்போது நான் ஸரியான உபாயத்தைப் பற்றி போஜித்துக்கொள்கிறேன். நீர் ஒன்றும் சொல்ல வேண்டாம்'' என்று ராவணன் சொன்னுன்.

அதற்கு ஆஞ்ஜநேயஸ்வாமியானவர், ''फलमस्याप्यधर्मस्य क्षिप्रमेव प्रपत्स्यसे (பலமஸ்யாப்யதர்மஸ்ய க்ஷிப்ரமேவ ப்ரபத்ஸ்யஸே) என்பதினுல், ''ஹே ராவணு! ஸீதாபஹாரம் என்ற மஹத்தான பாபபலமான மரண துக்கத்தை நீ அனுபவிப்பதற்கு பாவியாக வரப்போகிற தேச, கால, நிமித்தம் ஒன்றையும் அபேக்ஷிக்க வேண்டாம். இப்போதே ஸமீபத்தில் ஸித்தித்திருக்கிறது. அதன், நிமித்த காரணமாக வந்திருப்பது நான்தான்.

अत्युत्कटैः पुण्यपापैः इहैव फलं उज्यते (அத்யுத்கடை: புண்யபாபை: இஹைவ பலம் உச்யதே) என்ற ந்யாயத்தை நீ கேட்டதில்லையா?

உத்கடமான (உக்ர) பாபத்திற்கு, தேச, கால, நிமித்த அபே க்ஷையே. கிடையாது. பாபத்தைச் செய்த தேசமே பாபத்தி னுடைய பலத்தைக் கொடுக்கும் தேசமாகும். பாபத்தைச் செய்த காலமும் பாபத்தின் பலனைக் கொடுக்கக்கூடிய காலமாகும். பாபத்தைச் செய்த நிமித்தமே பாபத்தின் பலத்தை உடனே கொடுப்பதற்கும் நிமித்தமாகும்.

பொதுவாக பரதாராபஹாரம் என்பதே அத்யுத்கடமான பாபமாகும். லோக மாதாவான மஹாலக்ஷ்மி தேவியை, ஸ்ரீராக வனையும், லக்ஷ்மணஸ்வாமியையும் வஞ்சித்து' அவர்களில்லாத போது ஆச்ரமத்திற்கு வந்து, கபட ஸன்யாஸியாகி, அபஹாரம் செய்துவந்த மஹா பாபிக்கு, தேசம், காலம், நிமித்தம் இவைகளை எதற்கு அபேக்ஷிக்கவேண்டும். ஆகையால், உடன் நீ மரண துக் கத்தை அனுபவித்தே தீருவாய். ஆகையால் இப்போதாவது என் வார்த்தைகளை ஹிதமான உபதேசமாக க்ரஹித்துக்கொண்டு உடன் ஸீதா ப்ரதானபூர்வக ராம விஷயக சரணுகதி என்ற தர் மத்தை அனுஷ்டிக்கக் கடமைப்பட்டவனுக ஆகிருய்'' என்று ஆஞ்ஜனேயர் சொன்னுர்,

அதற்கு ராவணன் பதில் சொன்னதாவது :

''தர்மத்தை நான் அனுஷ்டித்துத்தான் ஆகவேண்டும் என்பது வேண்டாம். நான் செய்த ஸீதாபஹாரம் என்ற அதர்மத்தினு டைய பலமானது உண்முகமாக பலன் கொடுக்கிறதாக ஆகட்டும். அதை ஜயிக்க எனக்கு வழி ஏற்படும்.''

இவ்விதம் ஹடமான (ஸாஹஸமான) மார்க்கத்தையே அவ லம்பிக்கும் ராவணனுக்கு ஹிதோபதேசத்தால் யாதொரு பயனு மல்ல, தண்டோபாயம்தான் மேலானது என்று நினைத்து, ஆஞ்ஜ னேய ஸ்வாமியானவர் பராக்ரமத்தை அவலம்பித்தே பேசுகிருர்.

''ஜனஸ்தானத்தில் 14000 ராக்ஷஸர்களோடுகூட கரன், தூஷ ணன், த்ரிசிரஸ் என்ற மஹா பராக்ரமசாலிகளான ராக்ஷஸர்களை ஸ்ரீராமன் ஏகாகியாகவே நின்றுகொண்டு, ஒரே முஹூர்த்தித்தில் ஸம்ஹாரம் செய்த வ்ருத்தாந்தத்தையும், மஹா பராக்ரமசாலி யான வாலியை (வானர ராஜனை) ஒரே பாணத்தால் கொன்ற விசேஷத்தையும். அநேக கோடிக்கணக்கான வானர ஸேனைகளுக் கும் ராக்ஷஸ ஸேனைகளுக்கும் ஆதிபத்யத்தை வஹித்துக்கொண்டு கிஷ்கிந்தா ராஜ்யத்திற்கு அரசனுக விளங்கிவரும் ஸுக்ரீவனுக்கும்

ஸ்ரீ ராமனுக்கும் அக்னி ஸாக்ஷிகமாக ஏற்பட்ட ஸக்யத்தையும் நினைத்துப் பார்த்து, எவ்விதம் நடந்துகொண்டால் நீ ஜிவிக்க லாமோ அவ்விதம் நீ நடந்துகொள்ளலாம். உன்னுடைய ரத, கஜ, துரக, பதாதி என்ற நான்குவிதமான ஸேனு பலத்தோடு லங்கா நகரத்தையே அடியோடு நாசம் செய்வதில் நான் ஒருவனே போதும் எனக்கு அன்யர்களுடைய ஸஹாயம் வேண்டாம், ஆகி லும் ஸ்ரீ ராகவனுடைய ஆக்ஞை எனக்கு அவ்விதம் ஏற்படவில்லை ஆகையால்தான் நான் இவ்விதம் உதாஸீனமாக இருந்து வருகி றேன். உன்னைப் போலொத்த எந்த பாபிகள் ஸீதாதேவியை அபஹரித்தார்களோ, அவர்களைத் தானே கொன்றுவிடவேண்டு மென்று ஸ்ரீ ராமன் ஸங்கல்பம் செய்திருக்கிறுர். ஸ்ரீ ராமன் ஸத்ய ஸங்கல்பனுனதால். அநேக வானரகோடிகளுடைய மத்தியில் ஸீதாதேவியை அபஹரித்து வந்த சத்ருவை வதம் செய்யவும் போகிறுர், ராமனுக்கு அப்ரியத்தைச் செய்தவன் இந்த்ரனுனுலும் ஸுகத்தை அடைய முடியாது. பரம பாபியான உன்னைப் போலொத்த ராக்ஷஸன் ஸ்ரீ ராமனுக்கு அப்ரியத்தைச் செய்து விட்டு எப்படி ஸுகத்தை அடையமுடியும்? எந்த ஸீதையை நீஅப ஹரித்துக்கொண்டு வந்தாயோ, அவளை நீ காளராத்ரீ என்றே அறியவேண்டும். உன்னுடைய லங்கா நகரத்தைச் சாம்பலாகச் செய்யவே ஏற்பட்ட ஒரு தேவதை அவள். ஸீதாதேவியினுடைய விக்ரஹம்போல் உருவத்தை எடுத்துக்கொண்டு காலபாசமே,அதா வது யம தர்மராஜனுடைய பாசக்கயிறே உன் கழுத்தில் சுறுக்கு மாட்டி இழுக்கத் தயாராக இருந்து வருகிறது, எப்படிச் செய்தால் நமக்கு நன்மை ஏற்படும் என்பதை சீக்ரமாக ஆலோஜித்துக்கொள் ஸீதையினுடைய தேஜஸ்ஸே லங்கா நகரத்தை எறித்துவிடும். அதற்கு ராமகோபமும் அனுகூலமாக ஏற்பட்டுவிட்டால், நீ எப்படித்தான் பிழைக்கமுடியுமோ! அதிசீக்ரத்தில் லங்கா நகரம் எறிந்துபோவதைப் பார்க்கப்போகிருய். உன்னுடைய ஸ்நேஹிதர்கள், மந்த்ரிகள், ஞாதிகள், ப்ராதாக்கள், பிள்ளை கள், இவர்களையும் பஸ்மீபூதாளாகவே பார்க்கப்போகிருய். திவ்யமான போக்ய வர்க்கங்களையும் தாரங்களையும், லங்கா நக ரத்தையும் நாசம் செய்யவேண்டாம்.நானே ராமதூதன் அதிலும் ஒரு வானரன், என்னுடைய வார்த்தை ஸத்யமாகவே நடக்கும், உனக்கு ஹிதத்தைத்தான் சொல்கிறேன். நீ ஸ்ரீ ராமனை ஏதோ ப்ராக்ருத புருஷன் என்று நினைக்கவேண்டாம், ஸகலமான இந்த ஜகத்தை, நினைத்த மாத்திரத்தில்ஸம்ஹாரம் செய்துவிட்டுஉடனே

ஸ்ருஷ்டிக்கவும் சக்தியுள்ள மஹா ப்ரபு என்றே நினைக்கவேண்டும். மஹா யசஸ்வியும் ராமனே. தேவாளுக்குள்ளோ, அஸுராளுக்குள்ளோ, ராஜாக்களுக்குள்ளோ, யக்ஷாளுக்குள்ளோ, ராக்ஷஸர்களுக்குள்ளோ, வித்யாதரர்களுக்குள்ளோ' பக்ஷிகளுக்குள்ளோ, ஸர்வ பூதங்களுக்குள்ளும், ஸகல காலத்திலும், ராமனுக்கு எதிரியாக நிற்கக்கூடிய ப்ராணியே கிடையாது என்று நிச்சயமாகச் சொல்வேன். மஹாவிஷ்ணுவிற்கு ஸமானமான பராக்ரமத்தோடு கூடியவன் ஸ்ரீ ராமன் என்று நீ அறிந்துகொள். ஸர்வ லோகத்திற்கும் ஈச்வரனும், ராஜச்ரேஷ்டனும் விளங்கிவரும் ஸ்ரீ ராமனுக்கு நீ அப்ரியத்தைச் செய்ததனுல் உன்னுடைய ஜீவிதமும் துர்லபமாகத்தான் ஆகப்போகிறது.

देवाश्च दैत्याश्च निशाचरेन्द्र
गन्धर्वविद्याधरनागयक्षाः ।
रामस्य लोकत्रयनायकस्य
स्थातुं न शक्ताः समरेषु सर्वे ॥

தேவாச்ச தைத்யாச்ச நிசாசரேந்ர
கந்தர்வ வித்யாதர நாகயக்ஷா:।
ராமஸ்ய லோகத்ரயநாயகஸ்ய
ஸ்தாதும் நசக்தா: ஸமரேஷு ஸர்வே ||

தேவர்களோ, அசுரர்களோ, கந்தர்வர்கள், வித்யாதராள், நாகாள், யக்ஷாள் முதலானவர்களோ, மூன்று லோகங்களுக்கும் நாயகனுன ராமனுடைய ஸந்நிதியில் எவராலும் ஸரி, யுத்தத்தில் எதிரியாக நிற்க சக்தியுள்ளவர்களாக ஆக மாட்டார்கள். ஆகையால் எவர்களுடைய தயவை நீ எதிர்பார்த்தும், ஸ்ரீராமாபராதத்தைச் செய்துவிட்டு, உன் ஆத்மாவை நீ ரக்ஷித்துக்கொள்வது துர்லபம்தான்.

ब्रह्मा स्वयम्भूश्चतुराननो वा
रुद्रस्त्रिनेत्रस्त्रिपुरान्तको वा ।
इन्द्रो महेन्द्रः सुरनायको वा
त्रातुं नशक्ता युधि रामवध्यम् ॥

ப்ரம்மா ஸ்வயம்பூ: சதுராநநோ வா
ருத்ர: த்ரிநேத்ர: த்ரிபுராந்தகோ வா।
இந்த்ரோ மஹேந்த்ர: ஸுரநாயகோ வா
த்ராதும் நசக்தா யுதிராமவத்யம்॥

ஸாமான்ய தேவர்கள் உன்னை ரக்ஷிக்க முடியாதபோனுலும், நிரவதிகமான ஐச்வர்யத்தோடுகூடின இந்த்ரன, ருத்ரன், ப்ரம்மா முதலானவர்கள் ராம வத்யனுன உன்னை ரக்ஷித்துவிடுவார்களோ என்ற ப்ராந்தியும் உனக்கு வேண்டாம்.

இந்த ச்லோகத்தில், ப்ரம்மா, ருத்ரன், இந்த்ரன் என்ற க்ரமம் பாடத்தால் ஏற்பட்டாலும். இந்த்ரன், ருத்ரன், ப்ரம்மா என்ற ப்ரமத்தை அர்த்தத்தால் ஸ்வீகரித்துக்கொள்ளவேண்டும். இந்த்ரனைக் காட்டிலும் ருத்ரனுக்கு ப்ரகர்ஷமும், ருத்ரனைக் காட்டிலும் ப்ரம்மாவிற்கு ப்ரகர்ஷமும் ந்யாயமாக ஏற்படவேண்டு மாதலால், பாட க்ரமத்தை அனுஸரித்து க்ரமத்தைஸ்வீகரித்தால் மேலானவர்கள் கீழானவர்களாயும், கீழானவர்கள் மேலானவர் ளாயும் சொல்லப்பட்டதாக ஆகிவிடுவார்கள். அது ப்ரகர்ஷத்வம் என்பதற்கு ஹானியைச் செய்துவிடுவதாக ஆகிவிடும். அதுவராம விருக்கவேண்டி. அர்த்த க்ரமப்படி க்ரம்த்தை அனுஸரிக்க வேண்டும். அப்படியானுல் இந்த்ரனை முதலில் க்ரஹித்துக் கொள்ளவேண்டும். इति परमैश्वर्ये (இதி பரமைச்வர்யே) என்ற தாதுவினுல், த்ரிலோக ராஜ்யஸ்ரீ ஸம்பன்னன் தேவராஜன் என் பதை க்ரஹித்துக்கொள்ள வேண்டும். த்ரிலோகாதிபதியான இந்த்ரனும், ராமவத்யனுன உன்னை ரக்ஷிக்கமுடியாது என்றே அதன் தாத்பர்யமாகும்.

தேவேந்ரன் த்ரிலோகாதிபதியானுலும், சத்ருவை நிரஸனம் செய்ய சக்தியில்லாதவனுனதால், இந்த்ரனை ஆச்ரயித்தாலும் ப்ரயோஜனப்படாது என்பது மாத்ரமல்ல. இந்த்ரனுக்கு ப்ரபல சத்ருவையும் நிரஸனம் செய்யக்கூடிய சக்தியுண்டு என்பதை महेन्द्रः (மஹேந்த்ர:) என்ற விசேஷணமானது ப்ரகாசப்படுத்து கிறது.

योऽवृतं अवधीत् तन्महेन्द्रस्य महेन्द्रत्वं (யோவ்ருத்தம்அவதீத்தந் மஹேந்த்ரஸ்யமஹேந்த்ரத்வம்) என்றச்ரௌதமான நிர்வசனத்தை அனுஸரித்து, ப்ரபலமான வ்ருத்ராஸுரனையும் கொன்றுவிட்ட

சக்தியினால் மஹேந்த்ரன் என்ற நாமாவை அடைந்த இந்த்ரனுக்கு சத்ருக்களைக் கொல்லும் சக்தி இல்லை என்று சொல்லமுடியுமா? நிச்சயமாக சக்தி உண்டு. அவ்விதம் மஹேந்த்ரன் என்ற அந்வர்த்த நாமாவுடன்கூடின த்ரிலோகாதிபதியான இந்த்ரனும் ராம வத்யனான உன்னை ரக்ஷிக்க முடியாது.

இந்த்ரன் த்ரிலோகபதிதான். வ்ருத்ராஸுரனைக் கொன்று விட்டு மஹேந்த்ரன் என்ற அந்வர்த்த நாமாவுடன் கூடினவன் தான். ஆகிலும் ஸஹாய ஸம்பத்தி இல்லாததினால் ராம வத்யனை ரக்ஷிப்பதில் அசக்தனாகிவிடுகிறான் என்பதுமில்லை இந்த்ரனுக்குள்ள ஸஹாய ஸம்பத்தியைப்போல் மற்ற எவருக்கும் ஸஹாயஸம்பத்தி கிடையாது. தனக்கு ஸமானமான பல பராக்ரமத்தோடு கூடின 33 கோடி தேவர்களுக்கும் நாயகனாக ஆகிறான், இதை ஸுரநாயக என்ற விசேஷணம் ப்ரகாசப்படுத்துகிறது.

இவ்விதம் ஸுரநாயகத்வம், மஹேந்த்ரத்வம், த்ரிலோகாதி பத்யம் என்ற விசேணங்களோடு கூடின தேவராஜனை நீ ஆச்ரயித் தாலும், ராமாபாரதத்திலிருந்தும் விமுக்தனாக ஆகமுடியாது. இவ் விதமான தேவராஜனுக்கும், ராமவத்யனானஉன்னை ரக்ஷித்துவிடும் சக்தியே இல்லையென்று நான் நிச்சயமாகச் சொல்கிறேன்.

ஆனால் 'இந்த்ரன் க்ஷுத்ர தேவதையில் சேர்ந்துவிட்டவன். அவனை நான் ஆச்ரயிக்கப்போவதில்லை. ருத்ரன் மேலான தெய்வம் அந்த ருத்ரனை சரணாகதி செய்து ருத்ரனுடைய ஸஹாயத்தால் ராமாபரதத்திலிருந்தும் விமுக்தனாகலாம் என்று என்னுடைய உத்தேசம்' என்றும் நீ சொல்வது ந்யாயமாகாது. **रुद्रः त्रिनेत्रः त्रिपुरान्तकोवा** (ருத்ர; த்ரிநேத்ர: த்ரிபுரர்ந்தகோவா) என்ற வாக் யத்தால், அதுவும் ஸாத்யமில்லை என்பதை ஹனுமான் தெரிவிக் கிறார்.

ஸம்ஹார காலத்தில், ஸகல ப்ரஜைகளையும் அழச் செய்கிறவ ரானதால், இந்த அர்த்தத்தை ப்ரகாசப்படுத்துகிற **संहारकाले प्रजाः रोदयतीति रुद्रः** (ஸம்ஹாரகலே ப்ரஜா: ரோதயதீதி ருத்ர:) என்ற ஸமாஸத்தால், ஸர்வஸம்ஹார கர்த்தா என்ற மஹிமை சிவ னிடத்தில் போதிக்கப்படுகிறதாக ஆகிறது. இவ்விதமான ஸம்ஹார கர்த்தாவான ருத்ரனும் உன்னை ரக்ஷித்துவிட முடியாது. ஆனால் ருத்ரனுக்கு ஸம்ஹார காலத்தில்தான் ப்ரஜைகளை ஸம்ஹாரம்

செய்யும்படியான சக்தி ஏற்படுமன்னியில், அகாலத்தில் ஒரு விஷயத்திலும் சக்தி இல்லையென்று சொல்லாமோ என்பதும் ஸரியல்ல, எப்போதும் சக்தன்தான் என்பதைக் காண்பிக்க, த்ரிநேத்ர: என்றவிசேஷணமும்ஏற்பட்டிருக்கிறது. निटिलनयन दहन ज्वाला विलोपितमदनोपि (நிடிலநயந தஹநஜ்வாலாவிலோபிதமதநோபி) என்றே அந்த விசேஷணத்தின் தாத்பர்யமாகும். நெற்றிக் கண்ணில் உண்டான அக்னிஜ்வாலையினுல் மன்மதனை எரித்தவன் என்ற பெருமையானது அந்த விசேஷணத்தால் வெளிப்படுத்தப் படுகிறது. நெற்றிக் கண்ணுகிற அக்னிஜ்வாலையினுல் மன்மதனை எரித்தது ஸம்ஹார காலம் இல்லாதகாலத்திலல்லவா? ஆகையால் ஸம்ஹார காலத்தில்தான் ருத்ரன் சக்தன்; மற்ற காலத்தில் அவ்விதம் சக்தனில்லை என்று ருத்ரனைச் சொல்லமுடியாது. எப் போதும், எந்தக் கார்யத்திலும் சக்தன்தான். அவ்வித மஹிமை யுள்ள ருத்ரனும் உன்னை ரக்ஷிக்க முடியாது.

மன்மதனை எரித்தது வாஸ்தவம்தான். அது ஏதோ காக தாளீய ந்யாயம்போல் ஏற்பட்டுவிட்டது. காக்கை உட்கார்ந்த தும் பன்ம் பழம் விழுந்தது என்பதுபோல்தானுகும், அதற்காக அகாலத்திலும் ருக்ரனை சக்தனுக ஒப்புக்கொள்ள முடியாது என்ற சங்கையும் வேண்டாம் என்பதை த்ரிபுராந்தக: என்ற விசேஷண மானது நிவர்த்தி செய்கிறது.

த்ரிபுராஸுரர்களைப்போல் மேலான அஸுரர்கள் யாருமில்லை. அவர்களை எரித்த ப்ரபுவல்லவா பரமேச்வன்! அதை ஸம்ஹார காலத்திலேயா செய்தார்? ஸம்ஹார காலத்திற்குமுன் காலத்தி லல்லவா. ஆகையால் காகதாளீய ந்யாயத்திற்கு அவஸரமே யில்லை. ஒரு தடவை நேர்ந்தால்தான் அந்த ந்யாயம் ப்ரஸரிக்கும் மன்மதனை எரித்திருக்கிருர், த்ரிபுராஸுரர்களையும் எரித்திருக் கிருர் என்று பல தட.வைகளில் பரமேச்வரனுடைய பராக்ரம மானது ப்ரகாசித்திருக்கிறபடியால், காகதாளீய ந்யாயத்திற்கு அவஸரமே இல்லை. இவ்விதம். த்ரிபுராந்தகத்வம், த்ரிநேத்ரத்வம் ருத்ரத்வம் என்பது முதலான வெகு விசேஷணங்களோடு கூடிவ பரமசிவனும் உன்னை ரக்ஷித்துவிடமுடியாது.

சிவன் வேண்டாமே—சிவனுக்கு அப்பாவான ப்ரம்மாவை சரணமடைகிறேன் என்றும் ராவணு நீ உறுமவேண்டாம் என்று ஹனுமான் சொல்கிருர்,

ब्रह्मा स्वयंभूः चतुराननो वा (ப்ரம்மா ஸ்வயம்பூ: சதுராநநோவா) என்ற வாக்யமே ப்ரம்மாவினாலும் முடியாது என்பதை ப்ரகாசப் [illegible] बृंहतीति ब्रह्म (ப்ருஹ்மதீதி ப்ரம்ம) என்பதினால், ருத்ரனுக்கும் பிதாவான ப்ரம்மாவும் உன்னை ரக்ஷிக்க முடியாது. அந்த ப்ரம்மாவும் கர்மவச்யனானதால், ரக்ஷிக்க சக்தியில்லை என்ற ஸந்தேஹத்தை நிவர்த்தி செய்ய ஸ்வயம்பூ: என்ற விசேஷணம் ஏற்பட்டது.

ப்ரம்மாவானவர் கர்ம வச்யனானாலும், மற்ற ஜீவனைப்போல் தாய்தந்தையர்கள் மூலமாக கர்ப்பவாஸ துக்கத்தை அனுபவித்துப் பிறந்தவரல்ல, स्वयमेव भवतीति स्वयंभूः (ஸ்வயமேவ பவதீதி ஸ்வயம்பூ:) என்ற வ்யுத்பத்தியினால், அயோநிஜன் என்பதைக் காட்டுகிறது. ஆகையால் அவர் சக்தனானாலும் ஆகலாம் என்ற சங்கையையும் நீ விட்டுவிட வேண்டும். ப்ரம்மா பெரியவர்தான்: ஸ்வயம்பூதான். ஆகிலும், ஸஹாய ஸம்பத்தி யில்லாததினால், ப்ரம்மாவினால் முடியாதோ என்று நினைக்க வேண்டாம். அவருக்குள்ள ஸஹாய ஸம்பத்தி மற்றவர்களுக்குக் கிடையாதென்பதை சதுராநந: என்ற விசேஷணமானது ப்ரகாசப்படுத்துகிறது. ஏககாலத்தில் நாலு வேதங்களையும் உச்சரிக்கக்கூடிய மாஹாத்ம்யத்தால் மிகவும் மேலானவன் என்ற கௌரவத்தை அடைந்தவர் என்பதைக் காட்டுகிறது. சதுராநநத்வம், ஸ்வயம்பூத்வம், ப்ரம்மத்வம் என்றது முதலான அபூர்வமான விசேஷணங்களோடு கூடிக்கொண்டிருக்கிற ஸமஷ்டி லிங்காபிமானியான ஹிரண்யகர்ப்பனும் ராமவத்யனான உன்னை ரக்ஷிக்க முடியாது.

இவ்விதம், இந்த்ரனோ, ருத்ரனோ, ப்ரம்மாவோ, தனித் தனியாக உன்னை ரக்ஷிக்க முடியாதோ என்று சங்கித்தாலும், மூன்று பேர்களும், ஒரே ஸமயத்தில், ஒன்றாகச் சேர்ந்து வந்தாலும் வரட்டும் அப்போதும் அவர்கள் ராம வத்யனான உன்னை ரக்ஷிக்கவே முடியாது என்ற தாத்பர்யமும் न शक्ताः (ந சக்தா:) என்றதினால் வெளியாகிறது.

स्थानवित् विग्रहस्य च (ஸ்தானவித் விக்ரஹஸ்ய ச) என்பதினால், தண்ட ப்ரயோகத்தைச் செலுத்த பாத்ரத்தை அறிந்தவன், வதார்ஹனான உன்னை யார்தான் ரக்ஷிக்க முன்வருவார்கள். யுத்தத்தில் ரக்ஷிக்க முடியாது என்று சொன்னதினால், உன்னை ரக்ஷிப்பதற்காக அவர்கள் மூன்று பேர்களும் ஒன்றுசேர்ந்து ஸ்ரீ ராகவனிடம் சரணாகதி செய்தால் ஒரு ஸமயம் ரக்ஷித்துவிடலாம்

என்றும் த்வனிக்கிறது. உனக்கு பெரியோர்கள் மூன்று பேர்களும் சேர்ந்து சரணாகதி செய்து உன்னை ரக்ஷிப்பதைக் காட்டிலும் நீயே நேரில் ஸ்ரீ ராகவனை சரணாகதி செய்துவிடுவது மேலல்லவா'' என்று ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் உபதேசிக்கின்றார்.

இதனால், हिरण्यगर्भः समवर्तताग्रे (ஹிரண்யகர்ப்ப: ஸமவர்த்ததாக்ரே) என்ற ச்ருதியானது ஹிரண்யகர்ப்பனை ஆதி தேவனாக வர்ணிக்கின்றது. அதுபோலவே, नसन्नासीत् शिव एव केवलः (நஸந்தசாஸீத் சிவ ஏவ கேவல:) என்ற ச்ருதியானது ருத்ரனையும் ஆயர்ந்த தெய்வமாகப் போதிக்கிறது. इन्द्रो मायाभि पुरुरूप ईयते (இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே) என்ற ச்ருதியானது இந்த்ரனையும் பரம தேவதையாகப் போதிக்கின்றது.

மேற்கண்ட ச்ருதிகளில் உத்க்ருஷ்ட தேவதைகளாகப் போதிக்கப்படுகிற இந்த்ரன், ருத்ரன், ப்ரம்மா இவர்களைக் காட்டிலும் ராமனை மேலான தெய்வமாகச் சொல்லியிருப்பதால் ஸ்ரீராமச் சந்த்ர மூர்த்தியே பரப்ரம்மம், உத்க்ருஷ்ட தெய்வம் என்பது ப்ரகாசப்படுத்துகிறது.

இதனால். ஸகல வேதாந்தங்களிலும் போதிக்கப்படும் ஸத். ப்ரம்ம, ஆத்மா என்ற ஸாமான்ய சப்தங்களுக்கும், ஹிரண்யகர்ப்பன், சிவன் இந்த்ரன் என்றது முதலான விசேஷ சப்தங்களுக்கும், ஸ்ரீராமன் என்ற வ்யக்தி விசேஷத்தில் ஸாக்ஷாத்தாகவோ, ப்ரம்புரையாகவோ ஸமன்வயம் செய்துகொண்டு, ஸ்ரீராமமூர்த்திதான் ஸர்வ வேதார்ந்த வேத்யன் என்பது வெளியாகிறது.

ஸர்வ லோகங்களையும் ரக்ஷிக்கும் சக்தியுள்ள ப்ரதான தேவதைகளை நிராகரிக்கின்ற ப்ரகரணத்தில் விஷ்ணுவை நிராகரிக்காமல் இருப்பதினால், அதாவது ராமவத்யனான ராவணனைவிஷ்ணு கூட ரக்ஷிக்கமுடியாது என்று சொல்லாததினால், ஸாக்ஷாத் ராமனே மஹாவிஷ்ணுதான் என்பது ஸித்தமாகிறது. விஷ்ணு பரம் ராமாயணம் என்பதில் யாதொருவித வாதமுமில்லை என்பது ஸித்தமாகிறது.

स सौष्ठवोपेतमदीनवादिनः
कपेर्निशम्याप्रतिमोऽप्रियं वचः ।
दशाननः कोपविवृत्तलोचनः ।
समादिशत्तस्य वधं महाकपेः ॥

ஸ ஸௌஷ்டவோபேதமதீந வாதிந:
கபேர் நிசம்யா ப்ரதிமோ ப்ரியம் வச: ।
தசாநந: கோபவிவ்ருத்தலோசந :
ஸமாதிசத்தஸ்ய வதம் மஹாகபே: ||

ஆஞ்ஜனேயஸ்வாமியானவர், ராக்ஷஸ ராஜனுன ராவணனுக்குச் செய்த உபதேசங்களெல்லாம் அவனுக்குப் பரம ஹிதத்தை கருதியே செய்யப்பட்டது என்பதில் யாராலும் ஆக்ஷேபிக்க முடியாது. அதிலிருந்துமே ஆஞ்ஜனேயருடைய பரோபகார சிந்தையும், ஸர்வஜன ஸம்ரக்ஷண ஸ்வபாவமும், உபதேசம் செய்கிற வார்த்தையினுடைய ஸௌஷ்ட்வமும் (மாதுர்யமும்) அபாரமானதென்பது வெளியாகிறது, இதைப்போல் ஆபந்நர்களான புருஷர்களுக்கு, ஆபத்திலிருந்தும் விமோக்ஷத்தை அடைய ஹிதோபதேசம் செய்கிற புருஷன் மற்ருெருவன் இருக்கிருன் என்றும் சொல்ல முடியாது. ஆகிலும், அந்த உபதேச வார்த்தையும் ஆச்ரய தோஷத்தால் பலிக்காமல் ஆகிவிட்டது என்பது ஆச்சர்யத்தை உண்டுபண்ணுகிறது.

இந்த வார்த்தையைக் கேட்ட ராவணன், பரமப்ரேமையோடு ஹனுமானை மிகவும் ச்லாஹித்துப் பூஜிக்கவேண்டும். ஆனல் அப்படிச் செய்யாமல், ஆஞ்ஜனேயஸ்வாமியை கடும் கோபத்துடன் பார்த்துக்கொண்டு அவரைக் கொல்லும்படி தூதர்களை ஆக்ஞாபித்தான்,

ஆஞ்ஜனேயஸ்வாமிக்கு, துராத்மாவான ராவணனுல் வதமானது ஆக்ஞாபிக்கப்பட்டவுடன், ஸஜ்ஜனங்களுக்குள் அக்ரேஸரராயும், ஸ்ரீ ராமபக்தி பராயணராயுமுள்ள விபீஷணஸ்வாமியானவர், தூத வதமானது தர்ம சாஸ்த்ர விருத்தம் என்பதைத் தீர்மானித்து, அதைத் தான் ஸம்மதிக்காமல், ராவணனையும் அந்த துஷ்க்ருத்யத்திலிருந்தும் விடுதலை செய்துவைக்க எவ்விதம் யத்னம் செய்யலாம் என்று யோஜித்தார். அதன்பிறகு ராக்ஷஸ ராஜனுன ராவணனைப் பார்த்து விபீஷணஸ்வாமியானவர், தூத வதம்

அனுசிதம் என்பதைத் தெரிவிக்க ராஜநீதியை விசதமாக ப்ரகாசம் செய்கிறார்.

क्षमस्व रोषं त्यज राक्षसेन्द्र
प्रसीद मद्वाक्यमिदं शृणुष्व ।
वधं न कुर्वन्ति परावरज्ञा
दूतस्य सन्तो वसुधाधिपेन्द्राः ॥

க்ஷமஸ்வ ரோஷம் த்யஜ ராக்ஷஸேந்த்ர
ப்ரஸீத மத்வாக்யமிதம் ச்ருணுஷ்வ ।
வதம் ந குர்வந்தி பராவரக்ஞா
தூதஸ்ய ஸந்தோ வஸுதாதிபேந்த்ரா: ॥

''ஹே ராஜனே! மனுஷ்யனுக்கு அவச்யம் பொறுமை வேண்டும். கோபத்தை விட்டுவிடுங்கள். ப்ரஸன்னமான முகத்துடன் என் வார்த்தையையும் சற்று கேட்கவேண்டும். த்யாஜ்யம் இன்னது, உபாதேயம் இன்னது என்ற விவேகமானது அரசர்களுக்கு மிகவும் அவச்யமானது. அந்த அரசர்களைத்தான் பராவரக்ஞாள் என்று நீதி சாஸ்த்ரமான்து சொல்கிறது. அவ்விதம் விவேகமுள்ள அரசர்கள் அந்ய ராஜனுடைய தூதனைக் கொல்ல மாட்டார்கள். தூதனிடத்தில் என்ன அபராதத்தைச் சாட்ட முடியும்! தன் ராஜனால் சொல்லப்பட்ட விஷயத்தை அந்ய ராஜாவினிடம் வந்து தெரிவிக்கிறான். தூத வதமானது ராஜதர்மத்திற்கு மிகவும் விருத்தமானது. தங்களைப்போலொத்த மஹான்களுக்கு மிகவும் அழகல்ல. தங்களுடைய தூதனை அந்ய ராஜன் கொன்றுவிட்டால் தங்களுக்கு எவ்விதம் மனோவருத்தம் ஏற்படும் என்பதையும் அறியவேண்டும். இந்த தூதன் திரும்பிப் போய் அந்த ராஜனிடத்தில் இங்கு நடந்த வ்ருத்தாந்தத்தை ஸரிவர சொன்ன பிற்பாடுதானே, அந்த அரசன் நம்முடன் ஸந்திக்கு வருகிறானா, விக்ரஹத்திற்கு வருகிறானா என்பது தெளிவாக ப்ரகாசிக்கும், எப்படி வந்தாலும் அப்போதுதானல்லவா கார்ய ஸமாப்தி ஏற்படும். தாங்களோ தர்ம ஸ்வரூபத்தை நன்றாகத் தெரிந்துகொண்டவர்.

धर्मज्ञश्च कृतज्ञश्च राजधर्मविशारदः ।
परावरज्ञो भूतानां त्वमेव परमार्थवित् ॥

गृह्णन्ते यदि रोषेण त्वादृशोऽपि विपश्चितः ।
ततः शास्त्रविपश्चित्त्वं श्रम एवऽहि केवलम् ॥
तस्मात्प्रसीद शत्रुघ्न राक्षसेन्द्र दुरासद ।
युक्तायुक्तं विनिश्चित्य दूते दण्डो विधीयताम् ॥

தர்மக்ஞச்ச க்ருதக்ஞச்ச ராஜதர்மவிசாரத: ।
பராவரக்ஞோ பூதாநாம் த்வமேவ பராமர்த்தவித் ||
க்ருஹயந்தே யதி ரோஷேண த்வாத்ருசோபி விபச்சித ।
தத: சாஸ்த்ரவிபச்சித்வம் ச்ரம ஏவஹி கேவலம் ||
தஸ்மாத் ப்ரஸீத சத்ருக்ந ராக்ஷஸேந்த்ர துராஸத ।
யுக்தாயுக்தம் விநிச்சித்ய தூதே தண்டோ விதீயதாம் ||

ஹே அண்ணு! தாங்கள் மிகவும் தர்மத்தை அறிந்தவர்கள். மற்ருெருவன் செய்த உபகாரத்தை நன்கு அறிந்தவர். இந்த ஹனுமான் என்ற தூதன் மூலமாக ராமனுடைய வ்ருத்தாந்தம் இன்னது என்பதை அறிந்தோமல்லவா? இந்த தூதன் இல்லா விட்டால் நமக்கு யார் இந்த உபகாரத்தைச் செய்வார்கள்? இந்த உபகாரத்தைச் செய்தவனிடத்தில், க்ருதக்ஞுன தாங்கள் நன்றி யல்லவா பாராட்டவேண்டும்! க்ருதக்னனுடைய பாவத்தைக் காட்டலாமா? ராஜ தர்மங்களை அறிந்தவர்களுள் தங்களைப் போல் அந்யர்களை ஸமான்மாகச் சொல்லமுடியுமா? தூத வதம் ராஜ தர்மமாகுமா? ப்ராணிகளுக்குள், த்யாஜ்யமான விஷயம் இன்னது, உபாதேயமான விஷயம் இன்னது என்பதை அறிந்தவர் தாங்கள் ஒருவரேதான் அல்லவா? பரமார்த்த தத்வம் தங்களைத் தவிர வேறு யாருக்குத் தெரியும்? தங்களைப்போலொத்த மஹா புருஷர்களே, ஆஸ்தானத்தில் சாஸ்த்ர விருத்தமான கார்யத்தில் ப்ரவ்ருத்தித்து கோபத்தை அடைந்தால் ஸம்பாதித்த சாஸ்த்ர ஞானம் வீணுகப் போய்விடுமல்லவா? இவ்விதம் நாம் ப்ரவ்ருத் தித்திருக்கும்போது, நாம் எதற்காக சாஸ்த்ரங்களைப் படித்தோம்?

ஆகையால், தங்களைப்போலொத்த மஹான்கள் அநீதியான மார்க்கத்தில் போகக்கூடாது. தங்களுக்கு எதிரில் யார்தான் நின்றுகொண்டு யுத்தம் செய்யமுடியும்? ஸகல சத்ருக்களையும் அனுயாஸமாக ஜயித்த ப்ரபுவல்லவா தாங்கள்! ஆகையால் அந்ய ராஜனிடமிருந்து இங்கு வந்த தூதனை வதம் செய்வது என்பது உசிதமே இல்லை. யுக்தம் இன்னது, அயுக்தம் இன்னது என்பதை

விசாரித்து, அதை மந்த்ரிகளுடன் கூட மஹா ஸபையில் ப்ரகாசப் படுத்தி, தர்ம சாஸ்த்ர விரோதமில்லாமலும், ப்ரக்ருத கார்யத் திற்கு ஹானி வராமலும், எவ்விதம் அந்ய ராஜனுடைய தூதன் விஷயத்தில் நடந்துகொள்ளவேண்டுமோ, அவ்விதம் தாங்கள் நடந்துகொள்ளவேண்டும் என்பதைத் தாழ்மையுடன் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன், என் விஷயத்தில் தாங்கள் ப்ரஸன்னமாக ஆகவேண்டும்'' என்று விபீஷணஸ்வாமி சொன்னார்.

அதைக்கேட்ட ராவணன், அஸஹ்யமான கோபமேலீட்டால் விபீஷணனுக்குப் பதில் சொல்லுகிறான் :

न पापानां वधे पापं विद्यते शत्रुसूदन ।
तस्मादेनं वधिष्यामि वानरं पापकारिणम् ॥

ந பாபாநாம் வதே பாபம் வித்யதே சத்ருஸூதந ।
தஸ்மாதேநம் வதிஷ்யாமி வாநரம் பாபகாரிணம் ॥

''ஹே தம்பி விபீஷணா! நீ சொல்லும் தர்ம சாஸ்த்ரங்கள் எல்லாம் எனக்கும் தெரியும். இந்த ஹனுமான் கேவலம் தூதன அல்ல. சத்ருவினுடைய கோடியிலேயே சேர்க்கக்கூடியவராக ஆகிறார். ராஜ த்ரோஹம் செய்தவரல்லவா! அக்ஷய்யகுமாரன் முதலான பந்துக்களை வதம் செய்து, அசோக வனத்தையும் அழித்து இவர் செய்த அட்டஹாஸத்தை நீ கொஞ்சமேனும் அறியவில்லையா? ஒரு அரசனுடைய தூதன் மற்றொரு அரசாங் கத்திற்கு, இவர் செய்த அக்ரமம்போல், யாராவது, வேறு எங்கும் செய்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறாயா? தன் ராஜனின் வர லாற்றை, மற்றொரு ராஜனுக்குச் சொல்வது மாத்ரம்தானே தூத னுடைய வேலையாகும். ராஜ த்ரோஹம் செய்த பாபியானதினால் இந்த பாபியை வதம் செய்வதில் கொஞ்சமேனும் சாஸ்த்ர விரோதம் ஏற்படாது. இவனைக் கொன்றவனுக்கு பாபமும் ஏற்படாது'' என்று கர்ஜித்துக்கொண்டு, ஹனுமானைக் கொன்று விடுவதிலேயே உத்யுக்தனாக பரம கோபாவேசத்துடன் ராவணன் இருந்துவந்தான்.

விபீஷணஸ்வாமினால் அந்த துஷ்க்ருத்யத்தை ஸஹிக்க முடியவில்லை. மறுபடியும் ராவணனுக்கு எதிரில் பேசுகிறார்,

ராவணனுடைய வார்த்தைகளெல்லாம் அதர்மத்தை முன் னிட்டும், கோபாவேசத்தால் மூர்க்கர்கள் பேசும் பேச்சாகவும்

ஏற்பட்டது என்பதே விபீஷணஸ்வாமியின் அபிப்ராயமாகும். உண்மையைச் சொன்னால் அண்ணுவான ராவணனும் ஸன்மார்க்கத்தில் திரும்புவானோ என்ற சாபல்யத்தால் சொல்கிறார்.

प्रसीद लंकेश्वर राक्षसेन्द्र
धर्मार्थयुक्तं वचनं शृणुष्व ।
दूतानवध्यान्समयेषु राजन्
सर्वेषु सर्वत्र वदन्ति सन्तः ॥
असंशयं शत्रुरयं प्रवृद्धः
कृतं ह्यनेनाप्रियमप्रमेयम् ।
न दूतवध्यां प्रवदन्ति सन्तो
दूतस्य दृष्टा बहवो हि दण्डाः ॥
वैरूप्यमंगेषु कशाभिघातो
मौण्ड्यं तथा लक्षणसन्निपातः ॥
एतान् हि दूते प्रवदन्ति दण्डान्
वधस्तु दूतस्य न नः श्रुतोऽपि ॥

ப்ரஸீத லங்கேச்வர ராக்ஷஸேந்த்ர
தர்மார்த்தயுக்தம் வசநம் ச்ருணுஷ்வ ।
தூதாநவத்யாந் ஸமயேஷு ராஜந்
ஸர்வேஷு ஸர்வத்ர வதந்தி ஸந்த: ||
அஸம்சயம் சத்ருரயம் ப்ரவ்ருத்த:
க்ருதம் ஹ்யநேநாப்ரியமப்ரமேயம் ।
ந தூதவத்யாம் ப்ரவதந்தி ஸந்த:
தூதஸ்ய த்ருஷ்டா பஹவோ ஹி தண்டா: ||
வைரூப்யமங்கேஷு கசாபிகாத:
மௌண்ட்யம் ததா லக்ஷணஸந்நிபாத: ।
ஏதாந் ஹி தூதே ப்ரவதந்தி தண்டாந்
வதஸ்து தூதஸ்ய ந ந ச்ருதோபி ||

"ஹே அண்ணு! ஹே லங்கேச்வரா! ஹே ராக்ஷஸாதிபதே! கொஞ்சம் அனுக்ரஹம் செய்யவேண்டும். கோபத்தை விட்டுவிட்டு மனதைக் கொஞ்சம் ஸமாதானம் செய்துகொள்ள வேண்டும். தர்ம சாஸ்த்ரம், அர்த்த சாஸ்த்ரம் இந்த இரண்டு சாஸ்த்ரங்களையும் அனுஸரித்துச் சொல்கிற என் வார்த்தையைக்

கொஞ்சம் காதுகொடுத்துக் கேட்கவேண்டும். சாஸ்தர ஞான முள்ள பெரியோர்கள், எல்லா தேசத்திலும் எல்லா ஜாதியிலும் எல்லா ஸந்தர்ப்பத்திலும். அந்ய ராஜனுடைய தூதனைக்கொல்லக் கூடாது என்றுதான் சொல்கிறார்கள். அது ந்யாயம்தான்; ஸம் சயமே இல்லை. இந்தக் குரங்கு நமக்குப் பரம சத்ருதான். இது செய்திருக்கிற அட்டூழியத்தையும், ராஜத்ரோஹத்தையும் கணக் கிடமுடியாது. கொல்லத்தான் வேண்டும், இது செய்திருக்கிற அநீதியைக் கேட்க, எனக்கே ஸஹிக்கவில்லையே! தங்களால் எவ்விதம் ஸஹிக்கமுடியும்? ஆனால், இந்த வானரம் வந்ததோ தூதன் என்ற முறையிலல்லவா! சத்ருவென்ற முறையில் இது வந்திருக்க ந்யாயமில்லை. அப்படியானால் பஹிரங்கமாகவல்லவா முன்பாகவே நமக்குத் தெரிவித்துவிட்டு வரவேண்டும்? ஆகையால் இந்த ஹனுமான் தூதனேதான். செய்த கார்யம் மட்டும் கொஞ்சம் அதிகமாகிவிட்டது. வந்த முறை மட்டும் தூதனுடைய முறையானதால், இவரை வதம் செய்வதில் சாஸ்த்ரம் இடம் கொடுக்கவில்லை.

ஆனால், தண்டித்துத்தான் விடவேண்டும். தாங்கள் பேசாம லிருந்தாலும் நான் தண்டித்துவிடவேண்டுமென்ற எண்ணத்துடன் இருக்கிறேன். தூதர்களுக்கோ வெகு ப்ரகாரமாக சாஸ்த்ரங் களும் தண்டனை விதித்திருக்கின்றன. மஹான்களும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். அதாவது, முக்யமான அங்கத்தைச் சேதனம் செய்துவிடுகிறது. அல்லது குறடாவினால் உயிர்போகும் வரை அடிப்பது, அல்லது தலையை மொட்டையடித்து விடுகிறது. அல்லது கையிலோ, முகத்திலோ, இவன் பரம துஷ்டன் என்பதை வெளிக்குத் தெரியப்படுத்த பச்சை குத்துவது முதலான அடையா ளம் செய்துவிடுவது. இவைகளைத் தவிர, ஒரு அரசனும் மற்ற ஒரு அரசனுடைய தூதனை வதம் செய்தான் என்று காதினால் கூடக் கேட்டதில்லை.

कथं च धर्मार्थविनीतबुद्धिः
परावरप्रत्ययनिश्चितार्थः ।
भवद्विधः कोपवशे हि तिष्ठे
त्कोपं नियच्छन्ति हि सत्ववन्तः ॥
न धर्मवादे न च लोकवृत्ते
न शास्त्रबुद्धिग्रहणेषु चापि ।

विद्ये कश्चित्तव वीरतुल्यः
त्वं ह्युत्तमः सर्वसुरासुराणाम् ॥

கதம் ச தர்மார்த்த விநீதபுத்தி:
பராவரப்ரத்யய நிச்சிதார்த।
பவத்வித: கோபவசேஹி திஷ்டேத்
கோபம் நியச்சந்திஹி ஸத்வவந்த:॥
ந தர்மவாதே ந ச லோக வ்ருத்தே
ந சாஸ்த்ர புத்தி க்ரஹணேஷு சாபி ।
வித்யேத கச்சித் தவவீர துல்ய:
த்வம் ஹ்யுத்தம: ஸர்வஸுராஸுராணும்॥

ஹே அண்ணு! ராஜனே! தர்ம சாஸ்த்ரம், அர்த்த சாஸ்த்ரம் இரண்டிலும் வெகு காலம் குருகுல வாஸம் செய்து, நன்ருக சிக்ஷிக்கப்பட்ட புத்தி கூர்மையுடன் கூடியவர்களல்லவா தாங்கள். உத்க்ருஷ்டமான தத்வம் இன்னது, அபக்ருஷ்டமான தத்வம் இன்னது, இன்ன கார்யத்தைச் செய்தால் லோகம் புகழ்ந்து பேசும். இன்ன கார்யத்தைச் செய்தால் லோகம் நிந்தித்துப் பேசும் என்ற ஞானத்துடன் செய்யவேண்டிய கார்யத்தைத் தீர்மானம் செய்து, தன்னுடைய கீர்த்திக்கு அபிவ்ருத்தியே வரும் படியான கார்யத்தை மட்டும் செய்துவருகிற ப்ரபுவல்லவா தாங்கள். தங்களைப் போலொத்த ப்ரபுக்கள் கொஞ்சமேனும் இப்பேர்ப்பட்ட கோபத்திற்கு வசமாகலாமா? மஹான்கள் கோபத்தை தன் வசத்திலல்லவா வைத்துக்கொள்வார்கள், தர்ம சாத்ஸ்த்ரத்தில் தங்களுக்கு ஸமானமாக மற்ருெருவரை வித்வானுகச் சொல்லமுடியுமா? லௌகீகமான ஆசாரத்திலாகட்டும், தங்களுக்கு ஸமானமாக அறிந்தவர்கள் யாராவது உண்டா? சாஸ்த்ரார்த்தத்தை க்ரஹித்துக்கொள்வதிலோ, மறந்துவிடாமல் தார்யமாக வைத்துக்கொள்வதிலோ, தங்களுக்கு ஸமானமாக தேவாளுக்குள்ளேயோ. அஸுரார்களுக்குள்ளேயோ யார் இருக்கிருர்கள்? இவ்விதம் உயர்ந்த நிலையிலிருக்கும் தாங்கள் கோப பரதந்த்ரனுக ஆகி, அல்ப விஷயத்தில் புத்தியைப் பரிகொடுத்தவனுக ஆகக் கூடாதென்பதை மிகவும் வணக்கத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும், இந்த வானரத்தைக் கொல்வதினுல்நமக்குயாதொரு விதமான லாபமும் கிடையாது. எவர்கள் இந்த வானர

ச்ரேஷ்டனை தூதனாக அனுப்பியிருக்கிறார்களோ அவர்களிடம் தான் நாம் கோபத்தைச் செலுத்தவேண்டும். இந்த வானர ச்ரேஷ்டனுக்கு எவ்விதமான தண்டனையை தாங்கள் விதிக்கிறீர்களோ அந்த தண்டனையை, வானர ச்ரேஷ்டனை தூதனாக இங்கு அனுப்புவித்த அரசர்களிடம் உபயோகம் செய்வது ராஜ நீதிக்கு ஒத்ததாக இருந்துவரும். நாம் இந்த வானரத்தை ஸாதுவா அஸாதுவா என்று விஜாரிக்கவேண்டாம். அந்யர்களால் அனுப்பப்பட்ட தூதராகுவார். இவரோ பரதந்த்ரன், அந்யர்கள் சொல்லியனுப்பிய வார்த்தையை நம்மிடம் தெரிவிக்கிறார். ஆகையால் இந்த வானர ச்ரேஷடனை வதம் செய்வதென்பது ந்யாயமாகாது. 'இந்த வானரத்தைக் கொன்றுவிட்டால் ஆகாச மார்க்கமாக ஸஞ்சரிக்கக்கூடிய மற்றொரு வீரனைப் பார்க்க முடியாது. இந்த அபாரமான ஸமுத்ரத்தைத் தாண்டுவதற்கும் மற்றொருவனால் முடியாது. லங்கா நகரத்திற்குள் ப்ரவேசிக்கவும் மற்றொருவனுக்கும் சக்தியில்லை. ஆகையால் இந்த வானரத்தைக்கொன்று விடத்தான் வேண்டு'மென்று யத்னம் செய்வது தங்களைப் போலொத்த தர்மசீலனான ப்ரபுக்களுக்கு அழகாகவே ஆகாது. இந்த யத்னத்தை இந்த்ரன் முதலான தேவர்களிடம் உபயோகம் செய்தால் நன்றாயிருக்கும்.

अस्मिन्विनष्टे न हि दूतमन्यं
पश्यामि यस्तौ नरराजपुत्रौ ॥
युद्धाय युद्धप्रिय दुर्विनीतौ
उद्योजयेत् दीर्घपथावरुद्धौ ॥

அஸ்மிந்விநஷ்டே ந ஹி தூதமந்யம்
பச்யாமி யஸ்தௌ நரராஜ புத்ரௌ ।
யுத்தாய யுத்தப்ரிய துர்விநீதௌ
உத்யோஜயேத் தீர்க்க பதாவருத்தௌ ॥

ஸ்ரீ ராம லக்ஷ்மணர்களோ, வெகு தூரத்திற்கப்பால் இருந்துவருகிறார்கள். ஆகிலும் இந்த லங்கா நகரத்திற்கு வருவது என்பது அவர்களுக்கு ஸுஸாத்யமான கார்யமேயில்லை. தங்களோடுயுத்தம் செய்யவேண்டுமென்றும், தங்களுடைய பல பராக்ரமத்தை அறிந்துகொள்ளாத காரணத்தால், உத்ஸாஹமுள்ளவராக இருந்து வருகிறார்கள். தாங்கள் சொன்ன வார்த்தையை ராம லக்ஷ்மணர

ளிடம் தெரிவித்து. மறுபடியும் அவர்களால் அனுப்பப்பட்டு இந்த லங்கா நகரம் வந்து அவர்களுடைய அபிப்ராயத்தைத் தங்களிடம் தெரிவித்து, அவர்களுக்கும் தங்களுக்கும் வைரத்தை விருத்தி செய்துவைத்து, இரு கக்ஷிக்காரர்களேயும் சேர்த்து கோர்த்து விட்டு யுத்தம் ஏற்படும்படி செய்யக்கூடிய சக்தியுள்ள மஹானு பாவனுன இவனைத் தவிர வேறொருவனும் ஸாமர்த்யமுள்ளவனுக என்க்குத் தோன்றவில்லை. தங்களுக்கும் ஸ்ரீ ராமனுக்கும் யுத்தம் ஏற்பட்டால், தங்களுக்கு ஜயம் ஏற்படும் என்பதில் ஸந்தேஹமே இல்லை. தேவாஸுரர்களை எல்லாம் ஜயித்த தங்களுக்கு, ஒரு மனிதனுடைய விஷயத்தில் எதற்காக கவலை ஏற்படவேண்டும்? யுத்தத்தில் ராம லக்ஷ்மணனைக் கொன்றுவிட்டு தாங்களேஜயத்தை அடைந்தால், தாங்கள் நிச்சங்கமாக ஸிதையைப் புஜிக்கலா மல்லா? சத்ருவை ஜயிக்காமல். சத்ரு ஜீவித்துக்கொண் டிருக்கும்போதே. தனக்கு அந்த போகத்தில் எவ்விதந்தான் ஸுகம் ஏற்படும்? தாங்கள் எந்த உத்தேசத்துடன் ஸீதாபஹாரம் செய்தீர்களோ, அந்த உத்தேசமானது அஸபத்யமாக நிறைவேற வேண்டுமானல் தங்களுக்கும் ராமனுக்கும் யுத்தம் ஏற்பட்டு யுத்தத்தில் தாங்கள் ராமனை ஜயிப்பதேதான் முக்யமான காரண மாகும். அப்படி யுத்தம் ஏற்படவோ, இந்த வானர ச்ரேஷ்டன் தான் மூலகாரணம். இந்த வான்ரத்தைத் தாங்கள் கொன்றுவிட் டீர்களேயானுல், மேற்சொன்ன அபிப்ராயங்களெல்லாம் எப்படி நிறைவேறும்? அதற்காகவாவது இந்த மஹா புருஷனை உஜ்ஜீவிக் கச் செய்வது நம்முடைய கடமையாகும், இவைகளை நன்ருக பர்யாலோசனை செய்து பார்த்துத்தான் நானும் இந்த ஹனுமானை தூக்கு தண்டனையிலிருந்தும் விமுக்தனுகச் செய்துவைக்க தர்ம ந்யாயங்களை எடுத்துரைத்துக் கதறிவருகிறேன். என்னுடைய உத்தேசத்தை க்ரஹித்துக்கொண்டு ஆஞ்ஜனேயரை விடுதலை செய்துவைத்தால் அதிசீக்ரம் தங்களுடைய மனோரதம் பூர்த்தி யாகிவிடும். அதற்குத்தான் நானும் இவ்வளவு ச்ரமத்தை எடுத்துக்கொள்கிறேன். இந்த வானரத்தைத் தாங்கள் கொன்று விடும்பக்ஷத்தில் லோகாபவாதம் பெரிதாகத் தங்களுக்கு ஏற்பட்டு விடும். இதனுல் தங்களுக்கு ஒருவித யசஸ்ஸும் புதிதாக வரப் போகிறதில்லை: லாபமும் ஏற்படப்போகிறதில்லை. லோகாபவாதம் மட்டும் பெரிதாக ஏற்படும்.

कुरुष्वतावत् परमं प्रयत्नं
धर्मं समासाद्य सुरेन्द्रशत्रो ।
देवेषु सेन्द्रेषु स पावकेषु
दैत्येषु सर्वेषु सदानवेषु ॥
कृत्वा प्रयत्नं सुदृढं सुशीघ्रं
मद्वाक्यमेतत् मनसाऽनुगृह्य ।
तौ राजपुत्रौ विनिगृह्य मूढौ
जयं परं प्राप्स्यसि राक्षसेन्द्र ॥

குருஷ்வதாவத் பரமம் ப்ரயத்நம்
தர்மம் ஸமாஸாத்ய ஸுரேந்த்ரசத்ரோ ।
தேவேஷு ஸேந்த்ரேஷு ஸ பாவகோஷு
தைத்யேஷு ஸர்வேஷு ஸதாநவேஷு ॥
க்ருத்வா ப்ரயத்நம் ஸுத்ருடம் ஸுசீக்ரம்
மத்வாக்யமேதத் மநஸாநுக்ருஹ்ய ।
தௌ ராஜபுத்ரௌ விநிக்ருஹ்ய மூடௌ
ஜயம் பரம் ப்ராப்ஸ்யஸி ராக்ஷஸேந்த்ர ॥

என்றபடி, லோகாபவாதத்திற்கு அவகாசம் கொடுக்காமல், எந்த இந்த்ரன் முதலான தேவர்கள் தங்களை இவ்விதம் ஒழித்துவிடச் செய்வதற்கு மூல காரணமாக ஆகுவார்களோ அவர்களிடம் கோபத்தைச் செலுத்தி அந்த ராம லக்ஷ்மணனையும் நிக்ரஹம் செய்து பரம ஜயத்தைத் தாங்கள் அடைந்துவிட்டால் யசஸ்ஸும் ஏற்படும், லாபமும் உண்டு. தங்களுடைய உத்தேசமும் அஸபத்ஸமாக நிறைவேறும், தங்களுக்கு இருந்து வரும் ஸேனைகளை அளவிற்குட்படுத்த முடியாது. அனைவரும் மஹா பராக்மசாலிகளாயுள்ள ஸேனைகளே. அந்த ஸேனைகளுக்குள் முக்யமான சிலர்களை ராம லக்ஷ்மணர் இருக்கும் தேசத்திற்கு அனுப்பித்து அவர்களை தன் வசப்படுத்திக்கொண்டு தங்களுடைய ப்ரபாவத்தையும் அவர்களிடம் ப்ரகடனம் செய்து, அவர்களை தங்களுக்கு ஸ்வாதீனம் செய்துகொள்ளும்படியான ப்ரயத்னத்தைச் செய்ய வேண்டும்.'' இவ்விதம் சொன்ன விபீஷணஸ்வாமியினுடைய வார்த்தையைக் கேட்டு, ராவணனுடைய மனதும் கொஞ்சம் கலக்கத்தை அடைந்தது.

"ஹே விபீஷண! நீ சொல்வதும் ந்யாயம்தான் தூத வதத்தினல் திகந்த விச்ராந்தமான க்யாதியை இழந்து கொள்வது என்பது எனக்கும் ஸம்மதமில்லேதான். ஆனல், இந்த வானரமானது தூத கோடியில் சேர்ந்ததுதானு என்பது மட்டும் என் மனதை உருக்குகிறது.

किं वा परं ब्रह्म परन्त्वसह्यं
सर्वस्यबीजं जगतोऽस्य विष्णोः ।
यद्देकदेवस्य परं च तेजः
तदेव तेजः कपिवेषधारि ।
वधाय मे वैष्णवतेज एतत्
निस्संशयोऽयं कपिरेष वीरः ।
इत्येवमेतत् बहुधाविचिन्त्य
रक्षोधिपः क्रोध वशं जगाम ।
क्रोधं च जात हृदये निरुध्य
विभीषणोक्तं वचनं सुपूज्य ।
उवाच रक्षोधिपतिः महात्मा
विभीषणं धर्मभृतां वरिष्ठम् ।।

கிம் வா பரம்ப்ரம்ம பரந்த்வ ஸஹ்யம்
ஸர்வஸ்யபீஜம் ஜகதோஸ்ய விஷ்ணோ: ।
யத்தேவதேவஸ்ய பரம் ச தேஜ:
ததேவ தேஜ: கபிவேஷதாரீ ॥
வதாய மே வைஷ்ண தேஜ ஏதத்
நிஸ்ஸம்சயோயம் கபிரேஷ வீர: ।
இத்யேவமேதத் புஹுதா விசிந்த்ய
ரக்ஷோதிப: க்ரோத வசம் ஜகாம ॥
க்ரோதம் ச ஜாதம் ஹ்ருதயே நிருத்ய
விபீஷணோக்தம் வசநம் ஸுபூஜ்ய ।
உவாச ரக்ஷோதிபதி: மஹாத்மா
விபீஷணம் தர்மப்ருதாம் வரிஷ்டம் ॥

என்றபடி, எதிரில் புலப்படும் இந்த வானரமோ, ஸகல வேதாந்த வேத்யமான நிர்குண ப்ரம்மம்தானே என்று நினைக்கிறேன். நிர் குணத்திற்கு உருவமில்லாமலிருக்கும்போது இவ்விதம் வருமா என்ருலோ, மாயா சபலிதமான மஹா விஷ்ணு என்ற ஸகுண

ப்ரம்மத்தின் தேஜஸ்ஸாக இருக்க வேண்டும். அந்த தேஜஸ்ஸுத் தான் ப்ரத்யக்ஷமாக காணப்படும் இந்த ஸகல ஜகத்திற்கும் மூல காரணம். जन्माद्यस्य यतः प्रकृतिश्च प्रतिज्ञा दृष्टान्तानुपरोधात् (ஜந் மாத்யஸ்ய யத:ப்ரக்ருதிச்ச ப்ரதிக்ஞாத்ருஷ்டாந்தாநு பரோதாத்) என்ற ந்யாய ஸூத்ரங்களால் போதிக்கப்படுவதும் सपर्यगात् शुक्र अकायं अव्रणं (ஸபர்யகாத் சுக்ரம் அகாயம் அவ்ரணம்)என்ற ச்ருதி களால் போதிக்கப்படுவதும் अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयः तथा (அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளய: ததா) என்ற ஸ்ம் ருதிகளாலும் போதிக்கப்படுவதுமான எந்த வைஷ்ணவமான பரஞ் ஜ்யோதிஸ் உண்டோ அதுதான் வானரமாக வேஷத்தைப் போட் டுக்கொண்டு என்னை வதம் செய்வதற்காக வந்த பரம் பொருள் என்றுதான் நினைக்கவேண்டும் என்று வெகு ப்ரகாரமாக ஆலோ சித்துவிட்டு, பரம கோபத்தையும் அடைந்தான். பிறகு இந்த விஷயத்தில் நாம் கோபத்தை யடைவது ந்யாயமில்லை என்று தீர்மானித்து, ஏற்பட்ட கோபத்தையும் அடக்கிக் கொண்டு, விபீஷணனைப் பார்த்து, "ஹே, விபீஷணா! உன்னையும் ப்ராதா என்று சொல்லிவிட்டு, மற்றொருவரையும் ப்ராதாவாகச் சொல்ல லாமா? என்னை இப்பேர்ப்பட்ட ஆபத்திலிருந்தும் விடுதலை செய்து வைத்தாய். இவ்வளவு காலமாக நான் அரசியல் நடத்தியும், தர்ம தத்வங்களை ப்ரகாசப்படுத்துகிற உன்னுடைய வார்த்தையைப் போலொத்த வார்த்தையை இதுவரை ஒருவரிடமும் கேட்ட தில்லை" என்று விபீஷணனுடைய வார்த்தையையும் பூஜித்து விட்டு பரம தார்மிகனான விபீஷணனைப் பார்த்து மேலும் ராவணன் சொல்கிறான்.

அதாவது, தேச, காலத்தை அனுஸரித்து ஹிதமாகப் பேசிய விபீஷணனுடைய வார்த்தையைக்கேட்டு ராவணன் அதைரொம்ப ந்யாயம்தான் என்று ஒப்புக் கொண்டுவிட்டான். ஆகையால் "ஹே விபீஷணா! ரொம்பவும் அழகாக நீ பேசினாய். தூத வத மானது என்னைப்போலொத்த மஹா ராஜனுக்கு நிந்த்யமான கார்யம்தான் — வானரங்களுக்கு முக்யமான அவயவம் வால் தான். ஆகையால் அதை வஸ்த்ரங்களால் சுற்றி, நிறைய எண்ணை யில் தோய்த்து நெருப்பை வைத்து அதை விரட்டி விடுவதே அதற்கு பெரிய தண்டனை ஆகும்" என்று விபீஷண ஸ்வாமியி னுடைய ஹிதோபதேசப்படியே அதை அனுஸரித்து ஆஞ்ஜனேய ஸ்வாமிக்குதண்டனையை விதித்தான். உடன் ராக்ஷஸர்கள் சூழ்ந்து கொண்டு ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய வாலை லங்கா நகரத்தி

லுள்ள ஸகல விதமான வஸ்த்ரங்களாலும் சுற்றிக்கட்டி, எண்ணெ யில் தோய்த்து, தீயையும் வைத்து வணவம் பேரீ முதலான வாத்ய கோஷங்களோடு கூட ''சாரீகன், சாரீகன்'' என்று பக்கங்களில் ராக்ஷஸர்கள் உத்கோஷம் செய்து கொண்டு ஸகல ராஜ வீதிகளி லும் ஆஞ்ஜனேயரைப் பிடித்து இழுத்துக்கொண்டு கூட்டம் கூட்டமாகச் சென்றூர்கள். ஆஞ்ஜனேயருக்கோ இரவில் லங்கா நகரத்தினுடைய ஸகலவித ஸந்நிவேசங்களையும் பார்க்காததைஇப் போது நன்றுகப் பார்க்கும்படி அக்னி ஜ்வாலையினுல் ப்ரகாசப் படுத்துகிற ராக்ஷஸர்களை நாம் பந்துவாகவே நினைக்க வேண்டு மென்ற ஸந்தோஷத்துடன் நெடுகிலும் மௌனமாகவே சுற்றி வந்தார். வாலை துணியினுலும் கயிறுகளினுலும் சுற்றச் சுற்ற இவரும் விச்வ ரூபதாரி ஆகிவிட்டார். ஸமீபத்தில் வந்த ராக்ஷஸர்களையும் தன் புச்சாக்னியினுல் எறித்து த்வம்ஸம் செய் தார். அந்த காலத்தில் ஆஞ்ஜனேயர் எண்ணினதாவது: ''இந்த பாசங்களையும் வஸ்த்ரங்களையும் உதறித் தள்ளிவிட்டு இவ்வளவு ராக்ஷஸர்களையும் ஒரே அறையாக அறைந்து மரிக்கச் செய்துவிடு வேன். ஸகல ராக்ஷஸர்களையும் கொன்றுவிடும்படியான சக்தி எனக்கு உண்டு. ஆகிலும் அது ஸ்ரீ ராமனுக்கு ப்ரீதியைக் கொடுக் குமோ, கொடுக்காதோ என்று ஸந்தேஹித்து இந்த கஷ்டத்தை நான் வஹித்துக்கொண்டிருக்கிறேன். நேற்றிரவு முழுமையும் அலைந்தும் நான் லங்கா நகரத்தை நன்றுய்ப் பார்க்கவில்லை. மறு படியும் நன்றுய் இன்னெரு தடவை பார்க்க வேண்டும் என்ற ஆசை உண்டு. அது இப்போது பலிதமாக ஆகிவிட்டது. என் வாலை இவர்கள் எப்படி வேண்டுமானுலும் எரிக்கட்டும். அதனுல் என் மனதிற்குக் கொஞ்சமேனும் சேதமில்லை என்று தீர்மானித்துக் கொண்டு ஸந்தோஷமாகச் சென்றூர்''. ராக்ஷஸர்களோ சங்கநாத மென்ன, பேரீ சப்தமென்ன, மற்ற வாத்ய கோஷங்களுடனும் ராஜ மார்க்கம் பூராவும் இந்த ஆஞ்ஜனேயரை இழுத்துக் கொண்டு சுற்றினுர்கள். நகரத்தில் ஒரு ஸந்நிவேசம் பாக்கி யில்லாமல் எல்லாவற்றையும் ஸ்பஷ்டமாக ஹநுமானும் பார்த்து வந்தார். அநேக விமானங்களையும், அநேக அழகான க்ருஹ விசேஷங்களையும், சத்ஹ மார்க்கங்களையும், நாச் சந்து, முச் சந்து முதலியவைகளையும் பார்த்துக்கொண்டு போனுர். ஸ்த்ரீகள் முதல் ஸகலவிதமான் ராக்ஷஸர்களும் வேடிக்கை பார்க்கத் திரள் திரளாகக் கூடிவிட்டார்கள். புச்சத்திலுள்ள அக்னி ஜ்வாலையானது க்ாலாக்னி ருத்ரனுடைய ஜ்வாலையைப்போல் பெரிய அக்னியாக

ஆகிவிட்டது. அசோக வனத்திலுள்ள ராக்ஷஸ ஸ்த்ரீகளும் அதைப் பார்த்தார்கள்.

உடனே அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் ஸீதாதேவியைப் பார்த்து, ''ஹே ஸீதே! உன்னுடன் பேசிக்கொண்டிருந்த வானரன் யார் என்று கேட்டதற்கு நீ ஒன்றும் பதில் சொல்லாமலிருந்தாயே! அந்த வானரமானது, இப்போது வாலில் தீ வைக்கப்பட்டு, ஜ்வலிக்கிற வாலோடு ராஜவீதியில் அங்குமிங்கும் இழுக்கப்பட்டு சிரிப்பாய்ச் சிரிக்கிறது பார்'' என்று சொன்னார்கள்.

ஸீதாதேவியானவள் அதைக் கேட்டவுடன் மிகவும் மனோ வருத்தமடைந்து, ஆஞ்ஜனேயஸ்வாமிக்கு ஒருவிதக் குறைவும் வராமலிருக்கவேண்டுமென்ற எண்ணத்துடன், அக்னிபகவானை உபாஸித்தாள்.

ஸீதையினுடைய உபாஸனத்திற்கு, ஆஞ்ஜனேயஸ்வாமியினுடைய புச்சாக்னி தேவதையானது உபாஸ்யமாக விளங்கி வந்தது.

यद्यस्ति पतिशुश्रूषा यद्यस्ति चरितं तपः ।
यदिवास्त्येकपत्नीत्वं शीतो भव हनूमतः ॥
यदि किंचिदनुक्रोशः तस्य मय्यस्ति धीमतः ।
यदि वा भाग्यशेषो मे शीतो भव हनूमतः ॥
यदि मां वृत्तसंपन्नां तत्समागमलालसाम् ।
स विजानाति धर्मात्मा शीतोभव हनूमतः ॥
यदि मां तारयेदार्यः सुग्रीवः सत्यसंगरः ।
कस्माद्दुःखांबुसंरोधात् शीतो भव हनूमतः ॥

யத்யஸ்தி பதிசுச்ரூஷா யத்யஸ்தி சரிதம் தப: ।
யதிவாஸ்த்யேகபத்நீத்வம் சீதோபவ ஹநூமத: ॥
யதிகிஞ்சிதநுக்ரோச: தஸ்யமய்யஸ்தி தீமத: ।
யதிவா பாக்யவசேஷோமே சீதோபவ ஹநூமத: ॥
யதி மாம் வ்ருத்தஸம்பந்நாம் தத்ஸமாகமலாலஸாம் ।
ஸ விஜாநாதி தர்மாத்மா சீதோபவ ஹநூமத: ॥
யதி மாம் தாரயேத் ஆர்ய: ஸுக்ரீவ: ஸத்யஸங்கர: ।
அஸ்மாத்துக்காம்புஸம்ரோதாத் சீதோபவ ஹநூமத: ॥

என்ற ச்லோகங்களால் ஸீதாதேவியானவள் அக்னிபகவானுக்குள் அந்தர்கதனுகிய பரமேச்வரனே தன்னுடைய ஹ்ருதய குஹையில் த்யானம் செய்துகொண்டு ப்ரார்த்தித்துக் கொண்டாள்.

''ஹே அக்னே, நான் பர்த்ரு சுச்ரூஷை செய்வது வாஸ்தவ மாக இருந்தால், என்னுடைய சரித்ரமும் ஸாதுவான சரித்ர மானுல், நான் முன் ஜன்மாக்களில் தபஸ்ஸைச் செய்திருந்தேனே யானுல், ராமன் ஒருவனேத் தவிர மற்றொரு புருஷனேயும் மனதினுல் கூட ஸ்மரிக்காமலிருக்கிறேன் என்பது உண்மையானுல்' ஆஞ்ஜனேயஸ்வாமிக்கு தாங்கள் ஔஷ்ண்யத்தைக் கொடுக்காமல் சீதளமாக இருக்கவேண்டும். அவ்விதமே ஹே அக்னே, மஹா வித்வானுன ஸ்ரீராமனுக்கு என்னிடம் கொஞ்சம் கருணே இருக்கு மேயானுல் ராமனேடு சேர்ந்திருக்கும் பாக்யம் எனக்கு மிச்சமிருக்கு மேயானுல் ஆஞ்ஜனேய ஸ்வாமிக்கு தாங்கள் சீதளமாகவே விளங்கிவரவேணடும். ஹே அக்னே, நான் ஸச்சரித்ரத்தோடு கூடினவளாகவும், ராமனேடு சேர்வதில் த்ருட ஸங்கல்பத்தோடு கூடினவளாகவும் இருப்பதை தர்மசீலனுன ராமன் அறிந்திருப் பாரேயானுல். ஆஞ்ஜனேயருக்கு தாங்கள் சீதளமாக இருந்து வரவேண்டும், ஹே அக்னே, ஸத்ய ப்ரதிக்ஞனுன ஸுக்ரீவன் என்னே இந்த ஸமுத்ரத்திலிருந்து தரணம் செய்து வைப்பார் என்பது ஸத்யமானுல் ஆஞ்ஜனேய ஸ்வாமிக்கு தாங்கள் சீதளமாகவே இருக்கவேண்டும்'' என்று ப்ரார்த்தித்துக் கொண்டாள்,

ततः तीक्ष्णार्चिः अव्यग्रः प्रदक्षिण शिखोऽनलः।
जज्वाल मृगशावाक्ष्याः शंसन्निव शिवं कपेः ॥

*தத: தீக்ஷ்ணார்ச்சி: அவ்யக்ர: ப்ரதக்ஷிண சிகோநல: |*
*ஜஜ்வால ம்ருகசாபாக்ஷ்யா: சம்ஸந்நிவ சிவம் கபே: ||*

உடன் அக்னிபகவானும் ப்ரதக்ஷிணுகாரமாக ஜ்வலித்துக் கொண்டு, ''ஹே பரதேவதையே! நான் ஆஞ்ஜனேயருக்கு கொஞ்சமேனும் ஔஷ்ண்யத்தைக் காட்டவில்லே. சீதளமாகவே ஸுக ஹேதுவாகத்தான் ஆகின்றேன்'' என்று ஆஞ்ஜனேயருடைய ஸௌக்யாதிசயத்தை வெளிக்காட்டிச் சொல்வதுபோல் ப்ரதக்ஷிணமாக ஜ்வலித்தார். ஹனுமானுடைய பிதாவான வாயுபகவானும் புச்சாக்னியுடன் சேர்ந்துகொண்டு ப்ரளய காலத்திலுள்ள வாயு எவ்வளவு சீதளமாக இருக்குமோ

அவ்வளவு சைத்யத்துடன் அக்னியை ஸகாவாக வைத்துக் கொண்டு தன் புத்ரனான ஆஞ்ஜனேய ஸ்வாமியை ரக்ஷித்தார். ஆஞ்ஜனேயரோ, அந்த ஸமயத்தில் நினைத்ததாவது: "நமது வாலோ கொழுந்துவிட்டு எரிகிறது. மஹா ஜ்வாலையானது காணப்படுகிறது. ஆகிலும் கொஞ்சமேனும் நமக்கு தாபத்தைக் காணோம்! நல்ல சந்தணக்குழம்பில் வாலை நனைத்தாப்போல் ஜிலு ஜிலுப்பாக இருந்துவருகிறது. வாலினுடைய நுனியிலோ அக்னி பகவான் பரிபூர்ணமாக ப்ரதிஷ்டை செய்யப்பட்டு பூர்ண ஸாந்நித்யத்துடன் ஜ்வலிக்கிறார். நமக்கோ யாதொரு விதமான தீங்கும் ஏற்படாமலிருப்பதற்கு ஸ்ரீ ராகவனுடைய ப்ரமாவமே முக்யமான காரணமாகும், ராம ப்ரபாவத்தாலேயல்லவா ஸமுத்ரத்தைத் தாண்டினேம். மைநாகம் முதலானவைகளையும் தடுத்துக்கொண்டு வந்தோம். அவ்விதமான ஸ்ரீ ராம ப்ரபாவமான அனுக்ரஹம் பூர்ணமாக இருக்கும்போது நம்மை அக்னி பகவான் என்ன செய்யப்போகிறார்?''

सीतायाश्चानृशंस्येन तेजसा राघवस्य च ।
पितुश्च मम सख्येन नमां दहति पावकः ॥

ஸீதாயாச்சாந்ருசம்ஸ்யேந தேஜஸா ராகவஸ்ய ச ।
பிதுச்ச மம ஸக்யேந நமாம் தஹதி பாவக: ॥

என்றதினால், 'ஸீதாதேவியினுடைய தயவினாலும், ஸ்ரீ ராமனுடைய தேஜஸ்ஸினாலும், நமது பிதாவான வாயுவிற்கு அக்னிபகவான் ஸகாவாக இருப்பதினாலும், அக்னிபகவான் நம்மை பாதிக்கவில்லை' என்று தீர்மானித்துவிட்டு ஒரு க்ஷண காலத்திற்குள் மஹிமா ஸித்தியை அனுஸரித்து பெரிதான உருவத்தோடு கூடியிருந்த ஆஞ்ஜனேயர், அணிமா ஸித்தியை அவலம்பித்து ரொம்பவும் சிறிதாக தளர்ந்துபோய் கீழே விழுந்தவுடன் புச்சாக்னி ஜ்வாலையோடு கோபுர த்வாரத்தில் ஏறிக்கொண்டார். அங்குள்ள பாதகர்களையும், புச்சாக்னியால் பொசுக்கிவிட்டு ஜ்வலித்துவந்தார்.

सतान्निहत्वा रणचण्डविक्रमः
समीक्षमाणः पुनरेव लङ्काम्
प्रदीप्तलांगूलकृतार्चिमाली
प्रकाशतादित्य इव अर्चिमाली

ஸ தாந்நிஹத்வா ரணசண்ட விக்ரம:
ஸமீக்ஷமாண: புநரேவ லங்காம் ।
ப்ரதீப்தலாங்கூல க்ருதார்ச்சிமாலீ
ப்ரகாசதாதித்ய இவ அர்ச்சிமாலீ ॥

இவ்விதம், கோபுரத்வார ரக்ஷகர்களான ராக்ஷஸர்களைக் கொன்றுவிட்டு, அத்யுக்ரமான ப்ராக்ரமத்தோடு லங்கா நகரத்தையே பார்த்துக்கொண்டு உயர்ந்த கோபுர த்வாரத்தின் அக்ரபாகத்தில் ப்ரதக்ஷிணமாக ஜ்வலித்துக்கொண் டிருக்கிற புச்சாக்னியுடன் ப்ரகாசமாக விளங்கிவந்தார். பார்க்கிறவர் களுக்கு தேஜ:புஞ்ஜத்துடன் கூடின ஆதித்ய பகவான்தானோ என்று நினைக்கும்படி விளங்கிவந்தார்.

ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் தன் புச்சத்தில் ஜ்வலிக்கிற அக்னி ஜ்வாலையோடுகூட கோபுர த்வாரத்தில் ஸுகமாக இருந்துகொண்டு இன்னும் தான் செய்யவேண்டிய கார்ய சேஷம் என்னவென்று ஆலோஜித்தார்.

'ராக்ஷஸர்களுக்கு பெரிய ஸந்தாபத்தைச் செய்கிறதாகவே நாம் செய்கிற காரியம் இருக்கவேண்டும். அசோக வனத்தையோ அழித்தாய்விட்டது. அநேக ப்ரபல ராக்ஷஸர் களையும் கொன்றுவிட்டோம். சில ராக்ஷஸ ஸேனைகளையும் நாசம் செய்துவிட்டோம். லங்கா நகரத்திலுள்ள சில துர்கம மான ப்ரதேசங்களைமட்டும் அழிக்காமல் வைத்திருக்கிறோம். அந்த ப்ரதேசங்களிலுள்ள முக்யமான வழிகளையும் நாசம் செய்து விட்டால், ஸமுத்ரத்தைத் தாண்டி வந்த நம்முடைய ப்ரயாண மானது ஸுகமாக ஆகிவிடும். நமது வாலில் ஜ்வலிக்கிற அக்னி பகவானுக்கு இந்த லங்கா நகரத்திலுள்ள ப்ரபல ராக்ஷஸர்களுடைய திருமாளிகைகளை ஆகாரமாக கல்பித்துக் கொடுத்து அவருக்கு த்ருப்தி செய்விப்பதே நமது கடமை யாகும்' என்று தீர்மானித்து ஒவ்வொரு ப்ரபலமான ராக்ஷஸர் களுடைய வீட்டினுடைய ஊர்த்வ பாகத்திலும் அக்னி ஜ்வாலை யுடன் ஸஞ்சாரம் செய்துகொண்டு ஒவ்வொரு வீட்டிலேயும் தன் வாலில் ஜ்வலிக்கிற அக்னியை ஜ்வலிக்கும்படிச் செய்து அவைகளை பஸ்மமாகச் செய்துவந்தார்.

இவ்விதம் ஸஞ்சரித்துக் கொண்டு சாம்பலாக்கின வீடு களில் முக்யமானவைகள் முதல் மந்த்ரியான ப்ரஹஸ்தனுடைய

வீடு, பிறகு மஹாபார்ச்வன், பிறகு வஜ்ரதம்ஷ்ட்ரன், சுகஸாரணுள், இந்த்ரஜித். ஜம்புமாலி, ஸுமாலி, ரச்மிகேது, ஸூர்யசத்ரு. ஹ்ருஸ்வகர்ணன், தம்ஷ்ட்ரன், ரோமசன், யுத்தோத்மத்தன், த்வஜக்ரீவன், வித்யுஜ்ஜிவன், ஹஸ்தமுகன், கராணன், பிசாசன், சோணிதாக்ஷன், கும்பகர்ணன், மஹராக்ஷன், யக்ஞசத்ரு, ப்ரம்மசத்ரு, நராந்தகன், கும்பன், நிகும்பன் முதலான ப்ரபல ராக்ஷஸாகளுடைய க்ருஹங்களை சாம்பலாக்கினர். ஆனல் இவைகளின் நடுவில் விபீஷணஸ்வாமியினுடைய க்ருஹமும் விளங்கிவந்தது. விபீஷணஸ்வாமியோ, தனக்கு ராவணனுடைய தர்பபரில் ஏற்பட்ட வத தண்டனையிலிருந்து விடுதலை செய்து வைத்தவராயும், ஸ்ரீ ராகவ பக்தசிகாமணியாயும், ராவணனுடைய பாரவச்யத்திலிருந்தும் ஸீதா ப்ராட்டியை விடுதலை செய்து வைப்பதில் முக்யமான யத்ன விசேஷங்களைச் செய்து வருகிற காரணத்தாலும், அவருடைய க்ருஹத்தை ஆஞ்ஜனேய ஸ்வாமிக்கு பஸ்மமாகச் செய்துவிட மனது வரவில்லை அதனல் அந்த க்ருஹத்தை மட்டும் எரிக்சாமல் மிச்சமாக வைத்து விட்டார். அதற்கு சக்தி ஆஞ்ஜனேயஸ்வாமியினிடம் இருந்து வருகிறது என்பதைக் கவியே வர்ணிக்கிறர்.

**वर्जयित्वा महातेजा विभीषणगृहं प्रति ।**
**क्रममाणः क्रमेणैवं ददाह हरिपुङ्गवः ॥**

வர்ஜயித்வா மஹாதேஜா விபீஷணக்ருஹம் ப்ரதி ।
க்ரமமாண: க்ரமேணைவ ததாஹ ஹரிபுங்கவ: ॥

இவற்றில், மஹாதேஜா: என்ற விசேஷணத்தால் ப்ரம்மசர்யம் என்ற நியமத்தை பூர்ணமாக அனுஸ்டித்துவரும் காரணத்தால் அக்னிபகவானையும் தன் வசத்தில் அடக்கியாள சக்தியுள்ளவர் என்பது வெளியாகிறது. ஆதலால் ஆஞ்ஜநேயருடைய இச்சானுஸாரியாகத்தான் ஸகலதேவதைகளும் தன் தன் கார்யத்தைச் செய்ய சக்தியுள்ளவர்களாக ஆகுவார்கள். அதிலும் அக்னி பகவான் முக்யமாக ஆஞ்ஜனேயருடைய பக்தனை ரக்ஷிக்க முன் வந்தே காத்திருப்பார்.

**आञ्जनेय महाभाग वायुसूनो महाबल ।**
**अग्निबाधादि दोषेभ्यः रक्षास्मान् सर्वदा प्रभो ॥**

ஆஞ்ஜநேய மஹாபாக வாயுஸூநோ மஹாபல ।
அக்நிபாதாதி தோஷேப்ய: ரக்ஷாஸ்மாந் ஸர்வதா ப்ரபோ ॥

என்ற மஹா மந்த்ரத்தால் ஆஞ்ஜனேயஸ்வாமியை த்யானம் செய்துகொண்டு ப்ரார்த்திப்பானேயானுல், லோகமே எரிந்தாலும் லோகத்திற்குள் அகப்பட்ட தன்னுடைய க்ருஹாதிகளுக்கோ' பரிஜனனுக்கோ அக்னிபாதை முதலான தோஷங்கள் ஏற்படாது என்பது ஸித்தமாகிறது. இந்த மஹிமை ஆஞ்ஜனேயஸ்வாமிக்கு ஸ்வதஸ்ஸித்தமாக இருந்து வருகிறது என்பதை மஹாதேஜா: என்ற பதமானது ப்ரகாசப்படுத்துகிறது. அதற்கு விபீஷணஸ்வாமியே உதாஹரணமாக ஆகுவார். ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் ஸகலவிதமான விபத்துக்களிலிருந்தும் ரக்ஷிக்க ஸித்தனுக இருக்க வேண்டுமேயானுல் ப்ராணிகள் எப்போதும் ஸ்ரீராம பக்தி பராயணுளாக இருக்கவேண்டுமென்பது வெளியாகிறது. இவ்விதம் விபீஷணஸ்வாமியினுடைய க்ருஹத்தை மட்டும் விட்டுவிட்டு மற்ற ப்ரபலர்களான ராக்ஷஸர்களுடைய பவனங்களை எரித்து சாம்பலாக்கிவிட்டு, ராவணனுடைய முக்யமான திருமாளிகைக்கு வந்து சேர்ந்தார். ராவணனுடைய அரண்மனையில் நன்ருக தீயை வைத்துவிட்டு அதை நன்ருயும் ஜ்வலிக்கச் செய்தார். ப்ரளயகால மேகம்போல் தானும் கர்ஜித்தார். அக்னிபகவானுக்கு ஸாதகமாக வாயுபகவானும் அனுகூலமாக வீசினுர். ஸுவர்ணமயமான வீடுகளும், மணிரத்னங்களால் இழைக்கப்பட்ட சுவர்களும் வெடித்து வெடித்துக் கீழே விழுந்தன. புண்ய க்ஷயமானவுடனே ஸித்தபுருஷர்களுடைய க்ருஹங்கள் ஸ்வர்க்க லோகத்திலிருந்து பூமியில் விழுவதுபோல் தோன்றின. ஹா ஹாகார சப்தமும் ரொம்பவும் பெரிதாக ஏற்பட்டுவிட்டது. அந்தந்த க்ருஹ ஸ்வாமிகளுக்குத் தன் தன் க்ருஹங்களை உடனே ரக்ஷிப்பதிலும் உத்ஸாஹமில்லாமலாகிவிட்டது. தீயை அணைக்கும் யந்த்ர விசேஷங்களும் ஹனுமானுடைய தபோ மஹிமையினுல் பயனில்லாமல் போய் விட்டன ஸாக்ஷாத் அக்னிபகவானே இந்த வானர ரூபமாக லங்கா நகரத்தை அழிக்க வந்ததாகவே எல்லோரும் தீர்மானித்தார்கள். ப்ரபலமான ராக்ஷஸ ஸ்த்ரீகளும் மேல்மாடியிலிருந்து, அவ்விடம் சூழ்ந்த அக்னியால் பொசுக்கப்பட்ட காரணத்தால், கையில் தரிக்கப்பட்டு ஸ்தன்யபானம் செய்துவரும் குழந்தைகளுடன் கூடவே கதறிக்கொண்டு கீழே விழுந்தார்கள். மேகத்திலிருந்து மின்னல் கொடி விழுவதுபோல் ஸ்த்ரீகள் இவ்விதம் விழுவது தோன்றிற்று. नाग्निः तृप्यति काष्टानां तृणानां हरयूथपः (நாக்நி: த்ருப்யதி காஷ்டாநாம் த்ருணுநாம் ஹரயூதப:) அக்னிபகவான், காஷடம் (விறகுகளாலும்) த்ருணங்களாலும் (புல் பூண்டு) போதும் என்றத் த்ருப்தியை அடையாததுபோல்

ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் வாலில் ஜ்வலிக்கிற அக்னிக்கு லங்கா நகரம் முழுமையும் இரையாக்கிக் கொடுத்தும் த்ருப்தி ஏற்பட வில்லை. பூமியும் அக்னி பாதையால் ம்ருதாளாகக் கிடக்கும் ராக்ஷஸகர்ளுடைய கூட்டத்தைப் பார்த்து போதும் என்று நினைக்கவில்லை. த்ரிபுர ஸம்ஹார காலத்தில் பரமேச்வரனால் அந்த த்ரிபுராஸுராளுடைய பட்டணமான த்ரிபுரம் என்பது எப்படி எரிக்கப்பட்டதோ, அதுபோல் லங்கா நகரம் முழுமையும் ஆஞ்ஜனேயஸ்வாயினுடைய புச்சாக்னியினால் எரிக்கப்பட்டது.

ततस्तु लङ्कापुरपर्वताग्रे
समुत्थितो भीमपराक्रमोऽग्निः ।
प्रसार्य चूडावलयं प्रदीप्तो
हनूमतो वेगवता विसृष्टः ॥

ததஸ்து லங்காபுர பர்வதாக்ரே
ஸமுத்தித: பீமபராக்ரமோக்நி: ।
ப்ரஸார்ய சூடாவலயம் ப்ரதீப்த:
ஹநூமதோ வேகவதா விஸ்ருஷ்ட: ||

இதனால், த்ரிகூட பர்வத சிகரத்தின் உச்சியில் அமைக்கப் பட்டிருக்கும் லங்கா நகரத்தில், வேகவானான ஹனுமானால் வைக்க்ப்பட்ட அகனிபகவான் தன்னுடைய ஜ்வாலையை நாலா பக்கத் திலும் வ்யாபரிக்கச் செய்துகொண்டு ஜ்வலித்து வந்தார்.

वज्री महेन्द्रः त्रिदशेश्वरो वा
साक्षाद्यमो वा वरुणोऽनिलो वा ।
रुद्रोऽग्निरर्को धनदश्च सोमः
न वानरोऽयं स्वयमेव कालः ॥
किं ब्रह्मणः सर्वपितामहस्य
सर्वस्य धातुः चतुराननस्य ।
इहागतो वानररूपधारी
रक्षोपसंहारकरः प्रकोपः ॥
किं वैष्णवं वा कपिरूपमेत्य
रक्षोविनाशाय परं सुतेजः ।
अनन्तं अव्यक्तं अचिन्त्यमेकम्
स्वमायया सांप्रतमागतं वा ॥

इत्येवमूचुः भहवो विशिष्टा
रक्षोगणाः तत्र सभेत्य सर्वे ।
सप्राणि रंघां सगहां सवक्षां
दग्धां पुरीं तां सहसा समीक्ष्य ॥

வஜ்ரீமஹேந்த்ர: த்ரிதசேச்வரோ வா
ஸாக்ஷாத் யமோ வா வருணோநிலோ வா ।
ருத்ரோக்நிரர்க்க: தநதச்ச ஸோம:
ந வாநரோயம் ஸ்வயமேவ கால: ॥
கிம் ப்ரம்மண: ஸர்வபிதாமஹஸ்ய
ஸர்வஸ்ய தாது: சதுராநநஸ்ய ।
இஹாகதோ வானரரூபதாரீ
ரக்ஷோப ஸம்ஹாரகர: ப்ரகோப: ॥
கிம் வைஷ்ணவம் வா கபிரூபமேத்ய
ரக்ஷோவிநாசாய பரம் ஸு தேஜ: ।
அநந்தம் அவ்யக்தம் அசிந்த்யமேகம்
ஸ்வமாயயா ஸோப்ரதமாகதம் வர ॥
இத்யேவமூசு; பஹவோ விசிஷ்டா
ரக்ஷோகணு: தத்ர ஸமேத்ய ஸர்வே ।
ஸப்ராணி ஸங்காம் ஸ க்ருஹாம் ஸ வ்ருக்ஷாம்
தக்தாம் புரீம் தாம் ஸஹஸா ஸமீக்ஷ்ய ॥

அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருக்கும் விசிஷ்டமான ப்ரபல ராக்ஷஸர்கள் ஸ்தாவர ஜங்கம ஸொத்துக்களோடு தன் தன் க்ருஹங்கள் தன் கண் முன்பாகவே சாம்பலாகப் போனதைப் பார்த்துவிட்டு இந்த வானரம் வானரமல்ல, தேவராஜஞன இந்த்ரன்தானே, அல்லது யமனே, வருணனே, அக்னிரோ, ருத்ரனே, ஸூர்யனே, குபேரனே, சந்த்ரனே, காலபுருஷனே இவ்விதமாகத்தான் இருக்க வேண்டும். ப்ராக்ருதமான வானர மல்ல. அல்லது ஸர்வ ஜகத்தையும் ஸ்ருடித்த ப்ரம்மாவினுடைய ப்ரகோபமானது இந்த வானர ரூபத்தைத் தரித்துக்கொண்டு லங்கையை பஸ்மமாகச் செய்ய வந்திருக்கிறதோ, அல்லது லங்கையை பஸ்மமாகச் செய்ய வந்திருக்கிறதோ, அல்லது விஷ்ணுவினுடைய தேஜஸ்தானே, அல்லது தேசத்தாலோ, காலத்தாலோ, வஸ்துவினலோ, பரிச்சேதமற்று மனிதனுலேயும் சிந்திக்க முடியாமல். பஹிரிந்த்ரிய கார்யங்களுக்கும் விஷயமாகா

மல் அத்விதீயனாக விளங்கிவரும் ஸச்சிதானந்தரூபமான ப்ரம்மம் தான் தன்னுடைய மாயையினால் இவ்விதம் குரங்கு வேஷத்தைத் தரித்துக்கொண்டு ராக்ஷஸர்களை நாசம் செய்ய இங்கு இப்பேர்ப் பட்ட வேடிக்கை செய்கிறதோ' என்று பலவாறாக விகல்பம் செய்து கொண்டு ப்ரலாபித்தார்கள்.

இவ்விதம் ராக்ஷஸர்களுடைய பவனங்களை எரித்துவிட்டு அக்னியை ராக்ஷஸர்களுடைய க்ருஹங்களிலேயே ஸ்தாபனமும் செய்துவிட்டு, ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் தன் மனதால் ஸ்ரீராமனை த்யானம் செய்துகொண்டார். உடன் ஸகல தேவர் களும் ஆஞ்ஜனேயஸ்வாமியை ரொம்பவும் ச்லாகித்தார்கள். அசோகவனம் முதலிய உத்யான வனங்களையும் அழித்துவிட்டு, ராக்ஷஸர்களையும் கொன்றுவிட்டு, லங்கா நகரத்தையும் பூராவாக சுற்றிவிட்டு, கொஞ்சமேனும் ச்ரமமில்லாமல், ஆஞ்ஜனேயர் ஜ்வலித்து வந்தார். இவர் எவ்வளவு மஹானுபாவனாக இருக்க வேண்டும்; காலாக்னி ருத்ரன்தான் இந்த மஹானுபாவன் என்று தீர்மானித்து, தேவாள், ரிஷிகள், கந்தர்வாள், வித்யாதராள், நாகயக்ஷாள், ஸகல பூதங்கள், ப்ராணிகள் எல்லோரும் நடுநடுங்கினார்கள். மஹத்தான ஸந்தோஷத்தையும் அடைந் தார்கள்.

இவ்விதம் துஷ்கரமான கர்மாவை ஆஞ்ஜனேயஸ்வாமி யானவர் செய்துவிட்டு, தன் புச்சத்திலுள்ள அக்னியையும் ஸமுத்ரம் சென்று நன்றாக அணையும்படி செய்துகொண்டு, பரம ஸந்தோஷத்துடன் விளங்கிவந்தார். அந்த ஸமயத்திலும் ஆஞ்ஜ னேயருக்கு அளவிட முடியாத கவலை ஏற்பட்டது. அதாவது, எந்த மஹானுபாவர்கள்கோபத்தை அடையாமலிருக்கிறார்களோ, உண்டான கோபத்தையும் ஜ்வலிக்கிற அக்னியை ஜலத்தினால் சமனம் செய்வதுபோல் அடக்கிக் கொள்கிறார்களோ, அவர்கள் தான் மஹாபுருஷர்களாக ஆகுவார்கள்.

क्रुद्धः पापं न कुर्यात् कः क्रुद्धो हन्यात् गुरूनपि ।
क्रुद्धः परुषया वाचा नरः साधूनधिक्षिपेत् ॥
वाच्यावाच्यं प्रकुपितो न विजानाति कर्हिचित् ।
नाकार्यमस्ति क्रुद्धस्य नावाच्यं विद्यते क्वचित् ॥
यः समुत्पतितं क्रोधं क्षमयैव निरस्यति ।
यथोरगस्त्वचं जीर्णां स वै पुरुष उच्यते ॥

धिगस्तु मां सुदुर्बुद्धिं निर्लज्जं पापकृत्तमम् ।
अचिन्तयित्वा तां सीतां अग्निदं स्वामिघातकम् ॥
यदि दग्धा त्वियं लङ्का नूनमार्यापि जानकी ।
दग्धा तेन मया भर्तुः हतं कार्यं अजानता ॥
मदर्थं अयमारम्भस्तत्कार्यं अवसादितम् ।
मया हि दहता लङ्कां न सीता परिरक्षिता ॥
ईषत्कार्यं इदं कार्यं कृतमासीन्न संशयः ।
तस्य क्रोधाभिभूतेन मया मूलक्षयः कृतः ॥
विनष्टा जानकी नूनं न ह्यदग्धः प्रदृश्यते ।
लङ्कायां कश्चिदुद्देशः सर्वा भस्मीकृता पुरी ॥

க்ருத்த: பாபம் ந குர்யாத் க: க்ருத்தோ ஹந்யாத் குரூநபி ।
க்ருத்த; பருஷயா வாசா நர: ஸாதூநதிக்ஷிபேத் ॥
வாச்யாவாச்யம் ப்ரகுபித: ந விஜாநாதி கர்ஹிசித் ।
நாகார்யமஸ்தி க்ருத்தஸ்ய நாவாச்யம் வித்யதே க்வசித் ॥
யஸ்ஸமித்பதிதம் க்ரோதம் க்ஷமயைவ நிரஸ்யதி ।
யதோரகஸ்த்வசம் ஜீர்ணம் ஸ வை புருஷ உச்யதே ॥
திகஸ்து மாம் ஸுதுர்புத்திம் நிர்லஜ்ஜம் பாபக்ருத்தமம் ।
அசிந்தயித்வா தாம் ஸீதாம் அக்நிதம் ஸ்வாமிகாதகம் ॥
யதிதக்தா த்வியம் லங்கா நூநமார்யாபி ஜாநகீ ।
தக்தா தேந மயா பர்த்து: ஹதம் கார்யம் அஜாநதா ॥
மதர்த்தம் அயமாரம்பஸ்தத்கார்யம் அவஸாதிதம் ।
மயா ஹி தஹதா லங்காம் ந ஸீதா பரிரக்ஷிதா ॥
ஈஷத்கார்யம் இதம் கார்யம் க்ருதமாஸீந்ந ஸம்சய: ।
தஸ்ய க்ரோதாபி பூதேந மயா மூலக்ஷய: க்ருத: ॥
விநஷ்டா ஜாநகீ நூநம் ந ஹ்யதக்த: ப்ரத்ருச்யதே ।
லங்காயாம் கச்சிதுத்தேச: ஸர்வா பஸ்மீக்ருதா புரீ ॥

'கோபத்திற்கு வசமான புருஷன் யார்தான் பாபத்தைச் செய்யமாட்டான். கோபத்தை அடைந்தவன், தன் குருக்களையும் கொன்றுவிடுவான். கோபத்திற்கு உள்பட்டவன் அவாச்யமான வார்த்தைகளால் ஸஜ்ஜனங்களையும் தூக்ஷி எறிந்து பேசுவான். கோபத்துடன் கூடினவனுக்கு பேசத் தகுந்தது இது, பேசத் தகாதது இது என்ற ஞானமே இராது. கோபிஷ்டனுக்கு செய்யத் தகாத கார்யமும் கிடையாது. பேசத் தகாத வார்த்தையும் கிடையாது. ஸர்ப்பமானது ஜீர்ணமான தன் சட்டையை

எவ்விதம் கழட்டிவிடுகிறதோ, அதுபோல், எவன் ஏற்பட்ட கோபத்வை அடக்கிக் கொள்கிருனே அவன்தான் மஹாபுருஷனுகுவான். என்னைப்போல் துற்புத்தியோடு கூடினவனும் லஜ்ஜையற்றவனும், கோபிஷ்டனும் வேறொருவனுமில்லை. இந்த லங்கா நகரத்தின் எல்லைக்குள்ளேதான் ஸீதாதேவி இருந்துவருகிருள் என்பதை யோஜிக்காமல், லங்கா நகரத்தைப் பூராவும் எறித்துவிட்டேனே! ஸ்வாமிகாதகனல்லவா நான்! லங்கை முழுமையும் எறிந்து பஸ்மமாகியிருக்குமேயாஞல் பூஜ்யையான ஸீதையும் அவ்விதம்தானே ஆகியிருக்க வேண்டும். அதஞல் பர்த்தாவினுடைய கார்யத்தைக் கெடுத்த பாபியல்லவா நான்! எதற்காக ஸமுத்ரத்தைத் தாண்டி வந்தேனே, அது வீணுக ஆகிவிட்டதே. லங்கையை தஹனம் செய்த நம்மால் ஸீதையும் எறிக்கப்பட்டிருப்பதால் மிகவும் வெளியில் சொல்லிக்கொள்ள முடியாததான அல்ப கார்யத்தைச் செய்துவிட்டோம். கோபத்தைப்போல் சத்ரு மனுஷ்யனுக்கு வேறு ஒருவரும் இல்லை. ராவணனிடத்தில் எனக்கு வந்த கோபம் மூலகாரணத்தையே கெடுத்துவிட்டதே. கட்டாயம் ஸீதாதேவியும் பஸ்மமாகத்தான் ஆகியிருக்கவேண்டும். லங்கா நகரத்தில் ஒரு இடம் விடாமல் எல்லாம் பஸ்மமாகிவிட்டதல்லவா. அவ்விதம் ஏதாவது விபரீதமாக நடந்திருந்தால் என்னுடைய புத்தி குறைவுதான் அதற்கு காரணமாகும். உடன் நான் என் ப்ராணனையும் விட்டு விடப் போகிறேன். அக்னியிலேயே என் சரீரத்தை சாம்பலாக்கிக் கொள்வதோ, ஸமுத்ரத்திலுள்ள படபாக்னிக்கு இரையாக்கிக் கொள்வதோ, அல்லது ஸமுத்திரத்தில் வ்யாபீக்கிறதிமிங்கிலம் முதலிய ஜந்துக்களுக்கு ஆஹாரமாக்கிக் கொள்வதோ, எவ்விதமாவது செய்து உயிரை இழந்துவிடப் போகிறேன். ஜீவதசையோடு ஸுக்ரீவ மஹாராஜாவைப் பார்க்க ஸௌகர்யப்படாது. ராமலக்ஷ்மணுளைத்தான் நான் எப்படிப் பார்ப்பேன்? கோபம் என்ற தோஷத்தால் நான் குரங்கு என்பது லோகத்தில் ப்ரஸித்தமாக ஆகிவிட்டது. என் ஜன்மாவைச் சுடவேண்டும். ஸீதை அவ்விதம் பஸ்மமாக ஆகியிருந்தால், ராம லக்ஷ்மணுளிருவர்களும் நாசமடைந்து விடுவார்கள்! அந்த இருவர்களும் போனதைப் பார்த்தால், ஸுக்ரீவனும் பந்து வர்க்கங்களோடு நசித்துவிடுவான் அதைத் தெரிந்துகொண்ட பரதன் எப்படி ஜீவிப்பான்? சத்ருக்னன்தான் எப்படி ஜீவிப்பான்? இக்ஷ்வாகு வம்சமே போய் விட்டது என்பதை அறிந்து ஸர்வ ப்ரஜைகளும் கதறுவார்கள்

அல்லவா! இவ்வளவு ஆபத்திற்கும் நான்தான் மூலகாரணமாகி விட்டேன். எனக்கு ஸமானமான பாபியுண்டா! கோபத்திற்கு இடங் கொடுத்ததிலிருந்து, தர்ம சாஸ்த்ரம், நீதி சாஸ்த்ரம் எல் லாம் போய்விட்டது. லோகத்தையே நாசம் செய்தவனுக ஆகி விட்டேன்' என்ற சிந்தையுடன் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் கதறினர்.

இவ்விதம் ஆஞ்ஜனேயஸ்வாமி கஷ்டப்பட்டுக்கொண்டிருக் கும்போது அவருக்கு சுபத்தைச் சொல்லும் ஸூசகங்களெல்லாம் ஏற்பட்டது. முன்பும் இந்த சுப ஸூசகங்களைக் கண்டுதான் ஸீதையைக் கண்டார். அதே சுப ஸூசகங்கள் இப்பவும் ப்ரத்ய க்ஷமாக ஏற்பட்டதனுல், அதைக் கண்டு கொஞ்சம் மனதை ஸமாதானம் செய்து கொண்டார்.

अथवा चारुसर्वांगी रक्षिता स्वेन तेजसा ।
न नशिष्यति कल्याणी नाग्निरग्नौ प्रवर्तते ॥
न हि धर्मात्मनस्तस्य भार्यां अमिततेजसः ।
स्वचारित्राभिगुप्तां तां स्प्रष्टुं अर्हति पावकः ॥
नूनं रामप्रभावेण वैदेह्याः सुकृतेन च ।
यन्मां दहनकर्मायं नादहत् हव्यवाहनः ॥
त्रयाणां भरतादीनां भ्रातॄणां देवता च या ।
रामस्य च मनःकान्ता सा कथं विनशिष्यति ॥

அதவா சாரு ஸர்வாங்கீ ரக்ஷிதா ஸ்வேந தேஜஸா ।
நநசிஷ்யதி கல்யாணீ நாக்நிரக்நோ ப்ரவர்த்ததே ॥
நஹி தர்மாத்மநஸ்தஸ்ய பார்யாம் அமிததேஜஸ: ।
ஸ்வசாரித்ராபிகுப்தாம தாம் ஸ்ப்ரஷ்டும் அர்ஹதி பாவக: ॥
நூநம் ராமப்ரபாவேண வைதேஹ்யா: ஸுக்ருதேந ச ।
யந்மாம் தஹந கர்மாயம் நாதஹத் ஹவ்யவாஹந: ॥
த்ரயாணும் பரதாதீநாம் ப்ராத்ருணும் தேவதா சயா ।
ராமஸ்ய ச மந:காந்தா ஸா கதம் விநசிஷ்யதி ॥

லோக த்ருஷ்டியை அனுஸரித்து, ஆஞ்ஜனேயஸ்வாமியானவர் கவலையை அடைந்தவரானுலும், தத்வ த்ருஷ்டியை அவலம்பித்து, கவலையைவிட்டுவிட்டார். அதாவது, ஸர்வேச்வரியான ஜகன்மாதா வான ஸீதாதேவி, தன்னுடைய பாதிவ்ரத்ய மஹிமையினுலேயே ரக்ஷிக்கப்பட்டவளாக இருக்க வேண்டும். புண்ய மஹிமையி

ளுல் அவளுக்கு ஒருநாளும், ஒருவித ஆபத்தும் வராது. அக்னியே மற்றொரு அக்னியைக் கொளுத்தும். பதிவ்ரதா ஸ்த்ரீகள் அக்னியையும் பஸ்மமாக்கக்கூடிய சக்தியுள்ளவர்களல்லவா? பதிவ்ரதா ஸ்த்ரீகளுள் ஸீதாதேவி முதன்மையானவள். அப்படியிருக்க அக்னி தேவன் எப்படி அவளை எறிக்கும் விஷயத்தில் ப்ரவ்ருத்திப்பான். அக்னிக்குத்தான் ஸ்வரூப நாசம் வருமன்னியில், ஸீதைக்கு அக்னியினுல் ஒருவிதக் குறைவும் வராது. ஸ்ரீ ராமனே தர்ம விக்ரஹன். லோகங்களை ப்ரகாசிக்கச் செய்து வரும் சந்த்ரன் ஸூர்யன் இவர்களைக்காட்டிலும் அவர்களுக்குக்கூடவிஷயமாகாத பரஞ்ஜோதி ஸ்வரூபி. ஸாதாசார ஸம்பன்னன். அப்பேர்ப்பட்ட பகவானுடைய பார்யையான ஸீதையை இந்த அக்னி பகவான் கிட்டப் போய்த் தொட முடியுமா! ஸ்ரீ ராகவனுடைய ப்ரபாவத்தைக் கொண்டும், ஸீதா தேவியினுடைய பாதி வ்ரத்யத்தைக் கொண்டுமல்லவா லோகத்தையே பஸ்மமாக்கக் கூடிய சக்தியுள்ள அக்னி பகவான் என்னையே தனக்கு விஷயமாக்கிக் கொள்ளாமலிருக்கிறுரே. ஸீதா தேவியினிடமா போகப் போகிறுர். பரதன், லக்ஷ்மணன், சத்ருக்னன் இவர்கள் மூன்று பேர்களுக்கும் தேவதையாகவும், ராமனுடைய மனதிற்கு ஆனந்தத்தைக் கொடுக்கிறவளாகவும் உள்ள ஸீதாதேவியானவள் ஒரு போதும் அக்னி தக்தையாக ந்யாயமில்லை. எல்லாவற்றையும் எரிக்கக் கூடிய சக்தியுள்ள அக்னி என் வாலையே சுடவில்லையே. ஸீதையை எரிக்க வேண்டுமென்றுவது எண்ணுவாரா ?

தவிர, ஸமுத்ர மத்தியில் மைனுக பர்வதத்தை நான் தர்சனம் செய்ததிலிருந்துமே ஸீதையினுடைய ப்ரபாவம் வெளியாகி விட்டதல்லவா? அவளுடைய ப்ரபாவத்தால்தான் அந்த மைனுக பர்வதத்தினுல் யாதொருவிதமான இடையூறில்லாமல் நாம் இந்த லங்கா நகரத்திற்கு வந்து சேர்ந்தோம். அவளுடைய தபோ் மஹிமை,ஸத்ய வசனத்தினுடைய பெருமை. ராகவனிடத்திலுள்ள அனந்ய பக்தி என்ற இந்த உத்தம தர்மங்கள் ஸீதா தேவியினிடம் இருந்துவருவதால் ஸீதைதான் அக்னியை பஸ்மமாகச்செய்வாளே தவிர, அக்னி அவளை எரிக்கவே முடியாதுதான் '

இவ்விதம் தேவியினுடைய தர்ம ப்ரபாவத்தை சிந்தித்துக் கொண்டிருக்கும்போதே ஆகாச சாரிகளான மஹா புருஷாளான சாரணர்களுடைய சுப வாக்யத்தையும் ச்ரவணம் செய்தார்.

अहो खलु कृतं कर्म दुष्करं हि हनूमता ।
अग्निं विसृजताभीक्ष्णं भीमं राक्षससद्मनि ॥
प्रपलायितरक्षः स्त्रीबालवृद्धसमाकुला ।
जनकोलाहलाध्माता क्रन्दन्तीवाद्रिकन्दरे ॥
दग्धेयं नगरी सर्वा साट्टप्राकारतोरणा ।
जानकी न च दग्धेति विस्मयोद्भुत एव नः ॥

அஹோ கலு க்ருதம் கர்ம துஷ்கரம் ஹி ஹநூமதா ||
அக்நிம் விஸ்ருஜதாபீக்ஷ்ணம் பீமம் ராக்ஷஸஸத்மநி ||
ப்ரபலாயிதரக்ஷ: ஸ்த்ரீ பாலவ்ருத்த ஸமாகுலா ||
ஜநகோலாஹலாத்மாதா க்ரந்தந்தீ வாத்ரிகந்தரே ||
தக்தேயம் நகரீ ஸர்வா ஸாட்ட ப்ராகார தோரணா ।
ஜாநகீ ந ச தக்தேதி விஸ்மயோத்புத ஏவ ந; ||

அதாவது, இந்த ஆஞ்ஜனேயஸ்வாமி செய்த கர்மா மற்றவர்களால் செய்ய முடியாததே. ப்ரபலர்களான ராக்ஷஸர்களுடைய க்ருஹத்தில் திரும்பத் திரும்ப அக்னி ஜ்வாலையை வைத்து பஸ்மமாக்கிவிட்டார். ராக்ஷஸர்கள், ஸ்த்ரீகள், பாலாள், வ்ருத்தாள் எல்லோரும் திருவீதிக் கப்பால் ஓடிவிட்டார்கள். ஜனங்களுடைய கோலாஹலம் அடங்க முடியவில்லை. மலையினுடைய குஹைக்குள் சாணையினால் நச்சாந்துப் பொடிகள் உறைபடுவது போல் ப்ராணிகள் கஷ்டப்பட்டார்கள். லங்கா நகரத்தில் ஒரு கோபுரமோ, ஒரு ப்ரகாரமோ, ஒரு தோரணமோ, அக்னியினால் பஸ்மமாக்கப்படாத இடமே இல்லை. எல்லாம் சாம்பலாக்கி விட்டது. இவைகளுடைய நடுவில் இருந்துவரும் ஸீதாதேவி மட்டும் பிழைத்திருக்கிறாள். அக்னி தக்தையாக ஆகவில்லை. ஜீவலிக்கிறாள். ஆச்சர்யம்! ஆச்சர்யம்! ராம ப்ரபாவமோ, ஸீதாதேவியின் பாதிவ்ரத்ய மஹிமையோ, ஸாக்ஷாத் ஆஞ்ஜனேயரிடைய ப்ரம்மசர்யத்தின் வைசிஷ்ட்யமோ, எதைக் காரணமாகச் சொல்வதோ தெரியவில்லை என்பதே சாரணர்களுடைய ஆகாச வாக்கின் ஸ்வரூபமாகும்.

न निमित्तैश्च दृष्टार्थैः कारणैश्च महागुणैः ।
ऋषिवाक्यैश्च हनुमान् अभवत् प्रीतमानसः ॥

ஸ நிமித்தைச்ச த்ருஷ்டார்த்தை: காரணைச்ச மஹாகுணை: ।
ரிஷிவாக்யைச்ச ஹநுமாந் அபவத் ப்ரீதமாநஸ: ||

உடன்' அந்த ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் ப்ரத்யக்ஷமாக ஸீதாதேவியைப் பார்ப்பதற்கு முன் ஏற்பட்ட வலது கண் துடிப்பது என்பது முதலான நிமித்தங்கள் தற்காலத்திலும் ஏற்பட்டதால், அவைகளாலும் ஸீதாதேவியின் பாதிவ்ரத்யம், ராம ப்ரபாவம் முதலான மஹா குணங்களோடு கூடின காரணங்களாலும், ஸித்தபுருஷாளுடைய ஜானகி ந ச தக்தா என்ற வாக்யத்தாலிம் ஸந்துஷ்டமான மனதோடு கூடினவராக ஆனார்.

ततः कपिः प्राप्तमनोरथार्थः
तां अक्षतां राजसुतां विदित्वा ।
प्रत्यक्षतस्तां पुनरेव दृष्ट्वा
प्रति प्रयाणाय मतिं चकार ॥

தத: கபி: ப்ராப்தமநோரதார்த்த:
தாம் அக்ஷதாம் ராஜஸுதாம் விதித்வா ।
ப்ரத்யக்ஷதஸ்தாம் புனரேவ த்ருஷ்ட்வா
ப்ரதி ப்ரயாணாய மதிம் சகார ॥

மஹாநுபாவனான ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் ஆகாசவாக்கினால் ஸீதாதேவிக்கு யாதொருவிதமான க்ஷதியும் (குறைவு) இல்லை என்பதை அறிந்து தன்னுடைய மனோரதமும் ஸபலமாயிற்று என்ற ஸந்தோஷத்துடன், அசோகவனம் சென்று ஸீதாப்ராட்டியையும் ப்ரத்யக்ஷமாகப் பார்த்து விட்டு ராகவனுடைய ஸந்நிதி போய்ச்சேருவதற்கு மனதினால் ஸங்கல்பம் செய்தார்.

ततस्तु शिंशुपामूले जानकीं पर्युपस्थिताम् ।
अभिवाद्याब्रवीद्दिष्ट्या पश्यामि त्वामिहाक्षताम् ॥

ததஸ்து சிம்சுபாமூலே ஜாநகீம் பர்யுபஸ்திதாம் ।
அபிவாத்யாப்ரவீத்திஷ்ட்யா பச்யாமித்வாமிஹாக்ஷதாம் ॥

பிறகு ஆஞ்ஜனேயஸ்வாமி பரம ஸந்தோஷத்துடன் அசோகவனத்திற்கு வந்து ஸீதாதேவியை நேரிலும் பார்த்து ஸாஷ்டாங்க ப்ரணாமாதிகளால் ஸீதையை ஸந்தோஷிக்கச் செய்து, "ஹே பரதேவதே, உன்னை நான் இப்போது பாக்யவசத்தால் பார்க்கிறேன். நான் செய்த கார்யத்தினால் மூலக்ஷயம் வந்துவிடுமோ என்று ரொம்பவும் கஷ்டப்பட்டேன். இப்போதுதான் அந்த

கஷ்டம் எனக்கு இல்லாமல் ஆகிவிட்டது என்னுடைய பாக்யம்தான். ஸ்ரீ ராமனுடைய ஸமீபம் நான் சீக்ரமாகப் போய் ராமலக்ஷ்மணனுடன் கூட வானர ஸேனைகளையும் திரட்டிக் கொண்டு இங்குவந்து சேருகிறேன். அனுக்ஞை கொடுக்க வேண்டும்'' என்று ப்ரார்த்தித்தார். அவ்விதம் ப்ரஸ்தானத்தில் உத்யுக்தனான ஆஞ்ஜனேயரைப் பார்த்து ஸீதாதேவியானவள் சொல்கிறதாவது :

''ஆஞ்ஜனேயரே ! ஸ்ரீ ராகவனிடத்தில் போய் இந்த வ்ருத்தாந்தத்தையெல்லாம் தெரிவித்துவிட்டு மறுபடியும் நீரே திரும்பி வந்து ராவணன் முதலான ஸகல ராக்ஷஸர்களையும் ஸம்ஹரித்து விட்டு என்னையும் ராம ஸமீபம் கொண்டுபோய்ச் சேர்த்து விடுவீர் என்று தோன்றுகிறது. உம்முடைய ஸத்ய ப்ரகர்ஷத்தைப் பார்க்கும்போது உமக்கு அவ்வளவு சக்தி உண்டென்று தானாகவே தெரிகிறது.''

काममस्य त्वमेवैकः कार्यस्य परिसाधने ।
पर्याप्तः परवीरघ्न यशस्यते बलोदयः ॥
शरैः सुसंकुलां कृत्वा लङ्कां परबलार्दनः ।
मां नयेद्यदि काकुत्स्थः तत्तस्य सदृश भवेत् ॥
तद्यथा तस्य विक्रान्तं अनुरूपं महात्मनः ।
भवेदाहवशूरस्य तथा त्वं उपपादय ॥

காமமஸ்ய த்வமேவைக: கார்யஸ்ய பரிஸாதநே ।
பர்யாப்த: பரவீரக்ந யசஸ்யதே பலோதய: ॥
சரை:ஸுஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்தந: ।
மாம் நயேத் யதி காகுத்ஸ்த: தத்தஸ்ய ஸத்ருசம் பவேத் ॥
தத்யதா தஸ்ய விக்ராந்தம் அநுரூபம் மஹாத்மந: ।
பவேதாஹவ சூரஸ்ய ததா த்வம் உபபாதய ॥

''ஹே ஹநுமன்! ராக்ஷஸர்களை நாசம் செய்து நான் ராமனுடைய ஸமீபம் போய்ச் சேருவதற்கு நீர் ஒருவரே போதுமானது. மற்றொருவருடைய ஸஹாயமே வேண்டாம் என்பது எனக்கு ரொம்ப நிச்சயம்தான். ஆகிலும் ககுத்ஸ்த வம்சத்திலுதித்த அந்த ராகவனே நேரில் வந்து ஸர்வ ராக்ஷஸர்களையும் கொன்றுவிட்டு, லங்கா நகரத்தையும் பஸ்மமாகச் செய்து, என்னை அழைத்துக் கொண்டாரேயானால், அவருடைய

பராக்ரமத்திற்கு அலங்காரமாக அதுதானாகுமென்று எனக்குத் தோன்றுகிறது. ஆகையால் அவ்விதமே நடக்க என்ன ஏற்பாடு செய்யவேண்டுமோ அந்த உபகாரத்தைத் தாங்கள் செய்ய வேண்டும். அதுதான் தங்களுக்கு பரம உத்தம தர்மமாக ஆகும்'' என்று சொன்னாள். இதைக்கேட்ட ஹனுமானும் பதிவ்ரதா சிரோமணியான ஸீதாதேவிக்கு ரொம்பவும் பொருத்தமான வார்த்தையென்று நினைத்து ஸந்தோஷமடைந்தார். ''ஸ்ரீராமனு டைய சௌர்ய வீர்யாதிகளுக்கு அவரே லங்கைக்கு வந்து நேரில் ஸகல ராக்ஷஸர்களையும் வதம் செய்வது என்பது தான் அழகாகும். அதில் ஸந்தேஹமே இல்லை. அன்னியில் அவிவேகிகள் ராம கார்யம் என் மூலமாகத்தான் நடந்தது என்றல்லவா சொல்வார் கள். ஆகையால் ஹே தேவி, ஸ்ரீராமனையே ஸுக்ரீவாதி ஸமஸ்வமான வானரங்களுடன் இவ்விடம் அழைத்து வருகிறேன். மறுபடியும் ராமாக்ஞைபெற்று நான் மட்டும் இவ்விடம் வருவேன் என்ற எண்ணம் தங்களுக்கு வேண்டாம். ஸ்ரீராமனே நேரில் இங்கு வந்து தங்களுடைய துக்கத்தைப் போக்கடிப்பார். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை சீக்ரம் செய்து, ராமன் முதலானவர் களுடன் இங்கு வந்து சேருகிறேன்'' என்று சொல்லிவிட்டு, மறுபடியும் ஸீதாதேவிக்கு ப்ரதக்ஷிண நமஸ்காரம் செய்துவிட்டு அம்பாளுடைய அனுக்ரஹத்தைப் பெற்றுக்கொண்டு ஸுவேரி பர்வதத்தினுடைய சிகரத்திலேறி ஆகாசமார்க்க வழியாக ஸமுத்ரத்தினுடைய உத்தர தீரத்திற்கு வந்து சேர்ந்தார்.

உத்தர தீரத்தில் ஆஞ்ஜனேயருடைய ஸமாகமத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிற ஜாம்பவான், நளன், நீலன் முதலான ப்ரபல வானர ச்ரேஷ்டர்கள், ஹனுமான் வரும் வேகத்தையும், ஸந்தோஷப் பூரிப்பையும், உத்ஸாஹத்துடன் கூடிய ஹனுமானு டைய ஸிம்ம நாதத்தையும் கேட்டு, கார்யத்தை முடித்துக் கொண்டேதான் ஹனுமான் வருகிறார். கொஞ்சங்கூட ஸந்தேஹ மில்லை என்று அளவில்லாத ஸந்தோஷத்துடன் பரஸ்பரம் ஆனந்த மாகப் பேசிக் கொண்டிருக்கும் ஸந்தர்ப்பத்தில் அவர்களுடைய மத்தியில் மஹேந்த்ர பர்வதத்தில் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் ஸுகமாயும், அநாயாஸமாயும் வந்திறங்கினார். உடன் அந்த ஆஞ்ஜ னேய ஸ்வாமியை மற்ற வானரங்களெல்லாம் ஒன்றாகச் சூழ்ந்து

கொண்டு ஆனந்தக் களிப்புடன் நர்த்தனம் செய்ய ஆரம்பித்தார்கள்.

अशोकवनिकासंस्था दृष्टा सा जनकात्मजा ।
रक्ष्यमाणा सुघोराभीः राक्षसीभिरनिन्दिता ॥

அசோகவநிகா ஸம்ஸ்தா த்ருஷ்டா ஸா ஜநகாத்மஜா ।
ரக்ஷ்யமாணு ஸுகோரரபீ: ராக்ஷஸீபி: அநிந்திதா ॥

என்று வானரச் ச்ரேஷ்டர்களுடைய காதில் படும்படி உன்னதமான ஸ்வரத்தோடு ''ஹே ஸுஹ்ருத்துக்களே! நண்பர்களே! லங்கா நகரத்தில், அசோகவனத்தில், க்ரூரமான அநேக ராக்ஷஸ ஸ்த்ரீகளால் ரக்ஷிக்கப்பட்டு வரும் ராமபத்னியான ஸீதாதேவியை நான் கண்டுபேசி ஸமாதானம் செய்துவிட்டு இங்குவந்துசேர்ந்தேன் உபவாஸம் முதலான வ்ரதாதிகளால் ஸீதாதேவியின் சரீரமானது ரொம்பவும் மலினமாக இருந்து வருகிறது. ஸ்ரீராமனுடைய தர்சனம் எப்பொழுது தனக்குக் கிடைக்கும் என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டு ராம த்யாண பராயணியாகவே இருந்து வருகிறுள்'' என்ற வார்த்தையைச் சொன்னவிடன் ஜாம்பவான் முதலிய வானர ச்ரேஷ்டர்கள் கேட்டு. அவர்கள் அடைந்த ஸந்தோஷாதிசயத்தை அளவிட முடியாமலே ஆகிவிட்டது. உடன் அங்கதன் முதலான வானர ச்ரேஷ்டர்கள் ஆஞ்ஜனேயஸ்வாமியை வெகு ப்ரகாரமாகப் பூஜித்து கந்த மூலாதிகளைக் கொடுத்து புஜிக்கும்படி வேண்டிக்கொண்டார்கள். அவர்களுடைய மத்தியில் அங்கதன் ஆஞ்ஜனேயஸ்வாமியைப் பார்த்து ஸந்தோஷகரமான வார்த்தைகளைப் பேசினுன்.

''ஹே ஹனுமன்! விஸ்தாரமான ஸமுத்ரத்தைத் தாண்டிக் கொண்டு லங்கா நகரத்திற்குப் போனது மட்டமல்ல, அங்கு சென்று ஸீதாதேவியையும் கண்டு, ஸ்வாமி கார்யத்திற்கு விரோதமில்லாமல் அநேக பெரிய அஸாத்யமான கார்யங்களையும் செய்து கொண்டு, மறுபடியும் ஸமுத்ரத்தை ச்ரமமில்லாமய் தாண்டி எங்களிடத்தில் திரும்பி ஸௌக்யமாக வந்துசேர்ந்தது முதலிய இந்த ஆனந்தம் பூராவையும் தெரியப்படுத்தி, ஸீதாதேவியினுடைய நாவினல் ஏற்பட்ட ராமனுடைய துக்கத்தையும் அடியோடு நாசம் செய்து வைக்கும் மஹத்தான கார்யத்தை நீர் செய்திருக்கும்

ஆச்சர்யத்தை யோஜித்தால் இந்த சதுர்தச புவனங்களிலும் உமக்கு ஸமானமாக பலிஷ்டனோ, வீரனோ ஒருவனுமில்லை என்பது தீர்மானமாக ஆகிறது. உம்முடைய ஸத்வமும் சௌர்ய வீர்யமும் மனோபலமும் அறிந்தவர்களுக்கு பரமாச்சர்யத்தைக் கொடுக்கிறது'' என்று சொல்லி ஆஞ்ஜனேயஸ்வாமியை அங்கதன் ச்லாகித்தான்.

सत्वे वीर्ये न ते कश्चित समो वानर विद्यते ।
यदवप्लुत्य विस्तीर्णं सागरं पुनरागतः ॥
अहो स्वामिनि ते भक्तिः अहो वीर्यं अहो धृतिः ।
दिष्ट्या दृष्टा त्वया देवी रामपत्नी यशस्विनी ॥
दिष्ट्या त्यक्ष्यति काकुत्स्थः शोकं सीतावियोगजम् ॥

ஸத்வே வீர்யே ந தே கச்சித் ஸமோ வாநர வித்யதே ।
யதவப்லுத்ய விஸ்தீர்ணம் ஸாகரம் புநராகத: ॥
அஹோ ஸ்வாமிநிதே பக்தி: அஹோ வீர்யம் அஹோ த்ருதி
தீஷ்ட்யா த்ருஷ்டா த்வயாதேவீ ராமபத்நீ யசஸ்விநீ
திஷ்ட்யா த்யக்ஷ்யதி காகுத்ஸ்த: சோகம் ஸீதாவியோகஜம்

பிறகு ஸகல வானர ச்ரேஷ்டர்களும் ஆஞ்ஜனேயரைச் சுற்றி உட்கார்ந்துகொண்டு அங்கதனை முதன்மையாகவும் வைத்துக் கொண்டு அஞ்ஜலிபந்தத்துடன் பரம பக்தியோடு மஹேந்த்ர பர்வதத்திலிருந்தும் ஆஞ்ஜனேயஸ்வாமி கிளம்பினதுமுதல் திரும்பி இவ்விடம் வந்து சேர்ந்ததுவரை நடந்த ஸகல வ்ருத்தாங்களையும் ஒன்றுவிடாமல் கேட்க, ஆவலுடன் கூடியிருந்து வந்தார்கள். அங்கதனும் அதை பூராவாகவே சொல்லவேண்டுமென்று வானர ச்ரேஷ்டர்களுக்கெல்லாம் ப்ரதிநிதியாக ப்ரச்னம் செய்தான். ஆஞ்ஜனேயஸ்வாமியையும் தன்னுடைய இஷ்ட தேவதைகளுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு, ராமனுக்கும், ஸீதைக்கும் வணங்கி விட்டு, விஸ்தாரமாக போய் வந்த வ்ருத்தாந்தத்தைச் சொல்ல ஆரம்பித்தார்.

''ஹே ஸுஹ்ருதுக்களே! ஸஹோதரர்களே! நண்பர்களே! மஹேந்த்ர பர்வதத்திலிருந்து நான் கிளம்பியது உங்களுக்கு தெரிந்த விஷயம். வாயு வேகமாக ஆகாச மார்க்கத்தில் சென்று போனேன். கொஞ்ச தூரம் சென்றதும் மைனாக பர்வதத்திலும் ஸரஸை என்ற நாகமாதாவினாலும், ஸிம்ஹிகை என்ற ராக்ஷஸி

மூலமாகவும் ஏற்பட்ட விக்னங்களை ராமனுடைய ப்ரபாவத்தைக் கொண்டும், ஸீதையினுடைய கருணையினாலும் ஜயித்துக்கொண்டு லங்கா நகரம் போய்ச் சேர்ந்துவிட்டேன். அந்த லங்கா நகரத்திற்கு அதிதேவதையான லங்கிணீ என்ற ஒரு ராக்ஷஸ ஸ்த்ரீ, நகரத்திற்குள் என்னை ப்ரவேசிக்கக் கூடாது என்று தடுத்தாள். அவளையும் உங்களுடைய அனுக்ரஹத்தை முன்னிட்டு, ஜயித்துக் கொண்டு நகரத்திற்குள் சென்றேன். ராக்ஷஸர்கள் நிறைந்துள்ள லங்கா நகரத்தினுடைய வைபவத்தைப் பார்க்க என் மனதே பரமாச்சர்யத்தை அடைந்தது. ஸீதாதேவியை அபஹரித்துக் கொண்டுபோன காரணத்தால்தானோ. அபூர்வமான குப்திகளும் (ரக்ஷணை) நகரத்திற்கு புதிதாகச் செய்யப்பட்டதாக விளங்கி வந்தன. தநுஷ்பாணிகளாக அங்காங்கு ராக்ஷஸ வீரர்கள் ரோந்து சுற்றி வருவதைப் பார்க்க ரொம்ப பயங்கரமாக இருந்து வந்தது. ஏதோ ஸ்ரீ ராகவனுடைய அனுக்ரஹத்தை வைத்துக் கொண்டு லங்கையில் ப்ரவேசித்தேனே தவிர, மற்ற ஒருவராலும் போகவே முடியாது. நான் உள்ளே ப்ரவேசித்ததும், நகரத்தின் த்வார வழியாகப் போக முடியவில்லை. ப்ராகாரத்தை ஏறிக் குதித்துத்தான் சென்றேன். அதிலும் ஸந்த்யா காலத்தில், ஒரு சிறிய மார்ஜார சிசு (பூனைக் குட்டி) போல் உருவத்தை எடுத்துக் கொண்டு போனேன், ராஜவீதிகளுடைய அழகுகளையோ. தீப ஸ்தம்பங்களின் பெருமைகளையோ, மேக மண்டலம் வரையிலும் வ்யாபரித்து வரும் திருமாளிகைகளோடு கூடின க்ருஹங்களையோ, ஸுவேரி பர்வதத்தினுடைய சிகரத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் லங்கா நகரத்தைப் பார்க்கப் பார்க்க மிகுந்த ஆச்சர்யத்தை யடைந்தேன். இரவில் லங்கா நகரத்தைச் சுற்றுகிற எனக்கு சந்த்ரனும் ஸஹாயமாகக் கொஞ்சம் ப்ரகாசத்தைக் கொடுத்து வந்தார். குபேரனை ஜயித்து, ராவணனால் அபஹரிக்கப்பட்ட புஷ்பக விமானத்தினுடைய பெருமைகளை என்னால் வர்ணித்துமுடியாது. ஒவ்வொரு ராக்ஷஸர்களுடைய க்ருஹத்திலும் வேத கோஷங்களும், மந்த்ராராதனங்களும், தேவதா ஆராதனங்களும் நடக்கும் வைபவங்களைப் பார்க்க, ராக்ஷஸர்களுடைய நகரம்தானா இது என்று ஆச்சர்யப்படத் தக்கதாக இருந்தது. என்னுடைய ஜாதிசபலத்தால் அங்காங்கு நகர விசேஷங்களுடைய விந்யாஸங்களைப் பார்த்துக்கொண்டு ஸுக்ரீவனால் ஆக்ஞாபிக்கப்பட்ட கால நியமத்தைக்கூட மறந்துவிட்டேன். நகரத்தில் ஒரு இடங்கூட பாக்கியில்லாமல் தேடியும், ஸீதா தேவியைக் காணாது

துக்கமும் எனக்கு அதிகரித்துவிட்டது. ராவணனுடைய அந்தப்புரத்திலும் சென்று ஸீதையைத்தேடினேன். அந்தப்புரத்திலுள்ள ஸ்த்ரீகளேயோ கணக்கிட்டு முடியவில்லே. நான் தேடும் காலமோ நடு நிசியாகும். ஒவ்வொரு ஸ்த்ரீயும் ராவணனேடு க்ரீடித்துவிட்டு பரவசமாக தூங்கிக்கொண்டிருந்தார்கள். சில ஸ்த்ரீகள் ம்ருதங்கத்தை தலேக்கு வைத்துக்கொண்டு தூங்கினர்கள்; சிலர் வீணையை அணேத்துக்கொண்டு தூங்கினர்கள்; சிலர் ஒருவரை ஒருவர் கட்டிக்கொண்டு தூங்கினர்கள். ஒவ்வொருவர்களுடைய ஸமீபத்திலும் பக்ஷ்ய விசேஷங்களால் நிறைக்கப்பட்ட ஸுவர்ண பாத்ரங்களும், ஸுரையினல் பூரிதமான உதகும்ப பாத்ரங்களும் மாம்ஸ விசேஷத்தால் நிறைக்கப்பட்ட ஸுவர்ண ஸ்தாலிகளேயும் பார்த்து ப்ரமித்துவிட்டேன். பிறகு அந்தப்புரத்தில் ராக்ஷஸ ராஜனுன ராவணன் ரொம்பவும் மயக்கமாக தூங்கிக்கொண்டிருந்தான். அவன் படுத்துக்கொண்டிருந்த பர்யங்க விசேஷத்தையோ தலே விசேஷத்தையோ, மெத்தை, தலேயணே, திண்டு, கொசுவலே, முதலான விசேஷங்களேயோ ஆதிசேஷனுலும் வர்ணிக்கமுடியாது. அதைப் பார்த்தவுடன் நானும் 'ஹே ராக்ஷஸ ராஜனே' என்று எழுப்பி, 'உன் ஸந்நிதியில் எப்படி இந்த ஸ்த்ரீகள் எல்லோரும் போக உபகரண ஸம்பந்நாளாக விசாரமில்லாமல் தூங்கிவருகிருர்களோ, அதுபோல் ஸ்ரீ ராம பத்னியும் ராமனுடைய ஸந்நிதியில் ஆனந்தமாக இருந்தால் உன்னுடைய ஜீவிதமானது நீடித்து நிற்குமே, ஜன்மாவும் ஸபலமாகுமே, என்று ஏன் உபதேசிக்கக் கூடாது என்று எண்ணினேன்.

ஆகிலும் நான் போன கார்யத்திற்கு முற்றிலும் விரோதம் வந்துவிடுமோ என்று நினேத்து அவ்விதம் ஒன்றும் செய்துவிடாமல் ஸீதையை மட்டும் தேடி வந்தேன். அந்த ராவணனுடையஸமீபத்தில் தங்க மயமான ஸ்தம்பங்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு தனிமையான அங்கணத்தில் தனியாக ஒரு ஸ்த்ரீ திவ்யாலங்கார ஸம்பந்நையாகவும், யுவதியாகவும்,பர்யங்கத்தில் தூங்கிக்கொண்டு வந்தாள். ஒரு ஸமயம் அவளேதான் ஸீதையாக இருக்கலாமோ என்று கவனித்துமெதுவாகப் போய்ப் பார்த்தேன். ஸௌந்தர்யம். ஆபரண ஸம்பத்து, யௌவன ஸம்பத்து முதலியவைகளேக் கவனிக்கும்பொழுது. ஸீதைதானே என்ற ப்ராந்தியும் எனக்கு ஏற்பட்டது. பிறகு ராமனே விட்டுப் பிரிந்த ஸீதாதேவி இவ்விதம் கவலேயற்ற ஸுகமாகத் தூங்குவாளோ என்று என் மனதை

இவள் ஸீதை இல்லை என்று ஸமாதானம் செய்துகொண்டேன். இவ்வளவு ச்ரமப்பட்டு தேடியும் ஸீதையைக் காண முடிய வில்லையே என்ற வருத்தத்தால் ரொம்பவும் துக்கத்தை அனுபவித் தேன். ப்ராணனையே விட்டுவிடுவோமா என்றும் தீர்மானித்தேன். இந்த ஸ்த்ரிகளுடைய நடுவில் நான் அகப்பட்டுக்கொண்ட விஷயத்தை நினைக்கும்போது நமது ப்ரம்மசர்யத்திற்கும் லோபம் வந்து விடுமோ என்ற சங்கை ஏற்பட்டது. ஆகிலும் மனது ஒரே நிலையிலிருந்ததால்அதை ஸமாதானம் செய்துகொண்டு விட்டேன் ஸீதையைக் காணாத துக்கத்தைப் பரிஹாரம் செய்துகொள்ள முடியவில்லை. யோகாப்யாஸத்தாலோ, ஸமுத்ரத்தில் விழுந்தோ, விஷபானத்தாலோ, அக்னியில் விழுந்தோ உயிரை விட்டு விடுவோமா? ராஜனால் ஏற்படுத்தப்பட்ட காலமும் தவறி விட்டதே! ஸீதையைக் காணவில்லை என்று சொல்லிக்கொண்டு திரும்பிப் போவதில் என்ன ப்ரயோஜனம்? காணவில்லை என்று ராம லக்ஷ்மணாளிடப் போய்ச் சொன்னால் அவர்களுடைய உயிர் உடனே போய்விடாதா? அது பரம்பரையாய் பெரிய அநர்த் தத்தில் போய்விடுமல்லவா? நான் திரும்பிப் போகாமல் இருக்கும் பக்ஷத்தில் நான் திரும்பி வரத்தான் போகிறேன் என்ற ஆசையினால் அவர்கள் ஜீவிதத்தை வைத்துக் கொண்டிருப்பார்கள் என்று பலவாராக மனக்கலக்கத்தை அடைந்தேன்.

உடனே, நாம் மஹேந்த்ர பர்வதத்தை விட்டுக் கிளம்பும் காலத்தில் எந்தெந்த தேவதைகளையோ நமஸ்காரம் செய்தோம். ஸாக்ஷாத் ப்ரபு ஸ்ரீராகவனையும், ஸீதையையும் மறந்துவிட்டோம் அதன் பலன்தான் இது என்று நினைவுவந்தது. உடன் ஸ்ரீராமனுக் கும் ஸீதைக்கும் நமஸ்காரம் செய்தேன். அசோகவனத்தில் ஸீதாதேவி இருக்கிறாள் என்று ஸம்பாதி சொன்ன வசனமும் ஞாபகத்திற்கு வந்தது. அதையும் தேடாதது பிசகுதான் என்று தோன்றியது. உடன் அங்கு சென்றேன். சிம்சுபா வ்ருக்ஷத்தின் அடிபாகத்தில் ஸீதாதேவியைக் கண்டுவிட்டேன். அநேக ராக்ஷஸ ஸ்த்ரீகள் ஸீதையைச் சுற்றிக்கொண்டு காவலாக இருந்து வந்தார்கள். ராவணனுடைய வசமாக்கி விடவேண்டும் என்ற எண்ணத்துடன் ஸீதாதேவியை பலவாராக ராக்ஷஸ ஸ்த்ரீகள் வ்யாமோஹப் படுத்திப் பார்த்தார்கள். ஸீதை ஒன்றுக்கும் அசங்காமலே இருந்து வந்தாள்.

ஸுமார் இரவு பாகத்தின் யாம முடிவு. அதாவது ப்ரபாதம். விடியற்காலம் வந்துவிட்டது. ராவணனும் விழித்துக்கொண்டவுடன், ஸீதாதேவியை பார்க்க வேண்டுமென்ற ஆவலுடன் தங்கமயமான கை தீவட்டிகளை ராக்ஷஸ ஸ்த்ரீகள் நாலா பக்கங்களிலும் எடுத்துக்கொண்டு செய்யும் அனேக உபசாரங்களுடன் ராவணன் ஸீதையினுடைய ஸமீபத்திற்கு வந்து, ஸீதையை அனேக விதமாக ப்ரலோபப்படுத்தினன். அதற்கும் கொஞ்சங்கூட ஸீதை சளைக்காமல் ராகவனையே நினைத்துக்கொண்டு மிக துக்கத்துடன் இருந்து வந்தாள். நானும் ராவணனுக்குப் பயந்து, சிம்சுபா வ்ருக்ஷத்தினுடைய கிளைகள், இலைகள் இவைகளுடைய மத்தியில் என் சரீரத்தை தெரியாமல் ஒளித்துக்கொண்டு வ்ருத்தாந்தத்தைப் பார்த்தும் கேட்டும் வந்தேன்.

பிறகு, ராவணன் பரிவாரத்துடன் திரும்பிவிட்டான். ஸீதையும் ராக்ஷஸ ஸ்த்ரீகளுடைய உபத்ரவம் ஸஹிக்காமல் (சுலுக்கு மாட்டிக்கொள்ள) உத்பந்தனம் செய்து கொள்ளத் தயாராக இருந்தாள்.

உடன், இக்ஷ்வாகு வம்ச வ்ருத்தாந்தத்தையும், தசரதருடைய பெருமையையும், ராமனுடைய கல்யாண குணங்களையும் பற்றி சீதையின் காதில் படும்படி நன்ருகச் சொல்லிக் கொண்டு வருகையில், அந்த யத்னத்திலிருந்தும் ஸிதாதேவியானவள் உபரதியடைந்து, ஆகர்சத்தில் என்னவென்று என்னையும் நிமிர்ந்து பார்த்தாள். உடன் நானும் மெதுவாகக் கிளையிலிருந்து இறங்கி ஸமீபம் போய் நமஸ்காரம் செய்தேன். ராவணனதானே என்று சங்கித்துக்கொண்டு என்னை முகத்தினுல் கூடப் பார்க்கவேயில்லை. ஸ்ரீராகவனுடைய விக்ரஹ குணங்களையும், ஆத்ம குணங்களையும் எடுத்து விவரமாக உரைத்து ஆச்வாஸப் படுத்தினதிலிருந்தும் என்னை நம்பினுள்.

உடன் ராம நாமாங்கிதமான அங்குலீயத்தையும் ராமன் கொடுத்தனுப்பியதாகச் சொல்லி அம்பாளிடம் கொடுத்தேன். பிறகுதான் ஸிதைக்கு என்னிடம் த்ருட நம்பிக்கை ஏற்பட்டது. அதிசீக்ரத்தில் ராமன், லக்ஷ்மணஸ்வாமி, ஸுக்ரீவன் இவர்களோடு கூடவும் வானர ஸேனைகளைத் திரட்டிக் கொண்டு லங்கா நகரத்திற்கு வந்து ராக்ஷஸர்களையும் கொன்று ராவணனையும் வதம்செய்து அதிதுரிதமாக உங்களை ஸ்ரீராமன் தன் ஸமீபம்

அழைத்துக்கொள்ளப்போகிருர் என்று வெகுவிதமாக ஸமா தானம் செய்துவிட்டு தேவியினிடமிருந்து உத்திரவு பெற்றுக் கொண்டு ஸ்ரீ ராமனுக்கும், ஸீதையினிடம் நாம் நேரில் சென்று வந்ததை நமபுவதற்கு அடையாளமாக தேவியினுல் கொடுக்கப் பட்ட சூடாமணியையும் பெற்றுக்கொண்டு ரஹஸ்யமான சில வ்ருத்தாந்தங்களையும் அடையாளமாகச்சொல்வதற்கு,ஸீதையால் சொல்லப்பட்டதை அறிந்து, திரும்பும் காலத்தில் அசோக வனத்தை அழித்து, 80,000கிங்கரர்களையும்கொன்று,கோபுரத்தை பொடியாக்கி, பாலகர்களான ராக்ஷஸர்களை பரிகாயுதத்தால் அடித்து த்வம்ஸம் செய்து, ஜம்புமாலி என்ற ப்ரஹஸ்த புத்ர னையும் கொன்றுவிட்டு, ப்ரபலர்களான ஏழு மந்த்ரி குமாரர் களையும் கொன்றுவிட்டு, பேர்பெற்ற ஐந்து ஸேனுநாயகர்களையும் வதம் செய்து, அக்ஷய்ய குமாரனையும் யமனுக்கு விருந்தாளியாக அனுப்பிவிட்டு, இந்த்ரஜிததினுடைய ப்ரம்மாஸ்த்திரத்திற்குக் கட்டுப்பட்டவன்போலும் நடித்துக்கொண்டு, ராவணனுடைய ஸபைக்கு ராக்ஷஸர்களால் இழுத்துக்கொண்டு போகப்பட்டு, அவனையும் நேரில் பார்த்து, 'உன்னுடைய பெருமைக்கு, பர ஸ்த்ரீயை அபஹரிப்பது மிகவும் அழகல்ல. அதிலும் ராமபத்னி யான பதிவ்ரதா சிரோமணியான ஸீதாதேவியின் அபஹாரம் மிகவும் அதர்மமான கார்யம். உடன் ஸீதாதேவியை திரும்பக் கொண்டுபோய் சேர்த்து ராமனுக்கு சரணுகதி செய்தால் பிழைப் பாய், இல்லாவிடில் உயிரைவிடுவாய்' என்று தைர்யமாகஉபதேசம் செய்தேன். அதைக் கேட்ட ராவணன் பரம கோபாவேசத் துடன் எனக்கு தூக்கிலிட்டு ப்ராணனை அபஹரிக்கும்படி தண்டனை விதித்தான். அவன் தம்பியான விபீஷணஸ்வாமி மூலம் அந்த தண்டனையிலிருந்து விடுவிக்கப்பட்டு என் வாலில் தீ வைக்கப்பட்டு, அந்த அக்னி ஜ்வாலையினுல் லங்கா நகரம் முழுமை யும் தீ வைத்து பஸ்மமாகச் செய்தேன். பிறகு தீ வைத்ததினுல் ஸீதாதேவிக்கும் இந்த அக்னிபாதை ஏற்பட்டிருக்குமோ என்று ஸந்தேஹப்பட, சுப நிமித்தங்களாலும் ஆகாசவாணியினுலும் ஸீதாதேவிக்கு யாதொருவித விபத்தும் இல்லை என்றுஅறிந்து ஸந்தோஷப்பட்டு, வாலில் எரியும் நெருப்பை ஸமுத்ரத்தில் அணைத்துவிட்டு, மறுபடியும் அசோகவனம் சென்று ஸீதாதேவி யைப் பார்த்து, ப்ரதக்ஷிண நமஸ்காரம் செய்துவிட்டுஉத்தரவு பெற்றுக்கொண்டு திரும்பவும் அக்ஷதனுக உங்களிடம் வந்து சேர்ந்தேன்.

இவ்விதம் சொல்லிவிட்டு 'நான் இவ்வளவு கார்யத்தையும் என்னால் முடிந்த மட்டில் செய்துவிட்டேன். பின் செய்ய வேண்டிய கார்யத்தில் நீங்கள்தான் ப்ரமாணம்' என்று சொல்லி முடித்தார்.

இதைக்கேட்ட வானர ச்ரேஷ்டர்களும், பரமஸந்தோஷத்தை யடைந்து ஒருவருக்கொருவர் அவரவர்களுடைய பலத்தை ச்லாகித்துக்கொண்டு, ஸீதையைக் கண்டோம் என்று மட்டும் ராமனிடத்தில் தெரிவித்தால் போதாது. நாம் எல்லோரும் லங்கா நகரம் சென்று நம்முடைய பலத்தால் ராக்ஷஸர்களை ஜயித்து ஸீதாதேவியைத் திரும்ப அழைத்துக்கொண்டு ஸ்ரீராமனுடைய ஸமீபம் போய்ச் சேருவதுதான் அழகு' என்று பேசிக்கொண்டார்கள். அவ்விதம் பேசியதில் யுவராஜாவான அங்கதன் தீவ்ர முயற்சியுடன் விளங்கிவந்தான்.

இந்த ஸந்தர்ப்பத்தில் எல்லா விஷயத்திலும் வ்ருத்தரான ஜாம்பவான் அங்கதனை முதன்மையில் வைத்துக்கொண்டு சொன்னார்:

न तावदेषा मतिरक्षमा नो
यथा भवान् पश्यति राजपुत्र ।
यथा तु रामस्य मतिर्निविष्टा
तथा भवान् पश्यतु कार्यसिद्धिम् ॥

நதாவதேஷாமதிரக்ஷமாநோ
யதா பவாந் பச்யதி ராஜபுத்ர ।
யதா து ராமஸ்ய மதிர்நிவிஷ்டா
ததா பவாந் பச்யது கார்யஸித்திம் ॥

"ஹே அங்கதா! உன்னுடைய பராக்ரமும் அதுல்யமான பராரமம்தான். மற்ற வானரச் ச்ரேஷ்டர்களுடைய சௌர்ய வீர்யாதிகள் எல்லாம் அத்விதீயம்தான் என்பதைச் சொல்லவே வேண்டாம். நம்முடைய ஸமாஜத்திலுள்ள ஒவ்வொரு வானர ச்ரேஷ்டர்களுந்கு எதிரில் லக்ஷக்கணக்கான ராவணனும் நிற்க முடியாது. லங்காநகரத்தையும் பொசுக்கிவிட்டு, ராக்ஷஸர்களையும் நசிக்கச் செய்து, ராவணனையும் யமலோகத்தக்கு அனுப்பிவிட்டு ஸீதாதேவியையும் க்ரஹித்துக்கொண்டு ராமனிடம் போய்ச் சேருவதென்பது ரொம்ப ந்யாயம்தான். அதைச் செய்ய நமக்கு ஸாமர்த்யமும் உண்டுதான். ஆனாலும் நாம் எல்லோரும்கூட சேர

வேண்டியதில்லே. ஒவ்வொரு வானரத்திற்குமே அந்த சக்தியுண்டு. ஆகிலும் ஸ்ரீ ராகவனுக்கு அது இஷ்டமான விஷயம்தானு என்பதை தெரிந்துகொள்ளாத வரையில் நாம் அந்த விதம் ப்ரவ்ருத்திக்கக் கூடாது. ஸீதா தேவியைக் கண்டோம் என்ற வ்ருத்தாந்தத்தை மட்டும் சொல்லவேண்டும். பிறகு ராமனுடைய ஆலோசனே எப்படியோவென்று நன்ருகத் தெரிந்துகொண்டுஅதை அனுஸரித்து செய்வது நல்லது. நாமாக ஒன்றும் கேட்காமல் செய்யக்கூடாது. ஆகையால் சீக்ரம் காலாதிக்ரமமாகாமல் எல்லோரும் ஒன்றுசேர்ந்து 'ஸ்ரீ ராகவனுடைய ஸமீபம் போய்ச் சேருவோம்'' என்று வானரங்களே உத்ஸாஹப்படுத்தி, மஹேந்த்ர பர்வதத்திலிருந்து ஸ்ரீ ராமனிருக்கும் ப்ரஸ்ரவண கிரிக்குப் போக ப்ரஸ்தானமானுர்கள்.

இவ்விதம் ஜாமபவானுடைய வார்த்தையைக் கேட்டவுடன் ஸகல வானர ச்ரேஷ்டர்களும் ஹனுமானே முன்னிட்டுக்கொண்டு ராமனுடைய ஸமீபம் போகக் கிளம்பினுர்கள். போகும் வழியில் ஸுக்ரீவனுடைய ஆளுகைக்குள்ளிருந்துவரும் மதுவனத்திற்குள் சென்று, அங்கதன் யுவராஜாவானதால், அவருடைய உத்ரவின் பேரில் ஸகல வானர ச்ரேஷ்டர்களும் மதுபானம் செய்தார்கள். அவரவர்களுடைய இஷ்டப்ரகாரம் மதுபானம் செய்துவிட்டு நர்த்தனம் செய்கிறதும், ஒருவருக்கொருவர் அடித்துக்கொள்ளுவதும், குதிப்பதும், தாண்டுவதும், குஸ்தி போடுவதும், உயரத் தாவுவதுமாக அட்டஹாசம் செய்தார்கள். அந்த மதுவனத்திற்கு பாலகனும் ஸுக்ரீவனுக்கு மாதுலனுமான (மாமன்) ததிமுகன், வானரச்ரேஷ்டர்கள் மதுபானம் செய்து அந்த அழகான உத்யான வனத்தை சின்னுபின்னமாக ஆக்கிவிட்டதிலிருந்து மிகுந்த கோபத்தையடைந்து வானரச்ரேஷ்டர்களே பலாத்காரமாக அடித்துவிரட்ட ஆரம்பித்தான். மதுபானம் செய்த ஆனந்தத்துடன் கூடின வானரச்ரேஷ்டர்களெல்லாம் ஒன்றுகூடிச் சேர்ந்து அந்த ததிமுகனேக் கொஞ்சம்கூட லக்ஷ்யம் செய்யாமல் ததிமுகனேயேஅடித்து விரட்ட ஆரம்பித்தார்கள். கல்லாலும் மிஷ்டியாலும் அடித்து ரத்தக் காயமாக்கி தன் தன் ப்ருஷ்ட பாகத்தையும் அவனுக்குக் காண்பித்தார்கள்.

ததிமுகனும் சில பாலகர்கள் தன் வசத்திலிருந்தாலும் அவர்களோடுகூடவும் சேர்ந்து, மதுபானத்தால் மத்த வானரக் கூட்டங்களே அடித்துவிரட்ட சக்தியில்லாதவனுக ஆகிவிட்டான்.

வானரக்கூட்டங்கள்தான் ததிமுகனைக் கண்டபடி அவமதித்தார்கள். கற்களால் ததிமுகனை அடிக்கறதும், வ்ருக்ஷங்களால் அடிக்கிறதும், காலால் ததிமுகனை உதைத்துத்தள்ளுகிறதுமாகஅவமதித்தார்கள். ததிமுகன் அப்பேர்ப்பட்ட வானரக்கூட்டங்கள் செய்யும் அக்ரமத்தையும், உபத்ரவத்தையும் ஸஹிக்கமுடியாமல் 'யுவராஜனுன அங்கதன்கூட இந்த வானரக்கூட்டங்களுக்கு அனுகூலமாக மதுபானம் செய்துவரும் விஷயத்தில் ஈடுபட்டு வருகிறுன். ஆகையால் நாம் ஒன்றும் செய்து பலிக்காது. ஸுக்ரீவனிடம் சென்று இந்த விஷயத்தைத் தெரிவித்து இவர்களைத் தண்டிக்கும்படி செய்யவேண்டு'மென்று தீர்மானித்து வெகு வேகமாக ஸுக்ரீவனுடைய ஸமீபம் சென்று, ஸுக்ரீவனுடைய பாதங்களில் சரணமடைந்து விஷயத்தை நன்ருகத் தெரிவித்தான்.

''ஹே ராஜனே! இதுவரை நம்முடைய மதுவனமானது நமது கோஷ்டியில் சேர்ந்தவர்களாலேயோ, அன்ய ஜாதியர்களாலேயோ கொஞ்சம்கூட அழிக்கப்படவே இல்லை. அந்த மதுவனமானது தத்காலத்தில் ஹனுமான், ஜாம்பவான், அங்கதன் முதலான வானரச்ரேஷ்டர்களால் சின்னுபின்னமாக அழிக்கப்பட்டுவிட்டது, அந்த துஷ்டமான ஸ்திதியை தாங்கள் பார்த்தீர்களானுல் உடன் தங்களுக்கு கோபமேற்பட்டு அங்கதன் முதலானவர்களைத் தண்டித்தேவிடுவீர்கள் என்னுடைய ஸேவகர்களோடுகூட நான் நேரில் சென்று எவ்விதமாகத் தடுத்தும் நல்ல வார்த்தை சொல்லியும், அவர்கள் அந்த அக்ரமத்தை நிறுத்தாததோடும்கூட என்னையும் பலவாராக உபத்ரவப்படுத்தி அவமதித்தார்கள்'' என்ற வ்ருத்தாந்தங்களை ததிமுகன் ஸுக்ரீவனுக்கு எதிரில் கண்ணீர் ஜலத்தை பெருஹவிட்டுக்கொண்டு வானரஜாதியின் பாஷையில் சொல்லிக்கொண்டிருக்கும் விஷயத்தை லக்ஷ்மண ஸ்வாமியானவர் பார்த்து, அந்த பாஷை தெரியாததால் இவைகள் என்ன பேசிக்கொண்டிருக்கிறதென்பதை ஸுக்ரீவனிடம், ''என்ன இந்த கிழக் குரங்கு அழுதுகொண்டே பேசுகிறதே! தெற்கு திக்கிற்கு சீதையைத் தேடப்போன கோஷ்டியில் இந்தக் குரங்கும் சேர்ந்ததுதானே! ஸீதையினுடைய விஷயமாக ஏதாவது பேசுகிறதா? துக்கத்துடன் அழுதுகொண்டு தெரிவிக்கிறதே, அதனுல் என் மனம் நோகிறது'' என்று கேட்டார்.

ஸுக்ரீவனே லக்ஷ்மணனைப் பார்த்து, "இந்தக் குரங்கு என் மாதுலனாக ஆகுவார். ததிமுகன் என்ற பெயருடன் கூடியவன். எனக்கு இந்த ஸமீபத்தில் ஒரு உத்யான வனம் இருந்து வருகிறது. இதற்கு ரக்ஷகனாக இவன் வேலை பார்த்து வருகிறான். ஹனுமார் முதலான வானர ச்ரேஷ்டர்களுடைய கூட்டங்களால் அந்த மது வனமானது அழிக்கப்பட்டுவிட்டது என்ற வ்ருத்தாந்தத்தைச் சொல்கிறான். மதுவனத்திலுள்ள ப்ரேமையினால் அது அழிந்து விட்டதே என்று மனோவருத்தம் ஏற்பட்டிருக்கிறது. வேறொன்று மில்லை. தெற்கு திக்கிற்கு ஸீதையைத் தேடப் போன வானரர்கள் க்ருதகார்யாள் என்றே இதனால் நான் ஊஹிக்கிறேன். கார்யத்தை முடித்துக்கொண்டு வராதபோனால், என் ஆக்ஞையன்னியில் இந்த மதுவனத்திற்குள் ஒரு குரங்கும் ப்ரவேசிக்காது. ஆகையால் ஸீதையை அவச்யம் கண்டுகிடித்து விட்டார்கள் என்று தீர்மானிக்க வேண்டியதாயிருக்கிறது. அந்த கோஷ்டியில், அந்த கார்யத்தை ஸாதித்துக் கொண்டு வந்த மனனனும் ஹனுமானாகத் தான் இருக்கவேண்டும். கார்யத்தை முடித்துவிடுகிற சக்தி, அதற்குத் தகுந்த புத்தி கூர்மை எல்லாம் ஹனுமானிடம்தான் இருந்து வருகிறது. ஜாம்பவான் எந்த கோஷ்டியில் ப்ரபலமாக விளங்கி வருகிறாரோ, அங்கதன் எங்கு யுவராஜாவோ, மஹா புத்திமானான ஆஞ்ஜனேயஸ்வாமியும் எங்கு அதிஷ்டாதாவாக இருந்து வருகிறாரோ, அவர்கள் கார்யத்தை ஸாதிக்காமல் வர மாட்டார்கள். அதிலும் ஆஞ்ஜனேயஸ்வாமி தான் இந்தக் கார்யத்தை ஸாதித்திருக்கவேண்டும். நான் கொடுத்த காலமும் அதிக்ரமித்து, மதுவனத்தையும் அழிக்க வேண்டுமானால் கார்யத்தை முடித்துக்கொண்டு வந்துவிட்டோம் என்ற உத்ஸாஹம் தான் அதற்குக் காரணமாகவேண்டும். ஸீதையைக் கண்டாகிவிட்டது என்று ஸுக்ரீவன் சொல்ல, ராமனும் லக்ஷ்மணனும் கேட்டு பரம ஸந்தோஷத்தை அனுபவித்தார்கள். உடன் ஸுக்ரீவனும் ததிமுகனைப் பார்த்து சொல்கிறார்:

प्रीतोस्मि सोऽहं यद् भुक्तं वनं तैः कृतकर्मभिः ।
मर्षितं मर्षणीयं च चेष्टितं कृतकर्मणाम् ॥
इच्छामि शीघ्रं हनुमत्प्रधानान्
शाखामृगांस्तान् मृगराजदर्पान् ।
द्रष्टुं कृतार्थान् सह राघवाभ्यां
श्रोतुं च सीताधिगमे प्रयत्नम् ।।

प्रीतिस्फीताक्षौ संप्रहृष्टौ कुमारौ
दृष्ट्वा सिद्धार्थौ वानराणां च राजा ।
अंगैः संहृष्टैः कर्मसिद्धिं विदित्वा
बाह्वोरासन्नां सोऽतिमात्रं ननन्द ॥

ப்ரீதோஸ்மி ஸோஹம் யத்புக்தம் வநம் தை: க்ருதகர்மபி: ||
மர்ஷிதம் மர்ஷணீயம் ச சேஷ்டிதம் க்ருதகர்மணம் |||
இச்சாமி சீக்ரம் ஹநுமத்ப்ரதாநாந்
சாகாம்ருகரந் தாந் தாந் ம்ருகராஜ தர்பாந் |
த்ரஷ்டும் க்ருதார்த்தாந் ஸஹ ராகவாப்யாம்
ச்ரோதும் ச ஸீதாரகமே ப்ரயத்நம் ||
ப்ரீதிஸ்பீதாக்ஷௌ ஸம்ப்ரஹ்ருஷௌ குமாரௌ
த்ருஷ்டவா ஸித்தார்த்தௌ வாநராணாம் ச ராஜா |
அங்கை: ஸம்ஹ்ருஷ்டை: கர்மஸித்திம் விதித்வா
பாஹ்வோராஸந்நாம் ஸோதிமாத்ரம் நநந்த |||

''ஹனுமான் முதலான வானர வீரர்கள் மதுவனத்தை அழித்தார்கள் என்பதைக் கேட்க என்னுடைய மனது பரம ஸந்தோஷத்தை அடைகிறது. ஸீதா தர்சனம் என்ற பெரிய கார்யத்தை முடித்துக்கொண்டு வந்த மஹானுபாவார்கள். அவர்கள் என்ன செய்தாலும் ஸரி. அதை ஸஹித்துக்கொண்டுதான் ஆகவேண்டும். ஹனுமான் முதலான மஹாவீரர்களை இப்போதே பரர்க்கவேண்டுமென்று என் மனது துடிக்கிறது. கார்யத்தை முடித்துக்கொண்டு வந்த மஹானுபாவர்களை ராம லக்ஷ்மணனோடுகூட நான்பார்த்து ஸீதையினுடைய வரலாற்றையும் கேட்டு ஸந்தோஷமடைய வேண்டும் என்ற ஆவல் அதிகரிக்கிறது. சீக்ரம் போய் அவர்களை நல்ல வார்த்தை சொல்லி அவர்கள்எல்லோரும் உடனே வேகமாய் இவ்விடம் வந்து சேரும்படி சொல்ல வேணடியது.'' இவ்விதம் ஸுக்ரீவன் ஸந்தோஷத்தால் மலர்ந்த நேத்ரங்களோடு கூடின ராம லக்ஷ்மணனைப் பார்த்து அவரவர்களுடைய வலது கண் துடிப்பது மிதலான சுப நிமித்தங்களைக் கொண்டும் 'ஸீதையைக் கண்டுபிடித்தாய் விட்டது, நான் அக்னி ஸாக்ஷிகமாக செய்து கொண்ட ப்ரதிக்ஞையும் ஸபலமாகிவிட்டது' என்று சொல்லிக் கொண்டு ஆனந்த ஸாகரத்தில் மூழ்கினன் ஸுக்ரீவன்.

இவ்விதம் ஸுக்ரீவனால் சொல்லப்பட்ட ததிமுகனும் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு அதிவேகமாய் மதுவனம் சென்று ஹனுமான் முதலான வானர கோடிகளை ஸுக்ரீவனுடைய ஸமீபத்திற்கு சீக்ரம் அனுப்பி வைத்தான். யுவராஜனான அங்கதனிடத்திலும், ஆஞ்ஜனேயஸ்வாமியினிடத்திலும், பெரியவரான ஜாம்பவானிடத்திலும் மற்ற வானர வீரர்களிடத்திலும், தான் முன்பு மதுபானம் செய்யக்கூடாது என்று அநேக விதமாக தடுத்த காரணமான அபராதத்தை க்ஷமித்துக்கொள்ள வேண்டுமென்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். உடன் அங்கதனும் 'நாம் மதுவனத்தை அழித்துவிட்ட விஷயத்தைக் கேட்டு ஸுக்ரீவன் இவ்வளவுதூரம் ஸந்தோஷமடைந்தார் என்ற காரணத்தால் ஸீதாதேவியை நாம் கண்டு விட்டோம் என்ற வ்ருத்தாந்தமும் ஏதோ இங்கிதத்தால் அவர்கள் தெரிந்துகொண்டதாக தெரிகிறது இனி ஒரு நிமிஷம்கூட நாம் இங்கு தாமதிக்கக் கூடாது' என்று சொல்லி, எல்லா வானரங்களையும் உத்ஸாஹப்படுத்தி ஒன்று சேர்த்து உடன் ஜய கோஷத்துடன் ஸுக்ரீவனிடம் செல்வதற்கு ஆகாசத்தில் கிளம்பினார்கள். இவர்கள் அங்கு போய்ச் சேருவதற்கு முன்பே ஸுக்ரீவன் ராமனைப் பார்த்துச் சொல்கிறான்.

"ஸ்வாமின்! இவர்களுடைய கிலிகிலா சப்தத்தைப் பார்த்தீர்களா. கார்யத்தை ஸாதிக்காத போனால் இந்த சப்தம் ஏற்பட ந்யாயமில்லை. கார்யம் ஸித்தியாகிவிட்டது. ஸீதையைக் கட்டாயம் பார்த்தாய்விட்டது. அதுவும் ஆஞ்ஜனேயர் தான் பார்த்தார் என்பதும் நிச்சயம். ஆகையால் கௌஸல்யாதேவிக்கு தாங்கள் சோபனமான புத்ரனாகப் பிறந்தது என்பது இப்பொழுது தான் ஸித்தமாகிறது. மனதை ஸமாதானம் செய்துகொள்ளுங்கள்" என்று சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே பரம ஸந்நாஹத்துடன் அங்கதன் முதலான வானர வீரர்கள் ப்ரஸ்ரவண சைலத்தில் ஸுக்ரீவனோடுகூட சேர்ந்திருக்கும் ராம லக்ஷ்மணனுடைய ஸந்நிதியில் எல்லோரும் ஒன்றாக இறங்கினார்கள். ஆஞ்ஜனேயரும் ராமனுடைய இரு சரணகமலங்களிலும் நமஸ்கரித்து, ஸீதாதேவி அக்ஷதையாகவும், நியதையாகவும் பாலித்துவருகிற பிறவியோடுகூட விளங்குகிறதாகத் தெரிவித்து, ஸ்ரீ ராகவனை ஸந்தோஷிக்கச் செய்தார். ஸீதாதேவி உயிருடன் இருந்தாலும் ராவணனுடைய வலையில் அகப்பட்டுக்கொள்ளாததினால், அக்ஷதை என்றும், அக்ஷதையானாலும் மறித்திருந்தாளேயானால், ப்ரயோஜன

மில்லையே என்று நினைத்து ஜீவனுடன் இருக்கிருள் என்றும், அத்துடன் பரம பாதிவ்ரத்யத்துடன் இருக்கின்ருள் என்பதும் நியதையாகவும் இருக்கின்ருள் என்றும் தெரிவித்தார்.

பிறகு, ஸாமான்ய ஆகாரமாக ஸீதையினுடைய வ்ருத்தாந் தத்தை சரீரத்தாலோ, நடத்தையினுலோ, யாதொருவிதமான குறைவுமில்லாமல் ஸீதாதேவி இருந்து வருகிருள் என்று சொல்லி விட்டு, விஸ்தாரமாக ஸீதையினுடைய பெருமையைத் தெரிவித் தார். ''நூறு யோஜனை தூரமுள்ள ஸமுத்ரத்தை தாண்டி நான் லங்கைக்குப் போனேன். தக்ஷிண திக்கில் லங்கை என்ற நகரம் விளங்கி வருகிறது. அது ராவணனுடைய ராஜ்யமாகும். ராவண னுடைய ராஜ்யமாகும். ராவணனுடைய அந்தப்புரத்தில் ராக்ஷஸ ஸ்த்ரீகளால் சூழப்பட்டு, எப்போதும் தங்களுடைய பாதகமல சிந்தையாகவே இருந்துவரும் ஸீதையை நான் கண்டேன். ஸீதைக்கு திடீரென்று என்னிடம் நம்பிக்கை வரவில்லை. இக்ஷ்வாகு வம்ச க்யாதியையும் தசரத சக்ரவர்த்தியின் மஹிமையையும் தங்களுடைய கல்யாணகுணங்களையும் எடுத்துச் சொல்லச்சொல்ல என்னைக் கொஞ்சம் நம்பினுள். பிறகு தாங்கள் கொடுத்த அங்குலீ யகத்தையும் ஸீதையினிடத்தில் அடையாளமாகக் கொடுத்தேன். அதற்குப் பிறகுதான் மற்ற வ்ருத்தாந்தங்களெல்லாம் பேசும் படியான ஸந்தர்ப்பம் நேர்ந்தது. தங்களுடைய ஹஸ்தத்தில் கொண்டுவந்து கொடுக்கும்படி சிரோபூஷணமான சூடாமணி யைக் கொடுத்தாள். அதை இதோ அர்ப்பணம் செய்கிறேன்'' என்று கொடுத்தா. அந்த சூடகமணியை ராமன் க்ரஹித்து மார்பில் வைத்துக்கொண்டு ஸந்தோஷப்பட்டார்.

ஸுக்ரீவனைப் பார்த்து, ''கல்யாணகாலத்தில் என் மாமனுரான ஜனக மஹாராஜாவினுல் இந்த சூடாமணியான்து கன்னிகைக்கு அலங்காரமாக ஸீதையினுடைய சிரஸ்ஸில் வைத்து அலங்கரிக்கப் பட்டது. இது ஸமுத்ரத்திலிருந்து உண்டான ஆபரண விசேஷ மாகும். ஜனக மஹாராஜா யாகம் செய்கிற காலத்தில் தேவேந்த் ரன் ஸந்தோஷத்துடன் ராஜாவிற்கு பாரிதோஷிகமாக கொடுத்த மணியாக ஆகும். இந்த மணியைப் பார்க்கும்போது ஜனக மஹா ராஜா முதல ானவர்களுடைய ஸ்மரணம் எனக்கு ஏற்படுகிறது'' என்று சொல்லி ராமன் ஸந்தோஷமடைந்தார்.

காகாஸுரனுடைய வ்ருத்தாந்தத்தைப் பற்றி ஸீதாதேவி தெரிவித்தபடி ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் ஸ்ரீராமனிடம் தெரிவித்தார். சித்ரகூட பர்வதத்திலிருக்கும்போது கண்டபார்ச்வத்தில் திலகம் அழிந்து போய்விட்டது என்பதை நினைத்து மனச்சிலையை உறைத்து தன் கண்டபார்ச்வத்தில் திலகம் இட்டதையும் சொல்லச் சொன்னாள் என்றது முதலான அடையாளங்களையும் ஸரியாகச் தெரிவித்து ராமனை ஸந்தோஷிக்கச் செய்தார்.

ततो मया वाग्भिरदीनभाषिणा
शिवाभिरिष्टाभिरभिप्रसादिता
जगाम शांतिं मम मैथिलात्मजा
तवापि शोकेन तदाभि पीडिता ॥

ததோ மயா வாக்பி: அதீநபாஷிணு
சிவாபி: இஷ்டாபி: அபிப்ரஸாதிதா ।
ஜகாம சாந்திம் மம மைதிலாத்மஜா
தவாபி சோகேந ததாபி பீடிதா ॥

"இவ்விதம் என்னால் சொல்லப்பட்ட மங்களகரமான வார்த்தைகளால் விதேஹ ராஜ புத்ரீயான ஸீதையானவள் மனஸ்ஸமாதானத்தை அடைந்தாள். தங்களை விட்டுத் தான் பிரிந்து கஷ்டப்படுவதில்கூட ஸீதைக்கு அது துக்கமாகத் தோன்றவில்லை. தன்னை விட்டுத் தாங்கள் பிரிந்திருப்பதினால் எவ்விதம் கஷ்டப்படுகிறீர்களோ என்பதை நினைத்து ஸீதைக்கு துக்கம் அதிகமாக ஏற்பட்டு வருகிறது. ஏதோ என்னால் கூடுமான வரையிலும் ஸமாதானப் படுத்திவிட்டு வந்திருக்கிறேன். மனச் சாந்தியையும் அடைந்திருக்கிறாள்" என்று ஸ்ரீராமச்சந்த்ர மூர்த்தியிடம் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் தெரிவித்துவிட்டு அஞ்ஜலிபந்தத்துடன்கூட ஸ்ரீராம ஸந்நிதியில் பரம பக்தியோடு இருந்து வந்தார்

* * *

இந்த ஸ்ரீமத் ராமாயணம் உத்தம காவ்யம் என்றும், காந்தா ஸம்மிதையென்றும் ஆங்காங்கு முன்பு வெளியிடப்பட்டிருக்கிறதும் ராமன் என்றால் ப்ரம்ம தத்வம், ஸீதை என்றால் ஜீவ

ஜீவனுகிய ஸீதைக்கு, எப்போதும் ராமனேடு கூடவே நித்ய நிரதிசய ஆனந்தானுபவ யோக்யதை உண்டென்ருலும் கூட, இந்த ஜீவனுக்கு விஷயாதிகளில் சாபல்யம் அதிகமானுல் தாரகப்ரம்மமாகிற ராமன் வெகுதூரத்திற்கப்பால் விலகிவிட்டது போல் ப்ராந்தி ஏற்படலாம். ஜீவனுக்கும் ப்ரம்த்தோடு சேர்ந்திருந்தால் தான் ஸம்ஸாரித்வம் என்ற தோஷம் நிவர்த்தியாகும். ப்ரம்மத்திற்கும் ஜீவனுடன் சேர்ந்திருந்தால்தான் தன்னிடமுள்ள பரோக்ஷத்வம் என்ற தோஷம் நிவர்த்தியாகும். ப்ரம்மத்தை விட்டுப் பிரிந்த ஜீவனுக்கும் துக்கானுபவம் போகாது, ஜீவனே விட்டுப் பிரிந்த ப்ரம்மத்திற்கும் பரோக்ஷத்வம் போகாது. ஸீதையை ராமன் தேடுகிருர் என்பதினுல் ஜீவனே ப்ரம்பம் தேடுகிறது என்ற தத்வத்தை க்ரஹித்துக் கொள்ள வேண்டும். மாயா ம்ருகத்தினிடத்தில் ஸீதைக்கு ஆசை வந்த காரணத்தால் ராமனே விட்டுப்பிரியும்படியான கஷ்டம் ஏற்பட்டது என்பதினுல் விஷய ப்ராவண்யத்தை அடைந்த ஜீவனுக்கு ப்ரம்மத்தை விட்டுப் பிரியும்படியான கஷ்டம் ஏற்படும் என்றும், ராமனே விட்டுப் பிரிந்த ஸீதையை ராவணன் அபஹரித்துக்கொண்டு போனுன் என்பதிலிருந்து ப்ரம்மத்தை விட்டுப் பிரிந்த ஜீவனே அவிவேகம் ஸ்வவசமாக்குக் கொள்ளும் என்றும், ராவணனுல் அபஹரிக்கப் பட்ட ஸீதையை ஜடாயுவினுல் மீட்டு வைக்க முடியவில்லே என்பதினுல் அவிவேகியான ஜீவனுக்கு கர்மாவினுல் மோக்ஷமில்லே என்பதும் வெளியாகிறது. ஆஞ்ஜனேயர் ஸீதையைத் தேடுகிருர் என்பதினுல் பகவத் ப்ராப்தியில் அத்யவஸாயமுள்ள ஜீவனே ஆசார்ய புருஷர்கள் தேடி வருவார்கள் என்பதும் வெளியாகும். லங்கா நகரத்தில் ஸீதை கஷ்டப்பட்டாள் ல்ன்பதிலிருந்தும் பரிச்சின்னமான சரீர ஸம்பந்தத்திலிருந்து ஜீவனுக்குத் துக்கானுபவம்தான் அதிகமாகும்; ராக்ஷஸ ஸ்த்ரீகள் ஸீதையைப் பாதுகாத்து வந்தார்கள் என்பதிலிருந்தும் இந்த்ரிய வ்ருத்திகள் ஜீவனே ஸ்வவசமாக்கிக் கொள்ளும் என்பதும் ப்ரகாசிக்கிறது.

ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் ஸீதா ப்ராட்டிக்கு ஸாந்த்வ வாதம் செய்தார் என்பதிலிருந்தும், ஆசார்ய புருஷன் உத்தம ஜீவனுக்கு தத்வ உபதேசம் செய்தார் என்பது வெளியாகிறது. தத்வமோ, மஹா வாக்யமோ, அஷ்டாக்ஷரீ முதலான மந்த்ர ரஹஸ்யமோ, ஸ்ரீ ராமச் சரணம் மம என்ற சரணுகதி மந்த்ரமோ ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே என்ற ரஹஸ்யமான

மந்த்ரம் முதலானவைகளே தான் ஆகும். அசோகவன நாசத்தால் பாப க்ஷயம், ராக்ஷஸர்களுடைய நாசத்தால் வாஸனு க்ஷயம் ஸேனு நாயகர்களுடைய நாசத்தால் இந்த்ரிய நிக்ரஹம், மந்த்ரி புத்ரர்களுடைய நாசத்தால் ஸப்த பூமி ஜயம், அக்ஷய்ய குமாரனுடைய நாசத்தால் காம ஜயம் இந்த்ரஜித்தினுடைய வ்ருத்தாந்தத்தால் க்ரோதவ்யாபாரம், ராவணனுடைய வ்ருத்தாந்தத்தால் அவிவேக வ்யாபாரம், விபீஷண வ்ருந்தாந்தத்தால் விவேக வ்யாபாரம், ஆசார்ய புருஷன் மூலமாக ஜீவனுக்கு தத்வோபதேசம் ஏற்பட்டு விட்டால் ஜீவனுக்கு ப்ரம்ம ப்ராப்தியில் ஏற்படும் விரோதி வர்க்கங்களெல்லாம் ஆசார்ய புருஷன் மூலமாகவோ, ஈச்வரன் மூலமாகவோ நசிக்கச்செய்யப்பட்டு ஜீவனுக்கு ஆனந்தம் ஏற்படவேண்டும்.

இவ்விதம் ஈச்வரனிடத்தில் சேர்ந்த ஜீவனுக்கு ஏற்படும் ஆனந்தானுபவமே ராஜ்யாபிஷேகமாகும். இந்த தத்வங்களை க்ரமமாகவே விவேகிகள் கதை மூலமாக அறிந்து கொண்டு அனுஸ்ந்தானம் செய்துகொண்டு வரும் விஷயத்தில் இந்த ப்ரபந்தமே நிகிலாநர்த்த நிவ்ருத்தி பூர்வக பரமாநந்தாவிர்பாவம் என்ற பரம புருஷார்த்தத்திற்கு ஸாதனமாகும். இதுதான் வ்யங்க்ய மர்யாதையை அனுஸரித்து இந்த ப்ரபந்தத்தால் நயனம் பண்ணிக்கொள்ள வேண்டிய தத்வங்களாகும்.

सीता दुःखनिवृद्धिपूर्वपरमानन्दं यतः प्रापिता
यस्तीर्त्वा मकरालयं निशिचरास्थानंणतः तेशसा ।
दृष्ट्वा यो जनकात्मजां रघुपतेः वृत्तान्तं ऊचे पुरा
तस्मै श्रीरघुनाथपादभजने मुख्याय नित्य नमः ॥
या देवी मृगवांछया रघुपतिं त्यक्त्वा सुदूरं गता
दुष्टाग्रेसररावणस्य वचसा नैवापि मोहं गता ।
श्रीरामस्मृतितत्परा भगवती श्रीवायुसूनोर्मुखात्
संगृह्यापमनुं पुनःप्रभुममुं तस्यै नमः सर्वदा ॥
श्रीरामः शरणं ममेति जपतः सर्वार्थसिद्धिर्ध्रुवा
श्रीरामः शरणं ममेति वदतः राम सखोतः पुरः ।
श्रीरामः शरणं ममेति यजतः मृत्युर्विदूरे गतः
श्रीरामो मम सर्वदा गतिरहो नान्या गतिः कुत्रचित् ।

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் ஸுந்தர காண்டம் ஸம்பூர்ணம்.

